| | | |
|---|---|---|
| நூலின் தலைப்பு | - | **தமிழ்க்களஞ்சியம்** |
| ஆசிரியர் | - | தெ.பொ.மீனாட்சிசுந்தரன் |
| நூற்பொருள் | - | தமிழியல் |
| முதற்பதிப்பு | - | டிசம்பர் 2000 |
| வெளியீடு | - | தெ.பொ.மீனாட்சிசுந்தரனார் நினைவு அறக்கட்டளை, எழிலகம், 4, அவின்யு தெரு, சக்திவேலம்மாள் நகர், மதுரை-10. |
| ஒளிஅச்சுக்கோவை | - | பெர்ஃபெக்ட் கம்ப்யூட்டர்ஸ், 106-ஏ, பேலஸ் ரோடு, மதுரை-1. |
| பக்கம் | - | xiii + 336 |
| விலை | - | ரூ. **110** |

இந்திய மொழிகள் நடுவண் நிறுவனம்(மனிதவள மேம்பாட்டு அமைச்சகம், கல்வித்துறை, இந்திய அரசு) மானசகங்கோத்ரி மைசூர்-6 தனது நிதிஉதவித் திட்டத்தின் கீழ் அளித்த பகுதி நல்கை பெற்று இந்நூல் வெளியிடப்படுகிறது.

பார்க்க- நிதிஉதவி அளிக்கும் பொருள் குறித்த கடிதம் எண். 51-10(1)/ 2000-2001/தமிழ்/நல்கை/தேதி 3-7-2000) பதிப்புரிமை. தெ பொ மீனாட்சிசுந்தரனார் நினைவு அறக்கட்டளை

Title **Tamilkkalanjiyam** / Subject: Tamilology / Author: T.P.Meenakshisundaran/ Language: Tamil/Edition: First/No.of Pages: xiii+336 / Size: 1 x 8 Demy / Cover design & Type setting: *Perfect Computers*. 106-A, Palace Road, Madurai-1/ Price : 110

Published with partial financial assistance from the Central Institute of Indian Languages (Ministry of Human Resource Development, Dept. of Education, Govt of India) Manasagangotri, Mysore-6, vide sanction letter No 51-10(1)/2000-2001/TAM/GRANT, dated 3rd July 2000, under the scheme of Grant-in-Aid. Copyright vests with T P Meenakshisundaranar Memorial Trust. Ehilakam. 4-Avenue street. Sakthivelammal Nagar. Madurai-625 010.

# பொருளடக்கம்

| | | |
|---|---|---|
| நூலின் தலைப்பு | - | **தமிழ்க்களஞ்சியம்** |
| ஆசிரியர் | - | தெ பொ மீனாட்சிசுந்தரன் |
| நூற்பொருள் | - | தமிழியல் |
| முதற்பதிப்பு | - | டிசம்பர் 2000 |
| வெளியீடு | - | தெ பொ மீனாட்சிசுந்தரனார் நினைவு அறக்கட்டளை எழிலகம் 4 அவின்யு தெரு சக்திவேலம்மாள் நகர் மதுரை-10 |
| ஒளிஅச்சுக்கோவை | | பெர்ஃபெக்ட் கம்ப்யூட்டர்ஸ் 106-ஏ பேலஸ் ரோடு மதுரை-1 |
| பக்கம் | - | xiii - 336 |
| விலை | | ரூ **110** |

இந்திய மொழிகள் நடுவண் நிறுவனம்(மனிதவள மேம்பாட்டு அமைச்சகம், கல்வித்துறை இந்திய அரசு) மானசகங்கோத்ரி மைசூர்-6 தனது நிதிஉதவித் திட்டத்தின் கீழ் அளித்த பகுதி நல்கை பெற்று இந்நூல் வெளியிடப்படுகிறது

பார்க்க- நிதிஉதவி அளிக்கும் பொருள் குறித்த கடிதம் எண் 51-10(1)/2000-2001/தமிழ்/நல்கை/தேதி 3-7-2000) பதிப்புரிமை தெ பொ மீனாட்சிசுந்தரனார் நினைவு அறக்கட்டளை

Title. **Tamilkkalanjiyam** / Subject Tamilology Author T P Meenakshisundaran/ Language: Tamil/Edition First No of Pages. xiii-336 Size 1 x 8 Demy / Cover design & Type setting: *Perfect Computers*. 106-A. Palace Road, Madurai-1/ Price **110**

Published with partial *financial* assistance from the Central *Institute* of Indian Languages (Ministry of *Human* Resource Development, Dept of Education, Govt. of India) Manasagangotri, Mysore-6, vide sanction letter *No* 51-10(1)/2000-2001/TAM/GRANT. dated 3rd July 2000, under the scheme of Grant-in-Aid. Copyright vests with T P.Meenakshisundaranar Memorial Trust, Elilakam. 4-Avenue street, Sakthivelammal Nagar. Madurai-625 010

இத்தொகுப்பிலுள்ள கட்டுரைகள் கீழ்க்காணும் கலைக்களஞ்சியத் தொகுதிகளில் இடம் பெற்றுள்ளன.

| கட்டுரை | தொகுதி/வெளியான ஆண்டு | பக்கம் |
|---|---|---|
| அ - இ | ஒன்று - 1954 | 1-3, 296, 495 |
| தமிழ் நூல்களில் அத்வைதம் | ஒன்று - 1954 | 79-81 |
| இலக்கணம் | இரண்டு - 1955 | 104-107 |
| ஈ - ஃ (ஆய்தம்) | இரண்டு - 1955 | 180,205-206,432, 460, 594,617-618, 654,714,752, 758-760 |
| க - கு | மூன்று - 1956 | 3, 416, 654, 724, 733 |
| காப்பியம் | மூன்று - 1956 | 505-507 |
| குணம் | நான்கு - 1956 | 16-17 |
| கூ - சி | நான்கு - 1956 | 150,190,197,206, 226,271,300, 354-356,536,632 |
| சித்தர்கள் | நான்கு - 1956 | 643-645 |
| சீ சௌ | ஐந்து - 1958 | 1,51,115,147,206, 220,245,258,284 |
| ஏ. ட, ண, த - தி | ஐந்து - 1958 | 286-287,294-296, 398-400,551,683 |

# முன்னுரை

பேராசிரியர் தெ.பொ மீனாட்சிசுந்தரனார் ஓர் அறிவுக்களஞ்சியம் அதற்கு இந்தத் *தமிழ்க்களஞ்சியமே* தக்க சான்று தமிழ் எழுத்தியல், மொழியியல், இலக்கியம், தத்துவம் தொடர்பாக, பேராசிரியர் தமிழ் வளர்ச்சிக் கழகம் வெளியிட்ட கலைக்களஞ்சியத் தொகுதிகளில் (தொகுபபாசிரியர் பெ.தூரன்) எழுதிய 88 கட்டுரைகள் இந்த நூலில் இடம் பெற்றுள்ளன இவை அவரது ஆழ்ந்தகன்ற புலமையின் வெளிப்பாடாக உள்ளன 1954-1963க்கு இடைப்பட்ட காலத்தில் இக்கட்டுரைகள் வெளியாயின இக்கட்டுரைகளில காணப்பெறும் கருத்துககளில சில இன்றைய ஆய்வின் வளர்ச்சியால் மாற்றம் பெறறுளளன, சில கருத்துக்கள் அல்லது கருதுகோளகள் மறுஆய்வுக்கு நம்மை இட்டுச செல்கின்றன 40 ஆண்டுகளுககு முன நிலவிய தமிழியல்-திராவிடஇயல் ஆய்வுப் பின்புலத்தில், பேராசிரியர் அன்று தமக்குக் கிடைத்த தரவுகளின் அடிப்படையில, தமது பன்முகப் பார்வையால் மிகச் சிறப்பானதொரு தமிழ்த் தொண்டு ஆறறியுள்ளார் என்றால், அது மிகையாகாது இக்கட்டுரைகள் இளந் தலைமுறையினர்க்கு ஒரு வழிகாட்டியாக அமையும என்கிற கருத்திலும், கலைக்களஞ்சியத் தொகுதிகள் அனைத்தும கிடைக்காத இன்றைய சூழலில், அவற்றில் வெளியான கட்டுரைகளை எல்லாம் தொகுத்து ஒரே நூலாக வெளியிடுவது அனைவர்க்கும பயன் தரும் என்கிற நோக்கிலும் இத்தொகுப்பு வெளிவருகிறது

பேராசிரியர் தெ பொ.மீ யின் நூற்றாண்டு விழா (08 01 2000-08 01 2001) நடைபெற்று வரும் இந்த நேரத்தில், அவரது படைப்புகள் அனைததையும் பல தொகுதிகளாக, பொருள்-காலவாரியாகத் தொகுதது வெளியிடும் திட்டத்தின் முதல் நிகழ்வாக இத்தொகுப்பு வெளிவருகிறது "A History of Tamil Literature" என்ற அவரது ஆங்கில நூலின் தமிழாக்கமும் (தமிழாக்கம் பேராசிரியர், இளமாறன்) இதனோடு வெளிவர உள்ளது பேராசிரியரின் அறிவுப் பெருவெள்ளததில் இந்த இரு வெளியீடுகளும் சிறு துளிகளேயாகும் அவர் ஆங்கிலத்திலும் தமிழிலுமாக ஏறத்தாழ 265 கட்டுரைகளும் 56 நூல்களும (இவற்றுள சில கட்டுரைத் தொகுப்புகள்) எழுதியுள்ளார் இவை எல்லாவற்றையும் முறைப்படுத்தி வெளியிட்டு 21-ஆம நூற்றாண்டில காலடி எடுததுவைக்கும் இளம ஆயவாளர்களுக்குத தரவேண்டும என்கிற உந்துதலின் ஒரு வெளிப்பாடாக இந்த இரு வெளியீடுகள இன்று கதிரொளி காண்கின்றன பதிபபகங்கள,

நிறுவனங்கள், தமிழ் ஆர்வலர்களின் ஒத்துழைப்பு கிடைக்குமெனில், எஞ்சிய கட்டுரைகள் நூலாக வெளிவரும்; நூல்கள் மறுபதிப்பு காணும் என்கிற நம்பிக்கையில் இந்த நூல் வெளியீட்டுப் பணி மேற்கொள்ளப்பட்டது.

பேராசிரியரின் தமிழ்ப்பணியை அளவிடும நோக்கில் கடந்த ஆண்டில் சில கருத்தரங்குகள் நடைபெற்றன மதுரையில் 08 01 2000-இல தொடங்கிய நூற்றாண்டுத் தொடக்கவிழாவின் தொடர்ச்சியாக, தமிழ்ப்பல்கலைக்கழகம், மேலைச்சிவபுரி கணேசர் செந்தமிழ்க் கல்லூரி, மதுரை காமராசர் பல்கலைக்கழகம், பாரதியார் பல்கலைக்கழகம், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் ஆகியன கருத்தரங்குகள் நடத்தின. 2001-சனவரியில் சென்னைப் பல்கலைக்கழகம, அண்ணாமலைப் பல்கலைக்கழகம், அமெரிக்கன் கல்லூரி ஆகியன கருத்தரங்குகள் நடத்த உள்ளன இக்கருத்தரங்கக் கடடுரைகளும் தொகுபபாக வருமபோது, தமிழ ஆய்வுக்களம விரிவுபெறும என்பது திண்ணம்

கலைக்களஞ்சியக் கடடுரைகளைத் தொகுத்து நூலாக்கும்போது சில ஐயஙகள்/சிக்கல்கள் தோன்றின இக்கட்டுரைகள் பேராசிரியர் சொல்லச் சொல்ல திரு வஜ்ரவேலு (தமிழ் வளர்ச்சிக் கழகததில் கண்காணிப்பாளராகப் பணியாற்றி வருபவர்) எழுதியிருக்கிறார் தமிழ்க் கல்வெட்டில காணப்படும் எழுத்து வடிவங்களைக் கையால் எழுதும்போதும, அவற்றை அச்சிடும்போதும் சில மாற்றங்கள் நிகழ வாய்ப்பிருந்திருக்கலாம இன்று அவற்றைக் கணினியில் உள்ளீடு செய்யுமபோது ஏற்படட சிறு இடர்ப்பாடுகளையும், மதுரை பெர்ஃபெக்ட் கம்பயூட்டர்ஸ் கூடுமானவரை களைந்து நன்முறையில் நகலெடுத்தனர் ஆங்காங்கே காணப்படும் நீண்ட நெடிய வாக்கியங்களில் நிறுத்தல் குறிகள் உரிய இடங்களில் தரப்படாதது மயக்கம் தந்தது இடம், பொருள் கருதி, இத்தொகுதியில் நிறுத்தல் குறிகள் தரப்பட்டுள்ளன சில சொல்லாட்சியிலும் (பலபல, பலப்பல, சிலசில .. . ) கலைச் சொல்லாட்சியிலும் (close - செறிவு, மூடு, அண்மு) சீரின்மை காணப்பட்டது பேராசிரியர் எல்லாவற்றையும் சரிபார்த்திருபபின், இச்சீரின்மை களையப்பட்டிருக்கக்கூடும் என்று கருதத் தோன்றுகிறது எனவே, அதிக மாற்றம் செய்யாது, மூலவடிவம் சிதையாது, பல கட்டுரைகள் உள்ளது உள்ளவாறே இத்தொகுதியில் இடம் பெறறுள்ளன

பேராசிரியரின் படைப்புகள் குறித்து ஏற்கனவே சில திறனாய்வு நூல்கள் வெளிவந்துள்ளன. அவரைப் பற்றிய ஆய்வுக்களன் விரிவு பெற இந்த வெளியீடும் உதவும். இதைத் தொடர்ந்து அவரது ஏனைய கட்டுரைகளும் நூல்களும் வெளிவர வேண்டும். அப்படி வருமபோதுதான், அவரைப்பற்றிய ஒரு முழுமையான பார்வை நமக்குக் கிடைக்கும்.

கலைக்களஞ்சியக் கட்டுரைகளைத் தொகுத்து நூலாக வெளியிட இசைவளித்த சென்னை, தமிழ் வளர்ச்சிக் கழகத்திற்கு நெஞ்சார்ந்த நன்றி கலைக்களஞ்சியத் தொகுதிகளைக் கொடுத்துதவிய மதுரை சௌராஷ்டிரக் கல்லூரி நிர்வாகத்துக்கும், இந்நூல் வெளியீட்டுக்கு வேண்டிய உதவிகள் புரிந்த அந்தக் கல்லூரியின் சமஸ்கிருதப் பேராசிரியர் தி.ர தாமோதரன் அவர்களுக்கும் நன்றி

இந்த நூலை வெளியிடும செலவில் ஒரு பகுதியை நல்கையாகத் தந்துதவிய மைசூர் இந்திய மொழிகளின் நடுவண் நிறுவனத்துக்கும், நல்லமுறையில் ஒளிஅச்சுக்கோவை செய்த மதுரை பெர்ஃபெக்ட் கம்ப்யூட்டர்ஸிற்கும் மெய்ப்புத் திருத்தி உதவிய பேராசிரியர் நீதிவாணனுக்கும் நன்றி.

மதுரை.
25-12-2000

*இராம. சுந்தரம்*

# அ

தமிழ் நெடுங்கணக்கில் முதல் எழுத்து. *எழுத்தெனப்படுப அகர முதல் னகர இறுவாய்* என்று தொடங்குகிறது தொல்காப்பியம்; *அகர முதல எழுத்தெல்லாம்* என்று தொடங்குகிறது திருக்குறள்; இந்திய நாட்டுப் பிறமொழிகளிலும் இதுவே முதலில் வரும் எழுத்தாம்.

வடிவம் : இந்த எழுத்தின் வடிவம் வளர்ந்த வரலாற்றைக் கீழே காணலாம்:

அசோகன் ( கி.மு. 3ஆம் நூற்றாண்டு)
அரிட்டாபட்டி (கி.பி. 2 ஆம் நூற்றாண்டு)
சிற்றன்னல் வாயில் ( சித்தன்ன வாசல்) ( 7 ஆம் நூற்றாண்டு)
அரிக்கமேடு ( முதல் நூற்றாண்டு)
திருநாதகுன்றம் ( 5 ஆம் நூற்றாண்டு)
நரசிம்மவர்மன் மாமல்லன் ( 7 ஆம் நூற்றாண்டு)
பல்லவ மல்லன் ( 8 ஆம் நூற்றாண்டு)
பிற்காலப் பல்லவர் : இராசராசன் (10 ஆம் நூற்றாண்டு)
பிற்காலச் சோழர் பாண்டியன் (12-13 ஆம் நூற்றாண்டு)
இப்போது............ அ

இந்தக்கோலெழுத்தினை விரைவாக ஓலையில் எழுதி வந்தபோது வட்டெழுத்து வடிவம் தோன்றியது என்பர். பாண்டிய நாட்டிலும் மலையாள நாட்டிலும் வட்டெழுத்து வழங்கியது

வட்டெழுத்தில் அகரத்தின் வடிவம் கீழ்க்கண்டவாறு மாறி வந்துள்ளது.

| | |
|---|---|
| 8 ஆம் நூற்றாண்டு | |
| 10 " ,, | |
| 13 " , | |
| 14 " ,, | |
| 18 " ,, | |

*ஒலி* அகரத்தினை எழுத்தாகக் கூறுமபோது சாரியை சேர்த்து அகரம, அகாரம், அஃகான் என்று வழங்கியதாக இலக்கண நூல்களிலிருந்து அறிகிறோம் அ-னா என்று வழங்குவதனை இன்றும் கேட்கிறோம் குழந்தைகள் எழுத்துக்களைப் பாட்டோசையாகப் பாடும் போது அ-ஆனா என வழங்குவதனையும் காண்கிறோம்

அ என்ற ஒலியை a என அனைத்து நாட்டு ஒலி நூலோரும் எழுதிக் காட்டுவர். நாவினைப் படுக்க வைத்து வாயினைத் திறந்ததும் ஒலி அ என வெளிவருகிறது. ஆதலின் இதை அடிப்படை ஒலி என்பர் பரிமேலழகர். வாயினையுமநாவினையும் பலவகையில் மாற்றுவதால் இந்த ஒலியே பலவகை எழுத்துக்களாக மாறுகின்றது, *கடவுள் எங்கும் நிறைந்திருப்பது போல எல்லா எழுத்துக்களிலும் அகரம் உண்டு* என்பர் நச்சினார்க்கினியர் தனி மெய் எழுத்துக்களை *இக், இங்* என்று இப்போது ஓதுவதுபோன்று அல்லாமல் அகரம் சேர்த்தே க, ங என முன்னாளில் வழங்கி வந்தனர்

அ என்ற ஒலி, எடுத்துச் சொல்லப்பெறாத போது நெகிழந்து போய்ப பலவகையாக மாறும். தமிழ் ச் சொற்றொடரில் எழுவாயிலேயே பால் விளங்கிவிடுவதால் பயனிலையாக வரும் வினைச் சொலலில் பாலை விளக்கும் விகுதி எடுததுச் சொல்லப் பெறாமல் அவ்வாறு நெகிழ்ந்து போகும் வருகின்றனன் என்னும போது கடைசியில் வரும அன் எனற அகரம நெகிழந்து பொது உயிரின் ஒலிபெறும (Neuter vowel-But எனபதில் வரும உயிர்

போன்றது-இதனை ^ என்று எழுதுவர்) அளவுக்கு மேல் எடுத்துக் சொல்லும் போதும் இந்த ஒலி மாறும் பின்னர்ச் சார்ந்து வரும் எழுத்துக்களின் இயைபால் மேலும் மாறும். வம்பன், இராமன் என்ற சொற்களில் கடைசியில் வரும் ன் என்ற எழுத்து மேல் அண்ணத்தின் முயற்சியால் பிறப்பதால் அ என்பதும் அண்ணச்சாயல் (Palatalisation) கொண்டு, இகரக் கூறு பெற்று, எகரம் போலாகி *வம்பெ° இராமெ°* என ஒலிக்கும். *கும்பம்* என்பது போன்ற இடங்களில் இதழ் அல்லது உதட்டின் *முயற்சியால் பிறக்கும் மகரத்தின்* சார்பால் உதட்டுச் சாயல் (Labialisation) கொண்டு உகரக்கூறு பெற்று ஒகரம் போலாகிக் *கும்பொ°* என ஒலிக்கும்

பலா என்பது மொழி முதல் எழுத்தோசை பெறாவிடின் பிலா, என்றாகும் போது அகரம் இகரமாக மாறக் காண்கிறோம். *அவர்கள்* என்பது வட தமிழ் நாட்டில் வழங்கும் போது *அவங்கள்* என்றும் *அவுங்கள்* என்றும் வகரச் சார்பால் உதட்டுச் சாயல் பெற்று அகரம் உகரமாகும்; தென் தமிழ் நாட்டிலும், கொங்கு நாட்டிலும் அவர்கள் என்பதில் உள்ள ரகரச் சார்பால் அண்ணச் சாயல் பெற்று *அவிகள்* என்றாகும் போது அகரம் இகரமாகக் காண்கிறோம். ரகரம் கெடுவதால் முன்னுள்ள அகரம் நீண்டு *அவாள்* என்று வழங்கும் போது அகரம் ஆகாரமாக மாறக் காண்கிறோம். *ஔ* என்பது *அவ்* என்றும் *ஐ* என்பது *அய்* என்றும் எழுதப் பெறும் பொழுது *ஐ, ஔ* என்ற இரண்டும் அகரமாகக் காண்கிறோம். இரண்டு மாத்திரை எழுத்துக்களாகிய இவை ஒரு மாத்திரையாக இவ்வாறு ஒலிக்கும் போது ஐகாரக்குறுக்கம் ஔகாரக்குறுக்கம் எனப் பெயர் பெறும் *அரசன், அத்தை* போன்ற சொற்களில் வரும் அகரம், அண்ணச்சாயல் பெற்று அரைசன் ஐத்தை என வழங்கும் போது ஐகாரமாகும்; பசுமை+தமிழ்-பைந்தமிழ் என்று ஆகும். இவ்வாறெல்லாம் அகரம் பிற உயிரெழுத்துக்களாக மாறக் காண்கிறோம். அத்தகைய பொது நிலையில் சில போது அகர ஒலி நின்றுவிடுகிறது.

இந்நாளைய பேச்சு வழக்கில் அவன், அவள் முதலிய சொற்களில் ஈற்று மெய் ஒலிக்கப்பெறுவதில்லை. னகரத்தின் சார்பால் அகரம் மூக்கொலியாக மாறுகிறது. அவ°-ஆண்பால்; அவ-பெண்பால். பிரெஞ்சு மொழியில் வழங்கும் மூக்கொலி உயிர் தமிழிலும் இவ்வாறு வழங்கக் காண்கிறோம்.

குசுகுசு எனப் பேசும்போது அகரம் ஒலி எழுத்தாக (Voiced letter) அல்லாமல் உயிர்ப்பெழுத்தாக (Breathed letter) மாறக் காண்கிறோம்

தாய்த் திராவிட மொழியில் ஈ என்ற ஒலியுள்ள எழுத்து இருந்தது என்றும் அதற்கென வடிவெழுத்து ஒன்றனை அமைக்காமையால் அஃது *அ* என்றும் *எ* என்றும் *யா* என்றும் எழுதப் பெற்றதென்றும் *ஆனை, யானை, ஏனுக* (தெலுங்கு) என்பவையும், *யான்* (தன்மை ஒருமைச்சொல்), *ஏம், ஓம்* (தன்மை பன்மை விகுதி) என்பவையும், இன்றும் ஈ ஒலி hand முதலான சொற்களில் வருவதனைத் தமிழர் ப்யாண்டு முதலாக எழுதுவதும் ஒலிப்பதும இதற்குச் சிறந்த எடுத்துக்காட்டு என்றும் மொழிநூல் வரலாறு கூறும் *அன்* என்ற தன்மை ஒருமை விகுதியில் உள்ள அகரம் ஈ என்பதன் மரூஉவே ஆகும என்பா

*பொருள்* அ என்பது எழுதகதுச் *சாரியையாகக்* க முதலியவற்றில வரும எனக் *கண்டோம* உரி+பயறு=உரிய பயறு போன்ற இடங்களில் அகரம சொற்களில் சாரியையாக வரும் திரு+மேகலை=திருவ மேகலை (சிந்தாமணி 530) என்பது போன்ற இடங்களில் அகரம் அசை நிலையாக வந்தது என்பர்

*சாரியைகளை எலலாம பழைய* வேற்றுமையுருபுகள் *என்பர் அறிஞர்* கால்டுவெல அகரம ஆறாம் வேற்றுமைப் பன்மையுருபாக வரும (தனகைகள்) இரண்டாம் வேற்றுமை உருபாம் ஐகாரம பழந் தமிழில் அ எனவும் வரும் கானநாடனைக் களிறஞ்சுமமே=கானநாடனக் களிறஞ்சும்மே (தொல்காப்பியம 591)

தன கைகள் என்பது போன்ற இடஙகளில் வரும் தன என்பது வினையாலணையும பெயராம எனறு கொளவோரும அகரம் பலவினபால விகுதியே எனறு கொள்வோரும உண்டு ஒருமை பனமைகளில் வெவ்வேறு உருபு பெறுவதும் இஃது அஃறிணை விகுதியாதலின் அஃறிணையில் வரும்போது மாறாது, உயர்திணை கொண்டு முடியும போது கு என மாறுவதும இதனை வலியுறுத்தும என்பர் (தொல் 577) பல என்பதில ஈற்று அகரம் பலவின்பால பெயா விகுதி. *வந்தன* என்பதில பலவின் பால வினைமுற்று விகுதி *செய* என்னும் வாய்பாட்டு வினை எச்சத்திலும அகரம விகுதியாக வருகிறது *செய்கின்ற, செய்த* எனற வாய்ப்பாட்டில் வரும நிகழ்கால இறந்த காலப பெயரெச்சங்களின விகுதியாகவும் நல்ல, *கரிய* போன்ற குறிப்பு பெயரெச்சஙகளின விகுதியாகவும் அகரம வரக காண்கிறோம தற்கிழமையும பிறிதின் கிழமையுமாம வேற்றுமைப பொருளினையே அகரம எஙகும குறிக்கும என்று கொளவோரும உண்டு *ஓஙக நீஙக* எனற இடஙகளில் அகரம வியஙகோள விகுதியாக வருகிறது

*அ* என்பது *வாரான்* என்பது போன்ற இடங்களில் எதிர்மறையைச் சுட்டி ஆன் என்பதில் கலந்து விட்டது என்று கூறுவோரும், *அல்* என்பதன் மருஉவே அந்த அகரம் என்று கூறுவோரும் உண்டு.

தமிழில் மொழிக்கு முதலில் வாராத ரகரத்தில் தொடங்கும் மொழிகளின் முதலில் அகரம் தமிழோசை நயம் பிறப்பிக்க வரும் (Prothesis) உ-ம். *அரங்கம், அரதனம்.*

அ என்பது தொலைவில் உள்ளாரைச் சுட்டும் சேய்மைச் சுட்டு எழுத்தாம். அகரமானது அவன், அவள் முதலிய சொற்களில் சொல்லின் அடிப்படையாய் அகச் சுட்டாகியும், அக்கொற்றன் அச்சாத்தன் முதலியவற்றில் சொல்லின் புறத்தே வரும் புறச்சுட்டாயும் வழங்கி வரும். பேசுகின்ற அல்லது எழுதுகின்ற இடத்திற்கேற்ப மேற்கண்டபடி குறிப்பாகப் பொருளுணர்த்தும் பண்டறிசுட்டாக வருவதன்றி *அக்கடவுள், அத்தம்பெருமான்* (சிந். 22[1]) என்பன போன்ற உலகறி சுட்டாக எங்கும் யாவர்க்கும் விளங்கவும் வரும். வடமொழியில் அரூபம் (ரூபம் இல்லாதது), அநேகம் (ஒன்று அல்லாதது), அதர்மம் (தருமத்திற்கு மறுதலையாம் பாவச் செயல்) என்ற சொற்களில் ந என்பது அ எனத் திரிந்து இன்மை, அன்மை, மறுதலைப் பொருளில் வரும். அச் சொற்கள் தமிழில் வழங்கும் போது அப்பொருள்களில் அகரம் வழங்கக் காண்கிறோம்.

அ என்பது எட்டு என்ற எண்ணின் அடையாளமாகவும் வழங்கி வருகிறது. *அஉ அறியா அறிவில் இடை மகன்* (யாப்பருங்கல விருத்தி பா. 142). *எட்டினோடிரண்டும் அறியேனையே* (திருவாசகம்-திருச்சதகம்) என வருதல் காண்க. சுழியோடு தொடங்காத அகரமே எட்டினைக் குறிக்கும் என்பர் சிலர். இதன் வடிவ வரலாற்றினைக் அடுத்த பக்கத்தில் காண்க:

குகை எழுத்து

பல்லவர்

பாண்டியன்

இந்நாள்

அ என்பதற்குக் கடவுள் என்பதே பொருள் என்பர். அது திருமாலையும் சிவனையும் குறிக்கும். ள(*அவ்வென் சொற்பொருளாவான்* (பாகவதம் சிசுபா.20) அகாரம் அவன்- (திருமந்திரம் 751)ன *அகரம் என அறிவாகி* (விநாயக புராணம்-1) என்பதனால் கடவுளறிவுக்கும் அது பெயராம்.

# ஆ

ஒலி: இது தமிழ் நெடுங்கணக்கிலும் இந்திய நாட்டுப் பிறமொழிகளின் நெடுங்கணக்கிலும் வரும் இரண்டாம் எழுத்து; இரண்டாம் உயிர்; நெடில், அகரம் போல அங்காத்தலால் பிறப்பது. மாத்திரை அல்லது உச்சரிப்பின் நேரம் அகரத்தைப்போல் இதற்கு இரண்டு மடங்கு ஆம் என்பது இலக்கண நூல் மரபு; ஆனால், வழக்கில் பெரிதும் குறைந்து வரும். மாத்திரையால் மட்டுமின்றிச் சுரத்தாலும், நா முதலியவை சிறிது முறுக்கிக் கொண்டு நிற்பதாலும் அகரத்தினும் இது வேறாம்.

*aa* என்று இதனை எழுதுவர் ஒலி நூலார். அ்-ஆ என்று ஒலித்துக் காண்க. இது நெகிழ்ந்து போகாமைக்கு அளவெடுப்பது பழைய வழக்கம். நெகிழ்ச்சியைத் தடுப்பதற்கோ, வற்புறுத்தற்கோ அகரம் ஆகாரமாகவும் மாறும். பல, *சில>பலாஅம், சிலாஅம்; நில>நிலா.* இங்கு அகரமே முதல் வடிவம் என்பாரும் உண்டு. அ+அ= ஆ என வடமொழியில் வரும் தீர்க்க சந்தி வடசொற்களில் நேராகவும், *குள+ஆம்பல்=குளாஅம்பல்; மர+அடி=மராஅடி* என்பன போன்ற தமிழ்ச் சொற்களில் மரூஉ வழக்காகவும் வழங்கும்

ஆ என்பது *போவான்>போவா0* எனப் பேச்சுவழக்கில் மூக்கொலிப்பு உயிராகவும், குசுகுசு என்று பேசும்போது மெய்யாகவும், அழுகை முதலியவற்றில் உள் வாங்குயிர்ப்பொலியாகவும் வரும். æ என்ற ஒலி, யா எனத் தமிழில் மொழிக்கு முதலாக எழுதப்படுவது ஆ என வருவதும் உண்டு, *(ஆனை, ஆண்டு)* ஐ என்பது விளிப்பெயரில் ஆய் என்றாகிய *(தந்தை>தந்தாய்)* ஆ என்ற ஒலி பெறும். சேய்மை விளியில் ஈற்றுமுன் அகரம் ஆ என நிற்கும்; *(முருகன், முருகா). சீதா* என்ற வடமொழி *சீதை* எனத் தமிழில் ஆகும் போது ஈற்று ஆகாரம் ஐ என ஒலிக்கும். *வருவாம்>வருவோம்* என்று, ஆம் விகுதியின் ஆகாரம் ஈற்றிலுள்ள மகரத்தின் உதட்டுச் சாயல் பெற்று ஓகாரமாகும்.

*பொருள்* வியப்பு, இரக்கம், இகழ்ச்சி, துன்பம் என்றவற்றின் குறிப்பாக ஆ வரும்; அப்போது அளபெடுத்தலும் உண்டு ஈற்று வினா இடைச்சொலலாகவும் either-or என ஆங்கிலத்தில் வருவது போன்ற

விகற்ப இடைச்சொல்லாகவும், வரையிலும் *(ஆசந்திரார்க்கம் சூரிய சந்திரர் உள்ள வரையிலும்)* என்ற பொருளில் வரும் வடமொழி உபசர்க்கமாகவும், உடன்பாட்டு இறந்தகால வினையெச்ச விகுதியாகவும், *(உண்ணா-உண்டு)* எதிர்மறை இடைநிலையாகவும் *(உண்ணாத)* படர்க்கைப் பலவின்பால் எதிர்மறை வினைமுற்று விகுதியாகவும், உளதாதல், நிகழ்தல், மேன்மேல் வளர்தல்,முடிவு, ஒழிவு, ஒப்பு, உண்டாக்கல், கட்டுதல், அமைதல் முதலிய பொருளில் வரும் வினைப்பகுதியாகவும், ஆச்சாமரத்தின் பெயராகவும் வரும். பெற்றம், மரை, எருமை என்பனவற்றின் பெண்பாற் பெயராகத் தொல்காப்பியர் காலத்தில் வழங்கியது பின்னர் எருதையும் உணர்த்தலாயிற்று. ஆன்மாவிற்குப் பசு என்னும் பெயரிருத்தலின் ஆ என்பதும் அதனைக் குறிக்கும். சாரியையாகவோ, பழைய உடன்படு மெய்யாகவோ வந்த னகரத்தை ஆவோடு சேர்த்து ஆன் எனப் பின்னர்க் கொண்டமைத்த அமைப்பும் (Back formation) உண்டு.

*வடிவம்:* அகரத்தின் பின் நடுவே குறுக்காக எழுந்த படுக்கை நேர்க்கோடு சிலபோது கீழாக வளைந்து, பின் அடியில் கீழ் விலங்காக அமைந்தது. உயிர்மெய் எழுத்தில் ஆகாரக் குறியாக எழுத்தின் தலையின் வலப்பக்கம் நேர்க்கோடு ஒன்று குறுக்காகச் **சென்றது**. பின்னர் மெய் எழுத்தினை அடுத்து வளையமாக நின்றது. **ஆனால்** வட்டெழுத்தில் படுக்கைக் கோடாகவே நிலைத்து விட்டது.

| | |
|---|---|
| அசோகன் (கி. மு. 3-ஆம் நூ.) | |
| கி. மு. 1-ஆம் நூ. | |
| திருநாதர்குன்றம் (கி. பி. 5-ஆம் நூ.) | |
| பல்லவர் (7-ஆம் நூ.) | |
| 9-ஆம் நூ. முற்பகுதி | |
| ,, பிற்பகுதி | |
| சோழர் (10-ஆம் நூ.) | |
| 11-ஆம் நூ. முற்பகுதி | |
| பாண்டியர் (13-ஆம் நூ.) | |
| தற்காலம் | |

வட்டெழுத்துக்களில் ஆ கீழ்க்கண்டவாறு வேறுபட்டு வளர்ந்தது. இங்கே, மூன்றினை இடம் வலமாகத் திருப்பி வைத்தது போன்ற தொடக்கப் பகுதி (ஃ) மூன்று போலவே எழுதப் பெற்றுப் பின் சிறுத்து வரக் கீழ் வளைவாக அமைந்த பகுதி சிறப்பிடம் பெற்று வளர்ந்து வரக் காண்கிறோம்.

| | |
|---|---|
| அசோகன் (கி.மு.3ஆம் நூ.) | |
| கி.பி 8 ஆம் நூ. | |
| " 10 " | |
| " 13 " | |
| " 14 ஆம் 15 ஆம் நூ | |
| " 17 ஆம் நூ. | |
| " 18 " | |

ஆ என்பது பழைய தமிழிசை மரபில் *ச* என்ற சுரத்தின் அறிகுறியாகவும் இன்றைய வழக்கில் *ஆக மொத்தம்* என்பதன் அறிகுறியாகவும் வழங்குகிறது.



*ஒலி:* தமிழுள்ளிட்ட இந்திய மொழிகளில் நெடுங்கணக்கில் வரும் மூன்றாம் எழுத்து; மூன்றாம் உயிர் இது குறில். சுற்றியுள்ள பற்களின் அடியினை மெல்ல ஒற்றிப் பரவி நிற்குமாறு நாவினை அமைத்து, அண்ணத்திற்கும் நாவிற்கும் இடையே இடைவெளி சிறிதே இருக்கும்படி, வாயைக் குவியாது, உதட்டினைக் குறுக்காக விரித்து ஒலிக்கும் ஒலிப்பு உயிர் இதுவாம். இதனைச் செறிவுடை (Close) குவியா (Unrounded) முன்வாய் (Front) நெகிழ் (Lax) குறில் உயிர் (Short vowel) என்பர்.

தமிழில் முதலாகாத ய,ர,ல என்பவற்றில் ஒன்றில் தொடங்கும் பிறமொழிச் சொற்களில் இது இன்னிசை முந்துநிலை எழுத்தாகவும் (Prothesis) *(இயக்கன், இராமன், இலக்கம்)* தமிழில் வாராத கூட்டெழுத்துக்களைப் பிரிக்க வரும் இன்னிசை இடைநிலை எழுத்தாகவும் (Epenthesis) *ரத்னம்-இரத்தினம்*, பின்வரும் யகரத்தின் சார்பால் அண்ணச் சாயல் பெற்று உதட்டுச் சாயல் நீங்கிய குற்றியலுகரத்தின் குற்றியலிகர ஒலியாகவும் *காடு+யாது=காடியாது*, ஞ, ண, ந, ம, ன, ர, ல, வ, ழ, ள என்பவற்றின் பின் யாகாரத்தினை ஒலிக்க முந்தும் போது எழும் வழுக்கொலியாகவும் (Glide), *மண்+யாது=மண்ணியாது*, வடமொழியில் ஈற்று யகரத்தின் தமிழ் ஒலியாகவும் *கன்ய>கன்னி, சிறு>சிறி* முதலிய இலக்கிய வழக்கில் உகரத்தின் மாற்றெழுத்தாகவும், *இருவர்>இரிவர்* என்பது போன்ற மலைநாட்டு வழக்கில் உகரத்தின் மாற்றெழுத்தாகவும், *கத்திக்கு>கத்திக்கி* எனத் தெலுங்குறவால் வடதமிழ்நாட்டிலே முன்வரும் இகரச் சார்பால் பின்வரும் உகரத்தின் மாற்றெழுத்தாகவும் இந்த இகரம் வரக் காண்கிறோம் கொடுந்தமிழ் வழக்கில் இகரம் எகரமாக ஒலிக்கும் *இடை>எடை*. இழி வழக்கில் முதலில் வரும் எழுத்துடன் சேர்ந்து இது அதனை மாற்றுவதும் உண்டு. *இரட்டி>ரெட்டி, இரண்டு>ரெண்டு* நாச் சிறிது அண்ணத்தை ஒட்டவரின் யகரம ஒலிக்குமாதலின் இழிவழக்கில் இகரம் யகரத்தோடு ஒலித்தலும் உண்டு முன்னாளிலும் இலக்கிய வழக்கில் *போஇ>போய்* என இகரம் யகரமாக ஒலித்ததும் உண்டு.

*பொருள்:* இவன் என்பதைப்போல அகச்சுட்டாகவும், இக்குதிரை என்பதைப் போலப் புறச்சுட்டாகவும், இருதிணை முக்கூற்றொருமை விகுதியாகவும் *கையிலி*, ஆண்பால் விகுதியாகவும் *வில்லி*, பெண்பால் விகுதியாகவும் *கூனி*, ஒன்றன்பால் விகுதியாகவும் *காலி*, வினைமுதற்பொருள் விகுதியாகவும் *அலரி*, செயப்படுபொருள் விகுதியாகவும் *தீனி*, கருவிப்பொருள் விகுதியாகவும் *மண்வெட்டி*, வினைச்சொற்களில் எதிர்கால முன்னிலை ஒருமை விகுதியாகவும் *வருதி*, ஏவல் ஒருமை விகுதியாகவும் *செல்லுதி*, வியங்கோள் விகுதியாகவும் *காட்டி*, பகுதிப்பொருள் விகுதியாகவும் *உருளி*, தொழிற்பெயர் விகுதியாகவும் *வெகுளி*, வரும். திராவிட மொழியில் முன்னிலையின் அடிப்படை உயிர் இகரம் என்பர்.

இ என்பது அரை என்னும் எண்ணின் குறியாக வரும்.

வடிவம்: இந்த எழுத்தின் வடிவம வளர்ந்த வரலாறு பின் வருமாறு:

அசோகன் (கி.மு. 3ஆம் நூற்றாண்டு)

கி.பி 3ஆம் நூற்றாண்டு

கி.பி. 7 ஆம் நூற்றாண்டு

8 ஆம் "

9 ஆம் "

"

10 ஆம்

கி.பி 11 ஆம் "

கி.பி 13 ஆம் நூற்றாண்டு - தற்காலம்.

வட்டெழுத்துக்களின் வளர்ச்சி கீழ்க்கண்டபடியாம்: 3 போல் எழுதப்பெறும் இகரம் வடடெழுத்தில் அடிவளைவு வலப்புறமாகச் சுழிக்கப்பெறும்

| | | |
|---|---|---|
| கி.பி. 8 ஆம் நூற்றாண்டு | | [illegible] |
| கி.பி. 10 ஆம் | " | [illegible] |
| கி.பி. 11 ஆம் | " | [illegible] |
| கி.பி. 13 ஆம் | " | [illegible] |
| 14, 15 ஆம் | " | [illegible] |
| 18 ஆம் | " | [illegible] |

உயிர்மெய்யெழுத்தில் இகரத்தைக் குறிக்கும் மேல் விலங்கு கோலெழுத்தில் மெய்யெழுத்தின் உச்சியின் மேல் முதலில் கோணமாக நின்றது வளைவாகிப் பின் தனித்து நின்று, பின்னர்த் தலையின் வலப்புறத்தில் ஒதுங்கிவரத் தொடங்கியது.

வட்டெழுத்தில் வலப்புறத்தில் வலஞ்சுழியான வளைவாக எழுகிறது.

*ஒலி* இது தமிழுள்ளிட்ட இந்திய மொழிகளில் நான்காம் உயிர், இகரத்தின் நெடிலாம் இது சுரத்தாலும மாத்திரையாலும் நாவின் முறுக்கேற்றத்தாலும அதனின் வேறாகும், ஆதலின் இதனைச் செறிவுடை (Close), குவியா (Unrounded), முன்வாய் (Front), இறுகு (Terse), உயிர் எனபர் அகரம ஆகாரமாதற்குக் கூறியவை இதற்கும் ஆகும நெகிழாமையைத் தடுகக யகர ஒலி பின் வரும், கலவெட்டுக்களில் இதன் பின் யகரம் இட்டு எழுதக் காண்கிறோம் *தீய்* ஓரெழுத்தொரு மொழி, விளி, அளபெடை பெற்ற இடம முதலியவற்றிலன்றி ஈ ஈற்றில நெகிழ்நது போவதால் வருவது அருமையாயிற்று. செய்வி எனபதன் ஈறறில் உள்ள இ இவ்வாறு குறுகிய ஈ யே என்பர் வடமொழி ஈ, ஈறு இகரமாகும்

*பொருள பல்லெலலாம தெரியக்காட்டி ஈ என இளிக்கிறான்* என்ற வழககை நோக்க, ஈ என்பது இழிந்தோன் இரப்பின் சைகையாகிக் குறிப்போசையாகி இரபபுரையாகியது என்பர், சைகை ஒலி மொழியாக வளர்ந்தது, குறிப்போசை மொழியாக வளர்ந்தது என்ற கொளகைகளுக்கு இது எடுத்துக்காட்டாம் பின்னர்ப் பொதுவாகக் கொடு எனற பொருளில் வழங்கியது (1) பகிர்தல், கணக்கில் வகுத்தல், ஆசிரியன் கறபிததல், படைத்தல், ஈனுதல், நேர்தல், அழிவு என்ற பொருளில வரும வினைபபகுதியாகவும, (2) ஈ, தேனீ, வண்டு என்ற அறுகாலிகளையும, இறகு எனபதையும குறிக்கும் பெயர்ச் சொல்லாகவும் (3) அதிசயக் குறிபபாகியும விரீஇ முதலிய இடங்களில் இகரம நீண்டு அளபெடுத்து, இறநதகாலப் பிறவினை விகுதியாகியும, முன முனனிலை ஈறாக இருந்தது, பொருளறற நிலையில முன்னிலை அசையாகியும் வரும இடைச சொலலாகவும வழங்கும

இது பழைய தமிழிசை மரபில *ரி* எனற சுரததைக குறிக்கும அறிகுறியாகும

*வடிவம்:* இதன் வடிவம் வளர்ந்த வரலாறு அடுத்துகண்டபடியாம்:

| | |
|---|---|
| அசோகன் ( கி.மு. 3 ஆம் நூ.) | [illegible] |
| பழங்குகை ( கி.மு. 3 ஆம் நூ.) | [illegible] |
| கி.பி. 8 ஆம் நூ. | [illegible] |
| கி.பி. 10 ஆம் நூ. | [illegible] |
| கி.பி. 13 ஆம் நூ. | [illegible] |
| தற்காலம் | ஞ ஈ |
| கி.பி. 8 ஆம் நூ. | [illegible] |
| 10 " | [illegible] |
| 18 " | [illegible] |

உயிர்மெய்யெழுத்தில் ஈகாரக் குறியாக வரும் மேல் விலங்கு முதலில் இடப்புறம் சுழிக்கப்பெற்றும், 11ஆம் நூற்றாண்டிலிருந்து வலப்புறம் சுழிக்கப்பெற்றும் வரலாயிற்றாம்.

கோல் எழுத்தினும் வட்டெழுத்து மாறுபடக் காணோம். கோலெழுத்தில் எழுந்த வளர்ச்சி, வட்டெழுத்தில் முன்னரே தோன்றக் காண்கிறோம்.

*ஒலி.* தமிழ் உள்ளிட்ட இந்திய நெடுங்கணக்கு எழுத்து வரிசையில் இஃது ஐந்தாவது ஆகும். இஃது உயிர் எழுத்து. உயிர் எழுத்து என்பது நா, அண்ணம், இதழ் முதலியவை ஒன்றோடு ஒன்று ஒற்றுகிற தடை ஒன்றும் தோன்றாதிருக்கக் குரல்வளையின் இதழ் மட்டும் துடிப்பதால் எழும் ஒலி எழுத்தாகும். அண்ணத்தினைத் தொடாதபடி அதனை நோக்குமாறு நாவினை உயர்த்தும்போது முன் அண்ணம் அல்லது வலிய அண்ணத்தினை இவ்வாறு நாவானது நோக்குகிற நிலையில் ஒலிக்கின்ற உயிர் எழுத்துக்களை *முன்னுயிர்கள்* (Front vowels) என்பர். பின் அண்ணம் அல்லது மெல்லிய அண்ணத்திணை நோக்கி நா எழும்போது ஒலிக்கின்ற உயிர் எழுத்துக்களை *பின்னுயிர்கள்* (Back v.) என்பர். நாவிற்கும் அண்ணத்திற்கும் நடுவே இடைவெளி குறைந்தோ, அகன்றோ இருக்கும். குறைந்த இடைவெளி தோன்ற ஒலிக்கும் உயிர் *அண்மு உயிர்* (Close v.) ஆம். அகன்ற இடைவெளி தோன்ற ஒலிக்கும் உயிர் *திறப்பு உயிர்* (Open v ) ஆம். நாவானது சிலபோது இறுகிச் செறிந்தும், சிலபோது தளர்ந்து நெகிழ்ந்தும் நிற்கும். செறிந்த நிலையில் ஒலிக்கும் உயிரே *செறிவு உயிர்* (Terse v ) ஆம். நெகிழ்ந்த நிலையில் ஒலிப்பன *நெகிழ்வு உயிர்* ஆம். பொதுவாகத் தமிழில் நெடில் செறிவுயிராகவும், குறில் நெகிழ்வுயிராகவும் ஒலிக்கக் காண்கிறோம். இதழ் முயற்சியால் இதழ் குவிதலும், இதழ் விரிதலும் தோன்றும். இதனால் *குவியுயிர்* (Rounded v) என்றும், *குவியாவுயிர்* (Unrounded v.) என்றும் உயிர்கள் பாகுபாடு பெறும்.

உகரம், பின் அண்ணத்திற்கும் நாவிற்கும் இடையே இடைவெளி குறைந்து வர, நா நெகிழ்ந்து நிற்க, இதழ் குவிதலால் எழும் உயிராகும்; குவி, நெகிழ், அண்மு, பின்னுயிர் எழுத்தாகும். இது குறில். µ என்பது அனைத்து நாட்டு ஒலியியலார் இதற்குத் தரும் குறியாகும்.

அ, இ, உ என்பன அடிப்படை உயிர்களாம். இவற்றின் கலப்பால் பிற உயிர்கள் தோன்றும் என்பர். இகரம் ஒலிக்கும் போது, முன்னண்ணத்திற்காக எழும் நாவினால் ஒரு வளைவு தோன்ற நிற்கும் உகரம ஒலிக்கும் போது பின்னண்ணத்திற்காக வளைவு தோன்றும்,

அகரம் ஒலிக்கும் போது குரல் வளைக்காக ஒரு வளைவு தோன்றும் இந்த வளைவுகளின் முகடுகள் முக்கோணமாக அமைதலின் உயிர் முக்கோணம் (Vowel triangle) என்பர்.

இகரம் சுரம் மிக்கது; உகரம் சுரம் குறைந்தது மெல்லண்ணம் மெத்தென்றிருப்பதே இவ்வாறு உகரத்தின் சுரத்தைக் குறைக்கின்றது.

பொதுவாக முன் நா இயங்கும் போது இதழ விரிந்தும், பின் நா இயங்கும்போது இதழ் குவிந்தும் இவ்வாறு நாவும் இதழும் ஒத்தியங்கக் காண்கிறோம் ஆனால் இந்த நிலை சிலபோது மாறுகிறது. பின் அண்ணத்தினை நோக்கும்போது இதழ் குவியாது நிற்பதும் உண்டு அப்போது தோன்றும் உகரம் பாக்கு முதலிய சொற்களிற் போல இதழ குவியாமலே ஒலிக்கும் அதனைத் தமிழர் குற்றியலுகரம என்பர் இக் குற்றியலிகரம் ஒரு மாத்திரை அளவு ஒலிக்கும சுரத்தினும் குறைந்து அரை மாத்திரை அளவு ஒலிக்கும் என்பர் பொதுவாக, கு, சு, டு, து, பு, று என்று முடியும் சொற்களில், இவற்றிற்கு முன் தனி நெடிலோ, ஒன்றுக்கு மேற்பட்ட பிற எழுத்துக்களோ எழுதப்பட்டிருந்தால் கடையில் வரும் உகரம் தமிழில் குற்றியலுகரமாக ஒலிக்கும் ஆனால், இப்போது இவ்வாறில்லாத உகரமும சொல்லின் முடிவில் குற்றியலுகரமாக ஒலிக்கக் காணலாம். ஷி என்பது இதற்கு அனைத்து நாட்டு ஒலியியலார் வழங்கும் குறி

உகரம் *வரவேண்டும்>வரவேணும்>வரணும்>வரணம்* என அகரமாகவும், *சிறு இலை>சிறியிலை, புல்>பில்* என இகரமாகவும், *சுவர்>செவர்* என எகரமாகவும், *உடை>ஒடை* என ஒகரமாகவும் மருவும்; *தவறு>தவுறு, மகிழம்பூ>மகுடம்பூ; தொடை>துடை* என அகர இகர ஒகரங்களில் மாற்றொலியாகவும் மருவி வரும். *யுகம்>உகம்* என யு என்பது உகரமாக வரும் தமிழில் மொழி முதலாகாத யு *உயுத்தம்,* யூ *உயூகி,* யோ *உயோகு,* ரு *உருசி,* ரூ *உரூபகம்,* ரோ *உரோகம்,* லு *உலுத்தன்,* லூ *உலூகம்,* லோ *உலோகம்* என்பவை வடமொழியில் முதல் எழுத்தாக வரும் சொற்கள் தமிழில் ஒலிக்க வரும் போது முன்னோக்கும் உடம்படு உயிர் (On glide) போல முந்துநிலை (Prothesis) எழுத்தாக உகரம் மேலே கண்டபடி வரும். தமிழில் மயங்காத மெய்யெழுத்துக்கள் வடமொழியில் மயங்கி வந்தால அவ் வடசொற்கள் தமிழில் ஒலிக்கும் போது *சம்சயம்>சமுசயம், பர்வதம்>பருவதம், ஸ்லோகம்>சுலோகம், பக்வம்>பக்குவம், சர்க்கரை>சருக்கரை* என்பவற்றிற்போல இடையமை எழுததாகவும உகரம வரும சொற்கள் புணரும போது *வல்+கடிது>*

*வல்லுக்கடிது* எனவும் தனித்து வரும் போதும் சொல்-சொல்லு எனவும், சாரியை அல்லது கடையமை எழுத்து அல்லது விரித்தல் விகாரமாக உகரம் வரும் மெல்லெழுத்தின் பின்னயே அன்றி வழு-வழுவு என உயிர் ஈற்றின் பின்னும் உகரம் வரக் காண்கிறோம். இத்தகைய இடங்களில் பழைய வடிவம் வழூஉ என அளபெடையாக இருந்திருத்தல் வேண்டும். ஊஉ என்ற அளபெடை தொல்காப்பியர் காலத்தில் ஈரொலியுயிராக (Diphthong) ஒலித்ததால் உகரம் ஈற்று ஒலியாக அமைந்தது.

அப்பால், மேல் *உம்மை*, புறம் *உப்பக்கம்*, அண்மையும் சேய்மையும் அல்லாத இடைப்பட்ட தூரம் என்ற இப்பொருள்களில் சுட்டெழுத்தாக வரும் போது *உதுக்காண்* என்பது போல அகச்சுட்டாகவும், *உப்பக்கம்* என்பதுபோலப் புறச்சுட்டாகவும் உகரம் வரும்.

பிறவு, இறவு, இரவு, வரவு எனத் தொழிற்பெயர் விகுதியாகவும், மழவு எனப் பண்புப் பெயர் விகுதியாகவும் உகரத்தினைக் கொள்வர் செய்து என்ற வாய்பாட்டு வினையெச்சவிகுதியாகவும் உகரம் வரும். *பாரும் உகரம் பரந்திட்ட நாயகி* (திருமந்திரம் 1751) என்ற இடத்தில் உகரம் அருட் சத்தியைக் குறிக்கின்றது.

இரண்டு என்ற எண்ணினைக் குறிக்கும் குறியாகவும் உகரம் வழங்குகிறது. இரண்டு கோடுகள் மொகஞ்சதாரோ எழுத்துக்களில் இரண்டினைக் குறிக்க வருகின்றன என்று எண்ண இடம் உண்டு.

இரண்டு என்னும் எண்ணின் குறி கீழ்க்கண்டவாறு வளர்ந்து வந்துள்ளது.

| | |
|---|---|
| குகை எழுத்து | |
| சிவஸ்கந்தவர்மன் செப்பேடு | |
| கீழைச் செப்பேடு | |
| சோழர் | |
| வடிவம்: கீழே இதன் வளர்ச்சியைக் காண்க. | க. |
| அசோகன் கி.மு. 2,3 ஆம் நூற்றாண்டின் தமிழ்க் குகை எழுத்து | |
| 7 ஆம் நூ. | |
| 8 ஆம் நூ | |
| 10 ஆம் நூ | |
| 11 ஆம் நூ. | |
| பாண்டியர். 13 ஆம் நூ | |
| விஜயநகரம், 15 ஆம் நூ. | |
| தற்காலம் | |

டகரம் போலச் செங்கோணமாய் இருந்தபோது கிடக்கைக் கோடு குறுகியதாய் இருந்தது. தமிழ்க்குகை எழுத்தில் நேர்க்கோடு சிறிது நடு வளையத் தொடங்கியது. பிற இடங்களில் இதன் தலைநுனி கனக்கத் தொடங்கியது; கோடாகவும் வளர்ந்தது. தமிழ்நாட்டில் அது வளைவான கொக்கி போலாயிற்று. செங்கோணமாய் இருந்த கிடைக்கோடு விரிகோணமாய்க் கீழே இறங்கியது. ஆனால் முடிவில் நேரான கிடைக் கோடாகவே அமைந்து விட்டது. இன்றைய வடிவம் ஈதே ஆம்.

*வட்டெழுத்து வடிவம்:* கிடைக்கோடு மீண்டும் நேராக அமைவதற்கு முன் கீழிறங்கி வளையக் கண்டோம். அந்த நிலையில் வகரம் போல வட்டெழுத்தில் நிற்கக் காண்கிறோம். வட்டெழுத்தில் வளர்ந்த வளர்ச்சியைக் கீழே காணலாம்.

| | |
|---|---|
| 8 ஆம் நூ. | ഉ |
| 10 ஆம் நூ. | ഉ |
| ,, ,, | ഉ |
| ,, ,, | ഉ |
| 10-11 ஆம் நூ. | ഉ |
| 13 ஆம் நூ. | ഉ |

# ஊ

இது நெடுங்கணக்கில் ஆறாம் எழுத்து; உகரத்தின் நெடில், குவி (Rounded), செறி (Terse), அண்மு (Close), பின் உயிர் (Back vowel), பார்க்க:உகரம்). சர்வதேச ஒலியியற் சங்கத்தார் (International Phonetic Association) அடிப்படை (Cardinal) உயிர் ஒலிகள் என்பதனை மேல்வரிச் சட்டமாகக் கொண்டு, அவ்வந்நாட்டில் வழங்கும் உயிர் ஒலிகளை இந்த அடிப்படை உயிர் ஒலியின் வேறுபாடுகளாக விளக்குவர் தமிழில் வரும் ஊகாரம் இந்த அடிப்படை ஊகார ஒலியே போன்றது எனலாம் சிறிது பிறழினும் வகர ஒலி தோன்றும். இதழ்கள் மிக அண்மிக் குவிந்த நிலையில் இவ்வொலி எழுவதால் பல்லும் இதழும் சேர எழும் வகரத்தின் (Labio-dental V) வேறாக, இரண்டிதழ்களின் இடையே பிறக்கும் வகரத்தோடு (Bi-labial V) *ஊது>வூது* என இது சிலபோது ஒலிக்கும் என்பர் *வீடு>வூடு* என இதழ் எழுததுக்களின் சார்பால் ஈ, ஊ ஆதலும் உண்டு. *யூகி>ஊகி; வியூகம்>ஊகம்; ஹூணன்>ஊணன்* என யூ, வியூ, ஹூ என்பவை தமிழில் ஊ என வரும் *ஸூசி>ஊசி* எனவரும் என்றால், ஸூ என்பதும் ஊ என வரும் எனலாம்; இவ்விடங்களில் வடசொற்களில் முதலில் வரும் மெய்யெழுத்துக்கள் கெட்டன என்று கொள்வதே சிறப்பாம். *உதீசி>ஊசி* என இடைக்குறையாக வரும்போது முதல் நிறை உகரம் ஒலியளவைச் சமன்படுத்த ஊ என நீளும். *என்பதும்>என்பதூஉம்; வழு>வழூஉ* என்று அளபெடுத்து உகரம் ஊகாரமாகும் வழு என்பதே பழைய வடிவம் போலும். *உன்மத்தம்>ஊமத்தம்* என உகரம் ஊகாரமாய் நீண்டு ஒலி நிரப்பும். *உதாரன்>ஊதாரி* (வீண் செலவாளி) என இழிவுப் பொருளில் வரும்போது உகரத்தின் மாற்றொலியாய் ஊகாரம் வரும்.

ஊ என்பது கைக்கிளை என்ற இசைச் சுரத்தின் எழுத்தாகும்.

ஊ என்பது இறைச்சி என்று பொருள் தரும். ஊக்கு, ஊசல் முதலிய சொற்களில ஊ நீங்கலாக மற்றையவற்றைச் சொல்லாக்க விகுதி எனத் தள்ளிக் கழித்தால, *அப்பால்செல்* என்ற பொருளில் வரும் ஊ என்ற பகுதியே எஞசி நிற்கும

*புகு>புகூஉ* எனப் பகுதியின் ஈற்றினை நீட்டிச் சொல்வதாலேயே இறந்தகால வினையெச்சம் பிறந்த நிலையில் செய்யூ என்ற வாய்பாட்டு வினையெச்சத்தின் விகுதியாக ஊ அமைகிறது.

*வடிவம்:* உகரமும் நெடிலைச் சுட்டும் குறியும் சேர்ந்தே ஊ என்ற எழுத்தாம். பின், நெடிலைக் குறிக்கும் கிடைக்கோடு உகரத்தின் தலையின் வலத்தே சென்றது. பின், இது கீழாக வளைந்து வளர்ந்து முடிவில் வகரம் போல உகாரத்தின் கிடைக்கோட்டின் மேல் நிற்க வந்தது.

| | |
|---|---|
| 7 ஆம். நூ. | [illegible] |
| 8 ஆம். நூ. | [illegible] |
| 10 ஆம். நூ. | [illegible] |
| 11 ஆம். நூ. | [illegible] |
| 13 ஆம். நூ. | [illegible] |
| தற்காலம். | ஊ |

*வட்டெழுத்து:* இங்கு நெடிலைக் குறிக்கும் கிடைக்கோடு உகரத்தின் தலை வளையத்தின் வலத்தே செல்லாது உகரத்தின் கிடைக்கோட்டின் முடிவிலிருந்து செல்லக் காண்கிறோம்.

| | |
|---|---|
| 8 ஆம். நூ. | [illegible] |
| 10 ஆம். நூ. | [illegible] |

# எ

*ஒலி:* இது தமிழ் நெடுங்கணக்கில் ஏழாம் எழுத்து; அங்காப்போடு அண்பல் முதல்நா விளிம்புற வரும் இஈஎஏஐ என்ற கூட்டத்தைச் சேர்ந்தது. இது பாதி மூடு (Half Close) நா நெகிழ் (Lax) இதழ் குவியா (Unrounded) முன்னுயிர் (Front vowel) குறில் எழுத்து; வடமொழியில் இகரக் கூறும் அகரக்கூறும் சேர்ந்த சந்தி அக்கரம் அல்லது ஈரொலி உயிர் (Diphthong) ஆம், தமிழில், அகர இகரக் கலவையே ஆயினும் இயற்கையான ஓரொலியுயிராகவே ஒலிக்கும். *இரண்டு>ரெண்டு* என ரகரத்தின் அகரத்தோடு முன்னின்ற இகரம் மருவி ரெ என வரும் போது எகரம் தோன்றக் காண்கிறோம்

*வம்பன்>வமபென், விலை>வெலை; சுவர்>செவர்; தலை>தலெ; யந்திரம்>எந்திரம்* என முறையே அ, இ, உ, ஐ, ய என்பவற்றின் மரூஉ ஒலியாக எகரம் வரக் காண்கிறோம் *வந்தனென்>வந்தனன்; மென்று>மொன்று;* எண்ணெய் எண்ணை என முறையே அ, ஓ, ஐ என எகரம் மருவி வரவும் காண்கிறோம். *செட்டி>எட்டி* என்று சிலர் கொண்டால் *செ>எ* என்றாயிற்று எனல் வேண்டும்; ச என்ற முதல் கெட்டது எனலே மேல். இன்றும் சிங்களத்தில் வழங்கும் ச, ல என்ற பழைய திராவிட உயிர் ஒலியே ய எனத் தமிழில் வழங்கும் என்பர். (பார்க்க. அ).

அவன், இவன், உவன், எவன் என்ற முறையில் சுட்டு, வினா அடியாகப் பிறக்கும் சொற்கள், நந்நான்காக அமைகிற அழகினைப் பாராட்டாதவர் இல்லை எல், என் *(என்+கு>எங்கு)* முதலியவற்றின் அடிச்சொல்லாக எகரமே எஞ்சுகிறது , ஏ என்பதே பழைய வடிவம் போலும்!

எகரம் மொழிக்கு முதலில் பெரும்பான்மை வரும், சிறுபான்மை இடையில் முன்னாளில் வந்த வழக்கு அருகியது கடையில் அளபெடையில் மட்டுமே வரும்

எகரம் வினா எழுத்து, எவன் என அகவினாவாகவும், எக் கொற்றன் எனப் புறவினாவாகவும் வரும்

எ என்பது ஏ என்ற நெடில் ஒலியாகவும், இதன் மேல் புள்ளி வைத்தெழுதினால் எ என்ற குறில் ஒலியாகவும் தொல்காப்பியர் காலத்தும் நன்னூலார் காலத்தும் ஒலித்து வந்ததாம். கூரம் செப்பேட்டில் *எடுத்து, ஏரி* என எ ஏ என்ற ஒலிகள் வந்திருந்தாலும் எ என்ற ஒரு வடிவே காண்கிறோம்; குறில்மேல் புள்ளி தோன்றவில்லை. வீரமாமுனிவர் நெடிலைக் கீழ்க் கோடிழுத்து ஏ என எழுதத் தொடங்கினார். அதனால் எகாரத்தின் மேல் புள்ளியிட்டெழுதும் வழக்கம் ஒழிந்தது என்பர்.

இந்த எழுத்தின் வளர்ச்சியைக் கீழே காண்க.

| | | | |
|---|---|---|---|
| அசோகர் கி.மு. 3 ஆம் நூ. | | | |
| தமிழ்க் குகை கி.மு. 3 ஆம் நூ. | | | |
| கி.பி | 7 ஆம் | நூ. | |
| " | 8 ஆம் | " | |
| " | 10 ஆம் | " | |
| " | 11 ஆம் | " | |
| " | 13 ஆம் | " | |
| | தற்காலம் | | எ |

வழப்பக்கபம் உள்ள படத்தின் விளக்கம் கீழே கொடுக்கப்பட்டள்ளது.

உயிர் மெய்யெழுத்தில் முதலில் எகரக் குறி (ஏகாரக் குறிக்கு மேல் புள்ளியிருத்தலே எகரக்குறி. ஆனால் புள்ளி தோன்றுவது இல்லை.) மெய்யெழுத்தின் தலையிலிருந்து இடப்பக்கக் குறுக்கு கோடாகச் செல்கின்றது.

Z (நெ); பின் இது வளைவாகி (ெ) (கெ) என வந்தது; எகர வடிவம் போல அமைதல் காண்க.

ஒட்டியிருந்த இக்குறி தனியே இராசராசன் காலத்திற்குள் ெ எனப் பிரிந்து நின்றது இப்போது கொம்பு எனப் பெயர் பெற்று நல்ல வளைவாகி கெ எனத் தோன்றுகிறது

வட்டெழுத்தில் எகரம் வளர்ந்த வரலாற்றைக் கீழே காண்க:

| | | | |
|---|---|---|---|
| கி.பி. | 8 ஆம் | நூ | |
| " | 10 ஆம் | " | |
| " | | " | |
| " | 13 ஆம் | " | |
| " | 14 ஆம் | " | |
| | 18 ஆம் | | |

உயிர் மெய்யெழுத்தில் முகரம் எகரக்குறி ( ஏகாரக் குறிக்கு மேல் புள்ளியிருத்தலே எகரக்குறி. ஆனால் புள்ளி தோன்றுவது இல்லை) மெய்யெழுத்தின் தலையிலிருந்து இடப்பக்கக் குறுக்குக கோடாகச் செல்கின்றது

Z (நெ) பின் இது வளைவாகி (பெ)

(கெ) என வந்தது

எகர வடிவம் போல அமைதல் காண்க

ஒட்டியிருந்த இக்குறி தனியே இராசராசன் காலத்திற்குள எனப் பிரிந்து நின்றது இப்போது கொம்பு எனப் பெயர் பெற்றது எனப் பெற்று நல்ல வளைவாகி கெ எனத் தோன்கிறது

எ என்பது ஏழு என்ற எண்ணின் அறிகுறியாக வளர்ந்த வரலாற்றினைக் கீழே காணக

| | |
|---|---|
| நாசிக்கிலுள்ள குகை எழுத்து | |
| பல்லவர் கி.பி 7 ஆம் நூ | |
| பாண்டியர் சின்னமனூர் ஏடு 8 ஆம் நூ | |
| சோழர் 11 ஆம் நூ. | |
| தற்காலம | எ |

# ஏ

*ஒலி:* இது தமிழ் நெடுங்கணக்கில் எட்டாம் எழுத்து. எகரம் போலப் பாதிச் செறிவுடை (Half closed), குவியா (Unrounded) முன்னுயிர் (Front vowel) ஆனாலும், நெடிலாதலின் நாச்செறி (Terse) எழுத்தாம். பேச்சு வழக்கில் சிலபோது *யே* என ஒலிக்கும் என்றும், *ஏய்* எனக் கல்வெட்டுக்களின் கால முதல் ஈரொலியாக (Diphthong), ஒலிக்கும் என்றும் கூறுவர்.

*பொருள்* · பெருக்கம், அடுக்கு, மேல்நோக்கம், இறுமாப்பு, எய்தல், அம்பு என்ற பொருள்களில் ஏ என்பது சொல்லாய் வழங்கக் காண்கிறோம். ஏ என்பது எ எனக் குறுகுவதும் காண்க.

பிரிநிலை, வினா, எண், ஈற்றசை, தேற்றம், இசைநிறை என்ற பொருள்களில் பழைய நாளிலும், இவற்றோடு விளிக்குறிப்பு, இகழ்ச்சிக் குறிப்பு, இரக்கக் குறிப்பு என்ற பொருளில் நாளடைவிலும் ஏ வழங்கி வரக் காண்கிறோம். உழை என்ற சுரத்தின் அடையாள எழுத்தாக ஏ என்பது அமைகிறது.

*வடிவம்:* (பார்க்க:எ). வட்டெழுத்தில் பிற்காலத்தில் எ என்ற வடிவத்தில் ஏகாரம் எழுதப் பெறக் காண்கிறோம்.



**என்ற வடிவத்தில் ஏகாரம் எழுதப்பெறக் காண்கிறோம்**

# ஐ

*ஒலி:* இது தமிழ் நெடுங்கணக்கில் ஒன்பதாம் எழுத்து, உயிர் இஃது அகரம் முன்னும் இகரம் பின்னுமாக ஒற்றித்து ஒலிக்கின்ற ஈருயிர் ஓரொலி எழுத்தாம் (சந்தியக்கரம், கூட்டொலி- Diphthong). முற்கூறு எடுத்தொலிக்கப்படுதலின் இது வீழிசைச் கூட்டொலியாம். இவ்வாறு வருதலை நலிந்து வருதல் என்பர். இது நெட்டெழுத்தென்று கொள்ளப்படும். இதற்கு இனம் இதனீற்றில் அமைந்த இகரமேயாம். ஆதலின், ஐகாரம் அளபெடுக்கும் போது, அளபெடுத்தற்கு அறிகுறியாக இகரமே இடப்படும். அகரம் முன்னொலித்தலின் ஐகாரத்தோடு அகரம் மோனையாகும் ஒரெழுத்தொரு மொழியிலோ, மொழி முதலிலோ அன்றி, மற்றைய இடங்களில் *அய்* எனக் குற்றெழுத்தாகவே இஃது ஒலித்தலின் ஐகாரக்குறுக்கம் என அவ்விடங்களில் பெயர்பெறும். ஐயர் என்பதை அய்யர் என எழுதலும் உண்டு. *தோன்றல்* என்பது ஈற்றயல் நீண்டு *தோன்றால்* என விளி ஏற்கும். ஆகையால் *கிள்ளை* என்பது *கிள்ளாய்* என விளி ஏற்றலின் ஈற்றயல் நீளாத இயற்கை நிலையில் *கிள்ளய்* என்றே இருத்தல் வேண்டும் என்பது தெளிவு. எனவே ஐ=அய் என்று முடியும். மொழியின் ஈற்றில் வரும் யகரமும் சில போது இகரமாகப் பழங்காலத்திலும் எழுதப்பெற்றது என அறிகிறோம்; *நாய்=நாஇ*. இறந்தகால வினையெச்ச விகுதியாக வரும் இகரம் *போ+இ>* *போய்* என யகரமாக நிற்பதனையும் காண்கிறோம். அந்த யகரம் இகர உயிர்போல ஒலித்து அகரத்தின் பின் வரும்போது ஈருயிர் ஒலியான ஐ போல் ஆகும். *சின* என்ற பகுதி *சினைஇ* என வருதலின் அகர இகரம் ஐகாரமாதல் காண்க. *ஐந்தே* என்பது *அயிந்தே* எனக் கூரம் செப்பேட்டில் 7ஆம் நூற்றாண்டில் பொறிக்கப்பட்டுள்ளது. இடையில் எவ்வாறாயினும் மொழி முதலில் முற்ற முடிய ஈருயிரும் இணைந்த ஓரொலியாகவே, ஐ என்பது தெள்ளத் தெளிய ஒலிக்கின்றது. ஆதலின் ஔ என்பதனைப் போல ஐ என்பதனைத் தமிழ் நெடுங்கணக்கில் புறக்கணிக்க முடியாது *நடை>நடெய்>நடெ* என ஒலிக்கப் பெறுதலின் தமிழில் வரும் ஐ என்பது எகரமும் இகரம் போல் ஒலிக்கும் யகரமும் இயைந்த ஈருயிர் ஓரொலி என்பர் கால்டுவெல் *கை* என்ற தமிழ்ச்சொல், ்தெலுங்கில் *செய்* என வரும் செய் என்ற வினைப்பகுதி இங்கு ிளங்கித் தோன்றலின் செய்வதற்குதவும ்உறுப்பு கையெனப பெயர்

பெறும் என்பதாயிற்று. *செய்* என்பது கன்னடம். இவை கால்டுவெல் கூற்றினை வற்புறுத்தினாலும் ஐ என்பது திராவிட மொழிகளில் சிறப்பிடம் பெற்றிருப்பதனை அம்மொழிப்யாக்கள் நிலைநாட்டுகின்றன. தலை என்பது

பேச்சு வழக்கில் *தலெ* என்றும், தெலுங்கில் *தல* என்றும் வருவதால் ஐகாரம் எ என்றும் அ என்றும் மாறக் காண்கிறோம். ஐ என்பதில் YÚm ALWm JÚ£X CPeL° p a என்பதாகவும், ஒரு சில இடங்களில் ஐ என்று முன் நாம் காட்டியதாகவும் (பார்க்க:அ) முன்னர் அமைந்திருத்தலால் அ=எ என்ற இந்த மயக்கம் எழுந்ததெனலாம்.

ஐந்து என்பது ஐ எனக் குறுகி வரலாம். *பனை+காய்=பனங்காய்* என்பதிற்போல ஐ என்பது அம் என்பதாகும் கன்னடத்தில் அம் என்று வரும் இரண்டாம் வேற்றுமை உருபு தமிழில் வரும் ஐ என்பதற்கு நேராம். தமிழிலும் உயர்திணையில் இரண்டாம் வேற்றுமை உருபாம் ஐகாரம் அகரமென வருமென்பர் தொல்காப்பியர். *செய்யாமைச் செய்த=செய்யாமற்செய்த, படர்=படை* என்பவை ஐகாரத்தின் மாற்றொலியால் எழுந்த வடிவங்களோ என்பது ஆராய்தற்குரியது.

ஐகாரம் எகரமாகவும் அகரமாகவும் மாறுவதன்றி, அகரம் ச,ஞ,ய என்பவற்றின் முன் அவற்றின் அண்ணச்சாயல் பெற்று அரைசன், மைஞ்சு. அரையன் என ஐகாரமாக ஒலிக்கக் காண்கிறோம். தகரத்தின் முன்னும் அத்தை ஐத்தை என வருதல் திசை வழக்காகும்.

*பொருள்:* வியப்பு, அழகு, மென்மை, உண்மை, கோழை, கபநோய், தலைவன், கணவன், அரசன், ஆசிரியன், தந்தை, அண்ணன், சவ்வீரபாஷாணம் என்ற பொருள்களில் ஐ என்பது வரும். தலைமகன் என்ற *சிறப்புப்* பொருளைக் குறிக்கும் ஐகாரமே உயர்திணையில் வந்தது. முன்னிலை உருபாக மிகப் பழங்காலத்தில் திராவிடமொழிகளில் வழங்கியது என்பது ஒரு கொள்கை.

பார்க்குங் கருவி பார்வை எனக் கருவிப்பொருள் விகுதியாகவும், பறப்பது பறவை என வினைமுதற்பொருள் விகுதியாகவும், தொடுக்கப்படுவது தொடை எனச் செயப்படுபொருள் விகுதியாகவும், நிலை, கொலை என்பவற்றிற் போலத் தொழிற்பெயர் விகுதியாகவும்,

அவனை என்பதிற்போல இரண்டாம் வேற்றுமை உருபாகவும், போயினை என்பதிற்போல முன்னிலை ஒருமை விகுதியாகவும், இற்றை நாள் என்பது போலச் சாரியையயாகவும் ஐகாரம் வரும்.

சுரங்களில் இளி என்ற சுரத்தின் அறிகுறியாக ஐ என்பதும் வரும்.

| | | | |
|---|---|---|---|
| 3-4 ஆம் | நூற்றாண்டு ( திருநாதகுன்றம் | கல்வெட்டு) | Ƴ |
| 10-11ஆம் | " | " | ஐ |
| -13ஆம் | " | " | ஐ |
| இக்காலம் | " | " | ஐ |

ஐ என்பது ஹத்திகும்பா கல்வெட்டில் காணும்

ஐ என்பது ஹத்திகும்பா கல்வெட்டில் காணும் ஐ என்பதன் வடிவம். இதில் முக்கோண வடிவமான ஏ என்பதன்மேல், உயிர்மெய் எழுத்தில் ஏகாரத்தைக் குறிக்கும் படுக்கைக் கோடு அதன் தலையின் இடப்புறத்தில் இருக்கக் காணலாம். ஐகாரத்தில் ஏகாரத்தினைக் கண்ட கால்டுவெல் கூற்றினை வலியுறுத்துவது போல இருந்தாலும் ஐ என்ற ஒலியினை முற்கூறாகக் கொண்ட ஈருயிர் ஓரொலியே ஐ என்பது இதனாலும் தெளிவாம். அவ்வாறு இதனை ஒலித்த மொழியினரிடை எழுந்த எழுத்தோ என இவ்வடிவத்தை ஆராய்தல் வேண்டும்.

உயிர்மெய்யெழுத்தில் இதனைக் குறிக்க இரண்டு எகரக் குறிகளாக(=என்பதுபோல) இரண்டு படுக்கைக் கோடுகளை மெய்யெழுத்தின் தலையில் இடப்புறத்தில் இட்டு எழுதினர். இடமுனை சிறிது வளையத் தொடங்கியது, பின் அம்முனை சுழியாகிறது ஏழாம் நூற்றாண்டில் மெய்யெழுத்தோடு ஒட்டி நின்றவை எட்டாம் நூற்றாண்டில் பிரித்தெழுதப் பெற்றன ஒன்றன்மேல் ஒன்றிருந்தவை பக்கத்தில் அடுத்தடுத்து ெ ெ என்று எழுதப்பெற்றன. பின் இவ்விரண்டையும் ஒன்று சேர்த்து அப்போதே எழுதலாயினர். ஆனால் வலப் பக்கத்தில் முடியும் கோடு மேலாகவே நின்றது. விஜயநகர அரசர் காலத்தில் கீழ்வளைந்து ை என்ற இன்றைய வடிவம் பெற்றது.

வட்டெழுத்துக்கள் : அடுத்த பக்கம்

*வட்டெழுத்துக்கள்*

| | | |
|---|---|---|
| 3-4 ஆம் நூற்றாண்டு | | Ƴ |
| 10ஆம் | " | 47 / 47 / 47 |

பல்லவர் காலத்தில் (7ஆம் நூற்றாணடில்) கிரந்த எழுத்தில் ෆ 26 என வழங்குவது திருநாதகுன்றத்து

வடிவத்தின் வளர்ச்சி எனலாம் பினனர் ணை என்று மாறியது. ஐகாரம் ஹை என எழுதப் பெறறது இந்த வளர்ச்சியோடு வட்டெழுத்தில வருமம ஐகாரததின் வளர்ச்சியை ஒப்பிட்டுக் காண்க

# ஒ

*ஒலி:* தமிழில் பத்தாம் எழுத்து பாதி அண்மு (Half closed) குவியாப் (Un rounded) பின் உயிர் (Back vowel) நெகிழ் (Lax) குறிலுயிர் (Short v ) என்பர். அகரம் ஒகரமாதலும் உகரம் ஒகரமாதலும் முன்னரே கண்டோம். (பார்க்க அ,உ) வொ என வகரத்தோடு இணைந்ததுபோல கால்டுவெல் காதுக்கு இவ்வொலி கேட்டதாம் உகரத்தின் முன் அகரம் ஒ என வடமொழியில் ஆகும் அங்கு ஒ என்பது ஈருயிர் ஓர் ஒலி; ஆனால் தமிழில் ஒகரத்தில் உகரக் கூறு இருப்பதனை அறிந்தே ஒகரத்தின் இனவெழுத்தாக உகரத்தைக் கொண்டாலும் ஓர் ஒலி எழுத்தாக ஒலிக்கின்றதே அன்றிக் கூட்டெழுத்தாக ஒலிக்கக் காணோம்

*பொருள்:* போலுதல், சமமாதல், ஓரினமாதல், தகுதியாதல், சம்மதமாதல், ஒழுக்கமுடையதாதல், ஒற்றுமைப்படுத்தல், இல்லாதது இருந்தது போலாகும் என்ற பொருளில் ஒ என்ற பகுதி வழங்கக் காண்கிறோம். ஒ என்பது ஓ என்ற ஒலியை முதலில் குறித்தது. ஒகரத்தைக் குறிக்க இதன்மேல் புள்ளியிட்டு எழுதினர். வீரமாமுனிவர் காலத்தில் ஒ என்பது குற்றெழுத்தைச் சுட்டுவதாயிற்று. கீழே சுழி பெற்ற ஓ என்பது நெட்டெழுத்தாயிற்று

*வடிவம்:* ஒ என்ற எழுத்தின் வரலாற்றைக் கீழே காண்க

| | |
|---|---|
| 8 ஆம் நூற்றாண்டு | |
| 10 " | |
| 11 " | |
| 13 " | |
| வட்டெழுத்து : | |
| 8 ஆம் நூற்றாண்டு | |
| 10 " | |
| 13 " | |
| 14 " | |
| 18 " | |

# ஓ

*ஒலி :* தமிழ் நெடுங்கணக்கில் பதினோராவது எழுத்து; ஒகரத்தின் நெடில், இஃது ஒலிக்கும் போது நா முதலியன முறுக்கேறி நிற்கும் தன்மைப்பன்மை ஆம் என்பது ஓம் என்றே இன்று வழங்கும். ஈற்றெழுத்தின் முன் வரும் ஆ, ஓ ஆகின்றது. அ என்பதும் இவ்வாறு ஓ ஆகக் காண்கிறோம்: *கிழவன்>கிழவோன்.*

*பொருள் .* சென்று தங்குகை, மதகு நீர் தாங்கும் பலகை, ஒழித்தல் அல்லது நீங்கல், புணர்தல் என்னும் பொருளிலும், உயர்வு சிறப்பு, இழிவு சிறப்பு, கழிவிரக்கம், மகிழ்ச்சி, வியப்பு, ஒழியிசை, வினா, எதிர்மறை, தெரிநிலை, பிரிநிலை, ஐயம் என்பனவற்றின் குறிப்பாகவும், விளிவேற்றுமையில் பெயருக்கு முன்னாக அமையும் அழைத்தற் குறிப்பாகவும், அசைநிலையாகவும் ஓகாரம் வரும். ஓச்சு, ஓங்கு முதலியவற்றில் ஓ என்பது உயர்வினைக் குறிக்கின்றது போலும். ஓ என்பது ஓ என நீண்டு ஒத்திருக்கை நிலையைக் குறிப்பதாகி, ஓவு, ஓவியம் என்றெல்லாம் பல்கி வரக் காண்கிறோம்.

இது விளரி என்ற சுரத்தின் குறியீடாகும்.

*வடிவம் :* பார்க்க: ஓ.

| | |
|---|---|
| 8 ஆம் நூற்றாண்டு | |
| 10 | |
| 11 | |
| 13 | |
| வட்டெழுத்து: | |
| 8 ஆம் நூற்றாண்டு | |
| 10 | |
| 13 ,, | |
| 14 ,, | |
| 18 ,, | |
| ,, | |

# ஔ

*ஒலி:* இது தமிழ் நெடுங்கணக்கில் பன்னிரண்டாம் எழுத்து; தனித்தமிழ்ச்சொற்களில் மொழிக்கு முதலில் மட்டுமே வரும் நெட்டெழுத்தென்று கருதப்பட்டாலும் *அவ்* எனக் குற்றெழுத்தைப் போல் ஒலித்து, ஔகாரக் குறுக்கம் எனப்பெயர் பெறும். இது அகரமும் உகரமும் சேர்ந்ததொரு கூட்டெழுத்தாகும். வகரக் கூறும் உண்டென்பர் சிவஞானமுனிவர் அகர வகர ஒலியினையே ஔ என்ற கூட்டொலியாகத் தொல்காப்பியர் காலத்திலேயே கொண்டனரெனலாம். ஔ என ஒலிக்கும்போது பல்லோடு இதழ் சேர்வதால் பிறக்கும் வகரம் (V) தோன்றக் காண்கிறோம். வகரம் இவ்வாறு வழங்கியதாலேயே அவ் என்பதனை ஔ எனக் கொள்ளலாயினரெனலாம். தமிழில் வந்து வழங்கும் வடமொழிச் சொற்களில் ஔ என்பது மொழியின் இடையிலும் கடையிலும் வரும். ஔ என்பது ஔவை என்பதில் காணப்படும். ஔ என்பது பெண்பாலைக் குறிப்பதாக முன்னிலையில் பெண்பால் விகுதியாகப் பழங்கன்னடத்தில் வழங்கக் காண்கிறோம். தமிழில் இது முற்றத் தோன்றாதென்கிறார் தொல்காப்பியர். ஔ என்ற எழுத்தின்றியும் தமிழ் நடைபெறும். வட்டெழுத்தில் ஔ என்பது வழங்காமையைக் காணலாம்.

இது தாரம் என்ற சுரத்தின் குறியாம்.

*வடிவம் :* உகரத்தின் தலையில் வலப்புறத்தில் ஒரு கோடு இழுத்தபோது ஊகாரமானது கண்டோம். ஒகரத்தின் வலப்புறத்தில் இவ்வாறு கோடு இழுக்கப் பெற்றபோது ஔ என்ற வடிவம் தோன்றிற்று. அக்கோடு ஊ என்பதில் ள என மாறியதுபோல ஔகாரத்திலும் மாறியது.

இஃது இன்று வழங்குகிற தமிழ் நெடுங்கணக்கில் ...ன்றாம் எழுத்து; உயிர் எழுத்துக்களின் வரிசைக்கும் ...ய்யெழுத்துக்களின் வரிசைக்கும் இடையே அமைந்துள்ளது; சில ...து உயிர்போலவும், வேறு சில இடத்து மெய்போலவும் அலகுநிலை ...ுவதால், உயிருமாகாது மெய்யு மாகாது, தனி நின்று தனிநிலை ...ாறு பெயர்பெற்று இவ்வாறு இரண்டு வரிசைகளுக்கும் இடையே ...ந்திறது போலும் (நன்னூல் விருத்தி, சூத்திரம் 60).

ஆனால், இதனைத் தனித்ததோர் எழுத்தாக முற்காலத்தில் கருதியதில்லை; சார்பெழுத்து என்றே தொல்காப்பியர் வழங்குகிறார். சார்பு என்ற கருத்தினை ஆஃரிதம் என்ற வடசொல் விளக்கும்; ஆகையால் ஆஃரிதம் என்பதன் திரிபே ஆய்தம் என்று கூறுவாரும் உண்டு. சார்பு எழுத்து எனப் பொதுவான பெயர் குற்றியலுகரம், குற்றியலிகரம், ஆய்தம் என்ற மூன்றற்கும் வழங்குவதால், ஆய்தம் என்பதற்குச் சிறப்புப் பொருள் இருத்தல் வேண்டும். வல்லெழுத்து மிக்குவரும் பாட்டோசை நயத்தை வல்லிசை வண்ணம் என்றும் (தொல் பொரு.528), மெல்லெழுத்து மிக்குவரும் பாட்டோசை நயத்தை மெல்லிசை வண்ணம் என்றும் (தொல்.பொரு.529) வழங்கும் தொல்காப்பியர் வழக்கினை ஆய்த எழுத்... மிக்கு வரும் பாட்டோசை நயத்தை நலிபு வண்ணம் என்று வழங்கு... அவர் வழக்கோடு (தொல்.பொரு.535) ஒப்புநோக்கும் போது *நலிபு* என்... ஆய்தம் என்ற சொல்லின் பொருளாக அமைவது தெளிவாகும். ஓ... *ஆய்தல் ...... உள்ளதன் நுணுக்கம்* (தொல்.சொல்.330) என்ற சூத்... ஆய்தம் என்பதற்கு *உள்ளது நுணுகி நலிதல்* என்று பொருள் ெ... வழியும் காட்டுகிறது.

*ஆய்தமு மொற்றெனப் பெற்றசை யாக்குமென்*
*றோதி னாருள ராகவு மொண்டமிழ்*
*நாத ராயவர் நாதலி போசையிற்*
*சேது வென்றெடுத் தோதினா ரென்பவே*

(யாப்பருங்கலவிருத்தி, சூ...

*அக்கடிய-அஃகடிய; கற்றீது-கஃறீது; முட்டீது-முஃடீது* என வருவனவற்றில் முன்னைய வடிவங்கள் வலித்த வடிவங்களும், பின்னையவை நலிந்த வடிவங்களும் ஆதலைக் காணலாம். வலித்த வடிவங்கள் பின்னாளைய வடிவங்கள். அவ்வாறானால் எவ்வெழுத்தின் நலிபாக ஆய்தம் பண்டையநாளில் வழங்கியது என்ற கேள்வி எழும். எஃகு என்ற சொல் இன்று ஒலிக்கப் பெறுவதனை நோக்கினால் பொதுவாக உயிர்ப்பெழுத்தாகவும் (Breathed letter) வெடி எழுத்தாகவும் (Plosive) ஒலிக்கப்பெறும் ககரமெய், ஆய்தத்தின் பின் வெடி எழுத்தாக அன்றி உரசு எழுத்தாக (Fricative) ஒலிக்கப்பெறுதல் விளங்கும். இவ்வாறு வெடி எழுத்து உரசு எழுத்தாக நலிவதே ஆய்த எழுத்து அங்கு வந்ததனைக் காட்டும் எனவே, வெடி வல்லெழுத்தின் உரசு ஒலியே ஆய்தம் வரும் இடத்தில் .எல்லாம் ஒலித்தல் வேண்டும் எனலாம்: க என்ற ஜிஹ்வாமூலம் என்ற ஒலியும் Khan Bahadur என்பதில் உள்ள முதல் ஒலியும், loch என்ற ஸ்காட் மொழியிலுள்ள கடை ஒலியும் போல எஃகு என்பதில் வரும் ஆய்த ககரம் மெல்லென உரசொலியாக இசைத்தல் காண்க. ஆய்த ஒலி வட மொழியில் வரும் விசர்க்கம் போன்றது என்பர். விசர்க்கத்தின் பின் சகரம் வரின் விசர்க்கம் ஶ ஒலி பெறும், சகரத்திற்கேற்ற உரசொலி ஶ கரம் எனலாம். ஆதலின், ஆய்த சகரம் கஃசு முதலிய இடங்களில் கஶு என்ற ஒலியே பெறவேண்டும். தகரத்திற்கு ஒத்த உரசொலி ஷகரமே ஆதலின் ஆய்த தகரம் கஃடு என்பது போன்ற இடங்களில் கஷு என்றே இசைத்தல் வேண்டும். ஷ என வரும்கிரந்த எழுத்தில் ட என்ற டகர எழுத்தின் முன்வளைவு, ஆய்தத்தினையே குறிக்கும் என்பர் பா.வே.மாணிக்க நாயக்கர் அவ்வாறே ஸ என்பதும முன்சுழியாம ஆய்தத்தோடு லகரம் சேர்ந்திணைந்த கிரந்த எழுத்து என்பர் அப்பெரியார்; லகரத்தின் உரசொலி அஃது என்பதாயிற்று றகரம பழைய காலத்தில் டகரம் போல் ஒலித்தது காண்போம கஃறு என்பது கஷு என்று ஒலித்துக் கருமை என்ற பொருளைக் குறிப்பதாகவும, சுஃஃறு சுஷ்ஷு எனக் காற்றில காடு ஒலிக்கும் ஒலியைக் குறிப்பதாகவும் வழங்கியதாக அறிகிறோம (தொல் எழுத் 40 உரை) காற்றில் காடு ஒலிக்கும் ஒலி இந்த ஆய்தத்தின் பழைய ஒலியை விளக்க உதவுவது காண்க த என்ற வல்லெழுத்தின் உரசு ஒலி ϕ என்பதாம்; இது through என்ற ஆங்கிலச்சொல்லில் முதலில் ஒலிப்பதாம். அஃது என்பது ஹ ϕ ன் என ஒலித்திருத்தல் வேண்டும அஃது+ஆவது என்பதில்போல அடுத்து உயிா எழுத்து வருமானால் இந்த உரசொலி ஒலிககும உயிா எழுததின சாாபால தகரம வெடி

எழுத்தாகாமல் உரசெழுத்தாகியது. அஃது +காண் என வெடி எழுத்துப் பின்னே வருமானால் தகரம் வெடி எழுத்தாக இருக்கும் நிலையில் மாறாமல் உறுதிபெற்று, அது காண் என்றே ஒலிக்கப்பெறும் (தொல்.எழுத்.423,424). :ப.என்ற உபத்மானீயத்தின் வடமொழி ஒலி போன்றதாகும் ஆய்த பகரத்தின் ஒலி; விளக்கை ஊதும்போது இதழிடை எழும் ஒலியே இந்த ஒலியாகும். கஃபு என்று ஒலித்துக் காண்க.

கஃஃறு என மேலே ஆய்தத்தினை இரட்டித்து எழுதிக் காட்டினோம். ஷ என்ற ஒலி தொடர்ந்து எழுதுவதனைச் சுட்ட அவ்வாறு எழுதிய காலம் உண்டு. ஆய்தத்திற்கு எனத் தனியொலி இல்லாதபோது இவ்வாறு எழுதுவது தவறு ஆதலின், இவ்வாறு எழுதலாகாது எனத் தொல்காப்பியர் கூறுவதாக இளம்பூரணர் விளக்குகின்றனர். ஆனால், நச்சினார்க்கினியர் காலத்திற்குள் இவ்வாறு எழுதுவது பெருவழக்காய்விட்டமையால், அவ்வாறு எழுத வேண்டும் என அவர் பொருள் கூறலாயினர் (தொல்.எழுத்து 40). தொல்காப்பியர் ஆய்தத்தினைத் தனி ஒலியாகக் கொள்ளவில்லை என்பது மற்றோர் இடத்தும் விளங்குகிறது. அவர் அஃது முதலிய சொற்களை *சுட்டு முதலாகிய ஆய்த இறுதி* (தொல். எழுத் 200) என்று வழங்குகிறார். இதன் உட்பொருள் அறியாது, தொல்காப்பியரை எள்ளி நகையாடிய புலவர்களும் உண்டு. *ஆய்த இறுதி* என்று தொல்காப்பியர் கூறுவதால் ஃது என்ற இரண்டு அறிகுறிகளும் உரசு ஒலியாம் ஓரெழுத்தினையே சுட்டுகின்றன என்பது தெளிவு.

பிற சார்பெழுத்துக்கள்போல இந்த ஆய்தமும தனிமொழியிலும் தொடர் மொழியிலும் வரும் எனத் தொல்காப்பியர் கூறுகின்றார். (எழுத்.38,39). முள்+தீது=முஃடீது, பல்+தீது=பஃறீது, என *ளகர* லகரங்களின் பின் தகரம் வரும்போது, தகரம் டகர றகரமாக முறையே திரிய, ளகர லகரங்கள் ஆய்தமாகக் காண்கிறோம். இந்த ஆய்தத்தினை ஆய்தக் குறுக்கம் எனப் பின் வந்தோர் வழங்கினர். சுட்டெழுத்தின் பின்வரும் வகரம், பன்மைப் பொருளில் அவ் என வரும்; இதன்பின் வலிவரின், உயிர்ப்பெழுத்தின் சாயல் பெற்று வகரம் ஒலிப்பு நீங்கி உயிர்ப்பாக நின்று ஆய்தமாகிப் பின்வரும் வல்லெழுத்தினை உரசெழுத்தாக்கிவிடும். அவ்+கடிய=அஃகடிய எனக் காண்க. இங்கெல்லாம் குற்றெழுத்தின் பின்னரே இந்த மாறுதல்கள் எழுகின்றன; நெட்டெழுத்தாயின் நீட்டியும் எடுத்தும் ஓதப்பெறுதலால் இத்தகைய மாறுதல் நெட்டெழுத்தின் பின் எழுவதில்லை; இதனாலேயே குற்றெழுத்தின் பின்னரே எங்கும் ஆய்தம் வரக் காண்கிறோம்.

வல்லெழுத்தினையே உரசெழுத்தாக மாற்றி வருதலின் ஆய்தம் எப்பொழுதும் வல்லெழுத்தின் முன்னரே வரவும் காண்கிறோம்.

*குறியதன் முன்ன ராய்தப் புள்ளி*
*உயிரொடு புணர்ந்த வல்லாறன் மிசைத்தே.*

*(தொல்.எழுத்.38)*

என்று தொல்காப்பியர் கூறுவது இவ்வாறு தெளிவாகிறது

தொல்காப்பியர் சுட்டெழுத்தின்பின் வகரம் ஆய்தமாக மாறுவது மட்டுமே கூறியுள்ளார். (தொல்.எழுத் 379) பிற இடங்களிலும் ஆய்தம் திரிபுப் புணர்ச்சியாக வந்தமையை அவர் நாளிலேயே மக்கள் மறந்தனர் போலும். ஆய்தம் வரும் பல தனிச்சொற்களை ஆராய்ந்தால் அங்கெல்லாம் வகரம் ஆய்தமாகி மாறி நிற்கக் காண்போம். *வெஃகா=வெவ்+கா* (விரும்பத்தக்க சோலை *வெம்மை வேண்டல்*) *கஃபு=கவ்+பு* (கவை+கப்பு) *கஃகு=கவ்+டு* (கவடு) *அஃதை=அவ்+தை* (அத்தை?) *பஃது=பவ்+து* (பரந்தது, பெரிது, பெரிய எண்). இங்கெல்லாம் குற்றெழுத்தின் பின் எடுத்தொலிக்கப்பெறாத வகரம் அடுத்து வரும் வல்லெழுத்தின் சார்பால் ஒலி எழுத்து (Voiced letter) நிலையின் நீங்கி வெற்றுயிர்ப்பாக மாற, அடுத்து வரும் வல்லெழுத்தும் அவ்வுயிர்ப்பின் சார்பால் உரசெழுத்தாக மாறுவதனைக் காண்கிறோம் வகரம் போல லகர ளகரமும் வல்லெழுத்தின் சார்பால் ஒலி எழுத்தாம் நிலையை இழப்பதுண்டு. உயிர்ப்பெழுத்தாம் *லகரம் வெல்ஷ்மொழியில்* Lloyd முதலிய சொற்களில் வரக் காண்கிறோம். இதனை *மலையாள* மொழியில் பல்பல என வல்லொற்றோடு இணைத்து எழுதக் காண்கிறோம். உயிர்ப்பொலியாக மாறிய லகரம் றகரம் போன்றது எனக்கொண்டு, தமிழர் பற்பல என எழுதுவர் உயிர்பொலியாக நிற்கும் லகர ளகரம் எடுத்தோதல் பெறா நிலையில் வெறும் உயிர்ப்பாய்ப் பின்வரும் வல்லெழுத்தை உரசு எழுத்தாக மாற்றுவதும் பழைய வழக்கு. முஃடீது, கஃறீது எனக் காணவில்லையா?

இவ்வாறு தொல்காப்பியர் *காலத்திலும்*, பழைய *வழக்காய் வழங்கிய* ஆய்தம் கால்டுவெல் அவர்கள் கூறுவது போன்று *கட பட என்று உருட்டுவோரின் கற்பனை* ஆதல் இல்லை.

ஆய்தத்தினைத் *தனியெழுத்தாக* எழுதும் வழக்கத்தினைத் தொல்காப்பியர் மறுப்பதால் அவ்வழக்கம் அவர் காலத்திலேயே இருந்ததென்று அறியலாம் அதனை மெய் என்றே கொண்டு, புள்ளி,

ஒற்று எனத் தமிழர் வழங்கினர். (அவிநயம்-யாப்பருங்கலவிருத்தி, பக்.28). காலப்போக்கில் அஃது என்பது அஹ்து என்ற ஒலியோடு மெய்போலவும் அகுது என்ற ஒலியோடு உயிர்மெய் போலவும் இசைக்கப்பெற்றது; முதல் வகையில் மெய்போல அலகு பெறாதும், இரண்டாம் வகையில் உயிர்போல அலகு பெற்றும் வரத் தொடங்கியது. *தோன்றிற் புகழொடு தோன்றுக அஃதிலார்* என்ற குறளில் ஆய்தம் மெய் போலவும். *அற்றால் அளவறிந் துண்க அஃதுடம்பு* என்ற குறளில் உயிர்போலவும் அலகுநிலை பெறுதல் காண்க. விரித்தல் விகாரமாயும் ஆய்தம் வந்தது. *அழகு>அழஃகு* (யாழ்மூரி.5.) உயிர்ப்பிசையாம் வெடி எழுத்துக்கள் நாளடைவில் தம் முன்வரும் உயிர், மெலி முதலிய ஒலிப்பசையாம் வெடி எழுத்துக்களாக மாற k (க) என்பது அங்கு, பகல் முதலிய சொற்களில் g என்றும், p (ப) என்பது தபு, தம்பி முதலிய இடங்களில் b என்றும், c (ச) என்பது அஞ்சு முதலிய சொற்களில் j என்றும், t (ட) என்பது பண்டு, படு முதலிய சொற்களில் d என்றும் ஒலிக்கப்பெறும் போது அவற்றைப்போல, உரசு ஒலியாய் நின்ற ஆய்தமும் உயிர்ப்பிசையாம் உரசு ஒலி (Breathed fricative) ஆகாது ஒலிப்பிசையாம் உரசு ஒலியாயிற்று (Voiced fricative) ஒலிப்பிசையானபின் அஃது அளபெடுப்பது எளிது. ஒலிப்பெழுத்தன்றோ அளபெடுக்கும்? இந்த உரசு ஒலியும் பெரும்பான்மையும் மெல்லண்ண உரசு ஒலியாகவே நிலைத்து விட்டது. *எஃகு>எஃஃகு; வெஃகு>வெஃஃகு* (தொல். எழுத். 40, நச்சினார்க்கினியர் மேற்கோள்) என அளபெடுத்து வரலாயிற்று. ஆய்த அளபெடை என இலக்கணப் புலவர்களும் இதனைப் பேசலாயினர். பல்லவர் காலத்து இவ்வாறு நிகழ்ந்திருக்கலாம். *இஃது>இய்து, அஃது>அய்து; கஃசு>கைசு* என வழங்கவும் இக்காலத்தே காண்கிறோம். (யாப்பருங்கல விருத்தி, சூ 2 உரை). இதற்கு விதிபோல நன்னூல் சூத்திரத்தைத் திருத்திப் பொருள் கண்டாரும் உண்டு. *அம்முன் இகரம் யகரம் என்றிவை எய்தின் ஐ ஒத்திசைக்கும்* (நன்னூல். 125) என்பதற்கு *அம்முன் இகரம் ஆய்தம் என்றிவை எய்தின் ஐ ஒத்திசைக்கும்* என்ற பாடமும் உண்டு. இஃதே என்பது இய்தே என்பது போல ஒலித்து, மைதோய், எய்தா, கைதா என்றவற்றோடு எதுகை கொள்ளவும் (II, ix 2) அஃதே, அஃகா என்பனவும் அவ்வாறு கொய்பூம், செய்கோ என்றவற்றோடு எதுகை கொள்ளவும் (IV, i, ii) நம்மாழ்வார் திருமொழியில் காண்கிறோம்.

ஆய்தம் தொல்காப்பியர் கூறியபடி சார்ந்து வரும் வல்லெழுத்தின் பிறப்பிடமே தனக்கும் பிறப்பிடமாகக் கொண்டுவருகிற நிலை மெல்ல மறைந்தது. மெல்லண்ண உரசு ஒலியாக *loch* என்ற ஸ்காட் மொழிச்

சொல்லிற் போல வருவதனை முற்றாய்தம் என்றும், *ach* என்ற ஜெர்மன் சொல்லிற்போல வரும் வல்லண்ண உரசொலியை ஆய்தக் குறுக்கம் என்றும், இலக்கணப் புலவர்கள் (யாப்பருங்கலம்) பிற்காலச் சோழப் பேரரசின் தொடக்கத்தில் கூறலாயினர்.

பிற்காலத்தில் ஆய்தம் வேண்டாத நிலையில் கால்டுவெல் இதனை இலக்கணப் பண்டிதர் கற்பனை என்று கூறுவதற்கு இடம் ஏற்பட்டது கஃசு அரை என்பதனைக் கசரை எனக் கல்வெட்டும் எழுதத் தொடங்கியது.

ஆய்த எழுத்தின் சார்பினால் உரசு எழுத்துக்களே அன்றி kh, g, gh என்பன போன்ற எழுத்துக்களும் தோன்றும் என்பது மாணிக்க நாயக்கர் கொள்கை. மெய் என்றும் உயிர் என்றும் எழுத்துக்களை வேறு பிரிப்பது அருமை ஆதலின் எழுத்து ஒலி எனப் பொதுவகையில் வித்தாக நிற்பது ஆய்தம் என்பர் டாக்டர் சங்கரன் (Phonetics of Old Tamil). நச்சினார்க்கினியர் ஆய்தத்தினை ஏனை ஒற்றுக்களைப் போல உயிரேறாது ஓசை விகாரமாய் நிற்பது என்பர் (தொல் எழுத்.2, உரை) உந்தி எழும் ஒலி நாதமாத்திரையாய் நிற்கிற அகர நிலையைப் பழைய உரையாசிரியர்கள் கூறுவது இங்குக் கருதத் தக்கது (குறள் 1, பரிமேலழகர் உரை)

*வரிவடிவம்* . ஆய்தம் என்பது அடுப்புக்கல் போல மூன்று புள்ளி வடிவாக எழுதுவது இந்நாளைய வழக்கம் கேடயம் என்ற ஆயுதத்தில் தோன்றும் முக்குமிழிபோலத் தோன்றலின் ஆய்தம் என்ற பெயர் வழங்கியது என்பர் சிலர். *ஆய்தம் என்ற முப்பாற் புள்ளியும்* என்ற தொல்காப்பியச் சூத்திரத்தையும் இந்த வடிவமே ஆய்தத்தின் வடிவம் என்றற்கு நச்சினார்க்கினியர் சுட்டுவர் (தொல். எழுத் 2 உரை) அங்குக் கூறிய முப்பாற்புள்ளி குறிப்பது குற்றியலிகரம், குற்றியலுகரம், ஆய்தம் என்ற மூன்று வகையான புள்ளி எழுத்துக்களையுமே அன்றி ஆய்தத்தினை மட்டும் அன்று பின் எட்டாம் நூற்றாண்டைய நந்திவர்மனது காசாக்குடிச் செப்பேட்டில் வெஃகா என்ற சொல்லில் வரும் ஆய்தத்திற்கு மேலும் கீழும் புள்ளியும், இடையே கோடும் வடிவமாக அமைந்திருக்கக் காண்கிறோம் (S.I.A A , Vol II No. 73, Plate No. XV, Line 115, opposite p 352) வரகுணமகாராசரின் திருச்செந்தூர் வட்டெழுத்துக் கல்வெட்டிலும் அஃகம் என்ற சொல்லில் வரும் ஆய்தம் இவ்வாறு அமைந்திருக்கக் காண்கிறோம் (Epigraphia Indica Vol 21, Plate-opposite p 110-line 35) எனவே கோல் எழுத்திலும்

வட்டெழுத்திலும் ஒரே வடிவமே காண்கிறோம். தொடக்கத்தில் வகரம் உயிர்ப்பாய் நின்ற போது ஆய்தம் எழும் என மேலே கண்டதற்கு ஏற்ப இரு புள்ளிகளின் இடையே பிறைபோல் வளைந்த கோடு வகரமோ என ஆராய்தல் வேண்டும். வகரம் புள்ளி பெற்றால் மேலே பெறும்; மேலும் அஃது ஆய்தப் புள்ளியாக மாறியதற்குக் கீழே மற்றொரு புள்ளியும் பெற்றதோ எனவும் ஆராய்தல் வேண்டும். மகரமெய் மேற்புள்ளி பெற மகரக் குறுக்கம், மேலும் குறுகியதற்கு அடையாளமாக உட்பெறுபுள்ளி பெறுவதனை இங்கு ஒப்பு நோக்கலாம். (தொல் எழுத்.14). விசர்க்கமே ஆய்த எழுத்தாக இருபுள்ளி கொண்டு விளங்குகிறது என்றால் இடையில் உள்ள *வகரம்* (அல்லது *உகரம்*) *போன்ற* கோடு வருவதற்கு வழி இல்லை. வகரத்தினிடத்திலேயே முதலில் ஆய்தம் வந்தது என்பதும், பின்னரே லகர ளகரங்களின் இடத்திலும் வந்ததனால் அதே குறியை அவற்றினிடத்தும் வழங்கினர் என்பதும் இதனால் உறுதிபெறும் போலும்.

நச்சினார்க்கினியர் காலத்திலே மூன்று புள்ளியாக ஆய்தத்தினை எழுதும் வழக்கம் பழையதாகியது போலும். அவர் காலத்தில் ஏற்பட்ட மாறுதலில் ஒன்றனை அவர் குறிக்கின்றார். *அதனை இக்காலத்தவர் நடுவுவாங்கியிட்டு எழுதுப* என்பது காண்க (தொல். எழுத்.2. உரை). மூன்று புள்ளியும் ஒன்றாகச் சேர இடையே கோடுகள் அவற்றை இணைத்து வரும்படி எழுதியதனைக் குறிக்கின்றார். இதன் பயனாகக் கூ என்ற வடிவம் போல ஆய்தம் எழுதப் பெறவும் காண்கிறோம். நச்சினார்கினியர் கூ என்ற வடிவத்தைக் குறிக்கின்றாரே அன்றிக் கல்வெட்டில் நடுவே உள்ள வளைவுக்கோட்டினைக் குறிக்கவில்லை எனலாம். கல்வெட்டில் உள்ள வடிவம் நச்சினார்க்கினியர் காலத்திற்கும் பல நூற்றாண்டுகள் முந்தியதாகலின் *இக்காலத்தார் வழக்கு* என நச்சினார்க்கினியர் அதனைக் குறித்தல் இயலாது. *முப்பாற்புள்ளி* என்று தொல்காப்பியர் குறித்ததற்கு வேறு பொருள் கொண்டமையாலேயே அடுப்புக் கூட்டுப் போன்ற வடிவம் ஆயுதத்திற்கு அமைந்தது. கூ என்று எழுதும் போது கல்வெட்டில் கண்ட இடைக்கோடு இங்கும் நீண்டிருக்கக் காண்கிறோம்

| | |
|---|---|
| 8 ஆம் நூற்றாண்டு காசாக்குடிச் செப்பேடு. |  |
| 9ஆம் நூற்றாண்டு வரகுணன் திருச்செந்தில் கல்வெட்டு. |  |

ஒலி : இது க் என்ற மெய்யெழுத்தினையும் க் அ என ஒலிக்கு உயிர்மெய் எழுத்தினையும் குறிக்கும். க் என்பது தமிழ் மெய்யெழுத் வரிசையில் முதல் எழுத்தாகும். இந்திய நாட்டு மொழிக எல்லாவற்றிலும் அவ்வாறே ஆகும். க் என்ற மெய்யெழுத்தின எளிதே ஒலித்துக் காட்டுவதற்காக அ என்ற எழுத்துச் சாரியை சேர்த்த க என வழங்குவர்; மேலும் கரம் என்ற சாரியை சேர்த்துச் ககரட என்றும் வழங்குவர். அனா, ஆனா என்ற சாரியைகள் பெற்றுக் க-னா க-ஆனா எனப் பள்ளிச் சிறுவர் வாயில் இஃது ஒலிக்கும். ஆ-னா என்பது ஏனம் என்ற பழைய சாரியையின் மருவிய வழக்குப் போலும் க் என்பது இக்கன்னா, இக், இக்கு என்று இன்று ஒலித்துக் காட்டப்பெறும்.

தனிநின்று ஒலிப்பது-தானே தனி நின்று அலகு (Syllable) பெறுவது உயிர் என்றும், உயிர் இன்றி இயங்காதது-பாட்டில் அலகு பெறாதது- மெய் என்றும் பெயர் பெறும். இவை அழகிய, பொருள் நிறைந்த உவமைப் பெயர்களாகும். உயிரினும் ஒலி குறைந்தவை, அழுத்தம் குறைந்தவை மெய்யெனப் பெயர் பெறும். உயிரை ஒலிக்கும்போது யாதொரு தடையும் வாயில் எழுவதாகத் தோன்றுவதில்லை; மெய்யினை ஒலிக்கும்போது ஏதோ ஒருவகையான தட்டுப்பாடு எழுவது போலத் தோன்றுகிறது. இதனால் ஒற்று என்பது மெய்க்குப் பெயராக அமைந்தது.

எழுத்துக்கள் உயிர்ப்பொலிகள் (Breathed sounds), ஒலிப்பொலிகள் Voiced s.) என இருவகையாகும். குரல் வளையில் உள்ள குரல் ாண்கள் ஒன்றுகூட, மூச்சு அத்தடையைத் தாண்டி, அவற்றின் இடையே குந்து வெளி வரும்போது, அந்த இதழ்கள் துடிக்கத் தொடங்கு ன்றன. அவையே ஒலிப்பொலிகளாகும். அ என ஒலிக்கும் போது ட்டியில் (Adam's apple) கை வைத்துப் பார்த்தால் இந்தத் துடிப்புப் னாகும். குரல் இதழ்கள் இடையூறு தோன்ற நிற்கும்போது மூச்சுத் டைப்படாது வெளி வருமானால் உயிர்ப்பொலி தோன்றும். K என்பது என்பதன் உயிர்ப்பொலி; G என்பது அதன் ஒலிப்பொலி; ாடர்ந்தொலிக்கும் ஒலி தொடரொலியாகும். (Continuant)

எழுத்துக்களின் ஒலி வாயொலியாக முழுவதும் வெளி வருவதும் உண்டு; அப்போது மெல்லண்ணம் மேலே ஓங்கி நின்று மூக்குக்கும் வாய்க்கும் இடையிலுள்ள வழியை மூடிவிடும். ஆனால், மெல்லண்ணம் கீழே இறங்குமானால் அந்த வழி திறக்கும்; அப்போது ஒலிப்பு வாய் வழியாகமட்டும் அன்றி, மூக்கு வழியாகவும் சென்று மூக்கொலிப்பும் பெறும். முன்னையவற்றை வாயொலி (Oral s.) என்றும், பின்னையவற்றை மூக்கொலி (Nasals-மெல்லெழுத்து-நாசிகை) என்றும் வழங்குவர். ககரத்திற்கேற்ற மூக்கொலி ஙகரம் என்பதாம். மெய்யெழுத்துக்கள் தடை தோன்றும் இடத்திற்கு ஏற்ப வெவ்வேறாகும். மெல்லண்ணமும் அடி நாவும் ஒற்றப் பிறப்பன மெல்லண்ண ஒலிகள் (Velars), வல்லண்ணமும் இடைநாவும் ஒற்றுவதால் எழுவன வல்லண்ண ஒலிகள் (Palatals); இதழ்கள் ஒற்றப்பிறப்பன இதழ் ஒலிகள் (Labials); இதழும் பல்லும் ஒற்றப் பிறப்புன இதழ் பல் ஒலிகள் (Labio dentals). வல்லண்ணத்தை நாவால் தொட்டால் இடையில் உள் குழிந்தும் பல்லுக்கு அருகே புறம் குவிந்தும் இருக்கக் காணலாம். புறங்குவிந்த இடத்தினைப் பல்லீறு என்பர். நாவால் பல்லைத் தொடுவதால் பிறப்பன பல் ஒலிகள் (Dentals); பல்லைத் தொடாமல் பல் ஈற்றினைத் தொடுவதால் பிறப்பன பல்லீற்றொலிகள் (Alveolars). நாவினை மடித்து வல்லண்ணத்தை ஒற்றப்பிறப்பன நாமடி ஒலிகள். இவை வளைநா ஒலிகள்-நாஒலிகள்-(Linguals, Acuminals, Retroflexes) எனவும் பெயர் பெறும். இங்கு வல்லண்ணத்தின் உச்சியை-முடியை நாத்தொடுவதால் இவற்றினை மூர்த்தாட்சரம்-தலையொலி- (Cerebrals) என்றும் வழங்குவது உண்டு. இந்த வகையில் க் என்பது-அடி நாவும் மெல்லண்ணமும் ஒற்றப் பிறக்கும் மெய்யெழுத்தாகும்.

இவ்வெழுத்துக்களில் ஏற்படும் தட்டுப்பாட்டினை நோக்கி முற்றும் தடைப்பட்டெழும் வெடி எழுத்துக்கள் (Plosives) என்றும், முற்றும் தடைப்படாமல் வரும் உரசொலிகள் (Fricatives) என்றும் வேறு பிரிப்பது உண்டு. முற்றும் தடைப்பட்டெழும்போதும் நிறுத்தொலி (Stop) இறுகச் செறிந்த செறிவொலியாகவும் நெகிழ்ந்தொலிக்கும் நெகிழொலி (Lax) ஆகவும் வேறுபடும். பொதுவாக, க் என்பதனை மெல்லண்ணச் செறிவுடை வெடிப்பிசை உயிர்ப்பொலி எனலாம்.

வெடிப்பொலியில், ஒற்றுதலால் வரும் (1) முழுத்தடையும், (2) ஒட்டியது சடுக்கெனப் பிரிவதால் வரும் வெடிப்பும் என இரண்டு நிகழ்ச்சிகள் வரும். வெட்கம் என்பதில் ட்க என்பதில் போல, ஒரு வெடிப்பெழுத்தின் பின் மற்றொரு வெடிப்பெழுத்து வருமானால்,

முன்னைய வெடிப்பொலியில் (ட்) நிறுத்தொலியாம் தடை ஒன்றுமே நிகழும்; வெடிப்பென்பது நிகழாமல் இரண்டாம் வெடிப்பெழுத்து (க்) ஒலிக்கத் தொடங்கும்; அங்குத்தான் வெடிப்பு நிகழும். பாக்கு என்பதில் போல க்க் இரட்டித்து வரும் இடங்களில் இந்த உண்மையைக் காண்க.

தமிழில் க் என்னும் ஒலி மொழிக்கு முதலில் வரும்; மொழியின் ஈற்றில் வருவதில்லை. ஈற்றில் பெரும்பான்மையும் உகரமும் சிறுபான்மை பிற உயிர் எழுத்துக்களும் பெற்றே வரும். ஓரலகுக்குக் குறையாதவை முன் வந்தால் உகரம் குற்றியலுகரமாக ஒலிக்கும்; இதனை இதழ் குவியா உகரம் என்பர். ɯ என்பது இதன் குறி; யா என்பது பின் வந்தால் இந்த உகரம் மேலைய உகரத்திற்கும் இகரத்திற்கும் இடைப்பட்ட ஒலி பெறும். ɨ என்பது இதன் குறி. இதனைக் குற்றியலிகரம் என்பர். குற்றியலுகர ஒலி ɯ என ஒலியாது ɨ எனவே ஒலிக்கும் என்பர் எம்.பவுலர் (M. Fowler) என்ற அறிஞர். மொழிக்கு இடையே உயிரெழுத்துக்களோடு சேர்ந்து உயிர்களுக்குப் பின்னும் இது தனித்து வரும், யரழ-இன் பின்னும் உயிர்களின் பின்னும் இரட்டித்து வரும்; ட்-*வெட்கம்*, ற்-*முற்கு*, ல்-*பல் கடிது*, ள்-*முள் கடிது*, ண்-*மண் கடிது* ன்-*பொன் கடிது*, ங்-*அங்கு* என்ற எழுத்துக்களின் பின்னும் தனித்து வரும். மெல்லெழுத்துக்களில் பெரும்பான்மையும் ங் என்பதன் பின் வரும். ம என்பது ங் எனத் திரியும் *மரங்களை*, ஞ், ந் இப்போது மொழியீற்றில் வருவதில்லை; முன்னாளில் வந்த போது அவற்றின் பின் க் என்பதன் முன் சாரியை வரும், வந்த போது ககரம் இரட்டிக்கும்; வகரம் முன் வந்தால் சாரியை பெறும், அல்லது ஆய்தமாகும். (பார்க்க: ஃ)

தமிழில் வரும் க் என்ற எழுத்து பலவகை ஒலிகளாக ஒலிக்கக் காண்கிறோம் அறிஞர் கால்டுவெல் வெடிப்பெழுத்துக்கள், மொழிக்கு முதலிலும் இடையே இரட்டித்து வருகையிலும் ந் முதலிய போன்ற உயிர்ப் பொலியாகவும், மொழிக்கிடையே உயிர் எழுத்துக்களின் நடுவே ஒற்றையாய் வரும்போதும் மெல்லெழுத்தின் பின் வரும்போதும் ஞ் முதலிய போன்ற ஒலிப்பொலியாகவும் மாறும் என்ற ஒரு நியதி கண்டு, அதற்கு, *உயிர்ப்பொலி ஒலிப்பொலி மாற்றுச் சட்டம்* (Law of convertibility of surds and sonants) எனப் பெயரிட்டு, அதனைத் திராவிட மொழி இனத்தின் சிறப்பியல்பு எனக் கூறுகிறார். இப்போது இங்ஙனம் ஒலித்தாலும் எப்போதும் இவ்வாறு இவை ஒலித்தன அல்ல என்பர் ஒரு சாரார். பழைய திண்ணைப் பள்ளிக்கூடங்களில் இந்த ஒலி வேற்றுமையை வற்புறுத்தக் கணக்காயர்கள் க் என்பது போன்ற

ஒலியைத் தனியாகவும் *ங் க* என்பது போல ஒலியை வேறாகவும் கற்பித்து வந்தனர்.

இந்த வேறுபாடு முன்பின் வரும் எழுத்துக்களின் சாயல் படிவதால் எழுவதாகும். கு என்று ஒலிக்கும் போது க் என்பது உள்நாக்கிற்கு அருகாக ஒலிக்கவும், *கி* என்று ஒலிக்கும் போது வல்லண்ணம் தொடங்குமிடத்திற்கு அருகாக ஒலிக்கவும் காண்கிறோம். இகரம் வல்லண்ண உயிர் ஆதலின் கி என்பதில் வரும் க் வல்லண்ணச் சாயல் (Palatalisation) பெற்று ஏறக்குறைய Ç என்பது போல ஒலிக்கும். இதனால் முதன் முதலில் சகர ஒலியே இருந்ததில்லை என்றும், *கெம்பு>செம்பு; கை>செய்; கெவி>செவி* என இவ்வாறு ககரம் மாறுவதால் சகர ஒலி தோன்றியது என்றும் கூறுவாரும் உண்டு.

உயிரெழுத்துக்களினிடையே க் வரும்போது உயிர்ச்சாயலால் உயிர்ப்பொலி ஒலிப்பொலியாக மாறுவது இயல்பே. வடமொழியிலும் (பதஞ்சலி. I.iv.4) சகரம் இத்தகைய மாற்றத்தினைப் பெறுவதெனக் கூறுகிறார், பிராகிருதங்களிலும் இவ்வாறாகும்.

மொழியோ, பொருளை அறிவிப்பதற்கு ஏற்பட்டது. பொருள் மாறாத வரையில் ஒலி மாறுவதனைத் தடுப்பான் ஏன்? பல முறை ஒலிக்கப் பெறும் ஒலிகள் இவ்வாறு மாறுவதும் இயல்பு. எனவே, ஒலிகளின் மாற்றங்களை ஒன்று விடாமல் குறிப்பதனை விட, அந்த அந்த மொழியில் பொருள் மாற்றத்தினை விளைவிக்கும் எழுத்துக்களை மட்டும் குறிப்பதே மேல் என முன்னோர் கண்டனர். இன்றைய அறிஞர்களும் ஒலியன் (Phoneme-பொருள் மாற்றொலி) என்ற கருத்தினை மனத்தில் வைத்து ஆராய்கின்றார்கள். பொருள் மாற்றொலியினையே முன்னோர் எழுத்து என்றனர். பலவகையான ஒலிகளின் தனிக் குடும்பமே எழுத்து அல்லது ஒலியன் எனப் பெறும். call என்பதற்கும் gall என்பதற்கும் வெவ்வேறு பொருள் உண்டாதலின் ஆங்கிலத்தில் k என்பதும் g என்பதும் வெவ்வேறு எழுத்துக்கள் அல்லது ஒலியன்கள். தமிழிலோ கால் என்பதனை kāl, gāl, hāl, xāl, çāl, ɣāl என ஒலித்தாலும் பொருள் மாறுவதில்லை. எனவே k, g, h, x, ç, ɣ என்பவையெல்லாம் d என்ற எழுத்தை அல்லது ஒலியினைச் சேர்ந்த குடும்பமே ஆம். d என்பது அடுத்து வரும் எழுத்துக்களின் சாயலால் பலவகையாக மாறக் காண்கிறோம். இவ்வாறு காணும் போது கால்டுவெல் கூறும் சட்டம் பொருளற்றுப் போதல் காண்க வடமொழி அறிந்தவர் அங்குள்ள g ஒலியைக் *குரு* முதலிய

சொற்களில் வழங்கியதால் அத்தகைய ஒலி பரவியது என்பார் எம்.பவுலர். க்(K)என்பது ƺ என்று ஒலிக்கின்றது என்பதினும் d என்ற முழுத்தடைச் செறிவொலியே நெகிழொலியாக உயிர்களினிடையே ஒலிக்கின்றது என்பதே உண்மை என்பர் அந்த அறிஞர். இலங்கை தமிழர் வெடிப்பொலிகளையும் இவ்வாறுநெகிழொலியாக ஒலிப்பதனால் வட்டுக்கோட்டை என்பதனை VaddukŌddai என எழுதக் காண்கிறோம் உயிர்களுக்கிடையே d என்பது ƺ என்ற ஒலி பெறக்கண்டே கால்டுவெல் எழுதினார் என அறிதலும் வேண்டும் பகல் என்பதில் d என்பது ƺ என்றும h என்றும் ɦ என்றும் ஒலிக்கக் காண்கிறோம் பவல் என இழிசினா வழக்கிலும் பால் என இலக்கிய வழக்கிலும் மாறக் காண்கிறோம முடிவில் க் என்பதே மறைகிறது எனலாம் (k>zero) (J R Firth) எனற அறிஞர் ககரத்தின் பிற ஒலிகளையும் கண்டெழுதியுள்ளாா I (1) கல் எனபதில் போல க என்பது மொழிக்கு முதலில் வரும் போதும (2) பக்கம என்பதிற போலக் ககரம் இரட்டித்து உயிர்களினிடையே வரும போதும், (3) தீாக்க என்பதிற்போல ரகரத்தின் பின் இரடடித்து வரும் போதும் k என்ற ஒலிபெறும் II நாங்கள் எனபதிற்போல ஙகரத்தின் பின் ƺ என்ற ஒலி பெறும். III பகல் என்பதிற்போலத் தனியே உயிர்களிடையே (Intervocalic) வரும போது X என்ற ஒலி பெறும, IV அழுகி என்பதிற்போல மொழியீற்றில இகரத்தோடு வரும்போது ç, என்ற வல்லண உயிர்ப்பு உரசொலி பெறும் V குருடர்கள், பிறகு என்பவற்றிற்போல மொழியின் கடையசையில க என்றோ கு என்றோ வரும போது ɣ என்ற மெலலண்ண ஒலிப்பு உரசொலி பெறும் எஃகு என்ற போது ககரம், மெலலணண உயிர்பபு உரசொலியாய X எனறும், மெல்லண்ண ஒலிபபு உரசொலியாய் ɣ எனறும ஒலித்தலைக் கண்டோம (பார்க்க ஃ ஜிஹ்வாமூலம)

அ, ஆ, இ, ஈ என உயிரெழுத்துககளைத் தொடாநது ஒலிககும போது இடையிடையே குரலவளை மூடிக் கொளவதனை உணர்கிறோம, அப்போது க் என்பது போன்ற ஒலி எழும இதனை விட்டிசை என்பர் ? என்ற ஒலியாகும இது வலலெழுததோடு இந்த விடடிசை ஒலி பழங்காலத்தில் எதுகை கொண்டது சிரிப்பொலியையும் கக்கக் கெனல, கக்குதல் முதலிய இசைக் குறிப்புக்களையும (அநுகரண ஒலி-Onomatopoeia) அறிந்தால் இவ்வொலியைக் கேட்கலாம்

ககரம இரட்டித்து வரும போது ஹ என உயிர்ப்பிசையோடு k - h என ஒலிக்கும என்பா எம பவுலா k, kh, ƺ, gh, q என்ற பிற மொழி

ஒலிகள் தமிழில் க் என்றே எழுதப்பெற்று ஒலிக்கப்பெறும். (உம்) kara-*கரம்-கை*, khara-*கரம்-சூடு*; gara-*கரம்-நஞ்சு*; ghosa-*கோஷம்-பேரொலி*; gamis-*கமிசு-உட்சட்டை* பிற மொழி ஒலிகளைத் தமிழில் வழங்கும் போது கால்டுவெல் கண்டதற்கிணங்க ġ என்ற ஒலிப்பு ஒலியைக் குறிக்கத் தனிக் ககரத்தையும் (Rega-ரீகா) k போன்ற உயிர்ப்பொலியைக் குறிக்க இரட்டித்த வல்லெழுத்தையும் ***Baku**-பாக்கூ* எழுதுவது வழக்கமாக வருகிறது

*பொருள்* *க* என்பது காந்தார சுரத்தின் குறியாக வழங்குகிறது *க* என்பது ஒன்று என்ற எண்ணின் குறியாகும் (பார்க்க எண்சுவடி) *க என்பதற்குப் பிரமன் என்றும் அக்கினி என்றும் பொருள்* (தமிழ் லெக்சிக்கன்), வாழ்க என்பதிற்போல வியங்கோள் விகுதியும் ஆம்

*வரிவடிவம்* தமிழ் நாட்டில் வழங்கிய வடிவங்களைத் தருகின்றோம் அசோகன் எழுத்திலும் பஞ்ச பாண்டவக் குகை எழுத்துக்கள் சிறிது மாறியவை பிராமி எழுத்திலிருந்து தமிழ் எழுத்துக்கள் வளர்ந்தனவா, தென்னாட்டிலிருந்து வடக்கே எழுத்துக்கள் சென்றனவா, சிந்து நதிக்கரையிலிருந்து எழுத்துக்கள் வளர்ந்தனவா என்று எழும் கேள்விகளுக்கு முற்ற விடை கூற முடியாது

| | |
|---|---|
| அசோகன் எழுத்து | |
| பஞ்சபாண்டவக | |
| குகை கி.மு. 3 ஆம் நூ. | |
| (திருநாத குன்றம்) | |
| கி.பி. 7 ஆம் நூ. | |
| 8 " | |
| 9 " | |

| | | |
|---|---|---|
| 10 ஆம் நூ. | ) | |
| 11 | " | |
| 13 | " | |
| 15 | " | |

இந்த எழுத்துச் சிலுவைபோல் முதலிலிருந்தது, அதன் தலையின் நுனி தடித்தது. அது குறுக்குக் கோடாக வளர்ந்தது ; இடப்புறம் வளைந்தது, நடுக்கோட்டைத் தொட்டது, வலப்புறம் நீண்டது, தலை சதுரமாக அமைந்தது; இடையே குறுக்குக் கோடு கீழாக வலப்புறம் வளைந்து கீழிறிங்கிச் சுழியாயிற்று. நேர்க்கோடு இடப்புறம் கீழே வளைந்து பின் நடுவே உள்ள குறுக்குக் கோட்டின் வளைவோடு ஒன்றாயிற்று என்பது க என்ற உயிர் மெய்யெழுத்தினையும் க் என்ற மெய்யினையும் சுட்டும் உயிர்மெய்யெழுத்து புள்ளியின்றியும் மெய்யெழுத்து புள்ளி பெற்றும் வரும் என்பது தொல்காப்பியம் இராசேந்திர சோழன் ஆளவரும் வரை மெய்யெழுத்துக்கள் பெரும்பான்மையும் புள்ளி பெற்று வரக் காண்கிறோம் பின்னர்ப் புள்ளியிட்டெழுதும் வழக்கம் 19ஆம் நூற்றாண்டில் புத்துயிர் பெற்றது புள்ளி என்பதே மெய்யெழுத்திற்குப் பெயர். புள்ளி சிறு நேர்க்கோடாக அமைந்தது உ போலவும் சில போது தோன்றியது.

*வட்டெழுத்து*

| பஞ்சபாண்டவக் குகை | | |
|---|---|---|
| கி.மு. 3 ஆம். நூ. | | |
| 8 | " | |
| 10 | " | |
| 11 | " | |
| 13 | " | |
| 14 | " | |
| 15 | " | |
| 18 | " | |

சிலுவைக் குறிக்கோடு போலிருக்கும் எழுத்து இடப்புறமாகச் சாய்ந்தது; தலையில் ஒரு குறுக்குக் கோடு இடப்புறம் சென்றது; சிலபோது ச போலவும் தோன்றிற்று; ஆனால் ககரத்தின் சுழி சிறிது; முடிவில் ஆங்கில N போல் ஆயிற்று. இங்கும் முன்போல் மெய்யெழுத்துப் புள்ளி பெற்று வழங்கியது.

# கா

*ஒலி:* க+ஆ என்ற ஒலிகள் முறையே முன்னும் பின்னும் ஒலிப்பதனைக் காட்டும் உயிர்மெய்யெழுத்து. பார்க்க . க், ஆ

பொருள்: வினையானால் பாதுகா, காவல் செய், தடு, அனுஷ்டி, தீமை வரவொட்டாமல் தடு, எதிர்பார் என்ற பொருள்களிலும், பெயரானால் சோலை, காவடித்தண்டு, துலாக்கோல், 100 பலம் கொண்ட நிறையளவு, பூ முதலிய இடும் கூடை, சரசுவதி என்ற பொருள்களிலும், இடைச்சொல்லானால் அசைநிலையாகவும் வழங்கும்

*வரிவடிவம்:*

| | | | |
|---|---|---|---|
| *பஞ்ச பாண்டவப் படுக்கை* • *கி. மு.* | *3-ஆம்* | *நூ.* | [illegible] |
| *கி. பி.* | 7 | ,, | [illegible] |
| | 10 | ,, | [illegible] |
| | 11 | ,, | [illegible] |
| | 13 | ,, | [illegible] |
| | 15 | ,, | கா |
| *இக்காலம்* | | | கா |

ஆகார அறிகுறி, க என்பதன் தலையில் வலப்புறத்தில் குறுக்குக் கோடாகப் போனது பல்லவர் காலத்தில் நடுவேயுள்ள குறுக்குக் கோட்டினை ஒட்டிய கோடாகக் கீழ் வளைந்தது சோழர் காலத்தில் தனியே நின்று, பாண்டியர் காலத்தில் இடப்புறக் குறுக்குக் கோட்டோடு தோன்றும் நேர்கோடாக மாறி, விஜயநகர அரசர் காலத்தில் இன்று கால் என்று கூறும் வடிவத்தை அடைந்தது

*வட்டெழுத்து*

| | |
|---|---|
| 8ஆம் நூ. | |
| 10 ,, | |
| 11 ,, | |
| 13 ,, | |
| 14 ,, | |
| 18 ,, | |

சாயந்த வடிவத்தில இடையேயுள்ள குறுக்குக் கோடடின் வலமுனையில் இருந்தும் ஆகாரத்தின்கீழ் ஒரு சிறு கோடு கீழ் இறங்கிப் பின் கோணமாக வலம் சென்றது. இக்கோடு பின் சிறிது மேனோக்கிப் போயிற்று. 11ஆம் நூறறாண்டில் ககரம் சகரம்போலாகும போது, இடைக் கோட்டின் முனையிலிருந்து கீழிறங்கும கோடாகச் சிறிது வலப்புறமும் சென்றது 14ஆம் நூற்றாண்டிற்குப்பின் ா போல ஆன ககரத்தின் வல நுனியிலிருந்து கோணமாக மேல்நோக்கும் சிறு கோடாகச் சென்றது

# கி

*ஒலி* : க்+இ என்ற இரண்டொலியும் இங்குக் குறித்த முறையிலே ஒலிப்பதனை ஒரே உயிர்மெய்யெழுத்தெனத் தமிழிலக்கணம் கொள்ளும். அலகுநிலை பெறும் எழுத்து (Syllable) என்ற கொள்கையால் இவ்வாறு கொள்வர் போலும் க்+இ என இதில் வரும் தனி ஒலி ஒவ்வொன்றையும் வர்ணம் என்றும், கி என எழுதப்பெறுவதனை அட்சரம் என்றும் வேறுபடுத்துவர். இந்த எழுத்தின் வளர்ச்சியைக் கீழே காண்க,

| | | |
|---|---|---|
| 8-ஆம் | நூற்றாண்டு | |
| 9 ,, | ,, | |
| 10 ,, | ,, | |
| 11 ,, | . | |
| 13 ,, | ,, | |
| *இக்காலம்* | | கி |
| வட்டெழுத்து : | | |
| 8 ,, | நூற்றாண்டு | |
| 10 ,, | ,, | |
| 13 ,, | ,, | |
| 14 ,, | ,, | |
| 15 ,, | ,, | |
| 18 ,, | ,, | |

# கீ

க+ஈ என்ற இரண்டொலியும் மெய் முன்னும் உயிர் பின்னுமாக ஒலிக்கும் உயிர் மெய்யெழுத்தாகும் இது. கீ என்பது கீச்சு என்பதில் பகுதியாம். கீ என்பது பறவை ஒலிக்குறிப்பினையும் குறிக்கும்

இந்த எழுத்தின் வளர்ச்சி கி என்பது போன்றதே. நெடிலைக் குறியிலிருந்து வேறுபடுத்துவது அருவழக்காயிற்று.

| | |
|---|---|
| கி. பி. 2–3ஆம் நூற்றூண்டு (பஞ்சபாண்டவர் குகை) | |
| 8ஆம் நூ. | |
| இக்காலம் | கீ |

முதலில் மேல் கொண்டைக்குச் சுழி வலப்புறமிருந்தது; இன்று இடப்புறம் வந்துவிட்டது.

# கு

க்+உ என்பது கு என்று உயிர் மெய்யாக எழுதப்பெறும். ககரத்தின் அடிநுனியின் வலப்புறம் செல்லும் குறுக்குக் கோடாகத் தொடங்கியது.

| | |
|---|---|
| கி.மு.2-3ஆம் நூற்றாண்டு | |
| கி.பி. 7ஆம் நூ. | |
| 8 " | |
| 9-10 " | |
| 11 " | |
| 13 " | |
| 14 " | |
| 6 " | |
| இக்காலம் | கு |

வட்டெழுத்து:

| | |
|---|---|
| 8ஆம் நூற்றாண்டு | |
| 10 " | |
| 11 " | |
| 13 " | |
| 14 " | |
| 18 " | |

*ஒலி:* தனிக்குறில் ஒன்று தவிர மற்றவற்றின் பின்வரும் கு குற்றியலுகரமாக ஒலிக்கும் (பார்க்க:உ); பிற இடங்களில் முற்றியலுகரமாகும்.

*பொருள்* கு என்பது அவனுக்கு என்பதிற் போல நான்காம் வேற்றுமை யுருபாகவும், செய்குவேன் என்பதிற் போலச் சாரியை யாகவும், போகு என்பதிற் போல ஆக்க நிலையுருபு (பகுதிப்பொருள் விகுதி) ஆகவும், நன்கு என்பதிற் போலப் பண்பு பெயர் விகுதியாகவும், போக்கு என்பதிற்போலத் தொழிற்பெயர் விகுதியாகவும், செய்கு (செய்வேன்) என்பதிற்போலத் தன்மை ஒருமை எதிர்கால வினைமுற்று விகுதியாகவும், குதர்க்கம் என்பதிற்போல வடமொழிச் சொற்களில் தீமைப்பொருள் குறிக்கும் உபசருக்கமாகவும் வரும் கு என்பதற்கு உலகம் என்றும் பொருள் உண்டு

# கூ

*ஒலி* : க்+ஊ என்பது கூ என்று உயிர்மெய்யாக எழுதப்பெறும். கூ என்பதன் கீழ்க்கோட்டின் நுனியிலிருந்து இரண்டு குறுக்குக் கோடுகள் வலப்புறம் சென்றன. பின் குறுக்குக் கோட்டிலிருந்து கீழ் இறங்கி வலமாக ஒரு கோடாய் சென்றது.

*கோலெழுத்து*

| | |
|---|---|
| 8-ஆம் நூற்றாண்டு | [illegible] |
| 9 ,, | [illegible] |
| 10 ,, | [illegible] |
| 13 ,, | [illegible] |
| 14 ,, | [illegible] |
| 16 ,, | [illegible] |
| இக்காலம் | கூ |

வட்டெழுத்து :

| | |
|---|---|
| 8-ஆம் நூற்றாண்டு | [illegible] |
| 10 ,, | [illegible] |
| 13 ,, | [illegible] |

*பொருள்* : கூ என்னும் ஓரெழுத்தொருமொழி உலகும் என்று பொருள்படும். இது கூவு என்று இன்று வழங்குவதன் மூலம் பழைய வடிவாகவும், கூழ் என்பதன் மரூஉ ஆகவும் வழங்கும் குக்கூ, கூ, கூ, கூ கா என்பது இரட்டித்து வந்த ஒலிக்குறிப்புகளாகும்

# கெ

க்+எ என்ற இரண்டும் சேர்ந்து உயிர்மெய்யெழுத்தாக ஒன்றாக எழுதப்பட்ட வடிவம் இதுதான் சாரியை இன்றி எழுத்தினைச் சுட்டுவதனைக் *கெப்பெரிது* என்ற வழக்கு விளக்குகிறது. கெ என இரண்டு குறிகளாக எழுதப்பெறுவதில் முதலில் உள்ளதனைக் கொம்பு என்பார்கள். இதுவே எ என்பதனைக் குறிக்கும் ஒலிக்கும் பொழுது க் முன்னும் எ பின்னும் ஒலித்தாலும் வடிவெழுத்தில் எகரக் குறி ககரத்தின் முன்னாக இவ்வாறு முதலில் *எழுதப்பெறுவதால்* இந்த எழுத்தினைக் கற்கும் குழந்தைகளுக்குப் பெரும் குழப்பமாகவே இத்தகைய எழுத்துக்கள் முடிகின்றன ஆனால் தொடக்கத்தில் இந்த இரண்டு குறிகளும் பிரிவின்றி ஒன்றாகச் சேர்த்து எழுதப்பெற்றன. கி.பி 10ஆம் நூற்றாண்டில் இவை இரண்டும் வேறு பிரித்து எழுதப் பெறும் குறிகளாக முற்றும் பிரிந்து போயின

கெ என ஒலிப்பதனைக் குறிக்க முன்னெல்லாம் கொம்பின் மேல் புள்ளியிட்டு முன்னோர் எழுதி வந்தனர் தொல்காப்பியர் காலம் முதல் வழங்கிய முறை இதுவேயாம். பெஸ்கி என்ற வீரமாமுனிவர் காலத்தில் ஒரு சுழியாக இருந்ததனை மேலும் ஒரு சுழி சுழித்து ே என்று ஏ என்பதன் குறியாகப் புதிதாக தாம் நுழைத்ததாகக் கொடுந்தமிழ் என்ற நூலில் அவரே கூறுகின்றார். எ,ஏ என்பவை வட்ட வடிவெழுத்தில் வேறுபட்டதனை முன்னரே குறித்துள்ளோம். அங்கே இடம்பெறும் சுழியின் இரு வளைவுகள் ஏ காரத்தைக் குறிக்க வந்தன. கெ என்பதில் உள்ள சுழியும் இப்படி வந்ததோ என ஆராய்தல் வேண்டும். கே என்ற நெடிலின் வடிவினை இயல்பாகவும், கெ என்ற குறிலின் வடிவினை அமைக்க முன்னைய கொம்பின் மேல் புள்ளியிட்டு விகார வடிவாகவும் கொண்டு வழங்குவதால் இந்த எழுத்து முறை குறில் எகரம் இன்றி நெடில் எகரம பெற்று வழங்கும் வடமொழி எழுத்து முறையில் இருந்து வளர்ந்ததே என்று கூறுவாரும் உண்டு

இந்த எழுத்தின் வளர்ச்சி அடுத்த பக்கத்தில் கொடுக்கப்பட்டுள்ளது.

கி.மு 3 ஆம் நூ
கி.மு. 8 "
கி.மு. 9 "
கி.மு. 10 } "
கி.மு. 11
கி.மு. 13 "
இக்காலம்

6 வட்டெழுத்து:

8 ஆம் நூ.
10
11
12 "
"
" "
" "
"
17 "
18 "
"

கெ, கே சில இடங்களில் புள்ளி பெற்று வேறுபடுகின்றன என்று கூறியதனைக் கீழே காண்க. ( கோ என்பதில் இருந்து அமைத்தது)

9 ஆம் நூ.

10ஆம்நூற்றாண்டுக்குப் பின் புள்ளியிடும் வழக்கம் மறைந்தது. 12ஆம் நூற்றாண்டில் நன்னூலார் புள்ளியிடும் வழக்கத்தை *எகர ஒகரம் மெய் புள்ளியெய்தும்* எனக் குறிக்கின்றார்.

# கே

க்+ஏ என்ற இரண்டும் சேர்ந்து உயிர் மெய்யெழுத்து என ஒன்றாக எழுதப்பட்ட வடிவம் இது. கெ, கே என்பவற்றிற்குள் வேற்றுமை இல்லாமல் எழுதப்பெறுவது பழைய வழக்கம். பார்க்க :கெ

*பொருள்* கே என்ற ஒலியோடு மூச்சுத்திணறுதலைக் கேவுதல் என்பர். எனவே கே என்ற பகுதியும் திராவிட மொழிகளில் உண்டு

# கை

க்+ஐ என்ற இரண்டும் சேர்ந்ததோர் உயிர்மெய்எழுத்து என ஒன்றாகக் கருதப்பெற்று எழுதப்படுவது இது.

அதன் வளர்ச்சி வருமாறு

7 ஆம் நூ.
8 "
9 "
10 "
11 "
13 "
16 "
இக்காலம் கை

வட்டெழுத்து:
3,4,5 ஆம் நூ. (திருநாத குன்றம்)
8 "
9 "
10 "
11 "
12 "
14 "
15 "
17 "

இரண்டு கொம்புகளின் தனித்தனி வடிவை ஒன்றாக இணைத்ததனையே இங்குக் காண்கிறோம். இந்திய ஐரோப்பிய மொழியில் ஏ என்பதன் நெடிலே ஐ என்பதனைக் குறிக்க இவ்வாறு எழுதப்பெறும் என்பர் இவ்வாறு இணைந்து வரும் கொம்புகள் சுழி உள்ள எழுத்துக்களாம் ல,ள,வ,ன,ண என்பவற்றோடு மயங்குதற்கு இடம் உண்டு. ஆதலின் அவற்றின் முன்னே மேலே சுழியை எழுதி அதனை வளைத்து இந்த எழுத்துக்களோடு ஒன்றாகும் வகையில் சேர்த்து ஐ என்ற குறியமைய இன்று எழுதி வருகின்றனர். ஒரு சிலர் பழமையைப் பின்பற்றி இரண்டு கொம்பினையே தனித்தனி எழுதி ஐயைக் குறிக்க வகை செய்கின்றனர்.

கை = கெகெ என்றாகும்.

கை என்பதே கய் என்று ஒலிக்கும் கெய் என்பது அதன் ஒலி என்பார் கால்டுவெல். க என்பது ச என மாறுவதும் உண்டு. செய் என்ற வினையடியாக பிறந்ததே சே என்ற தெலுங்குச் சொல்; அங்குக் கை என்பதே அதன் பொருளாகும். கை என்பது கெய் என ஒலித்தல் வேண்டுதலின், அது செய் என்பதன் பழைய தமிழ் வடிவம் என்பார் கால்டுவெல் ஆனால், *கைப்பு-கய்ப்பு-கசப்பு* என வருதல் காண்க. இங்குக் *கெய்ப்பு* என எவரும் ஒலிப்பதில்லை. H என ஒலித்த பழைய தமிழ் ஒலியையும் அ என எழுதியதால் அந்த பழைய ஒலி மட்டும் அ என எழுதப் பெற்ற போதும் எ என்றே ஒலிக்கும். எனவே, கை என்பது பழைய தனி ஒலி அன்று என்பாரும் உண்டு. கை என்பது இரண்டு மாத்திரையாக ஒலிக்கின்ற இடம் பழந்தமிழில் வருவது உண்டு. இக்கொள்கைப்படி இங்கு எல்லாம் கய் எனக் கொள்ளுதல் வேண்டும் போலும். கை என்பதனைத் தமிழில் சிறப்பொலி என்பாரும் உண்டு.

*பொருள் :* செயற்கை முதலிய சொற்களில் கை என்பது தொழிற்பெயர் விகுதியாகவும், கசப்பு என்ற பொருளிலும், கை என்ற உறுப்பின் பெயராம் பொருளிலும், கைக்கிளை முதலியவற்றில் ஒருமருங்கு என்ற பொருளிலும், கைக்குட்டை முதலிய சொற்களில் சிறுமை என்ற பொருளிலும் பெயராயும் வழங்கி வரக் காண்கிறோம்.

# கொ

க்+ஓ என்ற இரண்டும் சேர்ந்து உயிர்மெய்யெழுத்தாய் ஒன்றாக எழுதும் வடிவம் இதேயாம் ஒலிக்கு ஒரு தொடர்பும் இன்றி முன்னே கொம்பு வர பின்னே கால் வர எழுதப்பெறும் இவ்வெழுத்து நெடுங்கணக்கைக் கற்கும் குழந்தைகளுக்குக் கெ என்பதனைவிடப் பெருங் குழப்பம் விளைக்கக் காண்கிறோம் கெ,கே கொ,கோ என்பவற்றின் வரிவடிவம் அவர்களுக்குப் பெரு மயக்கமாகும் கொ என்பதைக் கோ என்றும் அதன் கொம்பின் மேல புள்ளியிட்டால் கொ என்றும் பழைய நாளில் ஒலித்து வந்தனர் பார்க்க·கெ

10ஆம் நூற்றாண்டுக்குப் பிறகு புள்ளியிட்டெழுதும் பழக்கம் ஒழிந்தது நெடிலைக் குறிக்கக் கொம்பினை மேலும் சுழிக்கும் வழக்கம் பெஸ்கி காலத்தில் வந்தது என முன்னரே கண்டோம் வட்டெழுத்தில் கோ என்பதனைக் குறிப்பதாக வலப்புறம் இழுக்கப்படும் குறுக்குக்கோடு கொ என்பதனைக் குறிக்க இழுக்கப்பெறும் கோட்டிலும் நீண்டதாகத் தோன்றும்படி வேறுபடுத்தி எழுதி வந்தனர்.

வேறுபடுவதன் வளர்ச்சியைக் கீழே காண்க

| | |
|---|---|
| கி.மு.3ஆம் நூ | |
| கி.பி 7 " | |
| 8 " | |
| 10 " | |
| 12 " | |
| 13 " | |
| இக்காலம் | கொ |

ஒ வட்டெழுத்து:

| | |
|---|---|
| கி.பி. 8ஆம் நூ. | |
| 10 " | |
| 11 " | |
| 12 " | |
| 13 " " | |
| 14 " " | |
| 15 " " " | |
| 16 " | |
| 17 " " | |

# கோ

க்+ஓ என்ற இரண்டும் சேர்ந்து உயிர் மெய்யெழுத்தென ஒன்றாய் எழுதப் பெறும் வடிவம் இது. கொ என்ற வடிவினும் கோ என்பது முன்னாளில் வேறுபடவில்லை. கொ என்பதன் கொம்பின் மேல் புள்ளி பெற்றால் கொ என்றும், புள்ளி இல்லையானால் கோ என்றும் ஒலிக்கும். இந்த எழுத்து முறையும் கோ என்ற நெடிலே அன்றிக் கொ என்ற குறில் ஒலியில்லாத வடமொழி போன்ற ஒரு மொழியின் எழுத்து முறையை ஒட்டியது என்பாரும் உண்டு. பார்க்க:கெ

பத்தாம் நூற்றாண்டிற்குப் பின் இந்தப் புள்ளி வைத்து வேறுபடுத்தும் முறை கல்வெட்டில் காணப்பெறவில்லை. 12ஆம் நூற்றாண்டில் நன்னூலார் புள்ளி வைத்து வேறுபடுத்தும் முறையைக் கூறுகிறார். ஓலையில் எழுதும்போது அவர் காலத்திலே இவ்வாறு வேறுபடுத்தினார் போலும். ஆனால், இன்று கிடைக்கும் ஓலைப்பிரதிகளில் புள்ளி வைத்து எழுதும் பழக்கமே இல்லை. ஓதும்பொழுது விடப்படவேண்டிய எழுத்துக்களையே புள்ளி குறிக்கும். வட்டெழுத்தில் வலப்புறத்தில் வரும் படுக்கைக் கோடு கொ என்பதற்கு இருப்பதை விட கோ என்பதற்கு நீண்டிருக்கக் காண்கிறோம். பார்க்க : கொ.

கோ எனக் கொம்பை மேலே சுழித்து பெஸ்கி வேறுபடுத்தினார் என்பர் (பார்க்க : கெ) கொ என்பதன் வடிவ வரலாறே கோ என்பதற்கும் ஒக்கும்.

*பொருள் :* கோத்தல் என்ற வினைப்பொருளிலும் அரசர், குயவர், தந்தை முதலான பெயர்ப்பொருளிலும் கோ என்பது தமிழ்ச் சொல்லாய் வழங்கும், வடமொழிச் சொல்லாயும் பசு, துறக்கம், உலகம், கதிர், நீர், சொல், சாறு முதலிய பொருள்களில் வரும்.

# கௌ

க்+ஔ என்ற இரண்டு எழுத்தினையும் உயிர்மெய்யெழுத்து என ஒன்றாகக் கொண்டு கௌ என எழுதுவர் கெ+ள என வரும் ஒலிக்கும், க்+ஔ என வரும் ஒலிக்கும், எழுத்து முறையில் வேறுபாடு காண்பது முடியாது ஓலையில் புள்ளியே இல்லாமல் எழுதும் பொழுது க்+ஔ+வி என்பதனையும் கெ+ள+வி என்பதனையும் வேறுபடுத்துவது இயலாது. இது காரணமாக இத்தகைய மயக்கத்திற்கு இடம் இன்றி ஔ என்பதற்கு வேறு ஒரு வடிவம அமைய வேண்டும் என்பது பலர் எண்ணம். தமிழில் ஔ என்பதே வேண்டா என்றும், அது பழைய தமிழ் ஒலி அன்று என்றும் கௌ என்பது கவ் என்பதேயாம் என்றும் கூறுவார் பலர். கௌ என்பது நெடிலாக முதலில் வந்து எதுகை கொள்ளும் பொழுது அதனை வேறு என்றே கொள்ள வேண்டும் என்பாரும் உளர். அது வடமொழி மரபினையே பின்பற்றியதால் வந்து படிந்த முறை என்பார் பிறர் அவ்வாறு கௌ என்பது கா முதலிய நெடிலோடு இந்த முறையில் எதுகையில் அளவொத்தல் அருமையேயாம்.

கௌ என்பதனைக் கவ் என்றே எங்கும் கொள்ளுதலும் கூடும். கௌவு என்ற பொருளில் வரும் கௌ என்ற சொல்லும் உண்டு. கொள் எனற பொருளில் வரும் கௌ என்பது மராட்டியச் சொல் என்பர்.

மேற்கூறிய கொள்கைகளை வற்புறுத்துவது போல கௌ என்ற எழுத்தினைக் கல்வெட்டுக்களில் காண்பது அருமை ஆகிறது.

17ஆம் நூற்றாண்டில் வட்டெழுத்தில் கௌ என்ற வடிவம் கீழே காட்டப்பட்டுள்ளது.

17ஆம் நூற்றாண்டு

ஒ என்பதன் நெடிலே ஔ என, இந்திய ஐரோப்பிய மொழி ஆராய்ச்சியாளர்கள் கொள்வதற்கேற்பக் கோ என்பதன் வடிவினைப் போலவே கௌ என்பதும் இருந்திருத்தல் வேண்டும். கெ,கை என வேறுபடுவது போலக் கோ, கௌ என்பனவும் ஒரே வகையில் மாறுபடுதல் வேண்டும். அப்படியானால் கைா என இருந்திருத்தல் வேண்டும்.

## ங

ஒலி : இது தமிழ் நெடுங்கணக்கில் க என்பதின் பின் வரும் மெய்யெழுத்தாம். க என்பது வல்லெழுத்தானால் அதற்கினமான மெல்லெழுத்து ங என்பதாம். இதனை ஒலிக்கும் போது மெல்லண்ணத்தை, அதற்கு நேருள்ள அடி நா ஒற்றும் ' குரல்வளை இதழ்கள் துடிக்க ஒலிப்பெழும் வாயிலிருந்து மூக்கிற்குச் செல்லும் வழியினை மெல்லண்ணம் மூடி நிற்கும் நிலை இங்கில்லை ஆதலின் ஒலிவடிவமாக வரும் மூச்சு மூக்கின் வழியாகவும் வெளிவரும்ா; எனவே இது மூக்கொலி எழுத்தாம்

ங என்பது அகரச்சாரியையோடு வந்து ங் என்ற எழுத்தைக் குறிக்கும் பண்டைய நாளில் ங் என்ற மெய்யெழுத்தே யன்றி ங முதலிய உயிர்மெய் எழுத்துக்கள் ' சொற்களில் வழங்கவில்லை ஙப்போல் வளை என்ற ஆத்திச்சூடியைக் காண்க ஆதலின், ககரத்தின் முன்வரும் மகரம் அல்லது மெல்லெழுத்து எனக் கொள்வதின்றி அதனைத் தனியே வேறொரு ஒலியன் என்று (Phoneme) கொள்வதிற்கில்லை மகரத்தின் மாற்றொலியன் (Allophone) என்று கொள்வதற்கே இடமிருந்தது ஆனால் நன்கனம் முதலியன போல அமைந்த அங்கனம் (அங்கு+அன்+அம்) என்பதில் பின்னாளில், ககரம் ஙகரமாக மெலிய, அது அங்ஙனம் என ஒலிக்கப் பெற்றது. இவ்வாறு வல்லெழுத்து மெல்லெழுத்தின் சார்பால் மெல்லெழுத்தாகும் இயல்பு மலையாளத்தில் இன்று நிலைத்து விட்டது. தமிழிலும் அத்தகைய இயல்பு விளங்கிய காலத்தை அங்ஙனம் என்ற வழக்கு குறிக்கின்றது. இதன் பயனாக ங என்ற உயிர்மெய்யும் சொற்களில் வழங்குவதாகி, அதே நிலையில் வரக்கூடிய க முதலிய பிற ஒலிகளினும் அங்ஙனம்-அங்கனம் வேறுபடுவதால ங என்பதனைத் தனி ஒலியன் என்றே இன்று கொள்ளுதல் வேண்டும் வினைமுற்று விகுதி வடமொழியில் திங் என்று வழங்குவதனைத் தமிழ் வழக்கிற்கேற்ப உகரச்சாரியை தந்து திங்ஙு என்று தமிழில் பிரயோக நூலார் பயன்படுத்துகின்றனர் திஙந்தம் என்பதும் அந்நூலில் வரும் சொல்லாம் பேச்சுத் தமிழில் சிலபோது, ஙகரத்தின் பின்வரும் ககரம பிற உயிர்களோடு சேர்ந்து வரும்போதும் சிங்ஙி (சிங்கி), எங்ஙே (எங்கே), முதலியவாக ஒலிப்பதால், எழுத்து வடிவில் எழுதப்பெறாமற் போனாலும், ஙகரம் பிற உயிர்களோடும் தமிழில ஒலித்து வரக் காண்கிறோம அங்ஙனம என எழுதப்பெறும

பொழுது இரண்டு ஙகரமாக எழுதப் பெற்றாலும், ஒலிக்கும்பொழுது ஒரு ஙகரத்தான் ஒலிக்கக் கேட்கிறோம் விரைந்தும் நெகிழ்ந்தும் ஒலித்து வரும் தமிழ் ஒலிப்பு முறையின் விளைவாகும் இது. முன்னாளில் உள்நாக்குக்கு அருகில் ஒலித்து வந்த இவ்வொலி இப்பொழுது

மெல்ல வல்லண்ணத்துக்கு அருகாக ஒலித்து வருகிறது

*பொருள்:* ங என்பது மரக்கால் அல்லது குறுணி என்பதன் அறிகுறியாகக் கல்வெட்டுகளிலும் பிற எழுத்துகளிலும் வழங்கி வருகின்றது.

*வடிவம்:* இந்த எழுத்தின் வடிவம் மாறிவந்த வரலாற்றைக் கீழே காண்க·

கி.மு. 3ஆம் நூ. (அசோகன்)
கி.பி. 7 "
8 "
9 "
10 "
11 "
12 "
13 "
14 "
16 "
இக்காலம்

# ச

*ஒலி:* ச்+அ என்ற இரண்டு ஒலிகளும் உயிர்மெய் என ஒன்றாகக் கருதப்படுவதன் வடிவமாகும் இது. ச் என்பது வல்லெழுத்து. தொடக்கத்தில் வெடி உயிர்ப்பெழுத்தாக (Voiceless plosive) இருந்தது எனலாம். மொழியிடையில் ஒற்றாக வரும்போது இந்த ஒலியினை இன்றும் கேட்கலாம். வல்லண்ணமும் அதற்கெதிரிலுள்ள இடைநாவும் ஒற்றப் பிறப்பதாகும் இது. இதனைப் பிறமொழிகளில் t, s என்ற இரண்டொலி எனக் கொண்டாலும் இந்திய மொழிகளில் ஓர் ஒலி எனக் கொள்வதே ஒலிகளின் வரிசையமைப்புக்குப் பொருந்தியதாகும். அறிஞர் கால்டுவெல் வல்லெழுத்துக்கள் மொழி முதலிடைகளில் ஒலி வேறுபட்டொலிப்பது பற்றிக் கூறியது *க* என்ற தலைப்பில் விளக்கப்பெற்றுள்ளது. அவர் கொள்கை *ச்* என்பதற்கு முழுவதும் ஒத்துவரவில்லை. மெல்லெழுத்தின் பின் ஜ் என்ற ஒலிபெறும் (உஜ்ஜயினி உஞ்சை என்பது இதனாலோ?); உயிரிடையே அந்தஒலி பெறாது ஶ என்ற ஒலியே பெறுகிறது; மொழி முதலில் இன்று ஶ அல்லது ஸ என்ற ஒலி பெறுகிறது. வடமொழிச் சொற்கள் தமிழில் வரும்போது, ஸ ஶ என்பன *ச* என்றே எழுதப் பெறுதலும் காண்க. ஆனால், யாழ்ப்பாணத்தில் ச் என்பது இடையில் ஒற்றாக வந்தால் ஒலிப்பது போலவே மொழி முதலிலும் ஒலிக்கப்பெறும். மலையாளத்திலும் அவ்வாறே ஆம். ச் என்ற ஒலியன் (Phoneme) ஒன்றே ஸ, ஶ, ஜ என்ற மாற்றொலியன்களாக (Allophones) வழங்கும் என்றலே பொருத்தம் (பார்க்க:க). பல ஒலியாக மாறுவதற்குக் *காரணம்* பின் முன் வரும் ஒலிகளின் *சார்*பே ஆம் என முன் கூறிய விளக்கம் காண்க.

*ச* என்ற ஒலி மொழி முதலிலும் உயிரிடையிலும் Sha என்பதில் வரும் சுரமுயர்ந்த ஒலியுமாகாது, Shore என்பதில் வரும் *தாழ்ந்த* ஒலியுமாகாது, பல் ஈற்றின் பின்னே *நாவின்* அலகு *ஒற்ற* இதழ் குவிதலின்றி Sit என்பதிற் போல ஒலிக்கும் எழுத்தாம். அ, உ, ஒ என்பவற்றோடு மொழி முதலாகும்போது S போலாம். உயிரிடையே பிற வல்லெழுத்துப்போல இதுவும் ஒலிப்பெழுத்தாம் (Voiced) இ, ஏயோடு மொழி முதலாகும்போதும், வல்லெழுத்தின்பின் வரும்போதும் இது பல்லீற்றின் பின் நா நுனியன்றி நாவின் அலகு இதழ் குவியாது ஒறறப் பிறக்கிற டகர ஒலியோடு வருவதாய் வெடியொலி நலிந்ததோர் உரசெழுத்தாய் (Affricate) ஒலிக்கும். வல்லொற்றின்

பின் டகர ஒலி சிறந்து நிற்கும்; இறுகியும் நிற்கும்; றகரத்தின் பின்னோ குறுகி ஒலிக்கும் இங்கெல்லாம் ச என்பது தகரம்-ககரம் என்ற இரண்டின் இடைப்பட்டதாம் என்பர் ஜே.ஆர்.பிர்த்து (J.R Firth) என்ற ஆசிரியர். மற்றையார் (உ-ம் Murray Favlor) ககரத்தைப் பற்றிக் கூறியதனை இங்கும் கொள்க இன்று உயிரிடையே வரும் ச என்பது ஐ என ஒலிக்கவில்லை; மெல்லெழுத்தின் பின்னரே அவ்வாறாம்

இன்று, சிலவிடங்களில் ச மொழி முதலில் ஐ என்று ஒலிக்கிறது சிலவிடங்களில் மொழி முதலிலும் ச்ச என்பதுபோல் ஒலிக்கும்.

வெடி உயிர்ப்பொலியே இதன் பழைய ஒலி எனலாம். கை=செய்; கெவி=செவி முதலியவற்றை ஆராயும் போது இந்தச் சகரம் பழையதொரு ககரம்-வல்லண்ணத்தின் அருகில் ஒலித்த ககரம் என்று கொள்வதற்கு இடம் உண்டு வல்லண்ண உயிரோடு வந்த ககரமே இவ்வாறு மாறினது போலும் தொல்காப்பியர் காலத்தில் ச் என்பது அகரத்தொடு மொழி முதலில் வருவதில்லை சங்க நூலில் பல சொற்கள் ச எனத் தொடங்குகின்றன. சா என்பது இறந் காலவினை எச்சமாகும்போது சத்து என வருதல் வேண்டும்; மலையாளத்தில் அவ்வாறுதான் வருகிறது. ஆனால், தமிழில் செத்து என அகரம் எகரமாக ஒலிப்பது காண்க. இதனாலேயே தொல்காப்பியர் ச மொழிக்கு முதலாகாது என்றார் போலும். பார்க்க.அ.

சகரம் இடையண்ண எழுத்தானால் அதற்கு ஒத்த இடையெழுத்து யகரமாகும் சகரம் (v) மசானம்=மயானம் என யகரமாதலும் உண்டு. பெயர், ஹெசர் எனக் கன்னடத்திலும், தமிழில் உயிர், உசிர் எனப் பேச்சுவழக்கிலும் வரும் மை=மசி; பைம்பொன் (பயிம்பொன்=பசும்பொன்; பச்சைப் பொன்) எனவும் வரும். இங்கெல்லாம் சகரமே முதல் எனக்கொண்டார் அறிஞர் கால்டுவெல் யகரமே பழைய வடிவம் எனக்கொள்வோரும் உண்டு.

சகரம் இன்று ஒலிக்கும் முறையினையும் தொல்காப்பியம் முதலியன அதன் பிறபபினைக் கூறுவதனையும் ஒத்திட்டுப் பார்க்கும்போது இடைவல்லண்ண எழுத்தாக இருந்தது இப்போது கடைவல்லண்ண எழுத்தாக மாறியுள்ளது எனலாம். டகரக் கூறோடு ஒலித்தது தகரக் கூறோடு ஒலிக்கின்றது எனலாம்

பல் ஒலிகள் (Dentals) வல்லண ஒலிகளாக (Palatals) ஒலிக்கும் போக்கு தமிழில ஒரு காலத்து எழுந்தது சிலப்பதிகாரத்திலிருந்து தேவாரம் வரை அந்தப் போக்கு தொடர்ந்திருந்தது ஐந்து=அஞ்சு என்பது போன்றவை

அந்நாளில் தொடங்கியவை இன்னும் பேச்சுவழக்கில் நிலைத்துப்போய் விட்டன. பிற்காலத்தே ஞாயிறு=நாயிறு என்பது போல வல்லண எழுத்து பல்லெழுத்தான போக்கு தொடங்கிய போது சகரமே பல்லொலிக்கருகே வந்துவிட்டமையால் தகரமாகவில்லைபோலும். ஆனால், மாசம்=மாதம் என வருதல் காண்க.

சகர ஒலி சில மொழிகளின் முதலில் இருந்தது ஒரு காலத்துக் கெட்டது என்பர். சபை=அவை; சதியபுத்திரர்=அதியபுத்திரர் (புத்திரர்=மகன்-மான்)=அதியமான், சேனாதி=ஏனாதி, செட்டி=எட்டி என்பவையே அன்றிச் சான்றோர்=ஆன்றோர் முதலியவற்றையும் சங்ககால வழக்கெனக் ^காட்டுவர் சிலர்.

வடமொழியில் வரும் ஸ, ஶ என்பவற்றையும் ச என்ற சவர்க்க வல்லெழுத்து நான்கினையும் தமிழில் ச என்றே எழுதுவர்; ஆங்கில Z, S என்பனவும் (Dozen டசன்; Bus பசு) இலக்கியத் தமிழில் ச என்றே எழுதப்பெறும். இதற்கு ஒத்த உருது முதலிய மொழி ஒலிகளும் இவ்வாறாம். இன்று ஸ முதலிய உரசொலியை உயிரிடை வரும் சகரமாகவும், Church என்பவற்றில் மொழியிடை கடைவரும் (Ch) ஒலியை சர்ச்சு என இரட்டிய சகரமாகவும் எழுதிவருகின்றனர். ஷ, ஸ, ஶ, ஜ என்ற எழுத்துக்களையும் நெடுங்கணக்கில் வைத்து இன்று மாணவர் பயில்கின்றனர். பக்ஷம் என்பது பக்கம் என்றே அல்லாமல் பச்சம் என க்ஷகரம் இரு சகரமாகவும் வரும். ஷ என்பது ட என்றே அல்லாமல் சிலபோது ரிஷி=ரிசி என்பதிற்போலச் சகரமும் ஆம்.

ச என்பது கூட என்ற பொருளில் வரும் உபசர்க்கமாக மொழிக்கு முன்னிலையாய் வருவதனைத் தமிழில் வழங்குகிற சகளம் முதலிய வடசொற்களில் காணலாம். சகரத்தின் வடிவெழுத்தின் வளர்ச்சியை அடுத்த பக்கத்தில் காண்க:

| | | |
|---|---|---|
| கி.மு. 3 ஆம் நூ | | |
| கி.பி. 7 | " | |
| கி.பி. 8 | " | |
| கி.பி. 9 | " | |
| கி.பி. 10 | " | |
| கி.பி. 11 | " | |
| கி.பி. 13 | " | |
| இக்காலம் | | ச |

வட்டெழுத்து:

| | | |
|---|---|---|
| கி.பி. 3-5 ஆம் நூ | | |
| 8 | " | |
| 9 | " | |
| 10 | " | |
| 12 | " | |
| 13 | " | |
| 14 | " | |
| 15 | " | |
| 18 | " | |

# சா

சா என்பது ச்+ஆ என்ற இரண்டு ஒலியும் உயிர்மெய்யெழுத்தாய் எழுதப்படும் வடிவம். பார்க்க. ச

*பொருள்:* சா என்பதற்கு இறத்தல் என்பது பொருள். சிலபோது உயர்வு நவிற்சியாய்ச் சோர்தல் என்ற பொருளிலும் வரும். சா என்பது வட்டத்தின் பரிதியின் பகுதியின் இருமுனைகளைச் சேர்க்கும் கோடு என்ற பொருளில் ஜ்யா என்ற வடசொல்லின் சிதைவாம். இச்சொல் உருதுச் சொல்லாகத் தேநீரைக் குறிக்க இன்று வழங்குகிறது. ஆனால் அப்போது ஸ என்ற ஒலியின்றி, இடையில் வரும் இரட்டிய ஒற்று சகரம்போலவே ஒலிக்கும்

இதன் வடிவெழுத்தின் வளர்ச்சியைக் கீழே காண்க

| | |
|---|---|
| கோலெழுத்து: | |
| கி.பி. 7 ஆம் நூ. | [illegible] |
| 8 " | [illegible] |
| 10 " | [illegible] |
| 11 " | [illegible] |
| 13 " | [illegible] |
| இக்காலம். | சா |
| வட்டெழுத்து. | |
| கி.பி.8ஆம் நூ | [illegible] |
| 9 " | [illegible] |
| 10 " | [illegible] |
| 11 " | [illegible] |
| 14 " | [illegible] |
| 18 " | [illegible] |

# சி

*ஒலி:* ச்+இ=சி என்று உயிர்மெய்யெழுத்தாம், இதன் ஒலியை ச என்ற தலைப்பிலும் இ என்ற தலைப்பிலும் காண்க.

*பொருள்:* சி என்பது ெ'லைச்சி என்பதிற்போலப் பெண்பால் விகுதியாக வரும்.

*வரிவ்டிவம்:* இந்த எழுத்துவடிவின் வளர்ச்சியைக் கீழே' காண்க, ச என்பதன் மேல் இகரத்தின் அறிகுறியாக மேல் விலங்கு, கோல் எழுத்தில் வருவதனையும், மேல் முகிழ்க்கும் அந்த அரைவட்டம் வட்டெழுத்தில் நம் வலப்பக்கம் வருவதனையும் காண்க. பார்க்க:கி.

*கோலெழுத்து*

| | | |
|---|---|---|
| கி.மு. | 3ஆம் | நூ. |
| கி.பி. | 4-5 | ,, |
| ,, | 8 | ,, |
| ,, | 9 | ,, |
| ,, | 10 | ,, |
| ,, | 11 | ,, |
| இக்காலம் | | |

வட் வட்டெழுத்து:

| | | | |
|---|---|---|---|
| கி.மு. | 3 ஆம் நூ. | | |
| கி.பி. | 4 | " | |
| " | 8 | " | |
| " | 10 | " | |
| " | 11 | " | |
| " | 13 | " | |
| " | 14 | " | |
| " | 15 | " | |
| " | 18 | " | |

# சீ

*ஒலி:* ச்+ஈ=சீ என்று உயிர்மெய்யெழுத்தாம். பார்க்க: ச, ஈ.

*பொருள்:* சீர், சளி, இகழ்ச்சி என்ற பொருளில் பெயர்ச் சொல்லாகியும், இகழ்ச்சியையும் வெறுப்பினையும் குறிக்கும் இடைச்சொல்லாகியும், கீறிக்கிளறுதல், துடைத்தல் (கெடுத்தல், தூயதாக்கல்). கூர்மையாக்குதல் (சீவு) என்ற பொருளில் வினைச்சொல்லாகியும், திருமகள், ஒளி என்ற பொருளிலும் சிறப்பினைக் குறிக்கப் பெயர் முன் நிற்றலிலும் ஸ்ரீ என்ற வடமொழியின் திரிபாகியும் சீ என்பது வழங்கும்.

*வரி வடிவம்:* இந்த எழுத்து வடிவின் வரலாற்றைக் கீழே காண்க.

மேல்விலங்கு நம் இடப்புறத்தில் முதலில் சுழிக்கப்பெற்றுப் பின்னே வலப்புறத்தில் இன்றுபோல் சுழிக்கப்பெறுவது காண்க.

பார்க்க: கீ

*சோல் எழுத்து:*



*ஒலி:* ச்+உ=சு என்று உயிர்மெய்யெழுத்தாகத் தமிழில் வழங்கி ஒலிக்கும். பார்க்க:ச; உ.

*பொருள்:* நன்மையைக் குறிக்கும் வடமொழி உபசர்க்கமாகத் தமிழில் வழங்கும்.

*வரிவடிவம்:* இந்த எழுத்தின் வடிவ வரலாற்றைக் கீழே காண்க. சகரத்தின் முடிவின் கீழே கீழ்நோக்கிய குத்துக்கோடாக உகரக்குறி வழங்கும்.

கோ கோலெழுத்து:

கி.பி.8ஆம் நூ.

9 "

10 "

இக்காலம் :

வ/ வட்டெழுத்து :

கி.பி.8ஆம் நூ

10 "

13 "

14 "

15 "

18 "

# சூ

*ஒலி:* ச்+ஊ=சூ என்று உயிர்மெய்யெழுத்தாக எழுதப்படும். பார்க்க:ச;உ

*பொருள்:* ஒரு வாண வகையின் பெயராகவும், நாஞ்சில் நாட்டில் சுளுந்து என்ற தீவட்டி வகைப் பெயராகவும், வெறுப்பினைக் குறிக்கும் ஒலிக்குறிப்பாகவும், இந்நாளில் நாயை ஏவி விடும் ஒலிக்குறிப்பாகவும் இவ்வொலி வழங்கும்.

*வரிவடிவம்:* இதன் வடிவ வரலாற்றைக் கீழே காண்க. சு என்பதின் குத்துக் கோட்டின் கீழே வலமிருந்து இடம் செல்லும் கீழ் விலங்காக நெடிற்குறி எழுதப்பெறும்.

கி.மு. 7 ஆம் நூ

8 "

9 "

10 "

இக்காலம்

வட்டெழுத்து

"

கி.மு. 8 ஆம் நூ

10

18

# செ

*ஒலி* ச் + எ = ச என்பது உயிர் மெய்யெழுத்தாக எழுதப் பெறும் பார்க்க ச , எ

*பொருள்* செம்மை என்பதின் அடிச்சொல்லாக இது நிற்கும்.

*வரிவடிவம்* இந்த எழுத்தின் வடிவ வரலாற்றைக் கீழே காண்க பார்க்க கெ

கி.மி. 3ஆம நூ.

கி.பி. 7

8 "

9 "

10 "

இக்காலம் செ

வட்டெழுத்து:

கி.மு.3ஆம். நூ.

கி.பி. 7

9 "

10 "

# சே

*ஒலி:* ச்+ஏ=சே என்று உயிர் மெய்யெழுத்தாய்த் தமிழில் எழுதப்பெறும், பார்க்க. ச, ஏ

*பொருள்* சிவப்பு, அழிஞ்சில், சேங்கொட்டை, காளை, சூரிய வீதியில் இரண்டாவது ராசி (ரிஷபம்) முதலியவற்றைக் குறிக்கும் பெயர்ச்சொல்லாயும், சிவப்பாதல், கோபித்தல், தங்குதல், உறங்குதல், கிடத்தல், எய்துதல் என்ற பொருள்களைத் தரும் வினையடியாகவும், வெருட்டும் ஒலிக்குறிப்பு என்றோ, வெறுக்கும ஒலிக்குறிப்பு என்றோ வரும் இடைச்சொல்லாகவும் *சே* என்பது தமிழில் வழங்கும்

*வரி வடிவம்.* எகர ஏகாரங்கள் வேறுபடும் நிலைமையையும் வேறுபடா நிலைமையையும் முன்னரே கூறினோம் பார்க்க:எ, ஏ, கெ, கே ஆதலின் இதன வடிவ எழுத்தின் வரலாறு *செ* என்பதோடு ஒக்கும்.

# சை

*ஒலி:* ச்+ஐ=சை என்று உயிர் மெய்யெழுத்தாக எழுதப்படும் எழுத்து.

*பொருள்:* இகழ்ச்சியைக் குறிக்கும் ஒலியாகத் தமிழில் வழங்கும். பார்க்க: ச, ஐ.

*வரி வடிவம்:* இந்த எழுத்தின் வடிவ வரலாற்றைக் கீழே காண்க. மெய்யெழுத்தின் இடப்புறத்தே இடமிருந்து வலமாக ஒன்றின்கீழ் ஒன்றாக இரண்டு சிறு குறுக்குக் கோடுகளாக ஐகாரக் குறி கி.மு.3ஆம் நூற்றாண்டில் குகைக் கல்வெட்டுக்களில் வழங்கியது. பார்க்க: கை.

| | |
|---|---|
| கோல் எழுத்து: | |
| கி.பி. 9ஆம் நூ. | |
| இக்காலம்: | சை |
| வட்டெழுத்து: | |
| கி.பி.8ஆம் நூ. | |
| 10 " | |
| 17 " | |

# சொ

*ஒலி:* ச்+ஒ=சொ என்று உயிர்மெய்யெழுத்தாகத் தமிழில் எழுதப்பெறும். பார்க்க:ச; ஒ.

*பொருள்:* ஸ்வப்னம்=சொப்பனம் என்பது போல *ஸ்வ* என்று வடமொழியில் முதலில் வரும் கூட்டெழுத்துக்கள் *சொ* என்று தமிழில் மாறும்.

*வரி வடிவம்:* இதன் வடிவ வரலாற்றைக் கீழே ஒருவாறு காணலாம்; ஆனால், கோ என்பதில் க என்பதற்கு முன்னும் பின்னும் வருவனவற்றின் வரலாறு போன்றதே எனலாம். பார்க்க:கொ.

கோலெழுத்து:

கி.பி. 9ஆம் நூ.

10 "

இக்காலம் சொ

வட்டெழுத்து:

கி.பி. 10ஆம் நூ.

12 "

14 "

15 "

# சோ

*ஒலி:* ச்+ஓ=சோ என்று உயிர் மெய்யெழுத்தாகத் தமிழில் எழுதப்படும். பார்க்க: ச;ஓ

*பொருள்:* வ்ாணாசுரன் நகரினையும், பொதுவாகக் கோட்டையையும் குறிக்கும் பெயர்ச்சொல்லாகவும், வியப்பினைக் குறிக்கும் ஒலிக்குறிப்பான இடைச்சொல்லாகவும் தமிழில் வழங்கும்

*வரி வடிவம்:* முற்காலத்தே கொம்பின்மேல் புள்ளியிட்டு எழுதினால் *சொ* என்றும், புள்ளியிட்ாது எழுதினால் *சோ*என்றும் வழங்கும் எனவும், சொ, சோ, ஒ, ஓ என்பன எழுத்து வடிவில் இடைக்காலத்தே வேறுபாடு தோன்ற எழுதப் பெறவில்லையெனவும், வீரமாமுனிவர் காலத்தில் வேறுபாடு தோன்ற கொம்பு சுழித்து எழுதப்பட்டுளது எனவும் கூறினோம் (பார்க்க: ஒ, ஓ; கொ, கோ) எனவே, *சொ* என்ற எழுத்தின் வரலாறே இதன் வரலாறுமாம்

# ஸௌ

*ஒலி* ச்+ஔ=ஸௌ என்று உயிர்மெய்யெழுத்தாகத் தமிழில் எழுதப்படும்

*பொருள்* ஸௌபாக்கியவதி என்ற சொல்லில் முதற் குறிப்பாகச் *ஸௌ* என்பது வழங்கும்

*வரி வடிவம்* *ஸௌ* என்பதனைச் *ஸவு* அல்லது ஸவ் என்றே எழுதியதால் *ஸௌ* எனற வடிவம் கல்வெட்டில் வழங்கக் காணோம்

# ஞ

*ஒலி* தமிழ் நெடுங்கணக்கில் நான்காவது மெய்யாக வருவது இது ஞ் என்பது மெய் அகரஞ் சேர்ந்து ஞ என இதனைக் குறிப்பது பழைய வழக்கம் இகரத்தை முன்னே வைத்து *இஞ்* என்று ஒலிப்பது இன்றைய வழக்கம் மூக்கொலியும் வாயொலியோடு சேர்ந்து வருதலின் இது மெல்லெழுத்தாம் *ச* என்பதை ஒலிப்பதுபோல் ஒலிக்கும் போது குரலவளையிதழ் அசைவதால் எழும் ஒலிப்பும் மூக்கின்வழியே வரும் ஒலியும் சேரும்போது எழும ஒலியே ஞ என்ற மெல்லெழுத்தாம் அப்போது மெல்லண்ணம் கீழிறங்கும், வாய்க்கும் மூக்குக்கும் உள்ள வழி திறக்கும், குரல்வளையின் இதழ் துடிக்கும், நாக்கின முனையல்லாத முற்பகுதி வல்லண்ணத்தோடு ஒட்டும், இங்கே வெடிப்பொலியிற் (Plosive) போலச் சட்டென நாக்கை எடுக்கவேண்டியதில்லை இது தொடர்ந்தொலிக்கும் ஒலியாகவும் (Continu-ant) வரலாம. தமிழில் இன்று ஒலிக்கின்ற முறையில், வாயில் *சகரத்திற்குச்* சிறிது பின்னாகவே ஞகரம் எழுந்து ஒலிக்கின்றது ஆனால், சொல்லில் *சகரம்* பின்வர இது முன்வந்து, அதனோடு ஒன்றாக இயைந்து, மஞ்சு முதலியவற்றிற்போல ஒலிக்கும்பொழுது, *சகரம்* போலச் சிறிது முன்வந்தே ஞகரம் ஒலிக்கின்றது

மொழிககு முதலில், ஞகரம் தன்பின் உயிர்வர ஒலிப்பதன்றித தனி மெய்யாகத் தமிழில் வருவதில்லை தொல்காப்பியர் இவ்வாறு ஞகரத்தோடு மொழிக்கு முதலில் வரும் உயிரெழுத்துக்கள ஆ,எ,ஒ என மூன்றே கூறுகின்றார் நன்னூலாா அ என்பதனையும் கூட்டுவார். *ஞிமிறு* என்பதில் இகரமும் வருகிறது இது புறநானூற்றிலும் வருகின்ற சொல் எனவே, இ என்பதனையும் சேர்த்தல வேண்டும் வடமொழித் தொடர்பால் *ஞேயம்* முதலியவை தமிழில் வந்து வழங்குவதால *ஏ* என்பதனையும் சேர்த்துக்கொள்ளுதல் வேண்டும் *ஜ்ஞ* என்ற வடமொழிக் கூட்டெழுத்து. தமிழில் ஞ என வரும

ஞ என அகரததுடன தொடங்கும் சொற்கள் தமிழில் பதினான்கு (தமிழ் லெக்சிக்கன்) இவற்றில் வடமொழிச் சொற்களை விட்டுவிட்டால் ஞ என்பது சில இடங்களில் *ந* என்பதன் போலியாக வருவதனையும் ஞெ என்று சில இடத்தில ஒலிபபன ஞ எனச சில இடங்களில ஒலிபபதனையும காண்போம

இதனாலேயே தொல்காப்பியர் மொழிக்கு முதலில் வரும் ஞகரத்தோடு அகரம் வரும் எனக் கூறவில்லை. தமிழில் *ஞா* எனத் தொடங்கும் சொற்கள் நூற்றெழுபத்திரண்டு வந்துள்ளன (தமிழ் லெக்சிக்கன்) இவற்றிலும் பல வடமொழிச் சொற்களாம். ந என்பதன் போலியாகவும் ய என்பதன் போலியாகவும் வரும் ஞகரம் பலவாம் நூற்றுப்பதினொரு *சொற்கள் ஞானம்* என்று தொடங்குகின்றன ஞாபகம் என்பதோடு தொடர்புடையவை பதினான்கு. *ஞாதம்* என்பதோடு தொடர்புடையன ஏழு *ஞாயம்* என்பதும் வடமொழிச் சொல்லாம் இவற்றையெல்லாம் விட்டு விட்டால் ஞா எனத்தொடங்குவன *சிலவே* ஆம் தமிழில் *ஞி* என்பதில் தொடங்குவன நான்கு சொற்களே ஆம இவற்றில ஒன்று *நி* என்பதற்குப் போலியாக *ஞி* வருஞ்சொல், மற்றவற்றில் *இமிர்* என்ற ஒலியைக் குறிக்கும் சொல்லே, முதலிலும ஞ என்ற மெல்லொலி பெற்றுவரக் *காண்கிறோம்* இ என்று பிறகுமிடத்தில எழும் மெல்லொலி ஞ என்பதே. ஆதலால் *இமிர்* என்பதில் இ எனபது தன் பின்வரும மெலலொலிச் சாயல பெற்று ஞ என்றே தொடங்கி வருகிறது தொலகாப்பியர் காலததில் இவ்வாறு மெல்லொலி மொழிக்கு முதலில வாராமையால ஞகரம இகரத்துடன் மொழிக்கு முதலாகும் என்று அவா கூறவிலலை அன்று. ஞிமிர் என்பது இமிர் என்றே வழங்கி இருக்கவேண்டும *ஞெ* என்பதில தொடங்குவன தமிழில் முப்பத்தேழு சொறகள் ஞே எனபதில தொடங்குவன ஐந்து ஞொ என்பதில் தொடங்குவன ஞொளுகு என்ற வினையும். ஞொள் என்ற ஒலிக் குறிப்புமாகிய இரண்டே ஆம (தமிழ் லெகசிக்கன்) தமிழில பிற உயிரோடு ஞகரம் வருவதனைக் காணோம ஞ என முடியும சொல தொல்காப்பியர் காலத்திலும ஒன்றேயாம் இந்த *உரிஞ* என்பதும. பிறகாலததே வழக்கு ஒழிந்தது. இது பின்னாளில் உரிஞு. உரிஞசு, உராய்ஞ்சு எனறெல்லாம் மாறியது *நகரம்* ஞகரமாக மாறும் போககு சங்ககாலததிலிருந்து தேவார காலம் முடிய வளர்ந்தது. பின் மறைந்து. பினனர் ஞகரம நகரமாக மாறும் போக்கு வளர்ந்தது. சேலம் முதலிய இடங்களில இவவாறு நகரம ஞகரத்தின் இடத்தைப் பெற்று வழஙகக் காணகிறோம எனவே. அங்கு ஞகரமே இல்லை முன்னிலையைக் குறிக்கும் அடிப்படை மெய்யெழுத்தாக ந என்பதனைக் கருதுவர் *உன்னுடைய தாய்* என்ற பொருளில *ஞாய்* என்ற சொல் குறுந்தொகையில் வழங்குவதால் அக்காலததில இந்த நகரம ஞகரமாய் வழங்கியமை விளங்குகிறது யா என்பது மெல்லெழுத்தின பின *ஞா* எனத் தொலகாப்பியர் காலத்தில் மாறியது பொன யாத்த=பொன ஞாதத என்ப பின்வரும மெல்லெழுத்தின் சாயல் பெற்றது எனலாம யாழ ஞாழ என வழஙகுவதும உண்டு மஞ்சு என்பதிறபோல மொழிக்கு இடையே உயிா எழுத்தோடு வந்து ஒலிககும் சகரத்தின் முன ஞ வந்து ச என்பதன ஒலியை ஜ என்றாக்கும

ஞ என்பதன் பின் இவ்வாறு சகரமே அன்றி யகரமும் வரும்; பிற வாரா. அஞ்ஞானம் முதலிய இடங்களில் உயிர்களின் இடையே ஞகரம் இரட்டித்துவரும்; ஞகரம் மஞ்ஞ்சு முதலியவற்றில் போல அளபெடையாகவும் வரும்.

*வரி வடிவு.*

அசோகன்
கி.மு.3ஆம் நூ. குகை எழுத்து,

கி.பி. 7 நூ.

8 "

9-10 "

கி.பி. 11ஆம் நூ.

12 "

13 "

14 "

15 "

இக்காலம்

## ட

*ஒலி:* இது தமிழ் நெடுங்கணக்கில் ஐந்தாவது மெய்யெழுத்தாம் மெய்யெழுத்தை வழங்குகிற முறையை முன்னைய மெய்யெழுத்துக்களைப் பற்றியெழுதிய பொழுது குறிப்பிட்டோம் டகரத்தை மூர்த்தாட்சரம் அல்லது தலையொலி என்பர் வடமொழியாளர் நாவின் நுனி பலவாறு இயங்கும் வகையில் அமைந்துள்ளது அதனால் நாநுனியெழுத்துக்கள் பலவகையாகும். இவை அண்ணத்தைத் தொடுமிடம் வெவ்வேறாதற்கிணங்க வெவ்வேறு ஒலிகள் பிறக்கும் பல்லையோ பல்லின் வேர் அடியையோ தொடுவதால் பிறப்பன பல்லெழுத்துக்கள் (Dentals) ஆம். பல்லின் வேருககும் அப்பால் மேலிடத்தில் ஈறு பிதுக்கமாய்ப் புறக்குவியாக வருமிடம் உண்டு வல்லண்ணம் உட்குழிவாக இருப்பது நீங்கி இப்படிப் புறக்குவிவாக முடியுமிடத்தை நாநுனி தொடப் பிறக்கும் ஒலிகள் பல்லீற்றொலிகளாம (Alveolars) இவ்வாறு நாநுனியால் பிறக்கும் எழுத்துக்களை உயரப்பிறக்கும் ஒலிகள் என்றும் தாழப்பிறக்கும் ஒலிகள் என்றும் (Higher and lower apical consonants) இருகூறாகப் பிரிப்பதும் உண்டு இந்த வேற்றுமை இன்றைய த்மிழில் அடிப்படையாக வரக்காண்போம். உயரப்பிறப்பன வல்லண்ணம் உட்குழிவாக இருக்கும் இடத்தைத் தொட்டுப் பிறப்பனவாம் நாவெழுத்துக்கள் என்றும் நாமடி எழுத்துக்கள் என்றும் இரண்டாகப் பிரிக்கலாம் தொடுமிடத்தை நோக்காது நாநுனி அல்லது நாநுனியோரம் வல்லண்ணத்தைத் தொடுவதால் எழும் ஒலிகள் நாவொலிகளாம் (Cacuminals) நாவின் நுனி மடியும்பொழுது அதன் கீழ்ப்புறம் வல்லண்ணத்தின் உயரத்தைத் தொடுவதால் எழும் ஒலி நாமடி ஒலியாம் நா நுனியின் மேற்புறம் மட்டும் அண்ணத்தைத் தொடுவதால் எழும் பல்லொலி முதலியவற்றை நாப்புறவொலிகள் எனலாம் (Surface apical) பிரேகு (Prague) நகர அறிஞர்கள் இந்த ஒலிகளை ஆராய்ந்துள்ளார்கள் ஒலிக்கும்போது அண்ணத்தினை நாத்தொடும் இடங்களை விளக்க வாயச்சு (Platogram) எடுத்தும், அதிலிருந்து நாவின் படங்கள வரைந்தும் (Linguography), எக்ஸ் கதிர்ப் படங்கள் எடுத்தும் (Rontgenography) ஆராய்ந்து முடிவினை வெளியிட்டுள்ளார்கள் (Archive Orientalni XXIII 1955 பக் 375-434) இதில் த, ந என்பன தாழிடத்து ஒலியானால (Lower sounds), ட, ண மேலிடத்து ஒலியாம (Higher sounds) டகர உசசரிப்பில இரண்டு வகை உண்டு விரைவாக ஒலிப்பது ஒருவகை, கருத்தாகவும் தெளிவாகவும் ஒலிப்பது மறறொருவகை கருத்தாக ஒலிக்குமபோது நா நுனியானது எட்டும இடத்தைக்

கடைவாய்ப்பற்களின் கடையில் இருந்து எண்ணும்போது நான்காம் பல் மூன்றாம் பல் என்றவற்றினைக் குறிகளாகக் கொண்டு அவற்றெதிருள்ள அண்ணம் என விளக்கலாம். விரைவாக ஒலிக்கும் போது சிறிது தாழக் கடைவாய் ஐந்தாம் பல்லின் எதிர் இடத்தை நாநுனி தொடும். உயிரெழுத்துக்களின் இடையே இந்த மெய் வந்து ஒலிக்கும்போது பல் அண்ணத்தின் பின்புறத்தில் அவ்வளவு தொலைவு நாநுனி செல்வதில்லை. இத்தகைய இடங்களில் எழும்நெகிழ்ச்சி மற்றொரு வகையாகவும் புலனாகிறது. தொடும் இடத்தின் அகலம் மொழி முதல் டகரத்தில் தோன்றுவதிலும், உயிரிடை டகரத்தில் குறைந்தே தோன்றுகிறது. இந்த நெகிழ்ச்சி ஒலிப்பிலா டகரம் அங்கே ஒலிப்புடை டகரமாக மாறுவதாலும் புலனாகிறது. கால்டுவெல், *மொழி முதலிலும் இரட்டிக்கும்போதும், ஒலிப்பிலா ஒலியாகவும், உயிரிடையிலும் மெல்லெழுத்தின் பின்னும் ஒலிப்புடை ஒலியாகவும் வல்லெழுத்துக்கள் ஒலிப்பதே திராவிட மொழிகளின் அடிப்படையான இயல்பாக அவை தோன்றிய நாள் முதல் விளங்கிவருகின்றன* என்று கூறுவதனை முன்னரே குறிப்பிட்டோம் (பார்க்க.க). ட்க, ட்ச, ட்ப என வல்லெழுத்தின் முன்வரும் டகரம் மொழி முதல் டகரமே போலாம இந்தப் பிரேகு ஆராய்ச்சியில் டகரம் நாமடி ஒலியாகத் தோன்றவில்லையாம். ஆனால், தனியே உச்சரிக்கும்போது இதனை நாமடி ஒலியாக இலககண ஆசிரியர்கள் ஒலிப்பதுண்டு. நாநுனி அண்ணத்தை ஒரு RhÓj Rh¥1 © ¬Üm RhùPô- VŒ (Flap) இது விரைவில் ஒலிக்கும்போது மாறுவதும் உண்டு.

நாவானது அண்ணத்தைத் தொடுவதால் வாயில் இருவேறு அறைகள் முன்னும் பின்னும் எழுகின்றன. இவை ஒற்றொலிக்கும் அறைகள் (Resonance chambers) ஆகின்றன எனவே, இவை மாறுவது காரணமாக, ஒலியின் இயல்பும் மாறும் தாழ்விடத்து ஒலியும் உயரிடத்து ஒலியும் வேறுபடுவது இதனாலேயே ஆகும். உயர்விடத்து ஒலியில் தொடும் இடம் வல்லண்ணத்தில் உயரத்தே தோன்றுவதோடு நா முனையில் தொடும் இடமும் நாவின் மேறபுறத்து முழுதுமல்லாமல் நா நுனி மட்டுமாகவோ, நா நுனியின் அடிப்புறமாகவோ மாறுகிறது அதனால் முன்புறமாக நாவின் குவிவளைவு (Concavous bend) எழுகிறது இங்கு நா விளிம்பு வீங்குதல் எங்கும் தோன்றவில்லை பிற திராவிட மொழிகளில் காண்பதனைவிடத் தமிழில் டகரத்தின் தொடுமிடம் வல்லண்ணத்தின் உயரத்தே செல்கின்றது நாவின் நுனியாகவும மாறுகிறது

*பொருள* டகரம் தமிழில மொழிககு முதலாவது இல்லை சில தெலுங்குச் சொறகளிலும கன்னடச சொறகளிலும டகரம மொழிக்கு முதலாக

வரக்காண்கிறோம். அவற்றில் சில தமிழிலும் புகுந்துவிட்டன. இவை தகரமாகவே பெரும்பான்மையும் தமிழில் ஒலிக்கின்றன தகரம் டகரமாயின போலும். வடமொழியிலிருந்தும் பல சொற்கள் டகர முதலாக வரத் தமிழில் புகுந்துள்ளன முன்னெல்லாம் பிற மொழி டகர முதற் சொற்கள் தமிழில் புகும்போது இ என்பதனை முந்து இசையொலியாகப் (Prothesis) பெற்று வரும் நன்னூலில் *யவ்விற்கு இய்யும்* என்ற பாடத்தினை *டவ்விற்கு இய்யும்* என்று கொள்வாரும் உண்டு டம்பம் இடம்பம் என வரும் வடமொழி, இந்தி, உருது, மராத்தி, ஆங்கிலம் முதலிய மொழிகளின் அரசியல் தொடர்பால் டகரம் மொழிக்கு முதலாக வருவது தமிழிலும் இயல்பாகி விட்டது டகர முதற் சொற்கள் 98, டா முதல் 39, டி முதல் 20, டீ முதல் 12, டு முதல் 2 (டு என்ற ஒலிக் குறிப்பாக வழங்கும குழந்தைச் சொற்கள் (Nursery words), டெ முதல் 4 (அவற்றில் மூன்று ஆங்கிலம்), டே முதல 6 டை முதல் 4 (இவற்றோடு Tie என வழங்கும் கழுத்தணியையும சேர்த்தால ஐந்தாம்), டொ முதல 9, டோ முதல் 21, டௌ முதல 1 (டௌல) எனக் காண்கிறோம் (தமிழ் லெக்சிகசன்) இவற்றில் பல சொறறொடர்களாக வருதலின் டகரம் தமிழில பயின்றுவரும் நிலையை இதிலிருந்து அறியலாம இவை ஒலிப்பொலியாகவும (d) ஒலிபபிலா ஒலியாகவும் (t) சென்னையில வழங்கக் காண்கிறோம் டோல (ḍo l) என்பது ஒலிப்பொலியானால் (தூஙகும மஞ்சம், சதுரப்பாடான பேச்சு) ஒரு பொருளும, ஒலிப்பிலா ஒலியினால (சுங்கம்) வேறு பொருளும் தருவதால் இருவேறு ஒலியன்களாம (Phonemes) இந்த வேறுபாடு கடன் வாஙகிய மொழிகளிலுள்ள வேறுபாட்டை ஒட்டியது இலக்கிய மொழியிலோ, நாட்டுப்புறமக்கள் மொழியிலோ இந்த வேறுபாடு தோன்றுவது அருமை. இந்த வேறறுமை கொண்டு, கறறார் அல்லது நகரத்தார பேச்சையும், பிறர் பேச்சையும் பிரித்தறியலாம் மொழிக்கிடையே ஒலிப்புடை ஒலியாகவே டகரம் வரும சில இடங்களில் இந்த ஒலிப்பு மிகச் சிறியதாகவும அடியோடு இல்லாது மறைந்தும் வரக் காண்கிறோம் உரசு எழுத்துப் போலச் சிறிது நெகிழ்ந்து ஒலிக்கவும் காண்போம் டகரம் இரட்டும்போது ஒலிப்பிலா எழுத்தேயாம் இங்கேயும் இப்படி இரண்டாக எழுதப்பெறும எழுததுக்கள் ஒலியில் ஒரெழுத்துப் போலவே ஒலிக்கக் காண்கிறோம் வீடு (Viidu), வீட்டு (Vittu) என்பனவற்றில் டகரம் ஓர் ஒலியாகவே ஒலிக்கும்; ஆனால், முன்னதில் டகரம் ஒலிப்பொலி; பின்னதில் ஒலிப்பிலா ஒலி. பிற மொழிகளைத் தமிழில எழுதும் முறையில் இவ்வாறு மொழிகளிடையும் ஒலிப்பிலா ஒலியும் ஒலிப்புடை ஒலியுமாக டகரம் வேறுபட்டு இருவேறு ஒலியன்களாதல் (Phonemes) காண்க. இந்த முறை எழுந்ததன் காரணம் தமிழிலும் மொழியிடையில முன்னெல்லாம் இரட்டித்து வந்து இன்னும இரண்டாக எழுதப்பெறும் டகரம், ஒலிக்கும்போது இரண்டாகவன்றி ஏறக்குறைய ஒன்றான ஒலிபபிலா ஒலியாக ஒலிப்பதாலேயே ஆம்

*இது நா நுனியால் எழும் ஒலியாதலின் இதன் பின்னர் நா நுனியால்* பிறவாத வல்லெழுத்துக்களை நாவானது எழுப்புவது எளிது. அதனால் ட் என்பதன் பின் க, ச, ப என்பன தமிழில் வரும். வெட்கம், வெட்சி, பெட்பு எனக் காண்க ஆனால், டகரத்தின் முன் பக்டம் என்பன போல இவை வராமை தமிழ் ஒலிமுறையின் (Phonetic system) இயல்பாம். எனவே, ட் என்பதன்முன் ட், க், ச், ப் என்ற ஒலிகளே தமிழில் வரும் பிற மெய்கள் வரின் இடையிசையொலியாக இனஉயிர் எழுத்துக்கள் வரும் நாட்யம்=நாட்டியம் (இ), குட்மலம்=குட்டுமலம் (உ) இது நன்னூல்கூறும் பொது விதியே (149ஆம் சூ) ஆம் கட்டில் போன்றவை பேச்சு வழக்கில் இப்போது *கட்ல், கட்லு என ஒலிப்பதால் ட் என்பது தனியலகு பெறும் (Syllabic)* லகரத்தின் முன்னும் வரக் காண்கிறோம். ஈற்றிலே டகர மெய் தமிழில் வரும்போது குற்றியலுகரமும் முற்றியலுகரமும் பெற்றே வரக் காண்கிறோம் மூட்டுவாய் முதலிய இடங்களில் குற்றியலுகரச் சொல் சொற்றொடராக வரும்போது பேச்சு வழக்கில் மூட்வாய் என்பது போல ஒலிக்கின்றது. இங்கே குற்றியலுகரம் காதில் விழாத அளவு மிகச் சிறியதாக ஒலித்து மறைகிறது எனலாம் பாட்லாக் முதலிய பிறமொழிச் சொற்களை ஒலிக்கும்போது இத்தகைய மிக நெகிழ்ந்த குற்றியலுகரமே ட் என்பதன் பின் ஒலிக்கிறதே *அன்றிப் பிற இடையிசை ஒலி வருவதில்லை*

வடமொழிச் சொற்கள் தமிழில் வரும்போது அங்குள்ள நால்வகை டகரமும் ட என ஒன்றுபோலவே வரும், ஷகரமும் (விஷம்=விடம்) ட என வரும். க்ஷ என்பது க்க (பக்ஷம்=பக்கம்) என வருவது பழைய முறை. க்ஷ=ட்ச (பக்ஷி=பட்சி) என வருவது பின்னைய முறை பிராகிருதச் சொற்களில் ந்ருத்தம்=நட்டம்; விருத்தம்=வட்டம் எனத் தகரம் டகரமாகியவை தமிழில் வழங்கும் சைனர், பௌத்தர் முதலியோர் வழியே வடமொழிச் சொற்கள் முதலில்பிராகிருத வடிவிலேயே தமிழில் புகுந்தன என்று கருத இடம் உண்டு.

தலையிற் பிறக்கும மூர்த்தாட்சரங்களான ட,ண,ள முதலியன பழைய இந்தியஐரோப்பிய மொழிகளில் இல்லாது பின் தோன்றியவை ஆம். பட்டணம்=பத்தணம் என்பது போலக் கூறினும் வடமொழியில் பெருமபான்மையும் பொருள் மாறுவதில்லை படடு. பத்து என மாற்றிக் கூறினால் திராவிட மொழியில் பொருள் மாறும் டகர முதலியவற்றின் வழக்கு வடமொழியினைவிட அதற்கு மிகமிகத் தெற்கில உள்ள தமிழிலே பெரு வழககாம எனவே, திராவிட மொழியோடு வடமொழி உடன் புழங்க வந்ததால திராவிட மொழிபேசிய பழைய மக்கள சிலர் வடமொழியைத் தாய் மொழியாகப பேசவந்த காலத்தில டகரம முதலியவை இந்திய

ஐரோப்பிய மொழியாம் வடமொழியில் புகுந்தது என்பர் பல அறிஞர். ஆனால், ர் முதலான எழுத்துக்களின் பின் தகரம் டகரமாக மாறுவது இயல்பே. ஆதலின் மூர்த்தாட்சரங்கள் தோன்றும் போக்கும் வடமொழியில் இந்தியாவுக்குப் புகுமுன்னரே வளர்ந்தது என்று காட்டி இக்கொள்கையை மறுப்போரும் உளர் இயல்பாக எழக்கூடிய போக்கு திராவிட மொழியினர் கூட்டுறவால் நன்றாக மலர்ந்து நிலைபேறுற்றது என்று கொள்வதே பொருத்தமாகும்

தமிழில் டகரத்தின் ஒலிப்புமுறை மாறி இருக்கக் காண்கிறோம் வல்லெழுத்தான நாவொலிகள் தமிழில் மூன்று; த, ட, ற என்பன இவற்றில் த அண்பல்லடி நா முடியுற வருவதாம் டகரம் நுனி நா அண்ணம் சேரப் பிறப்பதாம். றகரமோ நுனி நா அணரி (மேல் நோக்கி வளைந்து) அண்ணத்தைத் தொடுவதால் வருவதாம் எனவே, மேற்புற நுனி நா ஒலியே டகரமாகும் வளை நா ஒலியே றகரமாகும் இது தொல்காப்பியத்தில் கண்டது நுனி நா வல்லண்ணத்தின் நடுவைத தொடுவது டகரம் எனத் தொல்காப்பியத்திற்குப் பொருள் கொள்வதற்கு இல்லை கடை நா கடை அண்ணம் சேர்வது க, இடை நா இடை அண்ணம் சேர்வது ச. நுனி நா நுனி அண்ணம் சேர்வது ட, என்றே பொருள் கொள்ளுதல் கூடும் பட்டணம் பத்தணம் என மாறியதற்கேற்ப, டகரம் ஒலித்த காலத்திற்கு இஃது ஏற்றதாகலாம் வடமொழியோடு மிக மிகப் பழகிய காலத்தில் வடமொழியில் மூர்த்தாட்சரம் என வளர்ந்த டகரத்தின் வளை நா ஒலியே தமிழிலும் வந்துவிட்டது போலும் இதனால் றகரம் பிறழ்ந்தொலிக்கத் தொடங்கியதனை அதன் வரலாற்றில் காண்போம் டகரத்தின் ஒலி முன்னிருந்து கணக்கிட்டால் முதல் கடைவாய்ப்பல்லிலிருந்து மூன்றாம் கடைவாய்ப்பல் வரையுள்ள அண்ணத்தில் ஒலித்து வரக் காண்கிறோம் டகரத்தின் மெல்லெழுத்தாம் ணகரமோ வல்லண்ணமும் மெல்லண்ணமும் பிரியும் எல்லையை எட்டித் தொடப்பார்க்கிறது பழைய நாளில் றகரம் பிறக்கும் இடத்தே அணரிப் பிறந்த இடை எழுத்து ழகரம் நாழி-நாடி, நாடுரி என வரும்போது றகரம் வடமொழி டகரத்தோடும் ஒத்து வருதல் காண்க டகரம் நா நுனியின் மேற்புற ஒலியாக மாறித் தொல்காப்பியருக்குப் பின் தமிழில் வளர்ந்தது எனலாம்.

போர்ச்சுகேசியர் தமிழொலிகளைக் கேட்டபொழுது இந்த டகர ஒலிக்கு ஏற்ற ஒலியோ எழுத்தோ தங்கள் மொழியில் இல்லாமையால் இடாப்படடனர் தம் லத்தீனிலும் இதற்கேற்ற ஒலி இல்லாமையால் இதனை விளக்குவதன் அருமையைக் காட்டி ஆங்கிலத்திலுள்ள ɪ போன்றதெனச சிலர் கூறிக கொள்வதாகத் தம் கொடுந்தமிழ் என்ற நூலில வீரமாமுனிவர் குறித்துள்ளார் எனவே போர்ச்சுகேசியர் டகர ஒலியைச சுடட ɪ என்ற தம எழுததையே

பயன்படுத்தி வந்தனர் டச்சுக்காரர் போன்ற பிறரும் இந்த முறையைப் பின்பற்றினர் தரங்கம்பாடி=டிராங்க்வபார் (Tranquebar) இதில் டகரம் ஆதலைக் காணலாம்.

மொழிக்கிடையில் ட என்ற மெய்யெழுத்தின் பின்னால் க்ஷகரம் டகரத்தோடு ஓரிட ஒலியாய்ப் பட்சி முதலிய இடங்களில் ஒலிக்கக் காண்கிறோம் இது க்ஷி=ட்சி எனக்கொண்ட வழக்கின் பயன் க்ஷேமம் என்பதன் மொழிக்கு முதலும் இத்தகைய ஒலி (ட்சே-க்ஷே) வரக்காண்கிறோம். ஷகரம் இவ்வாறு டகரத்தின் பின்னாலன்றி முன்னும் *கஷ்டம்* முதலிய இடங்களில் போல. ஓரிட ஒலிபாய் இயைந்து ஒலிக்கக் காண்கிறோம். இதனைப் பிறமொழிச் சொற்களிலேயே காண்கிறோம் ணகரத்தின் பின் டகரம் வரும்பொழுது அநத டகரம் ஒலிப்பொலியாம் (d) பிறமொழிச்சொற்கள் தமிழில வழங்கும்பொழுது *ஜ* என்பதன் முன் எழுதப்படும் டகரமும் *ஜட்ஜ்* என்பதிறபோல ஒலிப்பொலியேயாம் பிறமொழிச்சொற்களில் டகரம் பார்லிமெண்ட முதலிய சொற்களிற் போல ஒலிப்பிலா ஒலியாய் ஈறாவதும் உண்டு

*வரிவடிவம்*

அசோகன் காலம்
குகை எழுத்து கி.மு 3 ஆம் நூ.
கி.பி. 7 நூ.
9,10
11 "
" .
12 "
13 "
14 "
15 "
16 "
17 "
18 "
19 "
இக்காலம்

# ண

ஒலி இது தமிழ் நெடுங்கணக்கில் ஆறாவது மெய்யெழுத்தாகிய ண் என்பதும் அகரமும் சேர்ந்து ஒலிக்கும் உயிர்மெய்யெழுத்தாகும். இது டகரத்திற்கு இனமான மெல்லெழுத்து. இது ஒலிக்கும்பொழுது ட ஒலிக்குமிடத்தினும் உயர வரும் தொடுமிடங்கொண்டு ஒலிக்கிறது இது தெளிவாக வலலண்ண ஒலியென ஆராய்ச்சியாளர் கண்டார்கள் (Archiv Orientalni Vol XXIII, p 386) நாநுனி வளைந்து மடிந்து கீழ்ப்புறம் வலலண்ணததைத தொட்டு நிறக இவ்வொலி எழுகிறதாம ந.ன என்பன இன்று ஒலிககும முறையில் தாழ் ஒலிகளாகும (Lower consonants) ணகரம் உயா ஒலியாகும் ல,ள என்பனவும் முறையே இவ்வாறு தாழ் ஒலியாகவும உயர் ஒலியாகவும வேறுபடுவன புணர்ச்சி வகையால் திரியும்போது முறையே ள ண எனறு திரியும் எனவே, பழங்காலத்தும் ண உயர் ஒலியேயாம் ஆனால அன்று அது நாமடி ஒலியா (Retroflex) என்பதே வினா தொலகாபபியா டகாரம் ணகார நுனிநா அண்ணம என்றே கூறுகிறார் அவர் நுனிநா அணரி அண்ணம் ஒற்றுதலைக் கூறவில்லை ந,ன,ண என்பவற்றின் ஒலிபபு வகை மாறறம வடமொழி மெல்லெழுத்தாம மூர்த்தாட்சரங்களின வழக்கு தமிழில பரவியதால் மயக்கம ஏற்படவே இடைக்காலத்திலிருந்து தோன்றியிருககலாம

தமிழில ணகரம மொழிக்கு முதலில வருவதில்லை உயிர்களினிடையே வருமபொழுது அது தட்டொலியாம் (Flay) என்று பர்த் (Firth) என்பார் கூறுவா மிக விரைநதும செயறகையாகவும் ஒலித்தாலன்றி ணகரம பெருமபானமையும தட்டொலி ஆவதில்லை ணகரம தமிழில் சொலலின் ஒறறில வரும ஆனால், மொழியின் ஈறறில் மெய்யெழுத்துக்கள் பெருமபானமையும் வாராத நிலை தமிழில படிபபடியாக வளர்ந்துளளதறகேறப ணகரம ஈற்றில வருமபோது சில போது உகரச்சாரியை பெறுகிறது கண்-கண்ணு சில இடத்தில் தவிரப பிற இடஙகளில வலலெழுததின் முன ணகரம வேற்றுமைப் பொருளில டகரமாகும (உ-ம) மண்+குடம மடகுடம மெலலொலியை இழபபதும் தமிழில காணும போககாகும இதறகு ஏறப அபபோது ள ஆகும (உ-ம) எண்=எள இபபோது ள் என்று முடியும சொறகள பழஙகாலததில ண என்று முடிந்தன போலும ஈறறிலும இடையிலும ணகரம அளபெடுதது அலகு பெறும

ணகரத்தின் பின் டகரம் வந்தால் இரண்டும் ஒன்று சேர்ந்து ஓரிடத்திலிருந்து பிறப்பவை போல (Homorganic) ஒலிக்கக் காண்போம் இந்த இடங்களில் டகரம் ஒலிக்குமிடத்திற்கு ணகரம் போகாது. தான் ஒலிக்கும் இடத்திற்கு டகரத்தை இழுத்துக்கொள்கிறது எனலாம் ணகரத்தின் பின் டகரமே யன்றி, க் ச் ஞ் ப் ம் ய் வ் என்பவையும் வரும். பிற மெய்கள் ணகரத்தின் பின் வாரா. த, ந வந்தால் ணகரத்திற்கு ஏற்ப முறையே ட,ண என்று திரியும்.

*வரி வடிவம்:*
*கோலெழுத்து:*

வரிவடிவம் கோலெழுத்து
அசோகன்
குகையெழுத்துக்கள்
கி.மு. 3 ஆம் நூ
கி.பி. 7 "
8 "
9 "
11 "
12 "
13 "
15 "
இக்காலம்
வட்டெழுத்து

*வட்டெழுத்து வடிவம் அடுத்தபக்கத்தில் உள்ளது.*

வட்டெழுத்து: கி.மு. 3 ஆம் நூ.

அசோகன்
குகையெழுத்துக்கள்

| | | |
|---|---|---|
| கி.பி. 7,8 ஆம் நூ. | | |
| 9 | " | |
| 10 | " | |
| 11 | " | |
| 12 | " | |
| 13 | " | |
| 14 | " | |
| 15 | " | |
| 17 | " | |
| 18 | " | |
| இக்காலம் | | ண |

# த

*ஒலி:* இது தமிழில் ஏழாவது மெய்யெழுத்தாகிய த் என்பதும் அகரமு சேர்த்தொலிக்கும் உயிர்மெய்யெழுத்தாகும். நாநுனி பரந்து, அதற்கெதிருள் மேற்பல் வரிசையின் வேரில் ஒற்ற இந்த ஒலி பிறக்கும் சர்வதேச ஒலிக்கழ (International Phonetic Association) முறையில் இது t என்று எழுதப்பெறும் இது ஒலிப்பிலா வெடிப்பொலி ஆம் (பார்க்க.க) மொழிக்கு முதலில் தமிழில் தகரம் இந்த ஒலியே பெறும், மாது முதலிய இடங்களில் இரண்டு உயிரிடையே உரசு ஒலியாகும் (Other என்ற ஆங்கிலச் சொல்லின் ஒலிப்பினைக் காண்க), இங்கே நாநுனி பரந்து, பல் ஈற்றினைத் தொடுவது போல் வரும்; நெகிழ்ந்து மிகக் குறுகி ஒலிக்கும். பந்து முதலிய இடங்களில் நகரத்தின்பின் இது ஒலிப்பொலியாம் (Voiced) இந்தத் தகரம், பத்து முதலிய இடங்களில் இரட்டித்து வரும் போது செறிவுடை வெடிப்பொலியாம கத்து முதலிய இடங்களிற் போலக் குற்றெழுத்துக்கு இப்படித் தகரம் பின் ஏறக்குறைய இரண்டு மெய்யளவு மாத்திரையும், காத்து முதலிய இடங்களில் நெட்டெழுத்தின் பின் அதில் குறைந்தும், பார்த்து முதலிய இடங்களில் ரகரத்தின் பின் ஒரு மெய்யளவு மாத்திரையும் பெற்றும் வரும் என்பா பர்த் (Firth) இரட்டித்த தகரம் உயிர்களிடையும், ய், ர், ழ் என்பவற்றின் பின்னுமே வரும்

தகரம் மொழிக்கு முதலிலும இடையிலும அன்றி ஈற்றில் வாராது, மெல்லெழுத்துக்களில் நகரத்தின் பின் மட்டுமே வரும் ஞ் என முடியும் சொல் தகரத்தின் முன் உகரம் பெறும் ன் அல்லது ல், ண் அலலது ள் என்பவற்றின் பின்வரும் தகரம் முறையே றகர டகரமாக மாறும் மகரம் ்கரத்தின் முன் நகரமாகத திரியும் நெட்டெழுத்தினை அடுத்துவரும் ய்,ர்,ழ் ென்பவற்றின் பின் மட்டுமே தகரம வரும் தனிக் குறிலின் பின்னர் ர் வந்தால் .கரம் வந்தபின்னரே தகரம் வரும (அர்த்தம்=அருத்தம்). தகரத்தின் ்ன்னோ பின்னோ இவை நீங்கிய பிற மெய் எழுத்துக்கள் வருவதில்லை நால்காப்பியர் காலததில் தகரத்தின் முன்வரும் ஆய்தம் அந்தத் தகரம் ரசு ஒலி என்பதனைக் காட்டியது எனக் கருதுகின்றனர் பலர் ா்க்க ஆய்தம) அது முதலிய இடங்களில் இன்று ஆய்த எழுத்தின்றியும் சு ஒலியாக ஒலிப்பது இயலபாகிவிட்டது அஃது என்று இன்றும சிலர் ுதிலந்தாலும அந்த ஆய்தத்தின் இயல்பு இன்று விளங்குவதில்லை

*பொருள்:* தகரம் *கணகணப்பு=தணதணப்பு* முதலிய மிகச்சில இடங்களில் ககரத்தோடு மாறாடுகிறது. வைத்து; வைச்சி என்று தகரம் சகரமாதலும் உண்டு பல்லினொலி அண்ணச்சாயல் பெறுவது பழைய வழக்கம். இது இலக்கிய வழக்கில் பிற்காலச் சோழர் காலத்திலிருந்து மாறிவிட்டாலும் பேச்சுவழக்கில் சில இடங்களில் நிலைத்துவிட்டது என்று கொள்ளுதல் வேண்டும் போய்த்து=போச்சி முதலிய வடிவங்கள் இந்தப் பழமையை நினைப்பூட்டும் இழிவழக்கு என்று ஒருசிலர் கருதுவதில் *வந்தது=வந்துசி* என்றெல்லாம் வருதலைக் காணலாம் த என்பது விளரியிசையின் அறிகுறியாம் த்த என்பது சூ என எழுதப்பெற்று ஆயிரத்தைக் குறிக்கும்

த் என்பது இறந்தகால இடைநிலையாக வரும்
*வரி வடிவம்*
*கோலெழுத்து*

வரிவடிவம்: கோலெழுத்து:

| | |
|---|---|
| அசோகன் குகையெழுத்துக்கள் கி.மு. 3 ஆம் நூ | [illegible] |
| கி.பி. 7 ஆம் நூ. | [illegible] |
| 8 " | [illegible] |
| 9 " | [illegible] |
| 10 " | [illegible] |
| 11 " | [illegible] |
| 12 " | [illegible] |
| 13 " | [illegible] |
| 15 " | [illegible] |
| இக்காலம் | த |

கீழ்க்கவித்த Y போன்றதின் மேற்கோடு வலப்புறம் சாய்ந்தது; பின் வலப்புறக்கோடு டு என்பதில் போல இடஞ்செல்லும் வளைவாயிற்று; பின் இடையே ஒரு சுழி வளர்ந்தது. கீழ்நோக்கிய வளைவு அளவில் குறைந்து நின்றது; சிறிது சிறிதாக மேற்புறத்தில் ஒரு கோடு இடமாகச் சென்றது; கீழ்நோக்கிய வளைவு இடமாகச் சென்று நீண்ட கோடாயிற்று. முடிவில் மேற்புறத்தே இடமாகச் சென்ற கோடும் கீழிறங்கி இன்றைய வடிவினை அடைந்தது.

*வட்டெழுத்து*

அசோகன்
குகையெழுத்துக்கள் கி.மு.
3 ஆம் நூ.
கி.பி. 8 "

9 "

10 "

11 "
13 "
14 "

15 "

18 "

**தற்காலம்**

திருநாத குன்ற எழுத்தின் கீழ்வளையம் பின்னர் நேர் கோடாயிற்று. மேற்புறத்தில் ஒரு கொக்கி எழுந்தது பின் 3 போன்ற வடிவமாயிற்று. தொடங்கிடமும் முடிவிடமும் ஒன்றாய்ச் சேர்ந்தன. பின் ந போன்ற வடிவமாகத் தேய்ந்தது.

# தா

*ஒலி* த் என்ற மெய் முன்னும் ஆ என்ற உயிர் பின்னுமாக ஒலிக்க வரும உயிர்மெய்யெழுத்து. பார்க்க. த; ஆ.

*பொருள்* தா என்பது வினைப்பகுதியாய் ஒப்போனுக்குக் கொடுத்தல் என்ற பொருளில் வழங்கியது. தொல்காப்பியர் காலத்தில் இப்பகுதி தன்மை முனனிலையில மட்டுமே முடிந்தது பின்னர் ஈதல், பரிமாறுதல், படைத்தல், மகப்பெறுதல், நூல் இயற்றல், உணர்த்துதல், சம்பாதித்தல், கைப்பற்றுதல், அழைத்தல், பலன் கொடுத்தல் என்ற பொருளில் எல்லாம் வழங்கலாயிற்று, இது துணைவினையாகவும, பிற வினைப்பகுதிகளோடு சேர்ந்து வழங்குகிறது. இது பெயர்ச் சொல்லாய் வன்மை என்ற பொருளில் தொல்காப்பியர் காலத்தில வழங்கிப் பின், வருத்தம், கேடு, பாய்தல், பகை, குற்றம், குறை முதலிய பொருள்களில் வழங்கி வருகிறது

*வரிவடிவம்*

வரிவடிவம்: கி.மு. 2, 3 ஆம் நூ.
கி.பி. 7 „
8 „
10 „
11 „
இக்காலம் த

தலைகீழான Y போல் இருந்ததில் இடப்புறம் தொடர்ச்சியாக எழுதபபெறும் நிலையில் சுழி பெற்று. வலப்புறமும் கீழ்வளைந்து பின்னர், அந்த வளைவின் முடிவு இடப்புறம நோக்கிச் சென்று இன்றுள்ளது

போலாயிற்று. வளைவும் வயிறாகப் பெருத்தது. மேலே நேர்கோடாய் இருந்தது தொடங்குமிடத்தில் பிதுக்கம் பெற்றுப் பின் சிறு கோடாய் இடப்புறம் சென்று, பையப்பின் இடப்புறத்தின் முடிவில் இருந்து கீழிறங்கிச் சுழியின்மேல் முட்டி நின்று இன்றைய வடிவம் பெற்றது. முதலில் நெடிலைக் காட்டும் கோடு குறிலின் பின் படுக்கை நேர்கோடாகத் தலையின் முடிவிலிருந்து வலப்பக்கம் சென்றது; பின் அது சிலபோது அக்கோட்டின் இடையில் தொடங்கிக் கீழ்நோக்கிச் சிறிது வளைந்தது. த என்பது க என்பது போன்று நின்ற நிலையில் கீழ்வளைவை ஒட்டி மற்றொரு வளைவாகவும் சிலபோது அமைந்தது. பின்னர், அது தனியே மேலிடத்திலிருந்தே கீழ்நோக்கும் நேர்கோடாகச் சென்றது. ஆனால், அதன் உச்சியும் சிறிது தடித்துப் பின் இடப்புறம் செல்லும் நேர்கோடாக முதலில் சிறிது அரும்பிப் பின் இடப்புறத்திலிருந்து கீழ்நோக்கும் மற்றொரு கோடாக வளர்ந்தது. கோடு காலான வரலாறு இது

. வட்டெழுத்து.

| | | | |
|---|---|---|---|
| வட்டெழுத்து: கி.மு. | 2.3. | ஆம் நூ. | |
| கி.பி. | 7 | " | |
| | 10 | " | |
| | 11 | " | |
| | 15 | " | ,, |
| | 18 | " | ,, |

இன்று தலை வளைவாகவும் கீழே கோட்டை இடப்புறம் நீட்டியும் எழுதப்பெறும் நகரம்போல் இருந்தது 3 போலாகியது. சிலபோது தொடக்கமும் முடிவும் ஒன்று சேர்ந்தன சிலபோது 3 என்பதற்கு நேரே அதன் தொடங்கிடத்திலிருந்து ஒரு நேர்கோடு அதனைத் தொடாமல் கீழ் இறங்கியது கீழ்க்கவித்த ஒரு பகரமபோலவோ, யகரமபோலவோ விரைவாக எழுதும்போது நின்றது.

நெடிலைக் குறிக்கும் கோடு தலையை ஒட்டி வலப்புறம் சென்றது. பின் இடையில் இருந்து எழுந்து கோணவாட்டில் செல்லும் சிறு நேர்கோடாகவோ மேல்நோக்கிக் கோணம் அமையும் இரு கோடாகவோ மாறியது. பின் ஒரு கோடாகவே நின்று சிறிது கீழாகவே தொடங்கியது. த என்ற எழுத்தின் முடிவினையே வளைவாக்கிச் சுழித்தெழுந்து நேர்கோடாக நீண்டும், சிலபோது நீண்டகோடு மறுபடியும் கோணமாகுமாறு முடிவில் மேனோக்கியும் சென்றது.

# தி

ஒலி தி என்பது த்+இ என வரும உயிர்மெய் எழுத்தாம் பார்க்க த,இ

*வரி வடிவம*

*கோலெழுத்து*

| | | |
|---|---|---|
| கி.மு. 3, 2 ஆம் நூற்றாண்டு | | |
| கி.மு. 3, 5 | " (திருநாதகுன்றம்) | |
| 7 | " | |
| 8 | " | |
| 9 | " | |
| 10, 11 | " | |
| இக்காலம் | | தி |

கீழநோககிய கோணமாக இருந்த இகரக்குறி அல்லது கொண்டை மேலேவளைநத அரைவடடமபோல வலமிருந்து தொடங்கியது 7ஆம் நூற்றாண்டுவரை தகரததோடு ஒடடிக்கொண்டே இருந்தது பின் தனித்து மேல் நின்றது தகர எழுததினையும் தாண்டி இடமிருந்து வலமாக எழுதப்பெற்று முடிபோல இராசராசன் காலம வரை வளர்ந்தது இடப்பககம் தொடங்குமிடம மெல்ல வலப்புறம நகரத தொடங்கியது தகரத்தினை ஒடடி இது வலபபுறததினினறும தொடங்கியது 12 13ஆம நூற்றாண்டில எனலாம் பின தகரத்தின் மேறகோடடின இடைநின்றும சிலபோது தொடஙகியது இப்போது மேறகோடடின இடப்புறத்து நின்றுமே மக்கள இதனை எழுதுகின்றனா

*வட்டெழுத்து:*

14 வட்டெழுத்து

| | | |
|---|---|---|
| கி.பி. 3-2 ஆம் நூற்றாண்டு | | |
| கி.பி. 3-5 | | |
| | 8 | " |
| | 9 | " |
| | 10 | " |
| | 11 | " |
| | 13 | " |
| | 14 | " |
| | 15 | " |
| | 17 | " |
| | 18 | " |

பொருள் தி என்பது செய்தி முதலியவற்றில் விகுதியாக வருகிறது

# தீ

*வடிவம்:* த்+ஈ என்ற உயிர்மெய்யெழுத்து (பார்க்க கி, சி, தி) சுழி இடப்புறமிருந்தது. மலையாளத்தில் அப்படியே இருக்க இன்றைய தமிழில் வலப்புறம் வந்துவிட்டது

| | |
|---|---|
| 8 ஆம் நூ | |
| 11 ,, | |
| இக்காலம் | தீ |

*பொருள்:* எரிந்து போதல், பயிர் கருகுதல், காந்துதல், சீறுதல், அழிதல் என்ற தன்வினைப் பொருளிலும், இவற்றிற்கேறற பிறவினைப பொருளிலும் வினைப்பகுதியாகவும், நெருப்பு, விளக்கு, சடராக்கினி, வெகுளி, தீமை, நஞ்சு, நரகம் என்ற பொருளில் தமிழ்ப் பெயராகவும், ஞானம் என்ற பொருளில வடமொழியிலிருந்து வந்து தமிழில் வழங்கும் பெயராகவும் வரும

# து

*ஒலி:* து என்பது த்,உ என்ற இரண்டும் சேர்ந்ததன் வடிவமாக எழுதப்பெற்றும் உயிர்மெய் யெழுத்து. (பார்க்க:த,உ). து குறிவினையின் ஈறாக நிற்குமிடத்தன்றிப் பிறவிடத்துக் குற்றியலுகரமாம் என்பர் இலக்கணப் புலவர். ஆனால் பெரும்பான்மையும் உகரம் குற்றியலுகரச் சாயலே பெற்று இன்று வழங்கப்பெறுகிறது.

*வடிவம்:* கோலெழுத்து: அசோகர் காலத்தில் மெய்யெழுத்துக்களின் கீழ் நெடுக்குக்கோடு ஒன்று இட்டு, மெய்யின் பின் உகரம் ஒலித்ததைக் குறித்தனர். ஆனால்; நெடுக்குச் கோட்டில் முடியும் எழுத்துக்களை இவ்வாறு குறிப்பது முடியாமையின் நெடுக்குக்கோட்டின் வலத்தில் குறுக்குக்கோடு ஒனறு இட்டுக் குறித்தனர். தமிழ்நாட்டுக் குகையெழுத்துக்களிலோ, இடப்புறக்கோடும் வலப்புறக்கோடும் தகரத்தில் சமமாக இருக்க, உகரம் சேர்ந்தபோது இடப்புறக்கோடு வலப்புறக்கோட்டை விடச் சிறிது கீழிறங்கி இருக்கக் காண்கிறோம். எனவே, பிற மெய்யெழுத்துக்களில்போலத் தகரத்திற்கும் உகரக்குறியைக் கீழ் நோக்கிய கோடிட்டே எழுதலாயினர் என்பதாயிற்று கீழ்நோக்கிய நீட்டம் கொக்கியாகி, மேற்புறமாகச் சிறிது வளைந்துவர, ஏழாம் நூற்றாண்டில் அதன் வலப்புற வளைவுமுனை மேலேறி லகரம் போல் தோன்றுகிறது சிலபோது கு என்பதிற்போல வலப்புறம் சுழியாக வரவும் காண்கிறோம் இப்பின்னைய வடிவம் பழையது என்பர். எட்டாம் நூற்றாண்டில் பழைய நிலைமைகள் மறையவில்லை என்பது சில வடிவங்களால் தெரிய வருகிறது இந்த நூற்றாண்டில் கொக்கியாக நில்லாமல் நேர்கோடுகளாய்க் கோணங்கள் பெற்று, இந்நாளைய வகரம் போன்ற வடிவத்தைச் சில இடங்களில் இக்குறி அடைவதைக் காண்கிறோம் ஓலையில் எழுதும்போது மேற்கோடு ஓலையைக் கிழிக்கும். ஆதலின் வளைவு ஓலைக்கேற்றது. கல்வெட்டில் வளைவை விட நேர்கோடு எளிது. ஒன்பதாம் நூறறாண்டிலும் வகரம் போன்றதின் அடிப்பக்கக் குறுக்குக்கோட்டின் இடமுனை இடபபுறம் நோக்கிச் சென்றது பத்தாம் நூற்றாண்டில் இது மேலும் இடப்புறம் சென்றது ஆனால், சில இடங்களில் பழைமைபோலக் கொக்கியாக மேல் வளைந்ததன வலப்புற வளைவுக் கோடு தகரத்தின் தலைக்கு நேரனவாக நிறகாமல் மேலும் உயர்ந்து நின்றது இது ஓலை எழுத்தை நினைப்பூட்டுகினறது போலும் பதின்மூன்றாம் நூற்றாண்டில் தகரத்தின்

வடிவமும் மாறியதற்கு ஏற்ப இடப்புறமும் சென்ற அடிக்கோட்டின் இடமுனை சிறிது குறைந்தது. இக்காலத்தில் அடிக்கோட்டின் இடப்புறப்பகுதி கோடிட்டு மூடிய பிறைபோல அமைந்து, அந்தக்கோடு வலப்புறத்தில் தொடர்ந்து, நீண்டு, பின் மேல்நோக்கிய கோடாகச் சென்று முடிகிறது. இந்த வரலாற்றைக் கீழே காண்க;

| | |
|---|---|
| அசோகர் | |
| [illegible] | |
| கி.மு. 3 ஆம் நூற்றாண்டு | |
| கி.பி. 7 | ,, |
| 8 | ,, |
| 9 | ,, |
| 10 | ,, |
| 11 | ,, |
| 12 | ,, |
| 13 | ,, |
| 14 | ,, |
| இக்காலம் | |

*வட்டெழுத்து:* வட்டெழுத்து என்ற பெயருக்கு ஏற்ப 3 போல் சிறிதாக எழுதப்படும் தகரத்தின் அடிக்கோட்டிலிருந்து உட்குழி பெருத்த கொக்கியாக உகரக் குறி எட்டாம் நூற்றாண்டில் அமைந்திருக்கக் காண்கிறோம். பின்னைய நூற்றாண்டில் தகரம் மிகச் சிறிதாக அமைய, அதன் கீழ் வரும் கொக்கியின் உள்வளைவு சிலபோது இடப்புறத்தே மிக மிக வளைந்து செல்லவும், அவ்வாறு வளையாதபோது கீழிறங்கிய உட்குழிவு பெருத்த வளைவாக வட்டெழுத்தில் வகரம்போல நிற்கவும் காண்கிறோம். பதின்மூன்றாம் நூற்றாண்டில் வளைவின் உட்குழிவு மிகமிக நேர்ந்துபோனதோடு, ட போல்

அமைந்து அதன் வலப்புறம் மெல்ல மேல்நோக்கி வளைந்து நிற்கக் காண்கிறோம். பதினோராம் நூற்றாண்டிலிருந்து தகரத்தின் தலைக்கோடு இடப்புறத்தில் சாய்ந்து வளைய, உகரக்குறி கீழ்நோக்கிப் பின்மேலெழும் வளைவாக அமைகிறது. பதினெட்டாம் நூற்றாண்டில் ஓலையில் சிலபோது நு போல் எழுதி, இதன் வலப்புறத்துக் கோட்டை வளைத்து, அவ்வெழுத்தை முற்றிலும் வளைந்து வரும் சுற்றாகச் சுற்றி,இடம் வலமாக இழுத்து, மறுபடியும் வலத்தே மேல்நோக்கி நிற்கும் வளைவாகச் சில இடங்களில் அமைக்கக் காண்கிறோம்.

ஆனால், பழைய நிலைமை முற்றும் மாறவில்லை. இந்த வரலாற்றைக் கீழே காண்க.

| | |
|---|---|
| அசோகர் | |
| தமிழ்க்குகை எழுத்து | |
| கி.பி. 8ஆம் நூற்றாண்டு | |
| 9 | ,, |
| 10 | ,, |
| 11 | ,, |
| 12 | ,, |
| 13 | ,, |
| 14 | ,, |
| 15 | ,, |
| 17 | ,, |
| 18 | . |

*பொருள்.* து என்பது உணவு, அனுபவம், பிரிவு என்ற பொருளில் பெயராகியும், உண் என்ற பொருளில் வினையாகியும், வருது என்பதில் தன்மை ஒருமை முற்று விகுதியாகியும், அது வந்தது என்பனவற்றில் ஒன்றன்பால் விகுதியாகியும், மருந்து, கடைத்து என்பனவற்றில் போலச் சொல்லாக்க நிலை உருபு அல்லது பகுதிப்பொருள் விகுதி ஆகியும் வரும்

# தூ

*ஒலி:* *தூ* என்பது *த்.* *ஊ* என்ற இரண்டும் சேர்ந்ததன் வடிவமாக எழுதப்பெறும் உயிர்மெய் எழுத்து. பார்க்க: த; ஊ, து.

*வடிவம்:* இவ்வெழுத்து தமிழில் பெரும்பான்மையாக வழங்குவதில்லை யாதலின் இவ்வடிவம் கல்வெட்டில் கிடைப்பது அரிதாகிறது மெய்யெழுத்தோடு ஊ என்பதனைக் குறிக்க எழுத்தின் அடியில் அசோகர் எழுத்தில ஒரு குறுக்குக் கோடோ, நெடுக்குக் கோடோ இட்டது கண்டோம். ஊ என்பதைக் குறிக்க இரண்டு குறுக்குக்கோடோ, நெடுக்குக் கோடோ இடப்பெற்றன தமிழ்க் குகைஎழுத்திலோ உகரக் குறியாகக கீழ நோக்கிய கோடு மேலும் சிறிது கீழநோக்கிச் சென்றது எனக் கண்டோம் ஆதலின் உகரத்தின் நெடிலான ஊ என்பதனைக குறிக்கப் பொதுவாக நெடிலைக் குறிக்கும் சிறு குறுக்குக் கோடடினையே இடப்புறக் கீழ்க்கோட்டின இடப்புறமாக இட்டனர் இது பிற இடங்களில போலக் காலாக வளர்ந்தது 8ஆம் நூற்றாண்டில் து என்பதன் இடபபுறக்கோட்டை விடச் சிறிது நீண்டு இடப்புறம் செல்லும் வடிவமும் உணடு வலபபுறம சுழி பெற்றது என்பதறகு ஏற்ப, வலப்புறச் சுழி மேலும் பெரிதாக வளைந்த தூ என்ற வடிவமும் காண்க இது து என்பதன் அருகே ⁷ எனற வடிவம் போல் இருந்தது. பின் மெல்ல *து* ஓடு ஒட்டிக்கொனடு *தூ* என்ற வடிவம ஆயிற்று



வட்டெழுத்து

| | |
|---|---|
| அசோகன் | |
| பழைய தமிழ்க் குகையெழுத்து | |
| கி. மு. 2-3-ஆம் நூற்றாண்டு | |
| கி. பி. 8 ,, | |
| 9 ,, | |
| 10 ,, | |
| 12 ,, | |
| 18 ,, | தூ |

வட்டெழுத்து: தூ என்பதன் வடிவத்தில் வலப்புற வளைகோடு முடியும் இடத்திலிருந்து கோணமாக வைத்த ட போன்ற வடிவம் நெடிலின் குறியாகப் பிற எழுத்துக்களில் அமைவது போல இங்கும் அமைவதால் தூ என்ற வடிவம் எழுகின்றமையைக் காண்க.

*பொருள்* *தூ* என்பது தூய்மை, வெண்மை, வன்மை, பற்றுக்கோடு, பகை, தசை, தூவி என்ற பொருளில் பெயராயும், இகழ்ச்சிக் குறிப்பு, நண்பு சிதைந்ததெனும் குறிப்பு முதலிய பொருளில் இடைச்சொலாயும் வரும். பிந்திய குறிப்பு டூ என்பதன் திரிபு போலும்.

ஓரெழுத்தொருமொழியிலன்றி ஈற்றில் இது வாராது. *வந்தூது* என்பதுபோலப் புணர்ச்சியின் பயனாகத் தொடர்மொழியிலும், *என்பதூஉம்* என்பது போல அளபெடை எழுந்த சொல்லிலும் அன்றி மொழியிடையில் வாராது மொழிக்கு முதலில் வரும்போது தூ, தூகு, தூசு, தூவு, தூங்கு, தூறு, தூது, தூம்பு, தூவி, தூண்டு,தூணி, தூள் முதலியவற்றின் அடியாகப் பிறந்த சொற்களன்றிப் பிற சொற்கள் எல்லாம் பிறமொழிச் சொற்களாம். த்வம்சம் என்பது தூங்கிசம் என வருவது போன்றவற்றில் *த்வ=தூ* என விளங்கல் காண்க

# தெ

த்+எ என்ற இரண்டெழுத்தினை ஒன்றாகக் காட்டும் உயிர்மெய் எழுத்து பார்க்க. த,எ

*வடிவம்* மெய்யெழுத்தின் இடப்புறத்தில் சிறு குறுககுக் கோடாக ஒட்டிக் கிடப்பதான எகரக்குறி, இடையில வளைவுபெற்றுப் பின் முனையிலும் வளைவு சுற்றாக வர மெல்லப் பிரிந்து இனறைய கொமபாக வளர்ந்துள்ளது

*கோலெழுத்து*

கோலெழுத்து :

அசோகர்

கி.மு. 2-3ஆம் நூ. தமிழ்க் குகை எழுத்து

கி.பி. 3-5ஆம் நூ. திருநாதர்குன்ற எழுத்து

கி.பி. 7ஆம் நூ.

8 ,,

9 ,,

10 ,,

11 ,,

(கிரந்த எழுத்து)

14 ,,

*வட்டெழுத்து வடிவத்தொடர்ச்சி அடுத்தபக்கத்தில்*

கோலெழுத்து :

| | |
|---|---|
| அசோகர் | |
| கி.மு 2-3ஆம் நூ. தமிழ்க் குகை எழுத்து | |
| கி.பி 3-5ஆம் நூ. திருநாதர்குன்ற எழுத்து | |
| கி.பி 7ஆம் நூ | |
| 8 ,, | |
| 9 ,, | |
| 10 ,, | |
| 11 ,, | |
| (கிரந்த எழுத்து) | |
| 14 ,, | தெ |

தெ என்று தொடங்கும் சொற்களில் சில, வடமொழி முதலிய பிற மொழிகளிலிருந்து வந்து தமிழில் வழங்குபவை தச, தட்சிணம், தக்கணம், தட்சிணை, தண்டம், தத்து, தக்த, ததி, தந்தி, தர்ப்பை,தர்லி, தரிசனம் முதலிய வடசொற்கள் தமிழில் தெ என்று தொடங்கி வழங்குகின்றன த=தெ என மொழி முதலில வரல் காண்க தெய்வம் என்பதும் வரும் தே=தெய்; தே என ஆம், திவ்ய என்பதும் தெவ்வு என்றாம் என்பர் ரகரம் தகரமாதலும் காண்க (ரட்சகன்+தட்சகன்). சகரமும் தகரமாதலும் உண்டு; செட்டி=தெட்டி, தெகிடி (dhagar) என்ற உருதுச் சொல்லும், தெல்லுப்பு, தெலுகு (தெலுங்கு), தப்ப முதலிய தெலுங்குச் சொற்களும் தெ முதலாக வழங்குதல் காண்க. திம்ம என்பதிலிருந்து வருவது தெம்மாடி என வழங்குதலும் காண்க. தெக்கு (தெவ்+கு), தெவிடு, தெகிட்டு (தேக்கிடு?), தெகிழ் (திகழ்?), தெகுடல், திகழ், தெங்கு (தென்+கு), தெப்பம் (தெவ்), தென், தென்கு, தெழ்கு, தெட்கு (தென்-தட்டு), தெண்ணர் (திண்ணர்), தெத்து (தெற்று), தெய்ய, தெய்யோ, தெவ், தெம்முனை (தெவ்+முனை), தெரி, தெரு, தெருள், தெல் (தில்லு), தெழி, தெளி, தெரளி, தெறி, தென்னை, தெக்கி, தெற்கு, தென, தென்படு, தென்று முதலியவும் இவற்றின் அடியாகப் பிறப்பனவும் தமிழ்ச் சொற்கள் எனலாம். தெத்தே, தெநதன, தென்ன என்பவை ஒலிக் குறிப்பாக வரும் தே குறுகித் தெ என நிற்பதும உண்டு தெகுடிகை (தேள்கொடுக்கி), தெம்பு (தேன்+பு), தெமமாஙகு, தெம்பாங்கு (தேன்+பாங்கு), தென்மொழி (தேன்மொழி), தென்னி (தேனவாழை) முதலிய காண்க

# தே

இது த்+ஏ என்ற இரண்டும சேர்ந்த உயிர்மெய் எழுத்து பார்க்க த.ஏ

வடிவம எ. ஏ என்பவை வேறுபடாமல் எழுதப் பெற்றமை முன்னரே குறிக்கப பெறறது (பாாகக எ. எ. கெ. கே) எனவே. தெ என்பதின் வடிவமே இதன வடிவமும ஆம பாாகக தெ

பொருள கொளளுதல என்ற பொருளில தெவவு எனபதன மாறறு வடிவமாகவும் தலைவன தெயவம என்ற பொருளகளில தெய்வ என்ற வடசொலலின மாறறு வடிவமாகவும மாடு துரததும ஒலிக்குறிபபாகவும. மனைவியும கணவனும ஒருவரை ஒருவா அழைககும அருவா நாட்டு விளியாக இந்தா ஈதி எனறதன மாறறு வடிவமாகவும வழஙகும

தே எனத தொடஙகும சொறகள தேக்சா தேரீசு தேவா. தேவி எனபன உருதுச சொறகள் தேகாவாா தேஙகரி எனபன மராததிச் சொறகள தேயிலையைக குறிககும தே தேய் என்பனவும் வந்தேறிகளே இலேசு என்ற பொருளில் தேலிக்கை என வழங்கும சொல தெல எனபதனோடு தொடாபுடையதான தெலுஙகுச் சொல்லே ஆம ஈரததைக் குறிககும தேமம என்பது செமம எனற தெலுஙகுச சொல்லோடு தொடாபுடையது போலும். தேஹம. தேசம. தேஜஸ தேஜனி. தேனு(தேனுகள தேனுகய். தேனுகாரி) என்பவை வடமொழிச சொறகள தீயேயன் (தேயன) திதி (தேதி). ஸதேயன (தேயன்). ஸதோரன(தேரா). ஸதேநன (தேனன) தெயவம (தே.தேவு) திதி எனற வட சொறகள் த்ய=தே எனறும். தி=தே தெய. தே. தெயவம தேவு எனறும முதலில ஸ கெடடும பிறவாறு மாறியும தமிழில வழஙகும வடமொழிச சொறகளாம இவவிரு வகையானவறறின அடியாக வழஙகும சொறகளும சொறறொடாகளும பலவாம

அடிபபடைச தமிழச சொறகளில தேதா தேதே தேநதேம எனபன ஒலிககுறிபபாக வழஙகுவன தெவவு=தே தியககம=தேககம தாழவிலை=தேவலை தெபபம=தேபபம தேககம=தேயபம. இடைகழி=தேகளி (தேஹளி எனற வடமொழி எனபாரும உளா) தேட கொடுககு=தேககடை தேஙகிடை மிதவை=தேளவை (தேந்தல) பிறுயல்தல எனற பொருள

தோன்றுதல் காண்க), நேரம்=தேரம் என வரும் வேறுபாடுகளைக் கண்டால் த-சவும் ந-தவும் எ-ஏயும் ட-தவும் (முதல் அசையில்) அ-எயும், இ-எயும் மாறாடுவதும், தீய என்பது தே என ஆதலும், ஸ் மொழிக்கு முதலாகாமையும் பிற எழுத்துக்கள் இடையே கெட்டு வரும் மரூஉ வழக்கும் புலனாகும்

தமிழ் என்றே கருதத்தக்க தேமல், தேமணி, தேக்கு(மரம்), தேன், தேம், தேள், தேர், தேரை, தேங்காய் முதலிய பெயர்ச் சொற்களும், தேறு, தேய், தேடு (தேண்டு), தேங்கு முதலிய வினைச்சொற்களின் தன்வினை பிறவினை முதலிய வடிவங்களும் இவற்றின் அடியாகப் பிறக்கும் பிற சொற்களும் சொற்றொடர்களும் பலவாக வழங்குகின்றன.

# தை

த்+ஐ என்ற உயிர்மெய் எழுத்து (பார்க்க:த; ஐ). இதன் வடிவம் தகரமும் ஐகாரமும் சேர்ந்ததே ஆம் மெய்யெழுத்தோடு ஐ சேருவதன் வடிவத்தினை முன்னரே பல எழுத்துக்களிலும் கண்டோம் (பார்க்க:கை). கல்வெட்டில் இதன் வடிவம் சிலவே கிடைத்துள்ளன

| | |
|---|---|
| கோலெழுத்து | |
| அசோகர் காலம் (?) | |
| கி.மு. 3 2 ஆம் நூ | |
| குகை எழுத்துக்கள் | |
| கி.பி. 9 10 ஆம் நூ | |
| இக்காலம். | தை |
| வட்டெழுத்து | |
| அசோகர் காலம் (?) | |
| கி.மு. 3 2 ஆம் நூ | |
| குகை எழுத்துக்கள் | |
| கி.பி. 9 ஆம் நூ | |
| 10 . | |
| 11 .. | |
| 13 .. | |

தை என்று தொடங்கும் சொற்கள் 99 உள்ளன தை என்ற வினை [illegible] இலை, ஆணி, துணி முதலிய தைத்தல், பூத்தொடுத்தல், மணி கோத்தல, மணி பதித்தல், மணி சூழவைத்தல், அணிசெய்தல், திலகம் இடுதல், உடுத்தல், சித்திரித்தல், மனத்தில் உறுத்தல், திருஷ்டி படுதல் முதலிய பொருளில் வரும் தையல் அலங்காரம், தைவேளைச செடி, தைத்தெங்கு, தைமாதம் என்ற பொருள்களில் பெயர்ச சொல்லாம இடைச் சொல்லாகத் தாளததைக குறிக்கும ஒலிக்குறிபபாக வரும. தை எனல எனற ஒலிக்குறிப்பும உண்டு

தை என்பதனை (தைஷீ) வடமொழி என்பாரும் உண்டு; திஷ்யம் (பூச நக்ஷத்திரம்) என்பது தைசம் என வரும் என்பர்.

ஷ=ச,தை என்ற மாதத்தின் பெயரோடு சேர்ந்து வழங்கும் சொற்கள் 11; தையல் என்ற சொல்லோடும் அதே பொருளில் வரும் தை என்ற சொல்லோடும் வருவன 8 (தையான்=தையற்காரன் என்ற அருவழக்குக் காண்க) தையல் என்பதற்குப் பெண் என்றும் பொருளாம். தைவா, தைவரல் என வரும் திரிசொல்லும் உண்டு

தஞசை என்பது தைஞ்சை எனக் கல்வெட்டில் வழங்குகிறது; அஞ்=ஐஞ்; தை ஐ ஸ (5) தைத்திய தைத்திரி (3) தைரியம் (8) தைலம் (15) தைவ (9) தைனியம் (1) தைதம்(2) தைதிலம (3) என்ற வடசொற்களும் அவற்றில் பிறந்தனவுமாக வருவன 49, இங்கே ஷ=ச, ஜ=ச, ஸ=ச, ஸ=த; ஹ=க, nya=ணிய, tya=த்திய, d=த, இகர வீறு மறைதல், ன் ஆண்பாலீறாகச் சேர்தல், மகரம அஃறிணைச சொற்களில் சேர்தல், ஐ=அம், ஈற்று னகரம் கெடல் (தைலின்=தைலி) முதலிய மாறுதல்கள் வரல் காண்க.

தைக்கால் (ஈறு கெட்டும் வழங்கும் சமாதி என்று பொருள்) என்பது பாரசீகச சொல்லாம த=தை என்றானது பின்வந்த யகரம் மறைந்ததால் போலும Ky-KK தைலா (thaila=பெட்டி) தைலி (taili=பணப்பை), தைனாத்து (tainattu=நியமனம) என்பன உருதுச் சொற்களாம். ஈற்றுத்தகரம் உகரம் பெறுதல காண்க ஈற்று ஈகாரம இகரமாதலும், ஏ ஆகாரமாதலும் காண்க. தமிழில ஈற்றில் வரும் இகரம் சிறிது நீண்டு ஒலிப்பதும் இயல்பு என விளங்குகிறது

தைவேளை தைவிளை எனவும் வருகிறது. வடமொழியும் தமிழ்ச் சொலலும கலந்து ஒரு மொழியாகவும் அரிசமாசமாகவும் வழங்குகின்றன வான, காரன் என்ற விகுதிகளையும் காண்க

தகைவிலாங்குருவி, தைலாங்குருவி என மருவி வழங்குகிறது, தகைவி=தை தைலேமரம் (ஒருவகைக்கட்டு மரம்) என்பதன் தோற்றம் விளங்கவில்லை

# தொ

த்+ஒ என்ற உயிர்மெய் எழுத்து இதன் வடிவம் தகரமும் ஒகரமும் சேர்ந்ததே எனினும், ஒகரக் குறியாக எகரக் குறியை மெய்யெழுத்தின் முன்னும், நெடிலின் குறியான காலைப் பின்னும் எழுதி வருவது வழக்கமாகிவிட்டது கொம்பையும் காலையும், கெ, கா முதலியவற்றில் காணலாம் கொம்பும் காலும முன்பின் வருவதனைக் கொ முதலியவற்றிலேயே காணலாம பார்க்க ஒ, த, தா, தெ; கெ, கா, கொ

தமிழில் தொ எனத் தொடங்கி வழங்கும் சொறகள் 600க்கு மேறபட்டன இவற்றில் பிற மொழிச் சொற்களும நிறைய உண்டு

Stoka=தொக்கு (சிறுமை); trac=தொக்கு (தோல்), dvansa=தொங்கிசம், tvasta=தொட்டன் (ஒரு சூரியன்), dvandva=தொந்தம், தொந்தினை, தொந்திப்பு, dvaita=தொய்தம், dvampatom=தொற்பதம், dhvani=தொனி, தொனு, Pratoli=தொளி (தெரு) என்பன வட மொழிச சொற்கள் தமிழில் திரிந்து வழங்குபவை இவற்றில் முதலில் ஸ் கெடல் tva=தொ, amsa=அங்கிச முதலில் dva=தொ, இடையில dva=த, dvai=தொய், t=த, d=த; dh=த, dvampa=தொற்ப, ப்ர முதலிய முதலில் கெடல், ஈற்றில் ஆண்பாற சொல்லுக்கு னகரம் வரல், அஃறிணையானால் மகரம் வரல், மேலும் ஐ, பு முதலிய தமிழ் ஈறுகள் வரல் முதலிய மாறுதலைக் காண்க

toka=தொகம (மதிபபு), toba=தொப்பணம் (தோப்புக்கரணம என்பதன் மரூஉ); topi=தொப்பி (குல்லாய்) முதலியன உருதுச் சொற்கள் t=த; ல் மொழிக்கிடையில் ப்ப் என வரல், b=ப முதலிய மாறுதல் காண்க tonquin=தொங்கீன் (இரஙகூன் கொடி என வருவது ஆங்கிலச் சொல), இங்கே t=த; Qui=கீ என்றாம

தொக்கடம் (உடம்பு பிடித்தல), தொககிடம, தொக்கடி முதலியனவும தொஙகடம் முதலாக அடம் என்ற விகுதி பெறறு வருவனவும தெலுங்கு எனலாம் தொபபளம (தபபளம, நன்றாக வேகாத காய்களின குழமபு) தொபபாரம (தப்பாரம், தொப்பாரம எனத் தெலுங்கில் முடிவகையையும முகமுடியையும குறிககும, தமிழில 12,13 நூறறாணடிலேயே வழங்கியது,

தொப்பாரம் (சப்பரம் என்று தெலுங்கில் பெரிய கட்டடத்தைக் குறிக்கும்). தொட்டி (ஊரின் பெயர்களின் முடிவு); தொட்டி (விறகு தொட்டி); தொட்டியன் (ஒரு சாதியான்); தொட்டியத்தான், தொட்டியம் (அவர்கள் பேசும் மொழி, செய்யும் சூனியம் முதலியன); தொடிக, தொடுசு 'வைப்பாட்டி=தொடுப்பு எனத் தமிழாயும் வரும்); தொங்கன் (கள்ளன்). தொட்ட (dodda=பெரிய); தொம்பரன்; தொம்பன்; தொம்பம் (கழைக்கூத்து=கம்பம் என்பதில் பிறந்ததும் ஆகலாம்); தொண்டலம் (தொண்டில்; தொளையுள்ள துதிக்கை; Cunda என்ற வடமொழி என்பாரும் உண்டு) முதலியனவும் பெரு வழக்கானமை தெலுங்கர் தொடர்பால் எனலாம்.

ஒலிக்குறிப்புக்களாகவும் இரட்டைக் கிளவிகளாகவும் வரும் தமிழ்ச் சொற்களும் உள்ளன.

தொண் டொண் டொடு எனல், தொண தொண எனல், தொக்குத் தொக்கு எனல், தொனு தொனு, தொள, தொள, தொப்பெனல் என வருவன காண்க தொண்ணாத்தல் (கெஞ்சல்) என்ற வினையும், தொன தொனப்புப் போன்ற பெயர் வடிவமும் அமைதலும் காண்க. தொப்புத் திப்பெனல் என்பதும் காண்க இங்கே இரண்டாம் சொல் மாறியுள்ளது

பல தமிழ்ச்சொற்கள் மருவி வழங்குகின்றன; துத்தி=தொத்தி; துட்டி=தொட்டி (அபராதம்). துயக்கு=தொசுக்கு (ச=ய); துடக்கறை, தொடக்கறை (சிறை அழுக்கு அறை அன்று). சிறைப்பட்டவனைத் தீண்ட முடியாமையின் தீட்டு என்ற பொருளும் வளர்ந்தது. துலை=தொலை (ஒப்பு), துறட்டு = தொறட்டு, துன்னை=தொன்னை (தைத்தது) என மொழிக்கு முதலில் து என்பது தொ என வருதல் காண்க தொ=து என்றும் ஆம். தொளை=துளை (தோள் என்பதே பழைய வடிவம் எனலாம்). தூ=தொ என ஆதலும் உண்டு. உ-ம் தூங்கு=தொங்கு, தெ=தொ என ஆதலை தெளி=தொளி (கூப்பிடு) என்பதில் காணலாம். ககர தகர மாறாட்டமும் உண்டு உ-ம் கொத்து=தொத்து, கொப்பூழ்=தொப்பூழ், தொப்புள் (ழ=ள; இடையில் நெடில் குறுகல் முதலியன காண்க) சபை=அவை என மொழிக்கு முதலில் சகரம் கெடல் போலத் தொய்=ஒய் (ஒய்), தொட்பம்=ஒட்பம் எனத் தகரமும் கெடுகிறது. (இங்கும் சகரமே முதலில் இருந்ததோ?) ஈற்று லகரம் ரகரமாதல் உண்டு. உ-ம் தொடர்=தொடல், தொடலி, ற்று=தீது என்றும், ன்று=ண்டு என்றும் ஆதலும் உண்டு தொன்றி=தொன்று, (இ=உ)=தொண்டு; தொன்று=தொண்டு; தொத்து=தொற்று ச=த என ஆதலைச் சொலிஇ=தொலி என்பதில் காணலாம் தொழு நோய்=தொழுணை எனவும், தோட்பாரம்=தொப்பாரம எனவும் மருவி வரும இஙகே நோய்=ணை, ட்ப=பப நெடில், குறுகல் முதலியன காண்க

தொப்பற (முழுதும்) முழுதும் நனைந்துள்ளதனைத் தொப்பக்கட்டை என வழங்கலும் உண்டு.

தொகு, தொக்கு, (தொகுத்தவை; தெகையல்=தொவையல், துவையல்; துவையலே முதலுமாகலாம்); தொகுப்பு=தொகுதி=தொகை (தொகு பல தொழிற் பெயர் விகுதி பெற்று வரல் காண்க) என்ற வடிவங்கள் தமிழே ஆம்.

தொடு, தோடு, தொறு (தொழுவம்), தொழு, தொழுவம், தொழுதி, தொளுப்பு, தொடுப்பு, தொட்டி, தொட்டிமை (ஒற்றுமை), தொறுவன் (தொழுவம் மேய்க்கும் இடையன்); தொறுத்தி (பெண்பால்) தொழுப்பு=தொழுவாடு (தொழுப்பாடு=தொறுப்பாடு=வழக்கம்) என்பவை கூடுதல் கூட்டம் என்ற பொருளடியாக வருவன எனலாம் ட, ற, ழ, ள என்பனவற்றின் ஒற்றுமையை இங்கே அறியலாம் தொடு, தொண்டு, தொள், தொள்ளை, தொளை (துளை), தொண்டி, தொள்ளம் (தெப்பம்) தொளுக்கு. முதலியனவும் தொடர்புடையன போலும். தொடர், தொட்டி, தொடக்கு, தொடங்கு தொடு (விளைநிலம், தோட்டம்), தொடி, தொடுவை தொடுக்கம் (பொன்) முதலியனவும் தொடர்புடையன ஆகலாம் தொண்டு (ஒன்பது), தொள்ளாயிரம் முதலியனவும் தொடர்புடையன; தொடு=தொண்டு (திருடு); தொண்டி (கள்), தொண்டகப்பறை, தொண்டைக் கொடி, தொண்டையர் (பல்லவர்); தொண்டி (ஊர்); தொண்டை (தொளையுள்ள குரல்வளை); தொண்டு (தொளையிட்டு மாட்டின் கழுத்தில் கட்டும் கட்டை), தொண்டலம் (துதிக்கை) முதலியனவும் தமிழே. தொழு, தொழுகு, தொழில், தொழுத்தை, தொழும்பன், தொழி, தொழுநோய், தொண்டு, தொண்டச்சி முதலியனவும் தொடர்புடைய தமிழ்ச் சொற்களே.

தொடுப்பு (புறங்கூறல்), தொடுவாய் என்பனவும் இங்ஙனமே ஆம் தொடு (பலபொருளில் வரும்), தொடை, தொடுவை, தொடுவன், தொடுவை வள்ளம் (படகு வகை); தொடர் (வு-பு கி, அ, இ என்ற விகுதி பெற்றும் வரும்) என்பனவும் தொடர்புடையனவே. தொடுபிடி (தொடர்ச்சியாக என்பது பொருள்) என்பதும் வழக்கு

தொட்டி (நீர்த்தொட்டி, கொடி வகை), தொட்டிக்கால், தொட்டி வீடு (இடையே தொட்டிபோல வாசல் உள்ளது), தொட்டில் ராட்டு (குழந்தைத் தொட்டில்) முதலியன ஈற்றில் லகரம் பெற்றும் பெறாதும் வரக் காண்கிறோம் தொத்து=தொற்று எனவும் வரும் தொறு என்பது அடியானால் முன்னையது பின்னையதின் மருஉ வாகலாம்

தொல் என்பது தொன் என்றும் ஆம். தொன்று என்பது பழைமை. தொல்லை (பழைமை, பழைய நோய், வருத்தம்); தொலை (தோல்வி); தொலைச்சு, தொலை (தூரம்) என்பனவும் தொடர்புடையன ஆகலாம்.

தொய் (நனை, இளைத்தல், இன்பம், துன்பம்) தொய்யில், தொய்யகம் என்பனவும் காண்க. தொத்தா=சிறியதாய், தொத்து=சிறுமை, தொடும்பு=தொழுப்பு (உழுதல்), தொளி=சேறு, தொங்கு என்பனவும் காண்க. யமுனையின் பெயராய்ப் பழந்தமிழில் தொழுனை என்பது வழங்கும்.

தொப்பை (இதனைத் தோல் பை என்பதன் மரூஉ எனபர் தொப்பை என்பதுமாம். தொந்தி மண் என்பது தொய்யான சிறுமண் எனப் பொருள்படல் காண்க) என்பது தொம்பை, தொம்மை (கொம்மை என்பதோடு தொடர்புண்டோ?) என்றும் ஆம், தொம்பைக் கூடு என்பது போலப் பல சொறகள் வழங்கும. தொந்தி என்பது காண்க. தொறு (செயலின் பயிற்சியையும் பொருளின் பன்மையையும் குறிப்பது), தொடுகிலும் (ஒரு பொழுதும) முதலிய இடைச் சொற்களும் உண்டு.
தொட்டால் வாடி முதலாக வினையெச்சம் வந்த தொகை மொழிகளும் காண்க

இந்தத் தமிழ்ச் சொற்களின் அடியாக வரும் தனிச்சொற்களும் தொடர்களும தொகை மொழிகளும் பலப்பலவாம்.

# தோ

த்+ஓ என்ற உயிர்மெய் எழுத்து பார்க்க த, ஓ

எழுத்து வடிவில் குற்றெழுத்தின் மேல் புள்ளியிட்டும் நெட்டெழுத்தின் மேல் புள்ளியிடாதும முன்னர் எழுதிய வழக்கம் பின் மறைந்ததால் இரண்டும வேறுபடாமையை முனனரே குறிப்பிட்டோம் (பார்கக ஓ, கொ) காலும் கொம்பும் அமையும வரலாற்றையும் முனனரே காண்க (பார்க்க கா, கெ, தெ) எனவே தோ எனபதறகுக் கலவெட்டில எடுததுக்காட்டுககள தருதல அருமை

Tora=தோடா (கஙகணம), todo=தோடி (இராகம்), tohfa=தோபபா, dobar=தோப்பார் (இரட்டிப்பு), tupak=தோககு (கைததுபபாக்கி), tobra=தோப்றா (தோற்பறை), toba+karana=தோப்பிக்கரணம, தோபபுக கரணம, தோப்புக்கண்டம என இவை உருதுச் சொறகளின் வழிவநதவை r=ட, d=ட, hf=ப்ப; d=த, நெடிலின் பின் b=ப்ப என மாறுதல் காண்க

தோப்பி, தோப்பு, தோப்பறா முதலியன தமிழ் வடிவம எனக் கொண்டு நாடோடி மொழிநூல விளக்கங்களாம் (Folk philology) உருதுவோடு வடசொல்லைக் கலந்து தமிழப்படுத்தலும காண்க

ஸ்தோத்ரம், ஸதோகம (சிறுமை), ஸ்தோமம (கூட்டம்) முதலிய வடமொழிகள் முதலில வரும ஸ் கெடடுத் தமிழில வழங்கும் ஸதோததரம பெருவழக்காகித தோததிரி (த்ர-த்திர) எனற வினையடியையும் தமிழுக்குத் தந்தது தோஷம் எனற சொல்லும ஷ=ட, ஷ=ச என்றெல்லாம் மாறித் தமிழில பெருவழக்காம தோடம, தோசம் எனவும் வரும் தோஷம=தோ அம=தோம என வழங்கும் எனறு கூறுவாரும் உண்டு) doha=தோகம (பால்), dohali=தோகலி (அசோகு), dohada=தோகதம (வயா), toka=தோகம் (குழவி), trotaka=தோடயம,தோடையம(பாட்டு); dronamukam=தோனாமுகம (தோண்டி, தோணி முதலியவும் இதன்வழி வந்தன என்பர் சிலர்), தோலனம் (நிறுததல), dobka; ஊசல, dola=தோளா (டோலி), toyam=தோயம=(நீர-தோய என்ற தமிழ அடியில பிறந்தது ஆம ஆனால தோயதரம முதலியன வடசொலலே ஆம தோழம (கடல) எனற பொருளில இதன மரூஉ எனபா சிலர்)

ıhoı=தோர் (தோள்), தோரணம் (தோரணை, தோரணி என்பனவும் வடமொழி என்பர், இவை தொறு என்பதிற் பிறந்தனவும் ஆம்), தோரியம (கூத்து, தமிழில் ஆடி முத்தவள் என்றாம) முதலியனவும், தெலுங்கு முதலிய வழியாக வந்த பிறவும, இவற்றின் வழியாக அமைந்தனவும் வடமொழியிலிருந்து வந்து தமிழில வழங்கக் காண்கிறோம் இங்கே, h=க, ıı-ı, ıhı=த (ரகரக்கேடு), ல=ள, ய=ழ, ı=த, t=த, இடையில் ஷ கெடல் முதலிய மாறுதல்கள் காண்க

தோகிலி (தோசினி=ஊழியர் சுதந்திரமாகத் தரும இருவகைத் தானியம், இங்கே ıhıı என்ற வடமொழியின் திரிபு உண்டு போலும்), தோது (பொருத்தம்), தோரததம் (நிர்ப்பந்தம்), தோத்தை (இருகை அளவு போலும்), தோம்தர், தோமதரா (கொசுவலை), தோவத்தி (தோதவததி துவைத்தது எனறு பொருள படும dhauıı வடமொழி என்பர் துணி என்று பொருள்) தோமபு (சிவப்பு), தோசை (அபப வகை), தோண்டான (ஓநாய்) முதலியன தெலுங்கிலிருநது வந்தவையாகக் கருதப்படுபவை தோண்டான, பழைய மெல்லொலியோடு வழஙகதலின், பண்டைய தமிழ்த் திசைச்சொல் வழக்காகலாம தோசை இனறு பெரு வழககிற்று இவற்றில் சில வடமொழியுமாம் இங்கே dhau=தோ, ல=ள என வரல் காண்க ன் ஆண்பால் குறியாது வருதலும காண்க தோல்தனம் முதலிய வழக்கும தெலுஙகுத் தொடர்பாகலாம தோரமலி, தோராவல்லி (ஓா அணி) தோடை (கிசசிலி) முதலியன சிங்களமாம்

தோகை, தோடு தோடை, தோட்டம், தோடடி (பலபொருள் உண்டு இதனை வடமொழி எனபாரும உண்டு) தோண்டு, தோண்டி, தோணி, தோப்பு (தொகுபபு), தோப்பி (நெறகள்), தோய் (வினைச்சொல்), தோல் (தோல்வி, பழமை, உரி), தோழ் (தொழு, கூட்டம், தொழுதல), தோழம (கடல் பேரெண், வெள்ளம், சமுத்திரம் எனபனவும போ எண் ஆதலைக் காண்க) தோழன், தோழி தோள் (வினைசசொல, பெயர்சசொல) தோறும (தொறு) முதலியன தமிழ் அடிச்சொறகளாம தொகுதத கொயசகம என்பது தொககை என்றாய் முனறானையைக் குறிக்கும் தோ என்பது நாயைக் கூப்பிடும் ஒலியாக இன்று வழஙகும தோவாளம (கிணறறுசசுவா) எனபது திருநெலவேலி வழக்கு

தோல=தோலி (ஈறறில இகரபபேறு) தோல=தோா (ல=ர, தோரா=ஓயாத), துவா=தோரை, தகப்பனார்=தோபபனாா (துவ=தோ தக=தோ, இஙகே பின்வரும உதடடெழுத்தின சாயலால அகரம ஒகரமாம உதடடெழுத்தாக அது மருவிய எழுத்துககளின் இரு குறிலின அளவை நிரபப நெடிலெழுததுமாயிறறு) தோறபாடி=தோயபபாடி=தோபபாடி (துஷடன)

தோற்பை=தோப்பை (இருவேறு வல்லெழுத்துக்களில் முன்னது பின்னதோடு ஒன்றாதலும்-Progressive assimilation-காண்க. இடையில் யகரம் கெடலும் காண்க). தொழுநோய், தோணை (உகரம் கெடஅதனை நிறைவு செய முதல் நீள, ழ்+நோ=ணோ என்றாய்ப்பின், கெட்ட யகரத்தின் சாயலால் ஒ=ஐ ஆனமை காண்க); தோன்று=தோணு (ன்று=ணு) முதலிய மரூஉ வழக்கும் தமிழில் வழங்கக் காணலாம்

# தௌ

த்+ஔ என்ற உயிர்மெய் எழுத்து (பார்க்க. த, ஔ). ஔ தமிழில் பெரும்பான்மையும் வாராமையைக் குறிப்பிட்டோம் கல்வெட்டில் தௌ வரவில்லை தௌ எனத் தொடங்கும் 25 சொற்களில் தௌவல், தௌவை என்ற இரண்டே தமிழ்ச் சொறகள் ஆம இவை தவ்வல் தவ்வை என வரலே முறை பிற சொற்கள் பிற மொழியிலிருந்து வந்து மிக அருகி வழங்குகின்றன தௌடு (குதிரையின ஓடடபபோக்கு), தௌல் (daul-மதிப்பு) எனபவை உருதுச சொறகள இங்கே r=ட, d, dh=த எனத் தமிழிலாதல் காண்க தௌலதது (துரைததனம) அரபுச்சொலலாம து தூ (du) முதலான வடசொறகள் (துகித்ரி, தூது, துர், தூா, துரிதம, துஷ்டம்) முதலியவை விருத்தி பெறறுத தௌ என ஆகிய சொற்கள் தமிழில வழங்குகின்றன ஸ்தௌத்தியம் முதல் ஸ கெடடுத தமிழில வழங்கும இவற்றில ஹ=க, ஷ=ச, ய=க, ty=ததிய, d, dh=த mya=மிய, அ=அன் (ஆணபால), rbu=ர்ப்ப, lya=விய, ஸ=ச என வரல காண்க டுளி (ஆமை) = துளி என வருதலின் ட=த ஆம

# ந

*ஒலி* ந் என்பது மெய்யெழுத்து தகரம் பிறக்கிற இடத்தில் நாவும் பல்லும் நிற்க, வாய் வழியாக மட்டும் அன்றி மூக்கின் வழியாகவும் மூச்சு வெளிவர, மெல்லண்ணம் கீழிறங்க ஒலிக்கும் மூக்கொலியாதலின் மெல்லெழுத்து எனப் பெயர் பெறும ஆனால், பலலவர் காலத்திலிருந்து ன, ந என்ற இரண்டொலியும் ஒன்றாயின பலலின் வேருக்கும் ஈறறுக்கும் சிறிது மேலாக ஒலிக்கும் னகர ஒலியின் ஒலியே இதன ஒலியாக மாறியது பந்து என்பது போலத் தகரத்தின் முன்வரும் இடங்களில் மட்டும தகரத்திற்கு ஒத்த பல எழுத்தாகவே இது ஒலிக்கும தமிழ், மலையாளம் முதலிய சில மொழிகளிலன்றிப் பிற திராவிட மொழிகளில ன-ந வேறறுமை இல்லை அஞ்ஞை (அன்னை), செயகுந முதலிய சஙககால வழக்குகளே சில திசைச் சொற்களில் இவ் வேறுபாடு மறையத் தொடங்கியதனைக் காட்டும் எனலாம்

*பொருள்* ந என்பது நககீரன் என்பதில் போலச் சிறபபினையும், நக்கரைந்து (மிகக்கரைந்து) என்பதிற் போல மிகுதியினையும் குறிக்கும் தமிழ் முன்னீடாகவும (Prefix), நமித்திரர் (மித்திரர் அல்லாதார்) என்பதிறபோல எதிர் மறையைக் குறிக்கத் தமிழில் வந்து வழங்கும் வடமொழி முன்னீடாகவும் (உபசர்க்கம்) வழங்கும்

ந, நா, நி, நீ, நு, நூ, நெ, நே, நை, நொ, நோ, நௌ என்பன உயிர்மெய் எழுத்துக்கள் மொழிக்கு முதலில நகரம எல்லா உயிர் எழுத்துக்களோடும் வரும நகரம் வெரிந், பொருந் என்ற இரண்டு சொற்களில் பழஙகாலத்தில் ஈறாகி வந்தது நகர ஈறு உகரச்சாரியை பெறுவது இயலபாயிற்று வெரிந் வென் என மாறியது, பொருந் பெரும்பான்மையும வழககற்றது

இக்கால ந்த ந் ந நா நி நீ நு நெ நே நை நொ நோ என்ற எழுத்துக்கள் கல்வெட்டில் சிறப்பு வடிவம பெற்று வழங்காமை அறிக பார்கக தே, தோ

*வரிவடிவம அடுதத பக்கததில்*

# ப

*ஒலி:* பகரம் நெடுங்கணக்கில் ஒன்பதாம் மெய்யெழுத்து. பல சொற்கள் இந்த மெய்யெழுத்தோடு உயிர்களில் ஒன்றன் பின் ஒன்று காண்கிறோம். மொழிக்கு ஈற்றில் வல்லெழுத்து நிற்பதில்லை. இலக்கிய வழக்கில் தமிழில் ஔ, எ என்பன நீங்கிய பிற உயிர்கள் ஈற்றில் வரும். முற்றியலுகரத்தோடு முடிந்த பகரம் தபு என்ற ஒரு மொழியில் மட்டுமே உண்டு. ஔ என்பது பேச்சு மொழியில் இல்லாமையால் அது தவிர ஈற்று ஐகாரம் உப்பை>உப்பெ என எகரமாக ஒலித்தலாலும், பேச்சு மொழியில் வரும் எல்லா உயிரும் பின் வரப் பகரம் உயிர்மெய்யாய் மொழி ஈற்றில் வரும். மொழிக்கிடையில் பகர மெய்யின் பின் பகர மெய்யன்றிப் பிற வாரா பகர மெய், டகரம் (நட்பு), றகரம் (கற்பு), பகரம் (தப்பு), யகரம் (சாய்பு), ரகரம் (மார்பு), லகரம் (சால்பு), ளகரம் (கொள்பு), ழகரம் (வாழ்பு), மகரம் (அம்பு), னகரம் (என்பு), ணகரம் (பண்பு) முதலியவற்றின் பின் மட்டுமே வரும். வல்லெழுத்தின் பின்னும் மெய்யெழுத்தின் பின்னன்றிப் பிற இடங்களில் பகரம் வருவது வழக்கொழிந்தது; அங்கும் பகரம் வகரமாகத் திரிந்தது. பேச்சு மொழியில் பிற வல்லெழுத்தின் பின் வரும்போது அவ்வல் லெழுத்துக்களும் பகரமாகத் திரிந்தன; (கற்பு>கப்பு), (நட்பு>நப்பு). பகரத்தின் முன் வரும் மெல்லெழுத்துக்கள் மகரமாகத் திரிந்தன; (என்பு>எம்பு; பண்பு>பம்பு) பழைய இலக்கிய வழக்கில் குறிலின்பின் வரும் வகரம் பகரத்தின் முன் (அவ்+புதிய, அஃபுதிய=அவை புதிய) ஆய்தமாகத் திரிந்தபோது பகரத்தின் ஒலி உரசொலியாகும்.

ப என்பது இரண்டு இதழ்கள் ஒட்டும்போது எழும் இதழ் ஒலி (Labial sound) இன்று தமிழ் நாட்டின் பெரும்பான்மையான இடங்களில் வழங்கும் தமிழ் ஒலிப்பு முறையில், பல் என்பதிற்போல மொழிக்கு முதலிலும், தப்பு என்பதிற்போல இரட்டித்து வரும்போதும், P என்பது போன்ற ஒலிப்பிலா (Voiceless), வெடிப்பொலி (Plosive) யாகவும் வம்பு முதலியவற்றில் போல மெல்லெழுத்தின் பின்வரும்போது ஸ் என்பது போன்ற ஒலிப்புடைய (Voiced). ஒலியாகவும், கபம் என்பதிற்போல இரண்டு உயிர்களிடையே வரும்போது சில வட்டாரங்களில் b போன்ற ஒலியாகவும் (இந்த நூற்றாண்டின் முதல் கால் பகுதிவரை அந்த ஒலியே

வழங்கியது எனலாம்). சில இடங்களில் ϕ என்ற கிரேக்க எழுத்தின் ஒலிப்பிலா உரசு இதழ் ஒலியாகவும் சில இடங்களில் ய W என்ற ஒலிப்புடை உரசு இதழ் ஒலியாகவும் ஒலிக்கக் காண்கிறோம். விம்மியழும்போது பகரம் மூச்சினை உள்ளிழுத்து ஒலிக்கும் உள்வாங்கு ஒலி (Unplosive) யாகவும், உறழ்ந்து பேச்சு வழக்கில் வரும். கஃபு என்றதில் உள்ள ஆய்தம் ϕ என்ற உரசு ஒலியாம். ப என வடமொழியில் வழங்கும் உபத்மானீயம் என்ற ஒலியை ஒப்பிட்டுக் காண்க.

*பொருள்:* பகரம் எதிர்கால இடைநிலையாகும். சேர்ப்பார் முதலிய சொற்களைக் காண்க. என்மர், என்மனார் என்ற இடங்களில் இருந்த பழைய மகரமே மூக்கொலி நீங்கிப் பகரமாயிற்றுப்போலும். வல்லெழுத்துக்கும் மெல்லெழுத்துக்கும் பின்னன்றிப் பிற எழுத்துக்களில் பின் பகரம் வகரமாயிற்று பகரம் எதிர்கால இடைநிலையாக மட்டும் அன்றிக் காப்பு என்பதிற்போலச் சொல் ஆக்கநிலை உருபாகவும் (Word formative) உயிரோடு சேர்ந்து வரும். இங்கும் பகரம் முன் கூறியதுபோலச் சேர்வு முதலியவற்றில் வகரமாகும். தபம்>தவம்; உபமா>உவமா (உவமை) என்பனவற்றிற் போலப் பிறமொழிச் சொற்கள் தமிழான போது வகரமாகத் தொடங்கி இருத்தல் வேண்டும் மொழியிடையில் வல்லொற்றுக்கள் கெட்டு வருவது பழந்தமிழிலும் பிராகிருதத்திலுமாக இந்தியா முழுவதிலும் வழங்கிய வழக்காம். இடையில் பகரம் கெட்டு, தஅம், உஅமா என நின்றவை பின்னர் உடம்படுமெய் பெற்றுத் தவம், உபமா (உவமை) என வந்தன எனக் கருத இடம் உண்டு இத்தகைய இடங்களில் பகரம் இவ்வாறு வகரமாக மாறுவது பெருவழக்கான பிறகு சேர்வு என்பதிற் போலவும் பகரம் வகரமாயிற்று. பு என்ற விகுதி உ என்ற விகுதியாக மாறியதும் இதனாலேயே. உடம்படுமெய்யல்லாத மெய் என வழங்குவன இவ்வாறு எழுந்தனபோலும். இவ்வாறு மாறுவது முன் கூறியதுபோல இடை எழுத்துக்களின் பின்னும் உயிர் எழுத்துக்களின் பின்னுமே ஆம். வினை அடிக்கு ஏற்பப் பகரமோ வகரமோ எதிர்கால இடைநிலையாக வரும் என்று உரையாசிரியர்கள் எடுத்துக்காட்டுவர். ஆனால், படுப என்பதுபோலப் பலர் பாலில் வரும் பழைய வழக்கு மாறாது நின்றது. இவ்வாறு பகரம் வகரமாக முழுவதும் மாறுவதற்கு முன் சில காலம்வரை பகரமும் வகரமும் உறழ்ந்து வந்தனபோலும். ம>ப>அ>வ என வரலாறு கூறலாம். மொழிக்கு முதலிலும் பண்டி வண்டி என வருதலும் உண்டு.

சிலபோது பர்வதம் பருவதம் என ஆவதே அன்றிப் பருப்பதம் என ஆவதும்போல, வகரம் பகரமாதலும் உண்டு. f போன்ற பிறமொழி ஒலிகளும் பகரம் ஆகும். Coffee>காப்பி. ஆங்கில b தனிப்பகரமாகவும் (baby=பேபி), p இரட்டைப் பகரமாகவும் (Copy>காப்பி) தமிழில் வரும். இரட்டைப் பகரத்தில், முதல் பகரத்தில் ஒற்றுதல் உண்டேயன்றி விடுதலாம் வெடிப்பு இல்லை. எனவே, அதனை நெடில் பகரம் எனலாம். ஆனால், பேச்சு வழக்கில் இந்த நெடிற் பகரம் குறிற்பகரமாகவே ஒலிக்கிறது. ஒற்றையாக வந்தால் b என்ற ஒலியும் இரட்டையாக வந்தால் p என்ற ஒலியும் கேட்கிறோம்.

*வரிவடிவம்:*

கோலெழுத்து :

ப் ப பா பி பீ பு பூ பெ பே பை பொ

அசோகர்
தமிழ்க் குகை
கி.மு. 2, 3-ஆம் நூ
கி.பி. 7 ,,
8 ,,
9 ,,
10 ,,
11 ,,
12 ,,
13 ,,
14 ,,

வட்டெழுத்தின் தொடர்ச்சி அடுத்தபக்கத்தில் :

*வட்டெழுத்து :*

திருநாதகுன்றம் எழுத்துக்களும், வடஆர்காடு, புதுக்கோட்டை கோலார் முதலிய இடங்களில் கிடைக்கும் எழுத்துக்கள் வட்டெழுத்தும் கலந்து வருவதால் அல்வெழுத்துக்களும் இதன் தொடர்ச்சியாக இங்கே காட்டப்பட்டுள்ளது.

| | ப் | ப | பா | பி | பீ | பு | பூ | பெ | பே | பை | பொ | போ |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| அசோகர் | | | | | | | | | | | | |
| தமிழ்க் கல் கி.மு. 3ஆம் நூ | | | | | | | | | | | | |
| திருநாத குன்றம் கி.பி. 7ஆம் நூ | | | | | | | | | | | | |
| 8 ,, | | | | | | | | | | | | |
| 9 ,, | | | | | | | | | | | | |
| 10 ,, | | | | | | | | | | | | |
| 11 ,, | | | | | | | | | | | | |
| 12 ,, | | | | | | | | | | | | |
| 13 ,, | | | | | | | | | | | | |
| 14 ,, | | | | | | | | | | | | |
| 15 ,, | | | | | | | | | | | | |
| 17 ,, | | | | | | | | | | | | |
| 18 ,, | | | | | | | | | | | | |

# ம

மகரம், ம, ம், மஃகான் என்று இதனை வழங்குவர். வாயிதழ் இரண்டும் ஒற்ற, மெல்லண்ணம் கீழ் இறங்குதலால் மூச்சு மூக்கு வழியே மூக்கு வளியாக வருவதால் பிறக்கும் ஒலி இது. இதனை மெல்லெழுத்து என்பர். இது மொழிக்கு முதலிலும், இடையிலும், ஈற்றிலும் தமிழில் வரும். இதற்கு முன் உயிரெழுத்தும் யகர, ரகர, ழகரமும் வரும். ல ள வ வரின் முறையே மெல்லொலிச் சாயல் பெற்று, ன ண ம ஆகத் திரியும். வல்லினம் வருவதில்லை. மெலியில் ங வருவதில்லை.

*கோலெழுத்து:*

| | |
|---|---|
| அசோகன் காலம் | |
| கி. மு. 2, 3ஆம் நூ. | |
| கி. பி. 7ஆம் நூ. | |
| ,, 8 ,, | |
| ,, 9 ,, | |
| ,, 10 ,, | |
| ,, 11 ,, | |
| ,, 12 ,, | |
| ,, 13 ,, | |
| ,, 14 ,, | |
| ,, 16 ,, | |

*வட்டெழுத்து:*

| | |
|---|---|
| அசோகன் காலம் | |
| கி.பி. 7, 8-ஆம் நூ. | |
| ,, 9 ,, | |
| ,, 10 ,, | |
| ,, 11 ,, | |
| ,, 13 ,, | |
| ,, 14 ,, | |
| ,, 15 ,, | |
| ,, 17 ,, | |
| ,, 18 ,, | |

ஞகரம் வருவது உரிஞ் என்ற ஓரிடத்தில்தான்; பிற மெலி வரும். சிலபோது இவையும் மகரமாகத் திரியும்;

தண்+கால்=தங்கால்
தென்+கு=தெங்கு

மகரத்தின் முன் நிலைமொழி மகரம் கெடும்; மரம்+நன்று=மரநன்று. ஈற்று மகரம் வருமொழி முதலில் வரும் வலிக்கு இனமான மெல்லெழுத்தாம். மரம்+கிடந்தது=மரங்கிடந்தது. தொகை மொழியில் ஈற்று மகரம் கெட்டு வல்லெழுத்து மிக்கு முடியும். மரம்+பலகை=மரப்பலகை. மகரம் மூச்சொலி இழந்து வ என்றும் ஆம். அம்=அவ். முழி=விழி, சில போது வகரம்

மெல்லொலிச் சாயல் பெற்று மகரமாதலும் உண்டு. வானம்=மானம். மகரம் வகரத்தின் முன்னும் (தரும் வரம்) னகார ணகாரங்களின் பின்னும் (கேண்ம், போன்ம்) மாத்திரையில் குறுகும். முன்னைய மகரம் பல்லிதழ் மகரம் ஆகலாம்; அனுஸ்வாரமாகலாம். பின்னையதில் மகரம் னகார ணகாரங்களின் மெல்லொலியோடு ஒட்டிச் சிறிதளவே இதழ் மூடுவதால் ஒலிக்கும். மகரத்தில் முடியும் சொற்கள் பேச்சில் மகர ஒலி இழக்கும்; அப்போது அதன் உயிர் மூக்கொலி உயிராம் (Pukum=Puku).

மகரம், நான், நாம் என்பவற்றிற்போலப் பழைய பன்மைக்குறியாக இருந்தது எனலாம்.

என்மர் என்புழிப்போல மகரம் எதிர்காலம் காட்டும். இதுவே பின் பகரமாகிப் பின் வகரமாகவும் ஆயது போலும்.

மகரம் மத்திமம் என்னும் இசையின் குறி ஏழுத்தாம். திங்கள், சிவன், கூற்றுவன், காலம், படைப்போன், திருமால், நஞ்சு என்ற பொருளில் மகரம் வரும்.

*வடிவம்:* தொல்காப்பியம் பகரத்திற்கும் மகரத்திற்கும் வேற்றுமை காட்டுவதாக *உட்பெறுபுள்ளி உருவாகும்மே* என்ற சூத்திரத்திற்குப் பொருள் காண்பர் உரையாசிரியர். பகரத்தினுள் ஒருபுள்ளி பெற்று அது மகரமாம் என்பர் உரையாசிரியர். மெய்யெழுத்து என்பதைக் காட்ட வீரசோழிய உரையாசிரியர் மகரத்தின் மேல் புள்ளியிடுவதோடு உள்ளாலும் புள்ளி பெறுவதே மகரக்குறுக்கத்தின் வடிவம் என்று இதற்கு விளக்கம் கூறுவர்.

# ய

*ஒலி:* தமிழ் நெடுங்கணக்கில் *க* முதலாக வரும் மெய்யெழுத்துக்களில் இது பதினோராம் எழுத்து. *ம* என்பதற்குப் பின் வரும் ய, ர, ல, வ, ழ, ள என்ற ஆறும் இடையெழுத்துக்களெனத் தமிழில் வழங்கும். வல்லெழுத்துப்போல் வன்மையுமாகாமல், மெல்லெழுத்துப்போல் மென்மையும் ஆகாமல், இடை நிகரனவாய் நிற்பதால் இடையெழுத்தென்ற பெயர் வந்ததென இலக்கணப் புலவர் கூறுவர். உயிரெழுத்திற்கும், மற்றைய மெய்யெழுத்திற்கும் இடைநிகரனவாய் நிற்பன என்று கொண்டு இவற்றை அரை உயிர்கள் (Semi-vowels) என்று மேனாட்டார் வழங்குவர். இவற்றைப் *பிறப்பு வகையாலோ*, செவியுணர் ஒலி வகையாலோ ஓரினமாகக் கொண்டு ஆராய்வது அருமையென்று இந்நாளைய பேச்சொலியியல் (Phonetics) அறிஞர்கள் கருதுவர்.

எழுத்தொலிகளை *அலகு பெறுவன* (Syllabics), *அலகு பெறாதன* (Non syllabics) என்று யாப்பு நூலறிஞர் வேறு பிரிப்பர். *அலகு பெறுவனவற்றை* மேனாட்டார் *அசை ஒலிகள்* என்பர். இவை உயிரெழுத்துக்களும், அளபெடை பெற்ற மெய்யெழுத்துக்களுமாம். பிற ஒலிகள் அலகு பெறாதன ஆம். இவையே மெய்யெழுத்துக்களாகும். இவற்றிலே மூச்சு வரு வழி முழுதும் அடைபட்ட *மூடுமெய்கள்* (Stops) ஒரு வகை. அவ்வழி ஒரு சிறிது திறந்த *திறப்பு மெய்கள்* (Open consonants) ஒருவகை. இந்திறப்பு மெய்களும், ஒலிப்பொலிகளாகவோ *(Voiced)*, ஒலிப்பிலா ஒலிகளாகவோ (Voiceless) அமையலாம். இங்கும் மூடுமெய்களைப்போலத் தொடக்கநிலை (Onset), பிடிப்பு நிலை (Hold), விடுநிலை (Release) என மூன்று கூறுகளைக் காணலாம். இவற்றின் பிடிப்பு நிலையில், மூடுவதற்கன்றி ஒரு சிறிது திறப்பதற்கே முயற்சி எழுகிறது. இந்தப் பிடிப்புநிலை மிகச் சிறு கால அளவினது எனலாம். விடுநிலையோ, ஒலிவகையாலும், அளவுவகையாலும், அசைகளின் கோல வகையாலும் சிறந்து தோன்றுவதும் உண்டு. இதனை யகர வகர உயிரில் காணலாம். திறப்பு ஒலிகளை மூன்று வகையாகப் பாகுபடுப்பது உண்டு. வாய் மூடியிருந்தாலும், மூக்குத் திறந்திருக்கும் மெல்லொலிகள் (Nasals) ஒருவகை. வாய் இடையே முழுத்தடை எழும்போது நாவின் இருபுறத்தும், பற்களினூடும், இதழ்களினூடும் மூச்சு ஓட நிற்கும் திறப்பொலி இரண்டாம் வகை. இவற்றை இதனால் ஓர மெய்கள் (Laterals) என்பர்.

உரசு ஒலிகள் (Fricatives) மூன்றாவது வகையாகும். இடையண்ண வல்லொலியும், மெல்லொலியும் முறையே சகரமும் ஞகரமும் ஆம். இடையண்ண உரசொலிகளில் ஒலிப்பிலா ஒலி ʃ என்பதாம். மொழிக்கு முதலிலும் உயிர்களுக்கிடையிலும் வரும் தமிழ்ச் சகரம் பல இடங்களில் இந்த ஒலியே பெறுவதைக் கண்டோம். ʃ கரத்திற்கு இனமான ஒலிப்புடை ஒலி யகரம் ஆகும்; இதனை ஒலிக்கும்போது நாவின் மேற்புறம் தட்டையாக நிற்கும்போது, நாவிற்கும் அண்ணத்திற்கும் இடையே உள்ள இடைவெளி மிகமிகச் சிறிதாக அமையும்; ஆனால், பரந்து நிற்கும்; அவ்விடைவெளி வழியாக மூச்சானது உரசிக்கொண்டே வெளிவரும்.

*அண்ணஞ் சேர்ந்த மிடற்றெழு வளியிசை*
*கண்ணுற் றடைய யகாரம் பிறக்கும்,*

என்பது தொல்காப்பியம். *மிடற்றெழு வளியிசை* என்பதால் யகரம் ஒலிப்புடை ஒலி எனக் கொள்ளலாம்; *அண்ணம் சேர்ந்த* என்பதனால் அது வல்லண்ண ஒலி என்பது தெளிவு; *கண்ணுற் றடைய* என்பது இஃது உரசொலி என்பதைக் குறிப்பதாகக் கொள்ளலாம். *உரலாணியிட்டாற் போலச் செறிய* என்று நச்சினார்க்கினியர் உவமை காட்டிப் பொருள் கூறுவர். இடைவெளியானது ஒரு தட்டைப் பிளவு போலப் பரந்து நிற்பதன்றிக் குவிந்து நிற்குமென இந்த உவமைகொண்டு நாம் முடிவு செய்தலாகாது. யகரம், இகரத்திற்கொத்த இடையெழுத்து எனலாம். உரசுதல் உள்ளபோது இகரம் யகரமாகும். அலகுபெறும் உயிரொலி ஈற்றில் படுத்துச் சொல்லப் பெறும்போது இகரம் யகரமாகும். தொல்காப்பியர் காலத்திலேயே இந்த மாறுதல் நிகழ்ந்துவிட்டது. போஇ போய் என்றானது. *இன்* என்ற இறந்தகால இடைநிலையின் மொழியீற்று மெல்லெழுத்தாம் னகரம் கெட்டுச் சூடி என்பதைப்போல இகரமாக நிற்கும்போது உயிரெழுத்திற்குப்பின் யகரமாக ஈற்றில் மாறும்; அதனால் *போ* என்பதன் அடியாகப் பிறந்த வினையெச்சம் போய் என்று அமையக் காண்கிறோம்.

*இகர யகரம் இறுதி விரவும்* என்பது தொல்காப்பியம். இகரத்தின் பிறப்பிடமே யகரத்தின் பிறப்பிடமாம். ஆனால், நாவானது இகரத்திற்கு எழ வேண்டியதற்கு மேலும் சிறிது உயரமாகவே அண்ணத்தை நோக்கி நிற்கும்போதே யகரம் ஒலிக்கும். இந்த இடைவெளியின் உயரவேற்றுமை ஒன்று அல்லது இரண்டு மில்லிமீட்டர்தான் இருக்கும். எனவே, இவற்றிடையே உள்ள வேற்றுமை உயரத்தாலன்றி வேறு வகையால் எழுந்ததாதல் வேண்டும். ஒலிப்பு எழும்போது உள் நாவின் பின்புறத்தே (Pharynx) நிகழும்

ஒத்தொலிப்பின் (Resonance) வேற்றுமையே இந்த வேற்றுமைக்குக் காரணமென்பர்.. அகர ஆகாரத்தின் முன்னோ (மரயானை) உகர ஊகாரத்தின் முன்னோ (வரையூடு) யகரம் வரும்போது அதன் விடுநிலையில் நாவினியக்கம் பெரிதளவில் நிகழும். அங்கே, யகரம் ஒலிக்கும் முன்னண்ணத்தை விட்டு நாவானது பின் செல்ல வேண்டுமன்றோ, அப்பொழுதெல்லாம் ஒலிப்பும், ஒத்தொலிப்பும் தொடர்ந்து நிகழ்வதால் ஒலிவேறுபாடு தெற்றெனத் தோன்றும். அத்தகைய நிலையில் உரசுதல் குறைந்தும்போகும். அகர உகரங்களின் முன் நாவானது செறிந்தோ உயர்ந்தோ அமையவேண்டுவதில்லை. இகரத்தின் முன் யகரம் வரும்போதோ யகரம் ஒலிக்குமிடத்திலிருந்து இகரம் ஒலிக்குமிடத்திற்கு நாவானது மாறுதற்கில்லை. விடுநிலை ஒன்றும் அங்கு எழவேண்டுவதில்லை. ஆதலின், அங்கே இகரமும் யகரமும் வெவ்வேறென்றே செவிப்புலன் ஆகவேண்டுமானால், யகரத்தின் பிடிநிலையில் உரசுதல் மிக்கெழுதல் வேண்டும்.

சில உயிரொலிகள் தொடங்கும் நிலைக்கும் முடியும் நிலைக்கும் இடையே வேறுபடுவதனைக் கண்டோம். அவற்றைக் கூட்டொலி (Diphthong) என்று விளக்கினோம். தமிழிலே இவற்றின் தொடங்கு நிலை உரத்தும் நீண்டும் விளங்கும். *ஐ* என்பது அய் என்பதாம். இவற்றைக் குறைந்துவருங் கூட்டொலி என்பர். ஈகாரம் ஈய் என ஒலிப்பதனையும் *ஏ* என்பதும் *ஏய்* என்று ஒலிப்பதனையும் குறிப்பிட்டோம். இய் முதலியன கூட்டொலிபோல ஒலிக்கின்றன என்பர். ஆனால் இவை உண்மையில் கூட்டொலிகளா அல்லது இருவேறு ஒலிகளில் மயக்கமா என்றாராய்தல் வேண்டும். ஒரு முழு உயிரை அடுத்து உடம்படுமெய் போன்ற நெகிழுயிர் (Glide) முன்னோ பின்னோ அமைய வருவதே கூட்டொலி என்பர் ஸ்வீட்டு (Sweet) என்ற அறிஞர். இது எல்லா இடத்தும் உண்மையாவதில்லை. யு என்பது ஒலியனாகவே ஆங்கிலத்தில் வரக் காண்கிறோம். ஆனால் தமிழில் யகரம் அவ்வாறாகாமல் மெய்யும் உயிரும் மயங்கும் மயக்கத்தினிடையேதான் வரக் காண்கிறோம்.

யகரம் பழந்தமிழில் ஒலியனா (Phoneme) என்பதொரு கேள்வி. யகரம் உடம்படு மெய்யாக வருவது தொல்காப்பியர் காலத்தே கட்டாயமில்லை. எனவே, அக்காலத்தில் உயிர்களும் ஒன்றோடொன்று மயங்கி வருமெனத் தெரிகிறது. *போஇ, ஆஇ* என்பனவே பிற்காலத்தே *போய், ஆய்* என ஆயின. உயிரளபெடைகளும் ஈரலகு பெறும் உயிர் மயக்கமேயாம். உடம்படுமெய் வருமிடத்தை ஆராய்ந்தாலும், இய், ஈய், எய், ஏய், ஐய் எனக் கூட்டொலிகள் போல் இவை ஒலிப்பதனைக் கண்டோம். இந்த நெகிழொலிகளே யகர உடம்படுமெய்யாக அமைந்தன. எனலாம் இந்த வழக்கு மிகப் பழைய

வழக்கன்று. பழைய வழக்கு இ,எ,ஏ,ஐ என்பன மொழி முதலாக வரும்போது, அவற்றின் முன்னாக யகரமெய் நெகிழொலியாக வந்ததெனலாம். இன்றும் இந்த ஒலிகளைத் தமிழர் ஒலிக்கும்போது, மேனாட்டார் இவற்றின் முன்னே யகர ஒலி கேட்பதாகவே கூறுகின்றனர். இதற்கேற்ப 2,3 நூற்றாண்டுகளாக வழங்கும் ஏட்டுச் சுவடிகளிலும், மொழிக்கு முதலிலும் இவை, யிகரம் முதலியனவாக எழுதப் பெற்றிருக்கக் காண்கிறோம். எனவே, மாயிரு, கோயில், ஆயிடை முதலிய பழைய வழக்குக்களில் யகரவுடம்படுமெய் வருமொழி அல்லது வருமொழி உறுப்பினை ஒட்டி வந்திருக்கக் காண்கிறோம். பிற்காலத்தோ, நிலைமொழியை ஒட்டியே யகரவுடம்படுமெய் வருதல் பெருவழக்காயிற்று. இதனையே பவணந்தியார் குறிக்கின்றார். ஆனால், இதற்கும் பிற்காலத்திற்கு வருவோமானால், யகரம் நெகிழுயிராக, இகர முதலியவற்றின் பின்னும் முன்னும் வரக் காண்கிறோம் (தீய்-யிது). எனவே, மொழிக்கு இடையே வரும் யகரத்தை உடம்படுமெய்யென்று ஒதுக்குதல் கூடும்.

ஆனால், மொழிக்கோ, மொழியுறுப்பிற்கோ ஈற்றில் வரும் யகரம் இத்தகைய நெகிழொலியாகாது. எனினும், மொழியீற்று யகரத்தை, *போய்* என்பதைப் போல இகரத்தின் *ஈற்றுத் திரிபு என்று* கொள்ளுதல் கூடும். ஆதலின், ஆராய எஞ்சி நிற்பது மொழிக்கு முதலாம் யகரமேயாம்.

பழந்தமிழில், தொல்காப்பியத்தின்படி யகரம் ஆகாரத்துடன் தான் மொழிக்கு முதலாம். இவ்வளவு சிறிய அளவில் யகரம் வழங்குவது அஃது ஒலியன் தானா என்ற ஐயத்தைக் கிளப்புகிறது. அங்கும் நெகிழொலியாக வந்து யகரமாகத் திரியும் இகரமென்றே அதனைக் கொள்ளலாகாதா என்பது கேள்வி. பிற்காலத் தமிழில் உயிர்கள் உயிர்களோடு உடம்படுமெய்யின்றி மயங்குவதில்லை. ஆதலின், அந்த நிலையில் இ+ஆ=யா எனக் கொள்வதற்கில்லை. ஆனால் தொல்காப்பியர் காலத்தில் உயிரொடு உயிர் மயங்கும் மயக்கம் உண்டெனக் கூறியுள்ளோமாதலின் யகரத்தை இகரமெனக் கொள்வதில் அத்தகைய தடையொன்றுமில்லை.

யா என்பது குறுகினால் எகரமாகவே குறுகக் காண்கிறோம். யான்-என்; யாது-எது; யாம்-எம் என வருதல் காண்க.

ஆனால், வல்லண்ண ஒலியான *சகர ஞகரங்கள் சான்றோர்>ஆன்றோர்*, ஞீர்-நீர்>ஈர் என்பவற்றிற்போல மொழிக்கு முதலில் கெட்டு நிற்பதும், மொழிக்கு முதலில் அகரத்திற்கு முன் வந்தால், செத்தான் ஞெண்டு-என அகரத்தை *எகரமாக்கி* வருவதுபோல வல்லண்ண ஒலியான யகரமும்,

யானை, யாது முதலியனவற்றில் யகரம் முதலில் கெட்டு ஆடு ஆறு என வருவதோடு, யகரத்தின் பின்வரும் ஆகாரம், யகரம் கெட்டபின் எகரமாகியும் வருதலை யாது-எது; யான்-என் முதலிய எடுத்துக்காட்டுக்களில் காணலாமென்றும் கூறத்தகும்.

உயிர்-உசிர் என்பதுபோல யகரத்தினிடத்தே சகரம் வருவதனைச் சேரி வழக்கிலும், கன்னடம் முதலிய பிற மொழி வழக்கிலும் காண்கிறோம். யகரமோ சகரமோ எது பழையது என்பது கேள்வி. உயிர்களுக்கிடையே வரும் வல்லெழுத்து பகல்>பால் (Pakal-Paal) என்பதைப் போலக் கெடுதலும் உண்டு. அதேபோல உசிர் உஇர் என்றாகிப் பின் யகரவுடம்படுமெய் பெற்று உயிர் என்று நின்றதென்றும் கொள்ளலாம்.

பிற்காலத் தமிழில் வடமொழி முதலிய பிறமொழிச் சொற்கள் புகுந்ததால் யுகம், யூபம், யோகம், யௌகந்தராயணர் என இகர ஈகார, எகர, ஏகார, ஐகாரங்களல்லாத உயிரெழுத்துக்களோடு யகரம் மொழி முதலாக வரக் காண்கிறோம். எனினும் இகர முதலான முன்னுயிர்களோடு (Front vowels) யகரம் இன்றும் வாராமை காண்க. யகரத்தையும் இகர முதலியவற்றையும் மொழிக்கு முதலிற் பிரித்தறியுமாறு ஒலிப்பது தமிழ் நாவிற்கு அருமைபோலும். அவ்வாறு ஒலியாமையே தமிழ்ப் பழக்கம்.

யகரம் வருமொழி முதலாக வரும்போது நிலைமொழி ஈற்றுக் குற்றியலுகரம், குற்றியலிகரமாகத் திரியுமென்று முன்னரே கண்டோம். பிற்காலத்தே மொழியின் ஈற்றில் வரக்கூடிய மெல்லெழுத்தும் இடையெழுத்தும் உகரச் சாரியை பெற்று வருவது இயல்பாய்து (மண்ணு, பல்லு). இந்த உகரமும் வருமொழி முதலில் யகரம் வரும்போது இகரமாகத் திரிவதனைக் காணலாம் (மண்ணியாது சொல்லியாது). இவ்வாறு உகரத்தின் திரிபாகக் கொள்ளாமல் ஈற்றில் வரும் மெல்லெழுத்து அல்லது இடையெழுத்தின் பின் இகரம் நெகிழொலியாக வருகிறதென்று கூறுதலும் கூடும். இந்த இகரத்தைச் சாரியை என்பாரும் உளர்.

யகரம் மூக்கொலி பெற்றால் ஞகரம் போன்றே ஒலிக்கும். இவ்வாறு யகரம் ஞகரமாகத் திரிவதைத் தொல்காப்பியர் குறிக்கின்றார். மண், பொன் போன்று மெல்லெழுத்தில் முடியும் சொற்களின் பின்னே யாத்தல் என்ற வினைச்சொல்லடியாகப் பிறந்த சொற்கள் வருமானால், யகரமும் மெல்லொலிச்சாயல்பெற்று ஞகரமாகும் என்பர் (மண்யாத்த மண்ஞாத்த). வடமொழி யமன் என்ற சொல்லிலுள்ள யகரம் பின்னே மெல்லெழுத்து வருவதால் ஞகரமெனும் மெல்லொலியாகும் (யமன் ஞமன்)

தமிழில் வாராத நிலையில் யகரம் ஆ அல்லாத உயிர்களோடு மொழிக்கு முதலாகிப் பிறமொழிச் சொற்களில் வந்தால், அவை தமிழியல்பிற்கேற்ப மாறியே தமிழில் வரும், அகரத்தோடு மொழி முதலாகும் யகரத்தின் முன் இகரம் முந்து நிலை ஒலியாக (Prothesis) வரும் (யக்ஷன்-இயக்கன்;யந்திரம்-இயந்திரம்). உகரத்தோடு யகரம் மொழி முதலாகும்போது உகரம் முந்து நிலையாகும் (யுத்தம்-உயுத்தம்). யகரம் இத்தகைய இடங்களில் கெடுவதும் உண்டு. (யுத்தி-உத்தி) மொழி முதலில் வரும் யகர அகரம் தமிழில் எகரமாகத் திரிவதும் உண்டு. (யமன்-எமன்; யந்திரம்-எந்திரம்). பிற்காலச் சோழப் பேரரசின் காலத்தும், பல்லவர் காலத்தும் யுகம், யௌகந்தராயன் போன்ற வடமொழிச் சொற்கள் தமிழில் நிறையப் புகுந்தன. ஒட்டக்கூத்தர் நூலில் இந்த நிலையைக் காணலாம். ஆனால், சேக்கிழார் காலத்திலிருந்தே நிலைமை சிறிது மாறியதால் தமிழுக்கேற்பப் பிறமொழிச் சொற்கள் மாறுவதனை வரையறுத்துத் தம் காலத்திற் கண்டபடி பவணந்தியார் கூறலாயினர். வடமொழியில் மெய்யெழுத்துக்களின் பின்னர் யகரம் கூட்டெழுத்தாக அமையும் (க்ய, ந்ய). இத்தகைய இடைநிலை மெய்ம்மயக்கம் தமிழில் இல்லாமையால் ந்யாயம்-நியாயம்; க்யாதி-கியாதி என அடுத்தடுத்து வந்த இரண்டு மெய்யெழுத்துக்களைப் பிரிக்க இடையே இகரம் வரும்.

*பொருள்:* யகரம் இகரத்தின் திரிபென்று கூறினோம். *இன்* என்ற இறந்த கால இடைநிலை *இ* என்று நிற்பதன் திரிபாக யகரம் வருதலில் அதுவும் இறந்தகால இடைநிலையாம். இகரம் பிறவி முதலியவற்றிற்போலத் தொழிற்பெயர் விகுதியாகவும் வரும். உடம்படுமெய் வாராத காலத்து அகர இகரம் ஒன்றாகி ஐ என ஒலிக்கும் (பிற+ஐ=பிறை). இந்த ஐகாரம் உண்மையில் அ+இ, அ+ய் என்பதேயாம். இதனை முன்னரே குறித்துள்ளோம்.

*வடிவம்:* இதன் வரலாற்றைக் காண்க:

*கோலெழுத்து* வடிவம் அடுத்த பக்கத்தில் கொடுக்கப்பட்டுள்ளது.

| | ய் | ய | யா | யி | யீ | யு | யூ | யெ | யே | யை | யொ |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| அசோகர் பிராமித் தமிழ்க் கல்வெட்டு | | | | | | | | | | | |
| கி.மு.2,3ஆம் நூ. | | | | | | | | | | | |
| கி.பி.7ஆம் நூ. | | | | | | | | | | | |
| கி.பி.8ஆம் நூ. | | | | | | | | | | | |
| கி.பி.9ஆம் நூ. | | | | | | | | | | | |
| கி.பி.10ஆம் நூ. | | | | | | | | | | | |
| கி.பி.11ஆம் நூ. | | | | | | | | | | | |
| கி.பி.12ஆம் நூ. | | | | | | | | | | | |
| கி.பி.13ஆம் நூ. | | | | | | | | | | | |
| கி.பி.14ஆம் நூ. | | | | | | | | | | | |
| கி.பி.16ஆம் நூ. | | | | | | | | | | | |

*வட்டெழுத்து:* இதன் வரலாற்றைப் பின்கண்டவாறே தொடர் பக்கத்தில் அறிந்துகொள்க.

| | ய் | ய | யா | யி | யீ | யு | யூ | யெ | யொ | யோ |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| அசோகர் | | | | | | | | | | |
| பிராமித் தமிழ்க் கல்வெட்டு கி.மு.2,3ஆம் நூ. | | | | | | | | | | |
| கி.பி.8ஆம் நூ. | | | | | | | | | | |
| கி.பி.9ஆம் நூ. | | | | | | | | | | |
| கி.பி.10ஆம் நூ. | | | | | | | | | | |
| கி.பி.11ஆம் நூ. | | | | | | | | | | |
| கி.பி.12ஆம் நூ. | | | | | | | | | | |
| கி.பி.13ஆம் நூ. | | | | | | | | | | |
| கி.பி.14ஆம் நூ. | | | | | | | | | | |
| கி.பி.15ஆம் நூ. | | | | | | | | | | |
| கி.பி.17ஆம் நூ. | | | | | | | | | | |
| கி.பி.18ஆம் நூ. | | | | | | | | | | |

வட்டெழுத்தோடு கோலெழுத்து மயங்கிய மயக்கத்தில் வளர்ந்த தொண்டை நாட்டு வளர்ச்சியைக் அடுத்தபக்கத்தில் காண்க.

*வட்டெழுத்தும் கோலெழுத்தும் மயங்கிய நிலை.*

| | |
|---|---|
| வட்டெழுத்தும் கோலெழுத்தும் மயங்கிய சுலை | |
| 7 ஆம் நூ. | |
| 8 " | |
| 9 " | |
| 10 " | |

# ல

இது இடையெழுத்துக்களில் மூன்றாவது. மெய்யெழுத்துக்களில் பதின்மூன்றாவது, மேலண்ணத்தின் இடையில் பல்லையொட்டித் தடையெழுவது இவ்வொலியின் பிறப்பில் நாம் காணும் சிறப்பியல்பாகும். ஆனால், அந்தத் தடையின் இருபுறத்தும், பற்களின் ஊடேயும், இதழ்களின் ஊடேயும் உள்ளெழுவளி புறத்தே போக இடமுண்டு. இவ்வொலி பிறக்கும்போது நாக்கின் ஓரம் பரந்து, அருகேயுள்ள பற்களில் ஏறி, வீங்கி ஒற்றி நிற்கும் என்பர். *அண்பல் முதனலை நா விளிம்பு வீங்கி ஒற்ற லகாரம் பிறக்கும்* (தொல், எழு. பிறப்பு - 14) என்பது இலக்கண நூல். இங்கும், இரு புறத்தும் வளிபுறத்தே ஓட இடமுண்டு. தமிழில் இந்த ஒலி குற்றியலுகரத்தின் சாயல் பெற்றிருக்கக் காணலாம். *வட்டில்* என்பது *வட்ல்* என ஒலிக்கும்போது இது புலனாகும். இந்த லகரம் வல்லெழுத்து பின்வரக் *கற்பு* முதலியவற்றைப் போலவோ, கற்குறை என்பது போலவோ, அப்பின்னொலியோடு ஒன்றி நிற்கும்போது *றகரமாக மாறு*மென்பது தமிழ் இலக்கணக் கொள்கை. இத்தகைய இடங்களில் ஒலிப்பொலியாக உள்ளது, பின்வரும் ஒலிப்பிலா எழுத்தின் சாயல் பெற்று, ஒலிப்பிலா எழுத்தாக மாறக் காண்கிறோம். அதற்கு ஏறக்குறைய ஒத்த ஒலியாக றகரத்தை எழுதி வந்தனர். பிற்காலத்தே லகரத்தை எழுதி, அதன் பின்னர் வருகின்ற வல்லெழுத்தை இரட்டித்து எழுதும் வழக்கம் தென்னாட்டுக் கையெழுத்துச் சுவடிகளில் பெருவழக்காகப் பயின்று வரக் காண்கிறோம். மலையாளத்தில் இதுவே இலக்கண விதியாகவும் அமைந்துள்ளது. கட்ல், வட்ல் என்பன போன்ற சொற்களில் சிலபோது டகரத்தை ஒலித்த பின் லகரத்தை ஒலிக்க வாராமல் தகரத்தையே ஓர ஒற்றொலியாக ஒலிப்பதுமுண்டு. ஆனால் பெரும்பான்மையும் இவற்றிடையே குற்றியலுகரம்போன்ற ஒரு மூச்சொலியும் கேட்பதுண்டு. யகரம் பின்வரும் போது லகரம் இகரச்சாயல் பெற்றதுபோலச் சிறிது சுரம் மிக்கு ஒலிக்கக் காணலாம். இந்த இடங்களில் இடையே யகரத்தை இட்டு எழுதுவதே வழக்கமாகி விட்டது, பல் யாது-பல்லியாது. ஆனால் பிற இடங்களில் உகரமிட்டு எழுதக் காண்கிறோம். பல்-பல்லு.

லகரம் தமிழில் மொழிக்கு முதலாகவில்லை. லகரத்தின் பின்னே

லகரம் தமிழில் மொழிக்கு முதலாகவில்லை. லகரத்தின் பின்னே உகரமோ ஒகரமோ வருமானால், லகரத்தின் முன் உகரத்தை முன் வைத்தொலிப்பது பழைய வழக்கம்: உலுகம் - உலோகம். லகரத்தின் பின் அகரம் வரும்போது அதில் எகரக்கூறு இருப்பதுபோலத் தமிழர்க்குத் தோன்றியது போலும்; லெட்சுமணன் என்று ஒலிப்பது காண்க. எனவே லகரத்தின் பின் இத்தகைய அகரம் வந்தாலும், இ,ஈ,எ,ஏ,ஐ முதலியன வந்தாலும் முதலொலியாக இகரத்தையே அமைத்து வழங்கினர்: இலேசு, இலயம், இலக்குமணன். லகரம் மொழிக்கு ஈற்றில் வரும். ஆனால் இடைக்காலத்திலிருந்து பெரும்பான்மையும் நகரம் நீங்கலாகப் பிற ஈற்றுமெய்யெழுத்துக்கள் பின்னே உகரத்தைப் பெற்றே ஒலித்து வரலாயின: பல்-பல்லு; சொல்-சொல்லு (யகர ஈறு ஈற்றில் இகர ஈறாகவோ, இகர ஈறு பெற்றோ ஒலிக்கும்- தாயி - தாஇ). மொழிக்கு இடையில் வல்லெழுத்தின்முன் றகரமாதலை முன்னரே கண்டோம் அவ்வாறு ஒன்றிவாரா நிலையில் லகரத்தின் பின்னர், க,ச,ப,வ,ய என்ற மெய்யெழுத்துக்கள் மட்டுமே மயங்கிவரும. பிற எழுத்துக்களோடு மயங்காமையால் லகரத்தின் முன் தகரம் வந்தால் லகரமும் றகரமாகும்; தகரமும் றகரமாகும் லகரத்தின் முன் நகரம் வந்தால் லகரமும் மெல்லெழுத்துச் சாயல் பெற்று னகரமாகும் அவ்வாறே மகரமும் ஞகரமும் வருமொழி முதலாக வரும்போதும் ஈற்று லகரம் னகரமாகும். தனிக் குற்றசையின் ஈற்றில் லகரம் வரத் தகரத்தில் தொடங்கும் மொழி அல்வழிப்புணர்ச்சியில் பின்வருமானால் லகரம் ஆய்தமாகும் தகரம் முன்போல் றகரமாகும். கல் + தீது = கஃறீது. கஃறீது என்பது கற்றீது என்பதன் மாற்றொலியமைந்த சொல்வடிவம். இங்கு வரும் ஆய்தத்தை ஆய்தக் குறுக்கமென்பர் பின் வந்த இலக்கண ஆசிரியர்கள்.

*கோலெழுத்தின் வடிவம் வரும் பக்கத்தில் காட்டப்பட்டுள்ளது.*

| | ல | லா | லி | லீ | லு | லூ | லெ | லே | லை |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| கி.மு 3ஆம் நூ. | ᒍ | ᒍ | | | | | ᒍ | ᒍ | ᒍ |
| கி.பி. 7ஆம் நூ. | ல | | | | | | | ேல | |
| | ல | | | | | | | | |
| 8ஆம் நூ. | ல | | | | | | லெ | | |
| | ல | | | | | | லெ | | |
| | ல | லா | லி | | லு | லூ | லெ | லே | |
| | | | | | | | லெ | லே | |
| 9 & 10ஆம் நூ. | ல | | | | | | | | |
| | ல | லா | லி | | லு | லூ | | லே | |
| | | | | | | | | லே | |
| 11ஆம் நூ. | ல் | | | | | | | லே | |
| | ல | | | | | | | லே | |
| | ல | | | | | | | லே | |
| | வ | லி | லி | லீ | லு | லூ | லெ | லே | |
| 12ஆம் நூ. | ல | | | | | | | லே | |
| 13ஆம் நூ. | ல | | | | | | | லே | |
| | ல | | லி | | லு | | | லே | |
| | ல | | | | | | | | |
| 14ஆம் நூ. | ல | | | | | | | லே | |
| 16ஆம் நூ. | ல | | | | | | | லே | |

லகரம் ரகத்தோடு மாறாடிச் சில இடங்களில் வரும். லகரத்திற்கு ரகரம் போலியென்பர் இலக்கண நூலார். பந்தல் - பந்தர், சாம்பல் - சாம்பர். குற்றியலுகரத்தோடு அர் மாறாடும் என்பாரும் உண்டு. வண்டு - வண்டர், பந்து - பந்தர், இவை இருவேறு வட்டார வழக்கையும் குறிக்கலாம் லகரவீற்றில் முடியும் வினையடிகள் இறந்தகால வடிவத்தில் னகரமாகித் தகர இடைநிலை பெற்று, அந்தத் தகரத்தையும் றகரமாக்கப் பார்க்கிறோம் இவ்விடங்களில் செல் முதலியவற்றின் பழைய வடிவங்களில் னகரமே ஈறாக வந்தது எனக் கருத இடமுண்டு மெல்லெழுத்துக்கள் ஈற்றில் மூக்கொலியிழந்து நிற்பதும், கெடுவதும், தமிழிலும் திராவிட மொழிகளிலும் இயல்பு எனலாம் இன்-இல், ஆன்-ஆல் என்பனபோல, சென் - நின் என்பன செல், நில் என்றாயின எனலாம். வேறு சில அடிச்சொற்கள் இறந்த காலத்தே,

லகரம் றகர மாகிப் பின்வரும் தகரத்தையும் றகரமாக்கி நிற்கக் காண்கிறோம்: கல் - கற்று.

எல்லா மெல்லெழுத்துக்களையும் போலத் தனிக்குற்றசையின் பின் ஈற்றொலியாக வரும் லகரம் உயிர் பின் வரும்போது இரட்டிக்கும்: கல்-அதர்-கல்லதர். இந்த விதி கில் முதலியவற்றிற்குப் பொருந்தாமையால் காலத்தால் பின்னெழுந்த விதியேயாம். எனினும் தொல்காப்பியத்திற்கும் முன்னரே நிலைத்துவிட்ட விதியெனலாம். சில்ல, பல்ல என்பனபோன்ற வடிவங்களும் அக்காலத்தேயே தோன்றிவிட்டன. தனிக்குற்றசையின் பின்னன்றி வேறு இடங்களில்வரும் ஈற்று லகரம் பின்வரும் நகரத்தினை னகரமாக ஆக்கியபின் கெடும்: நால்-நூறு-நானூறு.

*வட்டெழுத்து*

7 ஆம் நூ

8 ஆம் நூ

9 ஆம் நூ.

10 ஆம் நூ.

11 ஆம் நூ

12 ஆம் நூ.

13 ஆம் நூ.

14 ஆம் நூ.

15 ஆம் நூ.

17 ஆம் நூ.

18 ஆம் நூ.

# வ

வகரம் தமிழ் நெடுங்கணக்கில் மெய்யெழுத்துக்களின் வரிசையில் 14ஆவது எழுத்து. வல்லெழுத்தல்லாதவற்றை மெல்லெழுத்தென்றும், ஓரஎழுத்தென்றும் பிரித்த பின்னர், எஞ்சியுள்ளவற்றை உரசெழுத்து என்றோர் இனமாக்கிக் கூறுவர். லகர ளகரம் நீங்கியவை தமிழில் இந்த இனத்தைச் சேர்ந்தவை எனலாம். உஸ்ஸென ஒலிக்கும் ஒலிகள் தமிழிலில்லை. தொல்காப்பியத்தின்படியும், பின்வந்த இலக்கணங்களின்படியும், இன்று ஒலிக்கின்ற முறைப்படியும் மேற்பல்லும் கீழிதழும் சேரும்போது ஒலிப்போடு மூச்சு வெளிவருகையில் கேட்கின்ற ஒலியாக வகரம் அமைந்துள்ளது. தமிழில் வகரம் 'உரசல் குறைந்து ஒழுகொலியாக (Continuant) கேட்கிறது. தொல்காப்பியர் இதழென்று பொதுவாகக் குறிக்கின்றமையால் மேலிதழும் கீழ்ப்பல்லும் சேர்ந்தபோதும் இவ்வொலி வருமென்பர் சிலர்; அது வலிந்து ஒலிப்பதாகவே முடியும். தொடப்பெறுமிடங்கள் (Place of articulation), போய்த் தொடும் உறுப்புக்கள் (Articulators) என்று வேறு பிரிக்கும்போது போய்த்தொடும் உறுப்பாகக் கீழிதழே அமையும்.

இவ்வாறு இதழ்ப் பல்லின் (Labio dental) ஒலியாக வகரம் இருந்தாலும்,அது ஆங்கிலத்தில் *W* என்பதுபோல, ஈரிதழ்த் திறப்பொலியாகவும் (Bi-labial) இருந்ததென்று கூறலாம்.

(1) அகர உகரம், ஔகாரம் ஆமென்பர் தொல்காப்பியர். பின்வந்தோர் அகர வகரமும் ஔவாகும் என்பர். ஔ என்பதை அவ் என்று சங்ககாலத்திலிருந்தே எழுதிவரக் காண்கிறோம். இவ்வாறு உ- வ மாறுவது வகரம் ஈரிதழொலியாக அமைவதாலேயாம். அரசஞ்சண்முகனார் ஔகாரத்தில் வகரமிருப்பதாகக் கூறுவது *காண்டல் விரோதம்* என்பர். ஆனால் வகரத்தை ஈரிதழ் ஒலியாகக் கொண்டால் இந்தத் தடையெழுவதற்கில்லை.

(2) பொதுவாக வல்லெழுத்துக்கள் பிற்காலத்தில் மொழிக்கு முதலிலும், இரட்டித்து வரும்பொழுதுமன்றிப் பிற இடங்களில் ஒலிப்புடை வெடிப்பொலியாக (*Voiced plosives*) அமைவதைக்

காண்கிறோம். ஆனால் பகரம் இந்த வகையில் b என வாராது வகரமாகவே மாறக் காண்கிறோம். இதனாலேயே எதிர்கால இடைநிலை முதலியவற்றின் பகரமும் வகரமும் இடம் பெறுகின்றன. அங்கே இவை இரண்டும் வேற்றொலியாகாது மாற்றொலியே ஆம். இந்த வகரம் சில திராவிட மொழிகளில் ஒலிப்புடைப் பகரமாகவும் (b) வழங்குகிறது. எனவே, வகரம் பகரத்திற்கு இனமாகவேண்டுமானால் முதலில் இதுவும் ஈரிதழொலியாக அமைந்திருத்தல் வேண்டும்.

(3) மகரம் தம் மூக்கொலியை இழக்கும்போது வகரமாகவே திராவிட மொழிகளில மாறக் காண்கிறோம். நீம்+இர்>நீமிர்>நீவிர் எனத் தமிழிலும் வருதல் காண்க.

(4) இவ்வொலி உகரத்திற்கு நேரினமான இடையெழுத்து எனலாம். அதனால் இந்த உகரம் மெய்யெழுத்தாவதால் வரும் வகரம் இதழ் குவிந்தெழுகிற உ ஊ ஒள என்ற உயிரெழுத்துக்களோடு இணைந்து தமிழில் மொழிக்கு முதலாவது இல்லை இருந்தாலும், மொழிக்கு முதலாக, இதழ் குவித்தெழும் இந்த உயிர்கள் வரும்போது, வகரக்கூறு முதலில் கேட்கிறதெனப் பலரும் கூறுகின்றனர். இந்த வகரக்கூறும் ஈரிதழ் ஒலியாகவே இருக்கக்கூடும். இ ஈ எ ஏ ஐ முதலான எழுத்துக்களின் சார்பில்லாத பிற இடங்களில், இரண்டு உயிர்கள் அடுத்தடுத்து வரும்போது இந்த வகரமே உடம்படுமெய்யாக வருகிறது. உடம்படுமெய் முதலில் வருமொழியின் முதலொலிக்கு இனமாயும், பிற்காலத்தில் நிலைமொழி ஈற்றிற்கு இனமாயும் வருமெனக் கூறலாம். இதுகொண்டு சொற்றொடர் தொடங்கிய காலத்தை வரையறுத்தல் கூடும். ஆனால், மிகப் பழங்காலத்தில் உடம்படுமெய் வாராத வழக்கே உண்டு.

தன்மை முன்னிலையில் னகர ஈறு ஒருமையையும், மகர ஈறு பன்மையையும் குறிக்கும். இந்த மகரம் நீவிர் என்பதில் வகரமாதலுமுண்டெனக் கண்டோம். அவ், இவ் என்பன பன்மை யென்பது, *இவ்வே பீலியணிந்து, அவ்வே* என ஔவையார் புறத்தில் பாடுவதினின்றும் அறிகிறோம். இந்த அவ் என்பதே பின் ஐ எனவும் அ எனவும் திரிகிறதென்றும் கூற இடமுண்டு.

*வகரக் கிளவி நான்மொழி ஈற்றது* என்று தொல்காப்பியர், அவ் இவ் உவ் தெவ் என்ற நான்கு மொழிகளில்தான் ஈறாக வருமென்று வரையறுககின்றார் ஆனால், அவரே வகரம், வல்லெழுத்து

பின்வரும்போது ஆய்தமாகுமென்றும் கூறியுள்ளார் தனிமொழிக்குள்ளும், இந்தப் புணர்ச்சி வருவதாகக் கொண்டால், கஃசு, கஃபு, வெஃகா, பல பஃது முதலிய சொற்களில் கவ், வெவ் பவ் முதலிய வகர ஈற்றுச் சொற்களைக் காணலாம் இந்த வழியே நோக்கும்போது அஃது என்பதிலும் அவ் என்பது பகுதியாக எஞ்சும்

ஆனால், முதலில் பன்மையாக இருந்த அவ் என்பது அக்குதிரைகள் முதலிய இடங்களில் அ என்றும் அவ் என்றும் பிரிக்கக்கூடிய நிலையில் அமைவதால், ஒருமையென்ற நிலையை மக்கள் மறந்தனர். அவ்விடம் முதலிய இடங்களில் வகரம் உடம்படுமெய்யெனக் கூறுவதற்குப் பொருந்தி இருந்தாலும், அவ்யானை என்பதில் வகரத்தை அவ்வாறு கூறுவதற்கில்லை எனவே, அங்கெல்லாம் அவ் என்பதே உளதெனக் கூறலாம் அவ் என்பது பன்மை என்ற நிலையை மக்கள் மறந்தபோது, மேலும் ஒருமை விகுதி சேர்த்து அஃது என வழங்கலாயினர் இவ்வாறு ஓரிடைச்சொல் தன்பொருளையிழந்தபோது வேறு இடைச்சொல் சேர்த்து வழங்குவது திராவிட மொழிகளின் இயல்பென்பதும், பொருளிழந்த இடைச் சொற்களைச் சாரியையெனத் தமிழ் மொழி வழங்கும் என்பதும் இங்கே குறிக்கத்தக்கன. வகரம் இவ்வாறு மொழியின் ஈற்றில் பண்டைக்காலத்தில் வந்தாலும், இடைக்காலத்திலிருந்தே இவ்வீற்றுக்குப் பின்னும் உகரச்சாரியை தந்து உகர ஈறாக வழங்குவது வழக்கமாகிவிட்டது வவ்வு, கவ்வு, தெவ்வு எனக் காண்க

பு என முடிந்த சொற்கள் பிற்காலத்தில் வுகரமாக முடியக் காண்கிறோம் ஆனால், இன்றும் நகுபு முதலிய வினையெச்சங்கள், வகரவுகர ஈறாக இலக்கியங்களில் மாறவில்லை எனவே, இன்று தின்பர், உண்பர் முதலிய இடங்களில் னகர ணகர பகரமே மெல்லெழுத்தின் பின், எதிர்கால முதலியவற்றில் வரும கல், கேள், நட, பார் முதலிய பகுதிகள் செய்யும் அல்லது செய அல்லது செயின் என்ற வினை வடிவங்களில் வரும்போது பகுதிப் பொருள் விகுதியாகவே, சாரியையாகவோ, பழம் பகுதிக்குப்பின் கு பெற்று வரத்தக்கவை எதிர்காலத்தில் வரும்போதும் தொழிற்பெயர் விகுதி பெறும்போதும், ஈரேவல் வினை அமைக்கும்போதும் பகரமே பெறறுவருகின்றன மற்றைய பகுதிகள் வகரம் பெறக் காண்கிறோம் ஆனால் செய்பு என்னும் வாய்பாட்டிலும், பிற பழைய இடங்களிலும் இவ்வாறு பகரவகர வேறுபாடின்றிப பகரமே வருதலால் அந்தப் பகரமே, பிற்காலத்தில மேலே காடடிய வருமிடவேறுபாடடால பகரமாகவும, வகரமாகவும

திரிந்ததெனலாம் ஆதலின் இன்றுளதுபோல முன்னரே வருமிட வேற்றுமை இல்லாமையால் அவ்விடங்களில் பகரமேயன்றி வகரம் வந்திருக்க இடமில்லை. வான், பான் என்றும், வி, பி என்றும், பு, வு என்றும், ப், வ் என்றும் வரும் எதிர்கால இடைநிலைகள் ஈரேவல் விகுதிகள்; தொழிற்பெயர் விகுதிகள் பகர வடிவாகவே பான், பி, பு, ப் என்று வழங்கியிருத்தல் வேண்டும்

உயிர்மெய்ம்மயக்கத்தில் மெய்யெழுத்தில் தொடங்கி வரும் தனிக்குறிலின்பின் உள்ள வகரம் உயிர்வரின் இரட்டும். (உ-ம்) அவ்+இடை=அவ்விடை. பிற இடங்களில் உயிர் வகரத்தின் மேலேறி உயிர்மெய்யாகும்.

மெய்யெழுத்தோடு மெய்யெழுத்து தனிமொழிக் கிடையிலும், புணர்மொழிக்கிடையிலும் வரும் மயக்கத்தைக் கூறும்போது வகரத்தின் பின்னால் யகரம் ஒன்றே வருமென்பர். யகரம் முதலான சொல்லுறுப்பொன்றுமில்லாமையால் இவ்விதி புணர்மொழிக்கென்றே கொள்ளலாம் பிற்காலத்தில் வகர ஈறு உகரச் சாரியை பெற்றதனால் இம்மயக்கத்திற்கும் இடமில்லாமற்போய் விட்டது. உகரச் சாரியை பெற்றபோதும் யகரத்தின் முன்னர் அவ்வுகரம் இகரமாக மாறியது. (உ-ம்) தெவ்வியாது. எனவே, அவ்யாது முதலியனவாக இலக்கணத்தில் வரும் எடுத்துக்காட்டுக்களில் மட்டுமே பிற்காலத்தில் இம்மயக்கத்தைக் காணக்கூடும். வல்லெழுத்துப்பின் வந்தால் வகரம் ஆய்தமாகி மயங்கும் (உ-ம்) அவ்+கடிய=அஃகடிய. மெல்லெழுத்து வந்தால் வரும் மெல்லெழுத்தாக வகரம் மாறும். (உ-ம்) அவ்+நாழி=அந்நாழி.

வகரத்தின் முன் வகரம் வருவது இதுவரை கூறிய வேற்றுநிலை மெய்ம்மயக்கத்திலும் வேறான உடனிலை மெய்ம்மயக்கமாம். ர,ழ நீங்கிய எல்லாம் உடனிலை மெய்ம்மயக்கமாக வருவனவாதலின், வகரத்தின் முன் வகரம் வந்து உடனிலை மெய்ம்மயக்கமாகும்.

மொழிக்கிடை வரும் தனிவகரமும் இரட்டை வகரமும் பொருள் வேறுபாடுடையன. அவை, அவ்வை என்றும் கவை, கவ்வை என்றும் காண்க. எனவே, இவ்விரண்டையும் வேறு பிரித்தே ஆராய்தல் வேண்டும் இரட்டை வகரம் மொழிக்கிடையன்றி வாராது.

வகரத்தின் முன்னாக வரக்கூடிய எழுத்துக்கள் ய், ர், ல், வ், ழ், ள், ண், ன், ம் என்பவை பிற மெய் இதன் முன் உகரச் சாரியை பெறும்.

வகரத்தின் முன் மகரம் வரும்பொழுது அந்த மகரம் கால்மாத்திரையாய்க் குறுகுமென்பார்கள் இன்று நோக்கும்பொழுது அந்த மகரம் இதழ்ப்பல் ஒலியாக வரும் மெல்லெழுத்தாக (Labioden-tal nasal) ஒலிக்கக் காண்கிறோம் இதழ்ப் பல்லொலியாம் வகரத்தின் சாயலை அதுவும் பெறுகிறதெனலாம்

இரட்டை வகரம் இயல்பாக வரும் இடத்தை மேலே கண்டோம் ஆனால், செயற்கையாகத் தனி வகரமே மொழியிடையில் செய்யுள் நெறிபற்றி இரட்டை வகரமாக வருவதும் உண்டு. இதனை விரித்தல்விகாரம் என்பர் அவி என்பது அவ்வியென்று வருவது போலாம் இவ்வாறன்றி வகரம் தொடங்குமபோது மட்டும் மெல்லெழுத்தாய் நின்று, பின் உரசலின்றி இசைபெற்று உயிர்போல் அலகுபெறுதலும் உண்டு இதனை ஒற்றளபெடை எனபர் இவ்வாறு ங ஞ ண ந ம ன வ ய ல ள ஆய்தம என்ற மெய்யெழுத்தெல்லாம ஒற்றளபெடையாய் வரும்

அவ், இவ், உவ் என்பன பழைய செய்யுள்களில ஆயிடை என்பது போல நீண்டேவரக் சாண்கிறோம மலையாளம் முதலிய மொழிகளில் இன்றும் இவ்வாறு நீண்டே வர உலக வழக்கிலும் காண்கிறோம் அவ் என்பன போல வகர ஈறாய் நின்றனவே இவ்வாறு நீண்டன என்று கூறி, அவ்=அவற்றின்; இடை=நடுவே எனப் பிரித்துப் பொருள் கூறுவர் ஆனால், எமனோ, பர்ரோ போன்றவர்கள் இயல்பாக நீண்டிருக்கும் பகுதிகளோ பின் விகுதி பெறும்போது குறுகுகின்றன என்று பொது விதி கூறுகின்றனர் அப்படியானால் ஆ, ஈ, ஊ முதலியனவே சுட்டடிகள் என்றும், அவ் முதலியன அவை விகுதிபெற்ற வடிவங்களெனறும், அவை விகுதி பெற்றன என்றறியாத நிலையில் அவற்றையே சுட்டடி என்று பிற்காலத்தார் கொண்டனரென்றும் கூறுதல் வேண்டும்

பிற மொழிகளிலிருந்து வகரம் தமிழ்மொழியில் வரும் போது சிலபோது இரட்டைப் பகரமாதலும் உண்டு (உ-ம்) பர்வதம=பருப்பதம், ரகரத்தின் பின்னர் வகரத்தை இரட்டித்து எழுதும் பழக்கத்தால் இந்த முறை வந்தது போலும பிற இடங்களில் உயிரிடையே வரும் பகரம் தமிழில் வகரமாகும் (உ-ம்) தபம=தவம் மொழி முதலில் வரும் ஒலிப்புடைப் பகரமும (b) வகரமுமாகும (உ-ம்) பிருந்தம்=விருந்தம் மகரவகர மாறாட்டமும் தமிழ்மொழியிலும் பிற மொழிச்சொறகளிலும் உண்டு (உ-ம) மானம= வானம, மிருகம=விருகம

# ழ

இது தமிழ் மெய்யெழுத்து வரிசையில் பதினான்காம் எழுத்து. இடையெழுத்தில் ஒன்றென்று இலக்கணப் புலவர் கூறுவர். இஃது ஒலிப்புடை ஒலி. தொல்காப்பியத்தின்படி ரகரமும் றகரமும் பிறக்குமிடத்திலேயே இதுவும் பிறக்கும். (சூ 94). அவர் *அணரி நுனிநா அண்ணம் வருட ரகரமும் ழகரமும் பிறக்கும்* என்பர் (சூ.95). எனவே, இவை 'நாமடி எழுத்து எனலாம் இன்று வல்லண்ணத்தில் இடைவரையில் நாநுனி செல்ல ழகரம் பிறக்கின்றது ஷ என்பது ஒலிப்பிலா ஒலியானால் அதற்கேற்ற ஒலிப்புடை ஒலியாக ழகரம் அமையுமெனலாம். ஆனால், ஒரு சிலர் ஒலிக்கும் முறையில் ழ என்பது உரசுதலில்லாது தொடர்ந்து ஒலிக்கும் ஒலியாக (Continuant) ஒலிக்கக் காண்கிறோம். ஆனால், இன்று ரகரம் பிறக்குமிடத்தில் இது பிறப்பதில்லை. பிரேகு (Prague) என்ற நகரத்தில் இதனை ஆராய்ந்த பொழுது வாயில் முன்னொலியாக அமைந்த ரகத்திற்கு ஒப்ப அண்ணத்தினிடையே ஒலிக்கும் ஒலியாக ஒலிக்கக் கண்டனர் இந்த ழகரம் ரகரம் போல நாவானது அடுத்தடுத்து அசைவதால் ஒலிக்கும் என்பர் கமில் சுவெலெபில் போன்றார் சிலர். இது ளகரம் போல நாவின் இரு ஓரங்களிலும் மூச்சொலி நழுவிப் போவதால் எழுவது அன்று. இதனை ஒலிக்கும்போது நாவின் இரு ஓரங்களும் அண்பல்லை ஒட்டி நிற்கக் காண்கிறோம். அடிநா அடியண்ணத்தை நோக்கி வீங்கி நிற்கவும் காண்கிறோம். இதனால் அவற்றின் பின்னே யகரம் நீங்கிய இடையெழுத்துக்கள் ஒலிக்கும்போது உகர ஒலி விடு ஒலியாகக் (Release sound) கேட்கும்.

ழகரம் பிற திராவிட மொழிகளில் ரகரமாகவும், ளகரமாகவும், டகரமாகவும் மாறக் காண்கிறோம். பிற்காலச் சோழர் காலத்தில் ழகரம் ளகரத்தோடு மயங்கியது அதன் பின்னர்த் தென்பாண்டி நாட்டில் ளகரத்தோடு ஒன்றாகிவிட்டது. நாஞ்சில் நாடும் இலங்கைநாடும் இவ்வாறே ழகரத்தை ளகரத்திலும் வேறாக ஒலிக்கவில்லை. ஆழ்வார் என்பது ஆள்வார் (சுவாமி) என்றுதான் முதலில் வழங்கியிருத்தல் வேண்டும் அரசர்களையும் கல்வெட்டுக்கள் ஆழ்வார் எனக் குறிப்பிடுகின்றன வீரசோழியம 11ஆம் நூற்றாண்டில் எழுந்தபோது

இந்த மாறாட்டத்தின் காரணமாக ளகரத்திற்கு உரிய சந்தி விதிகளெல்லாம் ழகரத்திற்கும் வரும் என விதிக்கின்றது (15, 18) வாழ்+நாள்>வாணாள் என இன்றும் வழங்கக் காண்கிறோம். திகழ்-தசக்கரம்>திகடசக்கரம் எனக் கந்தபுராணத்தின் கடவுள் வாழ்த்தில் வந்ததைப் பலரெடுத்துக் காட்டுவர்.

ழகரம் மொழி முதலில் வாராது. முதலில் குற்றெழுத்துக்குப் பின்னாலும் ழகரமெய் வாராது மொழியின் ஈற்றில் ழகரமெய் வரும். பிற்காலத்தில் இதன்பின் உகரம் உச்சரிப்பிற்காக வரும். ஈற்றில் ழகரம் உயிர்மெய்யாக நிற்கும்போது எ, ஒ, ஔ என்பன நீங்கிய பிற ஒன்பது உயிரெழுத்தோடும் இணைந்து வருமாம். ஈகார ஊகாரங்களோடு இணைந்து ஈற்றில் இந்நாளைய வழக்கில் வருவதில்லை

மொழிக்கு இடையே ழகர மெய்யின் பின்னர்க் க, ங, ச, ஞ, த, ந, ப, ம, ய, வ என்ற மெய்யெழுத்துக்கள் வரும். இந்த ழகரமெய்யின் முன்னர் உயிரெழுத்தன்றி மெய்யெழுத்துக்கள் வருவதில்லை. ழகரத்தின் பின்னர்க் க, ச, த, ப என்பனவற்றில் ஏதேனும் இரட்டித்தும் வரும். ழகரத்தின் பின்னர் வரும் ங, ஞ, ந, ம என்பனவற்றின் பின் முறையே க, ச, த, ப மயங்கும். ழகரம் அளபெடுக்காது; இரட்டித்தும் வாராது ஆனால், அதன்பின் வரும் ங, ஞ, ந, ம பழம் பாடல்களில் அளபெடுத்து வரும்

ழகார ஈற்றுச் சொல்லின் முன் வல்லினம் வந்தால் வேற்றுமையில் அந்த வல்லினம் இரட்டிக்கும். இது பழைய விதி. தாழ்க்கோல், தாழக்கோல் என்றும் பழங்காலத்தில் வரும். தமிழ் என்பதன் பின்னும் இவ்வாறு அகரச் சாரியை பெற்றும் பெறாதும், வல்லொற்று மிக்கும் வரும். ஆனால், அகரச் சாரியை வருவது பிற்காலத்தில் வழக்கற்றுப் போயிற்று. ழகர ஈறு, ளகர ஈறு போலச் சந்தி விதி பெறுமென வீரசோழியம் கூறுவதை முன்னரே குறித்தோம்.

தாழ் என்பது தமிழ் நாட்டில் தாள் என்றே வழங்குகிறது இந்த ழகரம் சென்னையில் அறியாதார் சிலர் வழக்கில் ய என்றும் (பழம்> பயம்), சிலர் வழக்கில் ச என்றும் (இழுத்து>இசித்து), தென்னார்க்காடு செல்லச்செல்ல ஷ என்றும் (விழா>விஷா, திருமழிசை> திருமஷிசை), தெற்கே ள என்றும் ஒலிக்கும் பயம் என்பது சங்க கால வழக்கெனக் குறிப்பிடல் வேண்டும் பழங்காலத்திலேயே ழகரம் ஆசிடையிட்ட எதுகையில வந்து மறைவதுண்டு இத்தகைய மறைவை

வாழ்ந்தோம்>வாந்தோம் என்ற உலக வழக்கிலும் போழ்து>போது என வரும் இலக்கிய வழக்கிலும் காணலாம். வாந்தோம் என வரும்போது ஆகாரம் மூர்த்தண்ணிய (Cerebral or தலைஒலி) உயிரொலியாக இருக்கக் காண்போம். ஆங்கிலத்தில் Bird முதலிய சொற்களில் வரும் உயிரொலி இத்தகையதென்பர். Government என்பதனைக் கவழ்மென்டு என்று எழுதுவதும் உண்டு. இந்த உயிரொலியை ஒலிக்கப் பழகி, ழகரத்தை எளிதில் ஒலிக்க இயலும் என்பாரும் உளர். ஷகரத்திற்கு ஒத்த ஒலிப்புடை ஒலியை ஒலித்துப் பின் அதில் உரசலிலாது ஒலித்தால் இவ்வொலி வரும் வடமொழியில் உள்ள ஷ தமிழில் ழ ஆக மாறும். (கஷாயம்>கழாயம், பாஷை>பாழை), வடமொழி ரகரம் தமிழில் ழகரமாதல் உண்டு. (அமிர்தம்>அமிழ்தம்) வடமொழியில் வரும் நாடி என்பது தமிழில் நாழி ஆயிற்று என்பாரும் உளர். இதனை நாடுரி என்பதில் காணலாமென்பர்.

தெலுங்கிலும் கன்னடத்திலும் இந்த ழகரவொலி பழங்காலத்தில் இருந்ததெனலாம். இன்றும் மலையாளத்தில் எங்கும் ஒரு நிகராய் ஒலித்துவரக் காண்கிறோம். எனவே, இது தாய்த்திராவிடத்தில் இருந்த ஒலியாக ஆராய்ச்சியாளர் கருதுகிறார்கள்.

*கோலெழுத்து வடிவம் வரும் பக்கத்தில்*

| கோலெழுத்து | ழ் | ழ | ழா | ழி | ழீ | ழு | ழை | ழொ |
|---|---|---|---|---|---|---|---|---|
| தென்னாட்டுக் குகை எழுத்து.— | | | | | | | | |
| 7 ஆம் நூற்ருண்டு | | | | | | | | |
| 8 ஆம் நூற்ருண்டு | | | | | | | | |
| 9 ஆம் நூற்ருண்டு | | | | | | | | |
| 10 ஆம் நூற்ருண்டு | | | | | | | | |
| 11 ஆம் நூற்ருண்டு | | | | | | | | |
| 12 ஆம் நூற்ருண்டு | | | | | | | | |
| 13 ஆம் நூற்ருண்டு | | | | | | | | |
| 14 ஆம் நூற்ருண்டு | | | | | | | | |
| 16 ஆம் நூற்ருண்டு | | | | | | | | |

| வட்டெழுத்து | ழ | ழா | ழி | ழு | ழை | ழொ |
|---|---|---|---|---|---|---|
| திருநாதர் குன்றுக் கலவெட்டு | [illegible] | | | | | |
| 8 ஆம் நூற்றாண்டு | [illegible] | [illegible] | [illegible] | [illegible] [illegible] | | [illegible] |
| 9 ஆம் நூற்றாண்டு | | | | [illegible] [illegible] [illegible] | | |
| 10 ஆம் நூற்றாண்டு | [illegible] [illegible] [illegible] [illegible] | [illegible] | [illegible] [illegible] [illegible] [illegible] [illegible] | | [illegible] [illegible] | |
| 11 ஆம் நூற்றாண்டு | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | | [illegible] |
| 12 ஆம் நூற்றாண்டு | | | | | [illegible] | |
| 13 ஆம் நூற்றாண்டு | [illegible] | | | [illegible] [illegible] [illegible] | | |
| 14 ஆம் நூற்றாண்டு | [illegible] | | [illegible] | [illegible] | | |
| 15 ஆம் நூற்றாண்டு | [illegible] | | | [illegible] | | |
| 17 ஆம் நூற்றாண்டு | | | | [illegible] | | |
| 18 ஆம் நூற்றாண்டு | [illegible] [illegible] | | [illegible] [illegible] [illegible] | [illegible] [illegible] | | |

# ள

ள என்பது தமிழ் மெய்யெழுத்து வரிசையில் 16ஆம் எழுத்து. இது உயிர்ப்பொலி. இன்று நாமடி ஒலியாக அண்ணத்தின் உயரத்தே ஒலிக்கின்றது நாவின் இரு ஓரங்களிலும் காற்று வாய்க்கு வெளியாக வந்துவிடும். எனவே, இன்று இது ஓர ஒலியுமாகும் (Lateral).

தொல்காப்பியர் காலத்தில் இது நாவிளிம்பு வீங்கி அண்ணத்தை வருடப் பிறக்குமொலியாக நின்றது. அங்கே நா அணரி அண்ணத்தை வருடுவதைத் தொல்காப்பியனார் கூறினாரில்லை. ழகரத்திற்கே நாநுனி அணரி அண்ணத்தினை வருடும் நிலையினைக் கூறியுள்ளார். அவர் காலத்தில் அணர்தல் இல்லாமையே ழகரத்திற்கும் ளகரத்திற்கும் உள்ள வேற்றுமை. அணர்தல் முழுதுந் தோன்றாத நிலையில் சோழர் காலத்தே இவையிரண்டும் மயங்கத் தொடங்கின. ஆனால், வட தமிழ்நாட்டில் இவை இரண்டும் இன்றும் வேறுபட்டே ஒலிக்கின்றன. இங்கே வேறு வகையானதொரு வேற்றுமை நிலைபெறக் காண்கிறோம். த, ட என்றும், ந, ண என்றும், வாயின் முன்னொலியும் பின்னொலியும் அல்லது நாவின் தாழொலியும் உயரொலியும் ஆக இவை இணையிணையாக அமைவதுபோல லகரமும் ளகரமும் அமைந்திருக்கின்றன எனலாம். இந்த வேற்றுமை காரணமாக ளகரமும் ழகரத்தினின்று வேறுபட்டது ழகரம் ஓர ஒலி ஆகாமை காண்க. ஈரோடு முதலிய இடங்களில் லகர ளகர வேற்றுமையுங்கூட மறைந்துவரக் காண்கிறோம்.

ளகரம் சிலபோது வல்லெழுத்துச் செறிவால் உயிர்ப்பிலா ஒலியாக மாறும், அப்போது இது டகர ஒலி போன்றதாம். ஆதலின் அந்த நிலையில் ளகரம், டகரமாக மாறும் என்று இலக்கணப் புலவர்கள் கூறி வந்தனர். (கள்+குடி=கட்குடி). ஆனால், 12ஆம் நூற்றாண்டுக்குள்ளேயே இந்த நிலையிலும் ளகரத்தையே எழுதி வரக் காண்கிறோம். ஆனால், அப்போது அதனுடன் செறிந்து வந்த வல்லெழுத்து இரட்டித்து எழுதப்படும் (கள்+குடி=கள்க்குடி) இவ்வாறு மலையாளத்திலும் எழுதிவருதலைக் காண்கிறோம் தென்னாட்டு ஓலைச்சுவடிகளில் இந்த நிலையே தோன்றுகிறது

எனவே, வல்லினம், ளகரத்தின் பின் வந்தாலும் தொகைச் சொற்களில் போல ளகரத்தோடு மிகச் செறிந்து வாராதபோது ளகரம் உயிர்ப்பொலியாகவே நிற்கும். (உ-ம்) வாள் பெரிது. வாட்பெருமை என வரும்போது தொகைச் சொல்லாகி, இரண்டு சொல்லுக்கிடையே சொல்வீற்றிசை (word pass or juncture) அல்லது விளம்பம் இல்லாமையை உணரலாம். தொகைச் சொல்லுள்ளும் வினைத்தொகையில் இத்தகைய செறிவு எழுவதில்லை (கொள்கலம்). சிலபோது உம்மைத் தொகையிலும் (எள்கொள்) எழுவதில்லை. ஒரு சொல்லினுள்ளும் கொள்கின்றான், கேட்கின்றான் எனச் செறிவில்லாமையும் செறிவும் ளகரத்தின்பின் தோன்றக் காணலாம். மீள்கின்றான் மீட்கின்றான் என்ற இடத்தில் இந்த வேறுபாடு தன் வினை, பிறவினை என்ற வேறுபாட்டை உணர்த்தல் காண்க.

ளகரத்தின் பின் க, ச, த, ப, வ, ய என்ற மெய்எழுத்துக்களே வந்து மயங்கும். இதன்முன் தகரம் வந்தால் தகரம் டகரமாகும் அப்போது ளகர ஈற்றுச் சொல் தனிக்குறிலின் முன் வந்த சொல்வீறானால் அதுவும் டகரமாகும். (முள்+தலை=முட்டலை), பழங்காலத்தில் அது ஆய்தமாக மாறியதும் உண்டு. (முள்+தீது=முஃடீது) இதனைப் பிற்காலத்தில் ஆய்தக் குறுக்கம் என்பர். இந்த ஆய்தமே தலை ஒலியென வழங்கப் பெற்றது போலும். தனிக்குறிலின்பின், சொல்வீறாக வாரராத இடங்களில் ளகரம் கெடும். (நீள்+தல்=நீடல்). ளகரத்தின்பின் பின் நகரம் வருமானால் ளகரம் ணகரமாகும். ளகரத்தின் பின் நகரம் வருமானால் நகரம் ணகரமாகும். தனிக்குறிலசையின முன் வந்த சொல்வீறானால் ளகரமும் ணகரமாகும் (முள்+நன்று=முண்ணன்று). இல்லையானால் ளகரம்கெடும் (கோள்+நன்று=கோணன்று) பழைய ணகர ஈற்றுச் சொற்கள் பின்னே மெல்லோசையிழந்து ளகரமாயிருக்கக் காண்கிறோம்.

கொண்>கொள்
எண்>எள்
மாண்>மாள்.

இந்த ளகர மெய்யை விட்டொழித்து எதுகை கொள்ளுதலும், அசை பிரித்தலும் உண்டு. *ஊன் கொள்பவர்* என்பது நேர்நேர் நிரை எனக் கனிச் சீராகாது, நேர்நிரை நேர் எனக் காய்ச்சீராம். ளகரம் மொழிக்கு முதலாகாது மொழிக்கு ஈறாகும். ஆனால், பிற்காலத்தில் வினைமுற்று அல்லாதவை ளகரத்தில் முடியும்போது உகர ஈறு பெற்று வரும். இந்த நிலையில் அத்தகைய ளகர ஈற்றின்பின் யகரம் வரின் இடையே இகரம் தோன்றக் காண்கிறோம்

ளகரம் பெண்பால் விகுதியின் ஈற்றில் வரும்; இது இக்காலப் பேச்சு வழக்கில் மறைந்தொழியக் காண்கிறோம். (வந்தான்=வந்தா).

பிறமொழி லகரம் தமிழில் வரும்போது பெரும்பான்மையும் ளகரமாக ஒலிக்கும் (Plate=பிளேட்; Blade=பிளேடு).

*கோலெழுத்து*

| கோலெழுத்து | ள் | ள | ளா | ளி | ளு | ளூ | ளெ | ளோ |
|---|---|---|---|---|---|---|---|---|
| தென்னாட்டுக் குகை எழுத்து | | | | | | | | |
| 7 ஆம் நூற்றாண்டு | | | | | | | | |
| 8 ஆம் நூற்றாண்டு | | | | | | | | |
| 9 ஆம் நூற்றாண்டு | | | | | | | | |
| 10 ஆம் நூற்றாண்டு | | | | | | | | |
| 11 ஆம் நூற்றாண்டு | | | | | | | | |
| 12 ஆம் நூற்றாண்டு | | | | | | | | |
| 13 ஆம் நூற்றாண்டு | | | | | | | | |
| 14 ஆம் நூற்றாண்டு | | | | | | | | |
| 15 ஆம் நூற்றாண்டு | | | | | | | | |

| வட்டெழுத்து | ள | ளா | ளி | ளு | ளூ | ளை | ளொ |
|---|---|---|---|---|---|---|---|
| 8 ஆம நூற்றாண்டு | | | | | | | |
| 9 ஆம நூற்றாண்டு | | | | | | | |
| 10 ஆம நூற்றாண்டு | | | | | | | |
| 11 ஆம நூற்றாண்டு | | | | | | | |
| 12 ஆம நூற்றாண்டு | | | | | | | |
| 13 ஆம நூற்றாண்டு | | | | | | | |
| 14 ஆம் நூற்றாண்டு | | | | | | | |
| 15 ஆம நூற்றாண்டு | | | | | | | |
| 17 ஆம நூற்றாண்டு | | | | | | | |
| 18 ஆம நூற்றாண்டு | | | | | | | |

# ற, ர

றகரம் தமிழ் நெடுங்கணக்கில் வரும் மெய்யெழுத்து வரிசையி பதினேழாவது இன்று அது நுனிநா துடிக்கும் வகையில் பல்லின் ஈற்றுக்கு அப்பாலாக உள்ள அண்ணத்தின் பகுதியில் விட்டுவிட்டு ஒலிக்கும் வகையிெ வைத்து வருடுவதால் எழும் ஒலிப்பு ஒலியாக அமைகிறது. இங்கெல்லாப ரகரத்திற்கும் றகரத்திற்கும் உயிர்களுக்குயிடையே வேற்றுமை இல்லை நாஞ்சில் நாடு முதலிய இடங்களில் இந்த இரண்டெழுத்திறகும் வேற்றுமையுண்டு ரகரமே நாம் மேலே குறிப்பிட்டபடி ஒலிக்கப்பெறும் ரகரம் தமிழ் மெய்யெழுத்து வரிசையில் பன்னிரண்டாவது றகரமே ஒரு முறையின்றி இரண்டு மூன்று முறை துடிக்கும் நாத்துடிப்பொலியாக (*Trill*) அமைந்து, ரகரத்திலும் வேறுபடுகிறது சிலபோது அண்ணத்தைச் சிறிது பின்னாக நா வருடுதலால் றகரமும், முன்னாக வருடுதலால் ரகரமும பிறக்கும் வகையில் எழும் வேற்றுமையும் உண்டு.

தொல்காப்பியர் காலத்தில் றகரம் வல்லெழுத்தாம் ஒலிப்பிலா வெடிப்பொலியாக அமைந்தது. நா நுனி அண்ணத்தை ஒற்றுவதால் பிறந்தது எனவே, நா மடிதல் மேல்நோக்கிச் சிறிது வளைதல் என்ற பொருளில் (Retroflex) இதற்கன்றி டகரத்திற்குப் பொருந்தாது ஆனால், வடமொழியறிவு பெருகிய பல்லவர் காலத்தில் தமிழ் டகரம் வடமொழி மூர்த்தண்ணிய நாமடி டகரம்போல எழுதப் பெற்றதாய், அவ்வாறே ஒலிக்கவும் பெற்று நாமடி எழுத்தாகியது. றகரம் அதனால் மாறத் தொடங்கியது இரட்டை றகரம் இரட்டைத் தகரமாக மாறியுள்ளதனைச் சோழர் காலத்தில் இன்று போலக் காண்கிறோம் (முற்று=முத்து). வல்லெழுத்தின் முன்வரும் ரகர றகரங்கள் மயங்கத் தொடங்கின அங்கே அவ்விரண்டிற்கும் வேற்றுமை தெரியாமல் போயிற்று பின்னர் உயிர் எழுத்துக்களின் இடையிலேயும் ஒன்றாகி மயங்கின ஆனால், இலக்கியத்தில் மட்டும் தொல்காப்பியர் காலத்தில் போலவே எழுதி வந்தனர் இதனால் பள்ளிக்கூடத்தில் தனி எழுத்துக்களைக் கற்கும்போது கர றகரத்தை மேலே கூறியதுபோலவே நாஞ்சில் நாட்டில் வேற்றுமை ாட்டி ஓதுகின்றனர். பெரும்பான்மையும் பிற இடங்களில உயிர்களுக்கு டையில் ரகரமும் றகரமும் ஒன்றாகிப் போயின இந்த ரகரக் கூறினால் ரட்டை றகரம் இரட்டைத் தகரமான போதும், ரகரம சிலர் பேச்சில்- பாதுவாகக் கற்றோர் பேச்சில்-ஒலிக்கக் காண்கிறோம் வெற்று-வெட்ரு

ாண்க. இரட்டை றகரம் யாழ்ப்பாணத்தில் t என்ற ஆங்கில ஒலியைக் ப் பயன்படுகிறது. (Peter=பீற்றர்). தனக்கு ஒத்த மெல்லெழுத்தின் ரும் றகரம் அங்கு d என்ற ஆங்கில எழுத்தின் ஒலியே பெறுகிறது. று-இன்டு) தமிழ் நாட்டின் சார்பால் இதனை மாற்றவும் பலர் அங்கே ங்கின்றனர். முன்கூறிய காரணத்தால் தமிழ்நாட்டில் இந்த ஒலியின் பின் ம் ஒலிக்கக் காண்கிறோம் (இன்று-இன்ட்ரு).

| கோலெழுத்து | ற | று | றி | று | றா | றெ | றை | றொ | ற் |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| பிராமி | | | | | | | | | |
| 7 ஆம் நூற்றாண்டு | | | | | | | | | |
| 8 ஆம் நூற்றாண்டு | | | | | | | | | |
| 9 ஆம் நூற்றாண்டு | | | | | | | | | |
| 10 ஆம் நூற்றாண்டு | | | | | | | | | |
| 11 ஆம் நூற்றாண்டு | | | | | | | | | |
| 12 ஆம் நூற்றாண்டு | | | | | | | | | |
| 13 ஆம் நூற்றாண்டு | | | | | | | | | |
| 14 ஆம் நூற்றாண்டு | | | | | | | | | |
| 16 ஆம் நூற்றாண்டு | | | | | | | | | |

ரகரம் தொல்காப்பியர் காலத்தில் றகரமும் ழகரமும் பிறந்த இடத்திலே பிறந்தது. எனவே, நாமடி ஒலியே ஆம். ஆனால், றகரம் ஒற்றப் பி ரகரம் வருடப் பிறந்த (Pricative) ஒலிப்புடை, உரசொலியாகும். இன்று றகர வேற்றுமை இல்லாத இடங்களில் ரகரம் அண்ணத்தின் மு

ஒலியாகவும், ழகரம் பின்னிட ஒலியாகவும் அமையக் காண்கிறோம் யகர ழகரங்கள் போல ரகரத்தின் பின்னும் இரண்டு மெய்யொலிகள் வரும் (பார்த்து, சேர்ந்து). இதன் முன்னும் மொழிக்கு முதலாகும் எழுத்துக்கள் வரும் மொழிக்கு முதலில் தனிக்குறில் வரும்போது ரகரம் தனி மெய்யாக நிற்பதில்லை. அதனால் சர்க்கரை சருக்கரை என்றே பழங்காலத்தில் வழங்கியது. பிற்காலத்தில் இந்த நியதி இல்லை. உழிதர்கின்றேன் என்று அப்பர் பாடும்போதும் இல்லை எனலாம்.

| வட்டெழுத்து | ற | ரு | றி | றீ | று | றூ | றெ | றை | றொ | ற் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 6 ஆம் நூற்றாண்டு | | | | | | | | | | |
| 8 ஆம் நூற்றாண்டு | | | | | | | | | | |
| 9 ஆம் நூற்றாண்டு | | | | | | | | | | |
| 10 ஆம் நூற்றாண்டு | | | | | | | | | | |
| 11 ஆம் நூற்றாண்டு | | | | | | | | | | |
| 12 ஆம் நூற்றாண்டு | | | | | | | | | | |
| 13 ஆம் நூற்றாண்டு | | | | | | | | | | |
| 14 ஆம் நூற்றாண்டு | | | | | | | | | | |
| 15 ஆம் நூற்றாண்டு | | | | | | | | | | |
| 17 ஆம் நூற்றாண்டு | | | | | | | | | | |
| 18 ஆம் நூற்றாண்டு | | | | | | | | | | |

| வட்டெழுத்து | ர | ரா | ரி | ரு | ரூ | ரெ | ரை | ரொ | ர் |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 4 ஆம நூற்றாண்டு | | | | | | | | | |
| 8 ஆம நூற்றாண்டு | | | | | | | | | |
| 9 ஆம நூற்றாண்டு | | | | | | | | | |
| 10 ஆம நூற்றாண்டு | | | | | | | | | |
| 11 ஆம நூற்றாண்டு | | | | | | | | | |
| 12 ஆம நூற்றாண்டு | | | | | | | | | |
| 13 ஆம நூற்றாண்டு | | | | | | | | | |
| 14 ஆம நூற்றாண்டு | | | | | | | | | |
| 15 ஆம நூற்றாண்டு | | | | | | | | | |
| 17 ஆம நூற்றாண்டு | | | | | | | | | |
| 18 ஆம நூற்றாண்டு | | | | | | | | | |

ரகரம் மொழிக்கு முதலாகப் பழங்காலத்தில் வருவதில்லை. வடமொழிப் பயிற்சி மிக்க சிந்தாமணி காலத்திலும் ஒட்டக்கூத்தர் காலத்தும் முதலில் வந்ததுண்டு. இன்று வருவது இயல்பாகிவிட்டது. மொழி முதலாகாத காலத்தில் ரகரத்தின் பின் உ ஊ ஒ ஓ என்ற எழுத்து வரும்போது உகரம் முதல் ஒலியாக வரும் (உரோகம் உருசி). பிற இடங்களில் இப்போது இகரம் முந்து ஒலியாக அமைகிறது (இராமன், இரேவதி, இருடி). ஆனால், சங்க காலத்திலும் பின்னும் ரகரம் அகர ஆகாரங்களோடு வந்தபோது இகரமன்றி

அகரமே முந்தொலியாக வந்தது. (ராகம்=அராகம், அரதனம்). ரகரம் ஈறொற்றாக ர்ர என வருவதில்லை. அப்படி வரும் பிற மொழிச்சொற்கள் தமிழாகும்பொழுது அக்கூட்டுமெய்யொலியைப் பிரிக்க மெய்யினிடையே உயிர் ஒலி தந்து வழங்குவது வழக்கம் வடமொழிப் பயிற்சி மிகுந்ததாக முன் காட்டிய காலத்திலும் இன்றும் இந்தத் தடையில்லை. ஆனால் பழைய வடிவங்கள் இன்றும் வழங்குவனவற்றில் முன்னாளில் அகரம் இடை ஒலியாகவும், பின்னாளில் இகரம் இடை ஒலியாகவும் அமைந்திருப்பதைக் காண்கிறோம் (சக்ரம்=சக்கரம்-சக்கிரம்) பிராகிருதச் சொற்களில் இந்த ரகரம் மறைந்த வடிவங்கள் தமிழில் பழங்காலத்தில் வழங்கக் காண்கிறோம் (வ்ரதம்=வதம், பூர்வம்=புவ்வம்) சர்க்கரை சருக்கரை என ஆதலை முன்னரே குறிப்பிட்டோம் பொதுவாகத் தமிழில் உயிரோடு ஒத்த யகர ழகரம்போல், பேச்சொலி நிறுத்தம் (Pause) வினைமுற்று, எழுவாய், உயர்திணைச்சொல் முதலிய இடங்களில வருமபோதன்றிப் பிற இடங்களில் சொல்லின் ஈற்றில் வந்தால் வருமொழி முதலில் வரும் வல்லெழுத்து இரட்டிக்கும் (ஊர்க்கால்)

ரகர ஈறு வினைமுற்றாய் இருந்தாலன்றிப் பிற்காலத்தில் பிற மெய்யெழுத்துக்களைப்போல் உகரச் சாரியையை ஈற்றில் பெற்றுவரும் (சேர்=சேரு). இந்த உகரம் சில இடத்து மறையும் இதனால் வல்லெழுத்தாம் றகரம் ரகரமாக மாறியபோதும், அது குற்றியலுகரத்தோடு ஈறான நிலையில் உகரத்தை இழந்து ர் என்றே நிற்கக் காண்கிறோம் (வயிறு=வயிர், பாலாறு=பாலார்) இரண்டு மெய்யெழுத்துக்களின் முன்வரும் ரகரம் பேச்சு வழக்கில் கெட்டிருக்கக் காண்கிறோம். (சேர்ந்தான்=சேந்தான், பார்த்தான்=பாத்தான்) ஒரு மெய்யின் முன்வரும் போதும், செய்யுளில் அதன் இருப்பினைக் கணக்கில் எடுக்காமலே சீர் பிரிக்கும் அளவிற்குப் பழங்காலத்திலேயே ஒலித்தல் பெற்றது சேரர்பிரான் என்பது கூவிளங்கனியாகும், ர் என்பது அங்கு இல்லாதபோல ரபி ஒரு நிரையாகும் இத்தகைய நிலையைப் பதினோராம் திருமுறையிலேயே காணலாம்

ரகர லகரப்போலியும் உண்டு (பந்தல்=பந்தர்), இன்றும் ரப்பர்=லப்பர் என வழங்குதல் காணலாம

றகரம் பழங்காலத்தில் மொழிக்கு முதலாவது இல்லை; ஈற்றிலும வருவதில்லை குற்றியலுகரமாக முடிந்தது பழந்திராவிடத்தில் றகரம் ஈற்றில் வந்ததனைக் காட்டும் என்பர் இந்த றகரம் டகரம நீங்கியபிற வல்லெழுத்தோடும் மயங்கும் (எற்கு, ஏற்பு, பொற்பு, கற்சிறை), லகரமும் தகரமும் சேர்ந்து ற எனவாகும இதனைத் தகரம் றகரமாக மாறிற்று என்றும லகரம தனிக்குறிலின் பின வாராத நிலையில் மாறும் என்றும, தனிக குறிலின

பின் வரும்போது லகரம் றகரமாக மாறும் என்றும் இலக்கண நூல்கள் கூறும். தனிக்குறில் முன் அவ்வாறு இரட்டை றகரம் வரும்போது முற்காலத்தில் ஆய்தமும் மாற்றொலியாக வந்தது. கற்றீது, கஃறீது எனக் காண்க. ணகரத்தின் முன்வரும் தகரமும் றகரமாகும். பொன்தருவான்=பொன்றருவான். லகர ரகர மாறாட்டம் திசை மொழிகளில் நாம் குறித்ததை ஒட்டி ரகர தகரமும் றகரமாகும்போலும் (கார்>கர்+து>கறு, கறுப்பு). இவ்வாறு பல சொற்களைப் பிரித்துக் காணலாம். (நில்+து=நிறு) சொல் (நெல்)+து=சோறு). லுகரம் ஈறாக வரும் இடங்களில் இவ்வாறு காணலாம்போலும்.

இந்த றகரத்தின்பின் கசதப தவிர வேறு மெய்யெழுத்து வாராது. றகரம் ரகரமான பின் ரகரத்தைப் பற்றி முன்கூறியபடி எல்லாம் இதுவும் வரக் காண்கிறோம்.

முன்னர் ரகரம் பல சொற்களில் ஈறாக உள்ளது. பின் நீயிர் என்பதிற்போலப் பன்மையை உணர்த்த வந்தது. அற்று, என்ற சாரியையும் அர்+து>அற்று என்று சொள்ள இடமுண்டு. பின்னர் உயர்நிலைக்கே உரியதாய்ப் பலர்பால் விகுதிகளில் அதாவது அர் ஆர் இர் (மகளிர்) என்பவற்றில் சிறப்பு நிலையாக அமைந்தது.

*கோலெழுத்தின் வடிவம் அடுத்த பக்கம்.*

| கோலெழுதது | ர | ரா | ரி | ரு | ரூ | ரெ | ரை | ரொ | ர் |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| பிராமி | | | | | | | | | |
| 7 ஆம் நூற்ருண்டு | | | | | | | | | |
| 8 ஆம் நூற்ருண்டு | | | | | | | | | |
| 9 ஆம நூற்ருண்டு | | | | | | | | | |
| 10 ஆம் நூற்ருண்டு | | | | | | | | | |
| 11 ஆம் நூற்ருண்டு | | | | | | | | | |
| 12 ஆம் நூற்ருண்டு | | | | | | | | | |
| 13 ஆம் நூற்ருண்டு | | | | | | | | | |
| 14 ஆம் நூற்ருண்டு | | | | | | | | | |
| 16 ஆம் நூறருண்டு | | | | | | | | | |

# ன

னகரம் தமிழ் மெய்யெழுத்து வரிசையில் பதினெட்டாவதாக அமையும் கடைசி எழுத்து. இது தொல்காப்பியர் காலத்தில் நுனியண்ணத்தின் ஈற்றில் நா அணர்ந்து ஒற்றுவதால் எழும் றகரத்திற்கு இனமாக மூக்கு வளியோடு ஒலிக்கும் ஒலிப்புடை மெல்லொலியாகும். பழந்திராவிடத்தில் நகரத்தோடு இதற்கு வேற்றுமை இல்லை எனலாம். தொல்காப்பியர் காலத்தில் வெரிந்-வெரின் எனக் கடையிலும் முந்நூறு எனத் தொகையின் இடையிலும் பொருள் வேறுபட்டு வருவதால் நகரத்திலும் வேறான ஒலியனே ஆம். னகரம் மொழிக்கு முதலாக வாராது இடையில் அனை-அன்னை என ஒற்றை மெய்யும் இரட்டை மெய்யுமாய்ப் பொருள் மாறி வருவதும் காண்க. இதன்பின் றகரம் பெரும்பான்மையும் வரும் க ச ஞ ப ம வ ய என்ற மெய்யெழுத்துக்களும் வரும். இதன்முன் உயிர் எழுத்தே வரும். ஒற்றளபெடையாய்ச் செய்யுளில் நேரசையாய் வரும். ஈற்றில் வரும்போது ஏவல் நீங்கிய வினை வடிவங்களல்லாதபோது உகரச்சாரியை பெறும் (பொன்-பொன்னு), யகரம் மொழி முதலாக இந்த ஈற்றின்பின் வரும்போது இகரம் வருவதும் உண்டு. (தேன்+யாது >தேனியாது).

இந்த னகரத்தின் பின்வரும் நகரம் னகரமாகும்; தகரம் றகரமாகும் (பொன்+நன்று பொன்னன்று), பொன்+தீது பொன்றீது). வல்லெழுத்தின் முன் ஈற்று னகரம் தொகைச்சொல்லினிடையே றகரமாதலும் உண்டு. (பொன்கலம்=பொற்கலம்). மெல்லினம் வலித்தல் விகாரம் பெறும் என்ற முறைப்படி என்பு எற்பு என வருவதும் உண்டு.

| கோலெழுத்து | ண | ணா | ணி | ணு | ணூ | ணெ | ணே | ணை | ண் |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| பிராமி எழுத்துக்கள் | [illegible] | [illegible] | | | | | | | [illegible] |
| 7 ஆம் நூற்றாண்டு | [illegible] | [illegible] | | [illegible] | | | [illegible] | | [illegible] |
| 8 ஆம் நூற்றாண்டு | [illegible] | [illegible] | | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] |
| 9 ஆம் நூற்றாண்டு | [illegible] | [illegible] | | [illegible] | | | [illegible] | | |
| 10 ஆம் நூற்றாண்டு | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | | [illegible] | | [illegible] | |
| 11 ஆம் நூற்றாண்டு | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | | [illegible] | [illegible] | | |
| 12 ஆம் நூற்றாண்டு | [illegible] | [illegible] | | | | | | | |
| 13 ஆம் நூற்றாண்டு | [illegible] | [illegible] | | | | | [illegible] | | |
| 14 ஆம் நூற்றாண்டு | [illegible] | [illegible] | | | | | | | |
| 16 ஆம் நூற்றாண்டு | [illegible] | | | [illegible] | | | | | |

பலவிடங்களில் இந்த னகரம் மெல்லோசை இழந்து, இடை எழுத்தான லகரமாக மாறுவதுண்டு. இன், ஆன், அகன், நோனை என்ற பழைய வடிவங்கள் இல், ஆல், அகல், நோலை எனப் பிற்காலத்து மாறியது காண்க. சென்றான் என்பதில் சென் எனத் தோன்றும் பழைய வடிவம் தொல்காப்பியர் காலத்திலேயே செல் என வருதல் காண்க இதனால் பழையது எனலாம். ஒற்றுமை இறந்த கால வடிவம் இதனால் பழையது எனலாம். ஒற்றுமை காரணமாக லகர ஈறும் பிற மெய்களின் முன்னர் னகரமாக மாறுகிறது

(கல்+மனம்>கன்மனம்). சிலபோது னகரம் வருமொழி வலிக்கேற்ற மெல்லொலியாகவும் (தேன்+குடம்=தேங்குடம்); வலியாகவும் (தேக்குடம்; நாம்+பிரிந்தார் நப்பிரிந்தார்) மாறுவதும் உண்டு. பழங்காலத்தில் இதன்பின் வரும் யகரம் ஞகரமாதலும் உண்டு (பொன்+யாத்த>பொன்ஞாத்த).

| வட்டெழுத்து | ன | னா | னி | னு | னூ | னெ | னே | னை | னொ | ன் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 6 ஆம நூற்றுண்டு | | | | | | | | | | |
| 8 ஆம நூற்றுண்டு | | | | | | | | | | |
| 9 ஆம நூற்றுண்டு | | | | | | | | | | |
| 10 ஆம் நூற்றுண்டு | | | | | | | | | | |
| 11 ஆம் நூற்றுண்டு | | | | | | | | | | |
| 12 ஆம் நூற்றுண்டு | | | | | | | | | | |
| 13 ஆம் நூற்றுண்டு | | | | | | | | | | |
| 14 ஆம் நூற்றுண்டு | | | | | | | | | | |
| 15 ஆம் நூற்றுண்டு | | | | | | | | | | |
| 17 ஆம் நூற்றுண்டு | | | | | | | | | | |
| 18 ஆம நூற்றுண்டு | | | | | | | | | | |

பல்லவர் காலத்திற்குள் நகரம் மொழிக்கு ஈற்றில் வருவது மறைந்தது. தொகையிலன்றி நகரம் இடையில் வருவதும் இல்லை. றகரமாற்றம் இதனையும் மாறவைத்தது. இதனால் மொழிக்கு முதலில் மட்டும் வந்தால் ந என எழுதுவதும் பிறவிடத்தில் ன என எழுதுவதும் வழக்கமாகிவிட்டது. னகர நகரங்கள் பிற்காலச் சோழராட்சியில் முழுவதும் மயங்கி ஒன்றாகிவிட்டன. அதன் ஒலி பழைய னகர ஒலியே அன்றிப் பழைய நகர ஒலியன்று. பந்து முதலியவற்றிற்போலத் தகரத்தின் முன் மட்டும் நகரம் பல்லொலியாம். பிறவிடங்களில் முதலிலும்கூட பழைய னகர ஒலியேயாம். இதனால் இடைக்காலத்தில் நகரம் ரகரத்தோடு மோனை கொள்ளக் காண்கிறோம். ஒன்று முதலிய சொற்களில் உள்ள றகரமும் மெல்லொலியாகப் பிற்காலத்தில் மாறியது. ஒன்று=ஒண்ணு. கன்று=கண்ணு என்ற ஒலியும் காண்க.

னகரம் மிகப் பழங்காலத்தில் யான் யாம், தான் தாம், நின், நும் என்பவற்றில்போல ஒருமைவிகுதியாக நின்றது. அந்த நிலை மாறியபின் அஃறிணையில் ஈற்றில் னகரமும் மகரமும் மாறாடி வந்தன. (அறம், அறன்). இரண்டு தனிக் குறிலசையில் வரும் மெல்லெழுத்தே இவ்வாறு மாறாகும் என்பது நன்னூலுக்கு உரை எழுதியோர் பிற்காலத்தே கண்ட நியதி. னகரம் ஆண்பால் ஈற்றில் வரும்போது இவ்வாறு மாறாடுவதில்லை. இந்த னகரம் ஆண்பால் ஈறான அன் ஆன் ஒன் ஓன் என்பவற்றில் சிறப்பியல்பாகும்

# தமிழ்

## மொழி வரலாறு

ஒருவர் பேசுவது போல் ஒருவர் பேசுவதில்லை. ஆனால், ஒரு பேச்சுக்கு மற்றொன்று முழுதும் வேறுபட்டால் ஒருவரை ஒருவர் தெரிந்துகொள்ள முடியாது எனவே, ஒற்றுமையிடையே வேற்றுமை சிறிதளவே தோன்றக்கூடும் முதுமை, செல்வம், பெருமை, சிறப்பு என்றவற்றால் உயர்ந்தோரின் பேச்சை மற்றவர்கள் பின்பற்றுவது இயல்பு. இவ்வாறு தலைமுறைக்குத் தலைமுறை சிற்சில மாற்றங்கள மொழியில் எழும். இதனாலேயே *பழையன கழிதலும் புதியன புகுதலும் வழுவல, கால வகையினானே* என்று நன்னூலார் கூறியுள்ளார் மாறாத இளமையோடு விளங்கும் கன்னித் தண்டமிழும் இவ்வாறு வளர்ந்து வருவதொன்றேயாம் உயிரில்லாத நிலையிலேயே மாறுதலும் வளர்ச்சியும் இல்லாமலொழியும்.

இன்றுள்ள தமிழ் நூல்களில் மிகப்பழையது தொல்காப்பியம் அதிலிருந்து அதற்கு முன்னிருந்த தமிழ் நிலையையும் சிறிது அறிந்துகொள்ளலாம் பாணினிக்குப் பின்னர் வடநூல்கள் பாண்டியர், காஞ்சீபுரம் முதலான பெயர்களுக்கு இலக்கணங்கள் கூறத்தொடங்கின கிரேக்கர் முதலானோர் இந்தியாவைப்பற்றி எழுதிய குறிப்புக்களில் சில தமிழ்ப்பெயர்கள் வருகின்றன கி.மு.3ஆம், 2ஆம் நூற்றாண்டுகளில் எழுந்தன என்று கருதக்கூடிய சில பிராமிக் கல்வெட்டுக்கள் தமிழ்மொழியில் இருக்கக் காண்கிறோம். ஆனால், அந்தத் தமிழ் இக்கால வேலையாட்கள் பேசிய ஆங்கிலம் போலப் பிராகிருதச் சொற்கள் நிரம்பிவர, வேற்று மொழியினர் பேச முயன்ற தமிழே எனலாம். என்றாலும் சில தமிழ்ச்சொற்களின் வடிவத்தை அறிய இவை உதவுகின்றன பிற திராவிட மொழிகளோடு தமிழை வைத்து ஆராய்வதாலும் சொற்களின் மிகப்பழைய வடிவத்தை அறிந்துகொள்ளுதல் கூடும்

அ,இ,உ,எ,ஒ என்ற ஐந்து குறிலும் அவற்றிற்கு இனமான நெடிலும் பழைய தமிழில் உயிர் ஒலிகளாம் Man என்பதில் வரும் உயிர்போன்ற ஒலியும இருந்ததே பின் யா ஆயிற்று என்பாரும உண்டு யா நெடில், எ குறில் என்பர் (யான்=என்)

அளபெடைகளைத் தொல்காப்பியர் ஓரெழுத்தாகக் கொள்ளாமல் இரட்டை விரல்போலக் கொள்ளுவதால் உயிரெழுத்துக்கள் இடையீடின்றி அடுத்தடுத்து வருவது பழைய நிலையாகலாம்: சின (பகுதி)+இ (இறந்த கால இடைநிலை)=சினை (சினைஇ) என வருமிடங்களில் அகரம் இகரம் போன்ற கூட்டொலிகள் விட்டிசையின்றி ஓரெழுத்தாய் ஒலித்தலும் உண்டெனஅறியலாம். உடம்படுமெய் வருவது தொல்காப்பியர் காலத்திலும் கட்டாயமெனத் தோன்றாமையால் உடம்படுமெய் வராத காலமும் இருந்ததெனக் கொள்ளலாம். விட்டிசை அந்த இடங்களில் வந்திருக்கவேண்டும். குரல்வளையில் உள்ள இதழ்கள் மூடுவதால் எழுகின்ற ஒலியே இங்கே விட்டிசையாக அமைந்திருத்தல் வேண்டும் (Glottal stop) விட்டிசை எதுகை, வல்லெழுத்து எதுகையோடு ஒத்துவருமென யாப்பிலக்கணம் கூறுகிறது. இத்தகைய விட்டிசை பின்னே மொழியீற்றில் வழங்க வந்து, பின் வல்லெழுத்ததாக வளர்ந்தும் இருக்கலாம். ஆ என்பது ஆகு என்று வளர்தல் காண்க.

தமிழில் இன்று ஆறு வல்லெழுத்துக்களை எழுதி வந்தாலும் க,ட,த,ப, என்பவற்றை மட்டுமே வல்லெழுத்தாக ஒலித்து வருகிறோம். கோத மொழியினர் ச நீங்கிய மற்ற ஐந்தையும் வல்லெழுத்தாக (Plosive) ஒலித்து வருகின்றனர். க, ப, த என்பனவே பழைய ஒலிகளாம். ச என்பது கிளி முதலிய சொற்களில் ககரம் ஒலிக்கும் இடத்தருகே பிறக்கும் ஒலியாக முற்காலத்தே இருந்திருத்தல் வேண்டும். முன்னுயிர் ஒலிகளாம் இகர எகரங்களோடு சேர்ந்த ககரம் சகரமாகத் திரிந்ததே பழைய திராவிட மொழிகளின் நிலையாம் (கை=செய், கின்ன=சின்ன). எல்லாத் திராவிட மொழிகளிலும் சகரம் இருத்தலால் அது பழைய ஒலியேயாம். க,ச,த,ப என்பவை மொழிக்கு முதலில் அடுத்து உயிர் வர வரும்; இடையிலும் வரும்; கடையிலும் உயிரெழுத்துக்களை இறுதியாகக்கொண்டு ஒலிக்கும். ட, ற என்பவை முதலில் வருவதில்லை. எனவே, சில எழுத்துக்களின் சேர்க்கை காரணமாக இவை எழுந்தனவோ என ஐயுறலாம். வின்+து=விடு; சொல் (நெல்) +து=சோறு என்று பிரித்துக்காட்டவும் கூடும். எனினும் ற, ட என்ற இரண்டும் பழைய திராவிடமொழிகளில் உள்ளனவேஆம். அன்று றகரம் ஆங்கில ந் போன்ற ஒலியுடையதாம். இந்த ஆறு வல்லெழுத்துக்கும் இனமான ங,ஞ,ண,ந,ம,ன என்ற ஆறு மெல்லெழுத்தும் வழங்கி இருக்கலாம். ஆனால், ங என்பது தனி ஒலியன் (Phoneme) என்று கூறுவதற்கில்லை. இது மொழியிடையில் மட்டும் வரும் ஞ, ம, ந என்பவை மொழிக்கு முதலிலும் வரும் இவை நீங்கிய பிறவே மொழிக்கிடையிலும் கடையிலும் மட்டுமே வரும். மவ்வீறு வன்மைக்கினமாகத் திரிவதும்

பழைய இயல்பெனலாம். இடை எழுத்துக்களாம் ய, ர, ல, வ, ழ, ள என்பற்றில் யகரம் இகரத்தின் வேறாக அமையவில்லைபோலும். யா என்பதிலன்றி யகரம் மொழி முதலாதல் இல்லை உடம்படுமெய் இல்லாமையால் இடையிலும் யகரம் வேண்டுவதில்லை. கடையில் வருவதனை இகரம் எனலாம் என்பர் தொல்காப்பியர். வகரம் பல் இதழ் ஒலியாக இல்லாமல் இதழ் ஒலியாகவே அமைந்தது போலும் (Wவின் ஒலிபோல்). அவ்=அஉ=ஔ எனத் தொல்காப்பியர் கொள்வதால், வகரமும் உகரமாகப் பழைய காலத்தில் அடங்கியதோ என்று ஆராய்தல் வேண்டும். அவ்வாறு யகர வகரம் நீங்கினால் இடை எழுத்து மொழிக்கு முதலாவதில்லை எனலாம், மொழிக்கு இடையும் கடையுமே வரும்.

உடனிலை மெய்ம்மயக்கமாகவும் உயிர்மெய்ம் மயக்கமாகவும் பின்னே வழங்கியவை பழங்காலத்தில் வேற்று நிலை மெய்ம்மயக்கமாக அமைந்திருக்கலாமென்று எண்ண இடமுண்டு (குருள்+ஐ=குருளை- குருள்து=குருடு, குருள்+தி=குருடி, குர்டி=குட்டி, ஒருத்தன்=ஒர்த்தன்=ஒத்தன்)

யான், யாம், தான், தாம் என்பவற்றிற்போல னகர ஈறு ஒருமையும் மகர ஈறு பன்மையும் காட்டி நின்ற சொற்கள் பல ஆதல்வேண்டும். இந்த மகர ஈறு மெல்லோசையின்றி லகர ஈறாய் மாறியதுபோலும். அவ், இவ், உவ் என்ற பன்மைச் சொற்களைக் காண்க. அ0($\tilde{a}$)>அவ்>ஐ>அ என மாறியும் வந்தனபோலும்.

வகர ஈற்றுச்சொற்கள் பல வழங்கி இருத்தல்வேண்டும் இவற்றின் முன்னே வல்லெழுத்து வந்தால் வகரம் வெறும் உயிர்ப்பாகி ஆய்தமாகிப் பின்வரும் வல்லெழுத்தை உரசெழுத்தாக்கி (Fricative) நின்றது இவ்வாறு உரசெழுத்துக்களும் வல்லெழுத்தின் மாற்றொலியாகி மொழியில் எழுந்தன (எஃகு) ஆனால், அவை ஒலியன்கள் அல்ல

வல்லெழுத்துக்கள் ஒலிப்பிலா (Voiceless) ஒலியாக அமைந்தன எனலாம். ஒலிப்புடை ஒலிகளாகவும் ஒலித்தனவோ என்பது கேள்வி ஒலிப்புடை வல்லொலிகள் ஒலியன்களாக விளங்காமற் போனாலும் ஒலிக்கிடையே உயிரெழுத்துக்கும் மெல்லெழுத்துக்கும் பின்னே வந்தன என்று கொள்வாரும் உண்டு மொழிக்கிடையே சகரம் யகரமாகியும ளபசு(மை)க்கதிர்=பை(பய்)ங்கதிர்ன வகரம பகரமாகியும (தபம்=தவம்) வந்தமை இதனை வறபுறுத்தும என்பர் ஆனால் யகர வகரங்களாக

மாறியபோது யகர வகரங்களிட்டே எழுதப்பெற்றனவாம். யகர வகரங்களாக அல்லாமல் சகர பகரங்களாகவே நின்ற ஒலிப்பிலா நிலையினைச் ச,ப என எழுதிய எழுத்துக்களே காட்டும் பொழுது அவ் ஒலிப்பிலா ஒலிகளை ஒலிப்பொலியாக எவ்வாறு வேறிடத்தே கொள்ளுதல் கூடும்? எவ்வாறு பிரித்தறிவது? இங்குக் கூறியவை, பகுதியில் எழுந்த மாறுதல்களேயாம். சொல்லாக்க உருபுகளாகவும் விகுதிகளாகவும் வரும் வல்லெழுத்துக்கள் முதலியவற்றை ஆராயும்பொழுது அவை அந்நாளிலே அவ்வாறு ஒலிப்பொலியாக மாறின என்று கூறுவதற்கில்லை. இவ்விடங்களில் பகுதியில் ஒலிப்பொலியாக வல்லெழுத்து மாறியதென்னாது வல்லெழுத்து அடியோடு அழிய அதனுடனிருந்த உயிர்மட்டும் எஞ்சியதென்று கொள்ளுதலே தக்கதாம். பின்னே உடம்படுமெய்யைச் சேர்த்தெழுதிய வழக்கத்தால் யகர வகரங்கள் தோன்றலாயின எனலாம். ஒரு சிலபோது வல்லெழுத்தோடு உயிரும் கெட்டது. கெடாது நின்ற உயிர், முன்னின்று உயிரோடு சேர்ந்து நெடிலோ, அளபெடையோ, வேறுயிரோ (இ>எ; உ>ஒ) ஆதல் உண்டு. தபம்>தஅம்>தவம்; பகல்>பஅல்>பால்; நாடுரி>நாஉரி>நாவுரி; பசு, (மை) என உகரம் வந்தது பின்னைய வடிவம்; இகரமே (பசி) பழைய வடிவம் எனலாம். அரியது கரியது முதலியனவற்றில் காண்க. நிம் என்றது நுந்(தை) என்றானபோது இகரம் குற்றியலுகரமாய்ப் பின் முற்றியலுகரமாய் ஒலித்தது விளங்கும். பசி(கதிர்)=பஇ(கதிர்)>பை(ங்கதிர்) எனக் காண்க. பிற மெய்யெழுத்தும் இடையில் கெடுவதுண்டு. ஆரல்>ஆஅல் பழைய பிராகிருதத்திலும் இவ்வாறு இடையே வல்லெழுத்துக்கெட்டு நின்றமையால் இந்திய நாடு முழுவதிலும் வழங்கியதொரு சிறப்புநிலை என இதனைக் கொள்ளுதல் கூடும். வல்லெழுத்து இடையெழுத்தாயின. (ச>ய; ப>வ; ற>ர); (கறுப்பு, கருமை) ட>ழ; (நாடி>நாழி) என்று கொள்வது பின் நிலைமைக்கு ஏற்புடையது போலத் தோன்றினாலும் வல்லெழுத்து மொழியிடையே கெட்டது என்று கொள்வதே பழைய நிலைமையை விளக்கக்கூடும். எனவே, இவற்றைக் கொண்டே முன்னைய நிலையையும் பின்னைய நிலையையும் அறியலாகும்.

மொழிக்கு முதலில் சகரம் வந்தபோது அது கெட்டது இது அசோகர் காலத்திற்குப் பின்னர் எழுந்த மாற்றம் என்று சிலர் கொண்டாலும் ஈ என்ற பகுதி மொழி முதல் சகரத்தை இழந்து தென் திராவிட மொழிகளிலெல்லாம வழங்குவதோடு, அவற்றில் சொல்லுருபாகவும் அது அமைந்துவிடட நிலையை நோக்கும் பொழுது இஃதொரு பழைய மாற்றமே எனல் வேண்டும் சான்றோர்-ஆன்றோர், சாய்தல்-ஆய்தல,

சபை-அவை, செட்டி-எட்டி, சேனாதி-ஏனாதி என வருதல் காண்க. சீ=ஈ என்றாயது வட அல்லது நடுத்திராவிட மொழிகளை ஆராயும்போது விளங்குகிறது. சகரம் கெட்ட காலத்தும் சகரத்தோடும் சில சொற்கள் பேச்சு வழக்கிலோ, இலக்கிய வழக்கிலோ வழங்கி இருந்தவை சங்க காலத்தில் மறுபடியும் வழக்கில் வந்து புகுந்தன எனல் வேண்டும். சகர முதலாதலைப்பற்றி மற்றொன்றும் கூறவேண்டும். காண் கண்டு எனப் பகுதி இறந்தகாலத்தில் முதல் குறுகுவதுபோல் சா என்பதும் முதல் குறுகிச் சத்து என வரல்வேண்டும்; ஆனால், செத்து என்றே வருவதால் சகரத்தின் பின் அகரம் அண்ணச்சாயல் பெற்று (Palatalized) எகரம் என்றே ஒலிப்பதால் சகரத்தோடு அகரம் மொழிக்கு முதலாகா நிலைமை தொல்காப்பியர் காலம்வரை நிலைபெற்றது எனலாம் அப்போது ஞகரமும் அகரத்தோடு இவ்வாறு மொழிக்கு முதலாக வரவில்லை சிலபோது கெட்டும் வரும் ஞண்டு-ஞெண்டு என்று வழங்கியது. ஞகரம் கெட ஏண்டருக எனத் தெலுங்கில் வழங்கும் நீர்>ஈர், நீத்து>ஈது (தெலுங்கு) என வருவனவற்றை நோக்கும்போது இங்கும் ஞகரம் இருந்து கெட்டது என்றும், பின் சில பேச்சு வழக்கில் ஞகரம் நகரமாகி மாறி வழங்கியது, இலக்கிய வழக்கில் புகுந்தது என்றும் கொள்ளுதல் வேண்டும்

தொல்காப்பியர் காலத்தில் ஆய்த ஒலி பெரு வழக்காகிவிட்டது எனலாம். உயிர் அளபெடைகளும் வழங்கின யகரமும மொழியில் இடம் பெற்றது உடம்படுமெய் வருவது சிறுகச்சிறுகப் பெருகத்தொடங்கியது. குற்றியலுகர ஒலி மொழிக்கு ஈற்றில் வல்லெழுத்தின் பின் ஒலிப்பது இயல்பாயிற்று நுந்தை முதலிய இடங்களிலும் பிற இடங்களிலும் இக்குற்றியலுகரம் வரக் காண்கிறோம் அவ்=ஔ; அய்=ஐ என்று கொள்ளக் கூடிய நிலைமை ஏற்பட்டது குற்றியலிகரமும் மகரக் குறுக்கமும் ஐகாரக குறுக்கமும் மொழியில் இயல்பாயின. யகரம் ன, ண என்பவற்றின்பின் சில இடங்களில் மெல்லொலி பெற்று ஞகரமாயிற்று ஆய்தமும் றகர டகரங்களும் புணர்ச்சியால வந்தன. எனினும, அந்தப பழைய நிலைமையை மக்கள் மறந்ததால் இவை இயல்பாகவே கொள்ளப் பெற்றன மெல்லெழுத்தில் ன், ண், ம என்பவற்றில முடிவனவே தொல்காப்பியா காலத்தில பெரும்பான்மையாயின. நகரத்தில் முடியும சொல் வெரிந் பொருந் என இரண்டே ஆம ஞகரத்தில் முடியும சொல உரிஞ் என்ற ஒன்றே ஆம்

வல்லெழுத்தோடு முடியும் முற்றியலுகரமாகத் தபு, உசு, முசு என்ற மூன்றே வழங்கின. பிற வல்லெழுத்தோடு ஈற்றில் உகரம் குற்றியலுகரமாக ஒலித்தது. குற்றியலுகர ஈறு பிற சொற்கள் தொடர்ந்து சொற்றொடராய் அமையும்போது முற்றியலுகரமாகியது.

சில மெல்லெழுத்தீறுகள் மெல்லோசை மட்டும் இழந்து இடை எழுத்தாயின மகர ஈறு வகரமாவதனை முன்னரே கண்டோம். சென்>செல்; நன்>நல், வேண்>வேள்; நான்(கு)>நால் முதலாயின காண்க. இந்த மாறுதல் எல்லாச் சொற்களிலும் பேச்சுவழக்கில் பல இடங்களில் பெருவழக்காயின ஆனால், பின்னும் இலக்கிய வழக்கில் பழைய வடிவமே பல காலம் வரை வழங்கியது எனக்கொள்ளலாம். எள் என்பது தொல்காப்பியத்தில் எண் என்றே வரும்

மொழிக்கிடையே உயிரெழுத்துக்களின் .நடுவே வரும் பகரம் வடமொழியிலிருந்து தமிழில் அமையும் போது வகரமாகும்; (தவம், உவமம்) வடமொழி ஈறு குற்றியலுகரமாகவும் முடியும்; (உலகு-வடமொழி என்போர் காட்டுவது); அம் என்றும் முடியும் (உவமம்) உயிரிடையே ப>வ ஆதல் கொண்டு பகர வகர இடைநிலைகளும் ஒன்றே எனலாம், இடை அல்லது உயிரின் பின் வகரமும் (வாழ்வோன், வருவோன்) வலிமெலியின் பின் பகரமும் (நடப்போன்,காண்போன்) வருகிற நிலை வளர்ந்தது. ஒலிப்பொலியின் சார்பால் ஒலிப்பெழுபத்தாவதனை இவ்வாறு குறித்தலால் பகரம் ஒலிப்பிலா ஒலியாகவே ஒலித்தது என வேண்டும். ஒலிப்புடை ஒலியாக வல்லெழுத்து மாறினால் இடை எழுத்தாவதன்றி வல்லெழுத்தாக அந்நாளில் நிலைபெறவும் இல்லை. எழுதப்பெறவும் இல்லை எனலாம். தபு முதலிய இடங்களில் பகரம் ஒலிப்பிலா ஒலியே ஆம் என்பது வெள்ளிடைமலை இவ்வாறே பிற வல்லெழுத்துக்களும் ஆம். ச>ய ஆம், கறுப்பு கருமை என்ற இரண்டு வடிவம் காண்பதால் ற>ர ஆம் என்பர் ஆனால், எல்லா இடங்களிலும் இவ்வாறு மாறுவது காணோம் (குறுமை), ஆதலின் கறுப்பு (கர்+து+பு) என்ற சந்தியால் வந்த வடிவம் எனலும் கூடும்

எழுதும்போதும் இரண்டு புள்ளி பெற்ற எழுத்துக்கள் வருவது அருமை ய், ர், ழ் என்பவற்றின் பின்னே வல்லெழுத்தோ மெல்லெழுத்தோ வருவது ஒன்று, போன்ம் என வருவது மற்றொன்று பிற இடங்களில் இவ்வாறு வருவது தொல்காப்பியர் காலத்தில் இல்லை

தொல்காப்பியர் காலத்திற்குப் பிறகு சங்க காலம் முடிவதற்குள் சில மாறுதல்கள் எழுந்தன. சகரமும் ஞகரமும் அகரத்தோடு மொழி முதலாயின. நகரம் ஞகரமாக மாறிவரக் காண்கிறோம். சகர ஞகர மான இடையண்ண எழுத்துக்கள் பல்லை நோக்கி வந்து ஒலிக்கத் தொடங்கினபோலும். ஜகரமும் சிலபோது இவ்வாறு ஞகரமாயிற்று (அஞ்ஞை-முஞ்ஞை); ஆய்தம் தனி ஒலியாக ஒலிக்கப்பெற்றது போலும். அவ்வொலியை அளபெடையாக நீட்டியும் ஒலித்தனர் போலும். வகரம இதழொலியாக இல்லாமல் பல் இதழ் ஒலியாகத் தொல்காப்பியர் காலத்திலிருந்து மெல்ல மாறத் தொடங்கியதெனலாம், போன்ம் என வருவதையொட்டிச் சென்ம் முதலியனவும் கேண்ம் முதலியனவும் வழங்கத் தொடங்கின செய்யும் என்ற வாய்பாட்டில், இடையிலே நின்ற உயிரெழுத்துக்கள் இவ்வாறு கெடுவதும் உண்டெனலாம் விகுதியில் வரும் எகரம் எடுத்துச் சொல்லப் பெறாமையால் அகரமாகத் திரியத் தொடங்கியது (வந்தனென்-வந்தனன்) விகுதியின் முதலில் வரும் ஆ என்பது ஓ எனத் திரியத் (சென்றார்=சென்றோர், சென்றாம்=சென்றோம், வந்தார்=வந்தோர், வந்தாய்=வந்தோய்) தொடங்கியது இவ்வழக்குப் பரவியதோடு விகுதி முதல் அகரமும் இவ்வாறு ஓ எனலாயிற்று (கிழவன்-கிழவோன்)

பல்லவர் காலத்தில் நகரம் ஞகரமாகும வழக்குப் பல்கிப் பெருகியது ஆய்தம் சில இடத்தில் கு என்பது போல ஒலித்து (அஃதை=அகுதை) உயிர்போல அலகு பெறும் சில இடத்துப் பழமைபோல உயிர்ப்பாக ஒலிக்கப் பெற்று மெய்போல அலகு பெறாதும் வந்த நிலையைக குறளில் காணலாம் அது உயிரானது என்றால் ஒலிப்புடை எழுத்தாயிறறு என்பதாம். ஆதலின், அது அளபெடை கொள்வதும் இயல்பாயிற்று பின்னர்ச் சில இடங்களில் சிறப்பாகப் பாண்டி நாட்டில் யகரமாக ஒலிக்கப்பெறக் காண்கிறோம். இந்த நிலையில் கஃசு என்பது கய்சு, கைசு என்றும் ஆயது

தொல்காப்பியர் டகரம் நாமடி ஒலியாகும் (Retroflex) எனறு கூறவில்லை; றகரமே நாமடி எழுத்தென்று கூறுகிறார் வடமொழி டகாரமோ நாமடி எழுத்தாம் வடமொழி பல்லவர் காலத்தில கற்றோர் பயின்ற மொழியாதலின், அதன் சார்பால தமிழில சில மாறுதலகள எழுந்தன, டகரம் நாமடி எழுத்தாயிற்று இதன் காரணமாக றகரததின ஒலியே மயக்கத்திறகிடமாயிறறு பல்லவா காலததின முடிவிலே உயிர்களின் இடையே நின்ற றகரம ரகரததோடு தலை தடுமாறியதைக கலவெடடுக்களில அறியலாம ஆனால வலலெழுததின்முன வருமட

றகரம் வடமொழி எழுத்தில் எழுத வேண்டியபோதும் டகரமாகவே எழுதப்பட்டது ழகரமும் டகரம் பிறக்குமிடத்தே பிறக்கும் இடை எழுத்தாக மாறியதுபோலும்; ளகரத்தோடு இது மயங்கத்தொடங்கியது. றகரத்தின் இன ஒலியாம் னகரம் நகரத்தோடு மயங்கியது. நகரமும் னகரமும் ஒன்றாயினபோலும், மொழியின் இடையிலும் கடையிலும் வருவதனை னகரம் என்றும், முதலில் வருவதனை நகரம் என்றும் வேறுபடுத்தினர் போலும் மெய்யெழுத்திலும் இடையெழுத்திலும் முடிகின்ற சொற்கள் உகரச்சாரியை பெறுவது பெருவழக்காகியது (சொல்லு, மண்ணு) தனிச் சொல்லினுள்ளும் உடம்படுமெய் வாராநிலையில் தொடங்கிய பல்லவர் காலம், தான் முடிவதற்குள் உடம்படுமெய் நியதியாக வருவதனைக் கண்டது.

ஞ், ந் என்ற மெல்லெழுத்துக்களும் வ் என்ற இடை எழுத்தும் மொழியீற்றில் வருவது அருமையாகவே, வீரசோழியம் இவை ஈற்றில் வாரா என்று விதி கூறிற்று

சைனர்கள் மணிப்பிரவாள நடையை வளர்த்ததாலும், அரசியலார் வடசொற்களைப் பயன்படுத்தியதாலும், கற்றோருடைய பேச்சிலும் எழுத்திலும் வட சொற்கள் நிறைய வருதலாயின அவற்றை வடஎழுத்திலேயே எழுதுதலையும் காண்கிறோம். இதன் பயனாகச் சில வடமொழி ஒலிகள் கறறோருடைய பேச்சு வழக்கில் புகுந்திருத்தல் வேண்டும் வடமொழியில் ரகரத்தின் பின்வரும் வகரம் பிராகிருத வழி வந்தமையால் இருபகரமாகியும் ரகரம் கெட்டும் நின்றது. (பர்வதம்=பருப்பதம, சதுர்வேதி=சதுப்பேதி), வடமொழி ஈற்று வல்லெழுத்துத் தமிழில் கெட்டது (ஷடங்கவித்=சடங்கவி), வித்யா=விச்சை, பரமேஸ்வரர்=பரமேச்சுரன்; ந்ருத்தம்=நட்டம்; விஞ்ஞாபனம்=விண்ணப்பம், இவை பிராகிருதத்தை ஒட்டித் தமிழில் வழங்கிய வழக்கு எனலாம

பேச்சு வழக்கிலுள்ள சொற்களும் ஆழ்வார் நாயன்மார் பாக்களில் புகுந்தன பல மெலலின ஈறுகள் (ன், ண்) இடையின ஈறுகளாயின (இன்=இல்; ஆன்=ஆல், எண்=எள்) உழிதர்கின்றேன் என்பது போன்ற வடிவங்களும் வருகின்றன

சோழரது ஆடசி மேலோஙகி வளர்ந்தபோது பிராகிருத வழக்கு நீங்கிச் சமஸ்கிருத வழககே மேலோங்கியது ஒட்டக்கூத்தர் பாடலில் த்ரிசூலய பரபை என உயிர்மெய்யலலாத மெய் மொழிக்கு

முதலாதலும், டாகினி, ரகு, ராஜராஜபுரி, லோகபால, யக்ஞா, யுகம், யூதம், யோககர்த்ரி என்பவற்றிற்போலத் தமிழில் மொழிக்கு முதலாகாதவை மொழிக்கு முதலாதலும் காண்கிறோம். சர்மினி, திக்கயம், திவ்யபானம், வத்ரம், இந்த்ரர், சக்ர, பத்ரகாளி, வச்ர, வர்க்கமாலை எனத் தமிழில் மயங்காத எழுத்துக்கள் மயங்கியும், திக் எனக் கடையில் வாராத எழுத்து வந்தும் மொழிக்கு இடையில் குறுகி வழங்கும் நெடில் அவ்வாறு குறுகாதும் நிற்கவும் (பஹீரதி) வரும் தமிழ் முறையல்லாத அமைப்புக்களைக் காண்கிறோம் வடமொழி வகரம் தமிழில் மொழியிடையே பகரமாதலும், மொழியிடையே வரும் கு என்பது வு என்றாதலும் ர்ல என்பது ல்ல என ஆதலும், ர்ண என்பது ன்ன என்றாதலும், ஒலிப்புடைய தகரம் (d) அகரத்தோடு வடமொழியில் வருவது தெ என்றாதலும் (தெக்கணம்) வடமொழி உயிரெழுத்தாம் ऋ தமிழில் இர் என்றாதலும் (மிர்கம்), *யு* உ ஆதலும், மொழி முதலில் b என்பது வகரம் ஆதலும் (விம்பம்), ஜ் ஞ என்பது ஞ ஆதலும் (யஞ்ஞம்), மொழி முதல் *க்ரோ* ரகரம் கெட்டு கோ என்றாதலும் (கோதம்), க்ஷகரம் இரு ககரம் ஆதலும் (தெக்கணம்), அந்த நாளைய வழக்கென ஒட்டக்கூத்தர் பாடலால் அறிகிறோம். அங்கே தீர்க்க சந்தி பயின்று வரவும் காண்கிறோம்

நகரம் ஞகரமாகத் திரிவதற்கு வீரசோழியம் தனக்கு முன் வழங்கிய வழக்கை ஒட்டி விதி வகுத்தாலும், அந்த வழக்குச் சோழர் காலத்தில் குறைந்து வந்து, அறவே ஒழிந்தது எனலாம். இந்த வழக்கிற்கு மாறாக இயற்கை ஞகரம் நகரமாக, ஞாயிறு நாயிறு என்பது போலத் திரிவது பெருவழக்காகத் தொடங்கியது. ழகரம் ளகரம் போல் ஒலிப்பது சில இடத்திலன்றிப் பல இடத்திலும் வீரசோழிய கால வழக்கில் நிலை பெற்றுவிட்டதென விளங்குகிறது. இதன் பயனாகப் புணர்ச்சியில் ளகரம் டகரமாகியும் ணகரமாகியும் வரும் நிலைமையையெல்லாம் ழகரமும் பெற்றது. ஆனால், ழகரம் இலக்கிய வழக்கிலும் கல்வெட்டுக்களிலும் பயின்று வருவதால் வீரசோழிய வழக்குத் தமிழ்நாடு முழுதும் பரவிய வழக்கன்று எனலாம். விழக்கு என ளகரத்திற்கு ழகரம் வருவதனை இழிவழக்கு என வீரசோழியம் காட்டும் ட,ற என்றவற்றின் மாறாட்டம் நிலை பெறத் தொடங்கிவிட்டது. சில இடத்தில் தகரமாகவும் சில இடத்தில் டகரமாகவும் றகர மெய் இரட்டித்த போது ஒலித்தது வெற்றிலை-வெத்திலை என்றாகிப் பின் வெச்சிலை என மருவி வழங்கியதனை வீரசோழியம் காட்டுகிறது இந்த மாறாட்டத்தால் பிச்சை என்பதனைப் பிற்றை என ஒலிக்கும் இழிவழக்கும் எழுந்தது என வீரசோழியம் கூறும்

சோழப் பேரரசு அழிவதற்கு முன் தோன்றிய நன்னூல் பெரும்பான்மையும் தொல்காப்பியத்தைப் பின்பற்றிச் சென்றாலும், பழைய வழக்குகள் அடியோடு ஒழிந்தமையால் அவற்றைச் சொல்லாது விடுகின்றது. ய என்பது ஞ என்றாதலை அது கூறவில்லை நகரம் ஞகரமாதலையும் நன்னூலார் சிறந்த வழக்கெனக் கொள்ளவில்லை. இவர் காலத்திற்குள் இவ்வழக்குகள் மறைந்தன வடமொழிச் சொற்கள் தமிழாகும் போது ஏற்படும் மாறுதல்களில் நிலையாய் விட்டவற்றை இவர் குறிக்கிறார். மெல்லெழுத்து நீங்கிய கவர்க்கம், சவர்க்கம், டவர்க்கம், தவர்க்கம், பவர்க்கம் முறையே அவ்வவ் வர்க்க முதல் எழுத்தாம், மொழிக்கு முதலாகாத மெய் தன்முன் உயிர் எழுத்து ஒன்றினைப் பெறும் (இராமன், அரங்கன், உருத்திரன், இடம்பம்) ऋ என்ற உயிர் *இரு* என்றாகும் (இருடி); குற்றொற்றாகாத ரகரம் தன்பின் உகரம் பெறும் (சர்க்கரை=சருக்கரை), யகரம் தமிழ்ச்சொல்லில் ஆகாரத்தோடு மட்டுமே முதலாகும் ஆனால், வடமொழிச் சொற்கள் தமிழில் புகுந்தமையால் அ,ஆ,உ,ஊ என்றவையோடு முதலாகும் என்று வீரசோழியம் கூறும் அதற்கும் முன்னூலாகிய யாப்பருங்கலக்காரிகை உரையில் பிற உயிர் எழுத்தோடும் யகரம் முதலாதலுக்கு எடுத்துக்காட்டுக்கள் தரப்பெற்றுள்ளன. எனவே, நன்னூலார் ஓ, ஔ என்பவற்றையும் கூட்டிக் கூறுகிறார். ஷ=ட; ஸ=ச; ஶ=ச; ஶ=ய (மொழி முதல்), ஜ=ய; க்ஷ=க்க; ஹ=க (மொழி இடை); ஹ=அ;(மொழி முதல்); நெடிலீறு=குறிலீறு (சீதா=சீதை) என வருதலைச் சுட்டுகிறார். எனவே, ஒட்டக்கூத்தர் வழக்கில் வரும் பிற மாறுதல்கள் நிலை பெறவில்லை எனலாம்.

சோழப் பேரரசின் காலத்திற்குள்ளாகவே உயிர்களுக்கிடையேயும் மெல்லெழுத்தின் பின்னேயும் வரும் வல்லெழுத்து ஒலிப்புடை ஒலியாக மாறிய தெனலாம். ஆனால், எல்லா இடங்களிலும் இம்மாறுதல் இன்றும் நிலைபெற்றுவிட்டதென்று கூறுதற்கில்லை. மார்க்கோபோலோ என்பவர் பகவன் என ஒரு மந்திரத்தைத் தமிழ்நாட்டார் ஒலித்ததைச் சுட்டும்போது ககரத்தை ஒலிப்பிலா எழுத்தாகவே எழுதிக்காட்டுகிறார். அங்கனம் என்பது அங்ஙனம் என்று மாறியதையும் இவ்வாறு மெல்லெழுத்துக்கடுத்த வல்லெழுத்துக்கள் மெல்லெழுத்தாக முழுதும் மாறியது மலையாள மொழியாக அமைந்ததனையும் நோக்கும்போது ஒலிப்பிலா ஒலி ஒலிப்புடைய ஒலியாக மாறும் சட்டமெனக் கால்டுவெல் கூறுவது தெற்கே பல இடங்களிலும் சோழர் காலத்திற்குள்ளேயே பரவிவிட்டது எனலாம் இவ்வாறு மொழியிடையே வல்லெழுத்து ஒலி

மாறியபோது மிகப் பழகிய சொற்கள் பழைய ஒலியோடேயே வழங்குவது இயல்பாதலின் பழையஒலியைக் காட்ட இவை புதிய ஒற்றோடு எழுதப்பெற்றன (பாகு=பாக்கு; பொறை=பொற்றை).

பழைய திராவிட மொழியில் தனி உயிராகவோ உயிர் மெய்யாகவோ வழங்கிய எகர ஒகரங்கள், பின்னே தமிழ், தெலுங்கு முதலியவாகப் பிரிந்தபோது தமிழ் மொழியில் நிரலே இகர உகரங்களாக மாறின என்று கொள்ள இடமுண்டென்பர் பல அறிஞர். இவ்வாறு இகர உகரங்களாக நிற்பவை பழைமையை ஒட்டிய பேச்சு வழக்கில் எகர உகரங்களாகக் கால்ட்வெல் காட்டுவதற்கு ஏற்ப இன்று ஒலிப்பது போலவே சோழர் காலத்திலும் ஒலிக்கத் தொடங்கின என்பதனைக் கல்வெட்டுக்களில் காண்கிறோம்

மொழியின் இடையே இருந்த இகரம் உகரமாக மாறியதையும் முன்னரே குறிப்பிட்டோம். சோழர் காலத்திற்குப பின் எழுந்த வழக்கில், மேலும் சில இகரங்கள் உகரமாகின்றன மொழிக்கிடையில் வரும் ரகரமெய்யும் மறைந்தது (அடுமை, குளுந்த) இ, எ என்பன யகர முதலாக ஒலித்து வரலும் இக்காலத்தில் தொடங்கியது. ஐகாரம் அகரமாகவும் (தலமுறை), இகரமாகவும் (தேனனைய=தேனனிய), இதற்கேற்ப இகரம் ஐகாரமாகவும் (ருசி=ருசை), வழங்கலும் சில இடத்தே காண்கிறோம் பலா, புறா என்பன ப்லா, ப்றா என்றாய்ப்பின் பிலா, பிறா என வருதலும காண்கிறோம். வகரம் மகரமாதலும் உண்டு,(குவிய=குமிய) மெல்லெழுத்து வரும் சூழ்நிலையில் வகரம் மகரமாகும் இடங்களும் உண்டு (என்னமோ, மானம்), யகரம் மொழிக்கு முதலில் வடமொழிச் சொற்களிலும் கெடுகிறது (யமுனை=அமுனை), இடையில்சகரமாகிறது (அசந்து); பழைய ககரம் இடையில் யகரமாகிறது (கன்னியள் துயில்), லகரம் மொழியீற்றில் கெட்டது (வட்டி, தூண்டி)

அஞ்ஞானம் அக்கியானம் என மாறுகிறது ண, ன முதலியனவும் பின்வரும் வல்லெழுத்திற்கேற்ற மெல்லெழுத்தாக மாறுகின்றன (வெஞ்சாமரை), இஞ்சொல் நகரம் ஞகரம்போல் ஒலி பெற்று ரகரத்தோடு மோனை கொள்கிறது ரகர, றகர வேற்றுமை ஒழிந்தது சில இடங்களில் அழுத்தி ஒலிக்கும் ரகரமாக றகரம் நின்றது றகரம் இரட்டியதனை இரட்டிய தகரமகவும (சுறறி=சுத்தி), ன்ற எனபதனை ணட என்றும், (சூழ்ந்த=சூண்ட), (அனறில்= அண்டில்) பிற வல்லெழுத்தின் முனவரும றகரமெய்யை அவவவ் வலலெழுத்தாகவும் ஒலிதது வாக காண்கிறோம (முற்பிறப்பு=முபபிறபபு மாட்சி=மாசசி)

வடமொழிச் சொற்கள் தமிழில் வழங்கும்போது ஷ என்பது ச என்றும் (தோசம்), க்ஷ என்பது ச என்றும் (சணம்) சில இடங்களில் ஆம் கஷ்டம் என்பது கஸ்தி என்றும் வழங்கும். வம்ம் என்பது வங்கிசம் என்று மாறுவது போன்ற வழக்கும் பல இடத்தில் காண்கிறோம்.

பதினேழாம், பதினெட்டாம் நூற்றாண்டில் மேனாட்டார் தமிழைப்பற்றி எழுதிய நூல்களை நோக்கும் பொழுது இரட்டித்து எழுதிய ஒலி எழுத்துக்கள் பேச்சில் இரட்டிப்பின்றி ஓரொலி எழுத்தாகவே எல்லா இடங்களிலும் அல்லாமற் போனாலும், பல இடங்களிலும் ஒலித்தன என்று தோன்றுகிறது. (வண்ணான்=வணான்; காத்தான்=காதான்); இப்படி ஓரொலியாக வல்லெழுத்துக்கள் ஒலிக்கும்பொழுது அவை ஒலிப்பிலா ஒலியாகவே ஒலித்தன பதினேழாம் நூற்றாண்டில் வந்த (De Nobile) தத்துவ போதகர் ச என்பதனை *tch* என்று எழுதிக் காட்டப் பதினெட்டாம் நூற்றாண்டின் முதலில் வந்த வீரமா முனிவர் ந என்று எழுதிக் காட்டுகிறார் பல இடங்களிலும் இன்றும் சகரம் வீரமா முனிவர் காட்டுவதுபோல் மொழிக்கு முதலில் S என ஒலித்தாலும் இழிவழக்கென்று கூறப்பெறுவதில் இன்றும் மொழி முதல் சகரம் தத்துவ போதகர் காட்டியபடியே *tch* என ஒலித்துவரக் காண்கிறோம். வீரமா முனிவர் காலத்திற்குள் ஒலிப்பிலா ஒலி ஒலிப்புடைய ஒலியாக மாறுஞ் சட்டம் நிலைபெற்று விட்டது எனலாம்.

பத்தொன்பதாவது, இருபதாவது நூற்றாண்டில் மேலே கூறிய மாறுதல்கள் பேச்சுவழக்கில் நிலை பெற்றன இடையில் இரட்டித்த வல்லெழுத்து ஓரொலியாய் ஒலிப்பிலா ஒலியாக ஒலித்தலால், இயல்பாக இருந்த ஓரொலி வல்லெழுத்தானது ஒலிப்புடை ஒலியாக ஒலித்ததனினும் வேறுபட்டது (வாத்து-Vaatu; வாது-Vaadu); எனவே, ஒலிப்புடை வல்லெழுத்தும ஒலிப்பிலா வல்லெழுத்தும் ஒலியன்களாயின (Phoneme) இலக்கிய வழக்கு ஏறக்குறைய நன்னூலார் கூறியபடியே வழங்கிவந்தது பேச்சு வழக்கில் மொழியின் ஈற்றில் வரும் ம், ன், ள், ல், ர் என்பன கெட்டன ஈற்று மெல்லெழுத்துக் கெட்டபொழுது முன்னின்ற உயிர் மூக்கொலி பெற்றது டகர மெய்யும் பின்வரும் வல்லெழுத்தாக மாறியது (கேக்குறோம், கேப்போம்) ழகரம் சில இடங்களில் யகரமாய்ப் பின் சகரமும் ஆயிற்று (இழுத்து, இயுத்து, இசுத்து), வல்லெழுத்துக்கள உரசெழுத்தாக மாறின (பகல்-Pahal) பல மரூஉ வழக்குகள் விரைந்தொலிததல் காரணமாக எழுந்தன

முகம்மதியராட்சி, மேனாட்டாராட்சி இவற்றின் காரணமாகக் கற்றோர் பேச்சில் Z (Zamin), f (Coffee), ஷ, ஸ, ஶ, ஜ, ஹ முதலிய ஒலிகள் புகுந்துள்ளன; மயங்காத எழுத்துக்கள் மயங்குகின்றன (கட்ல், சக்ரம் முதலாகாத எழுத்துக்கள் முதலாகின்றன (ராமன், டம்பம், Fashion Zamin), மொழிக்கு ஈறாகாத எழுத்துக்களும் ஈறாகின்றன (கோர்ட், சாக்)

தமிழ்நாடு பல நாடுகளாகப் பிரித்து நின்றதன் பயனாகப் பற்பல திசை வழக்குகள் பழைய காலந் தொடங்கியே எழுந்தன. மொழிவழி பூகோளம் (Dialectic geography, Dialectology) என இந்நாளில் ஆராய்ந்து இத்திசைமொழி வழக்குகளை நிலப்படம் (Dialectic atlas) வரைந்து காட்டுவதும் உண்டு அத்தகைய ஆராய்ச்சி தமிழ் நாட்டில் எழவில்லையானாலும் பருப்பொருட்டாக ஒருவாறு இந்நாளைய தமிழ்த்திசைமொழி வழக்கினைக் காட்டலாம் தமிழ் நாட்டின் வடகோடியில் ழகரம் யகரமாகவும் வழங்கும், தென்னார்க்காட்டில் சில இடங்களில் ஷ் என்று வழங்கும், தெற்கே ள என்றும் வழங்கும் அவர்கள் என்பது *அவங்க* என வழங்குவது வடபகுதி வழக்கு *அவுக* என வழங்குவது தென்பகுதி வழக்கு *அவிய* என வழங்குவது கொங்கு நாட்டு வழக்கு. கொங்கு நாட்டில் ஞகரம் வழங்காமை குறிக்கத்தக்கதாம்.

தமிழ் மொழியின் வரலாற்றைச் சொல்லுருபியல் வழியேயும் (Morphology) ஆராய்தல் வேண்டும் சொல்லின் அடிப்படையாம் பொருளே அதன் உரிப்பொருளாம் அதனைக் காட்டுவது உரிச்சொல்லாம். இதுவே பகுதியாகும் சொற்கள் ஒன்றோடொன்று கொள்ளும் இலக்கண இயல்பே இலக்கணப் பொருளாம் இதனை விளக்குவது இடைநிலை, விகுதி, உருபு எனப் பல்கிப் பெருகும் இடைச் சொல்லாம். திராவிட மொழியில் சொல்லின் உறுப்புக்கள் தனித்தனிச் சொற்கள் போலத் தெளிவாக விளங்கி, ஒன்றோடொன்று ஒன்றிக் கிடப்பதுபோலத் தோன்றுவதால் ஒட்டுமொழி (Agglutinative) என்று திராவிட மொழிகள் பெயர்பெறும். இடைச்சொல், உரிச்சொல் என்ற வழக்கும் காண்க. தமிழில் இவ்விடைச் சொற்கள் (Affix) பகுதிக்குப் பின் நிலையாக வருவதன்றி (Suffix), முன் நிலையாகவோ (Prefix), பகுதியின் உள்நிலையாகவோ (Infix) வாரா, இடைச் சொற்கள் தொல்காப்பியர் காலத்தில் பால்காட்டும் ஈறுகள் என்றும், காலங்காட்டும் இடைநிலைகள் என்றும், வேற்றுமை யுருபுகள் என்றும், உவம உருபுகள் என்றும், அசைநிலை, இசைநிலை, குறிப்பு முதலியன என்றும், சாரியை என்றும பகுத்து ஆராயப்பெற்றன குறிப்பிடைச் சொற்கள் தனிச்சொல் போலப

பொருள் கொண்டு நின்றாலும், பெயரையோ வினையையோ சார்ந்தன்றி வழங்கவில்லை. அசைநிலை, இசைநிலை முதலியனவும் முன்னோரு காலத்தில் பொருளுணர்த்தி நின்றிருத்தல் வேண்டும்.

பழைய திராவிட மொழியில் அடிச்சொல்லாம் பகுதி நேரசையாகவோ நிரையசையாகவோ அமைந்திருந்ததெனலாம் நிரையசையிலும் இரண்டாவது வரும் உயிர் இன்னோசைக்காகவோ, சிறப்புநிலை சுட்டவோ (அண், அணி, அணை, அணர்) வருவதெனக் கொள்ளக் கிடத்தலின் அடிச்சொல்லெல்லாம் ஓரலகாம் (Mono-syllable) சொல்லே என்பர் கால்டுவெல். நேரசையாய் நிற்பன சிலபோது நிரையசையின் விகாரமென்றும் தோன்றும் (அகழ்-ஆழ்), ஆக்கநிலை உருபுகள் நேர்பும் நிரையும் ஆக மாறவும் காண்கிறோம் (ஆ-ஆகு; நூறு-நுறு-நுறுங்கு). சில இடங்களில் அடிச்சொல்லின் ஈற்று மெய் கெடுதலும் சொல்லாக்க உருபிற்கு ஏற்ப வலிமெலியாக மாறுதலும் உண்டு (வேய்+பு-வேம்பு, மழி-மழ்-மழுங்கு-மங்கு, சார்து-சாத்து; தொய்+கு=தொங்கு), நிரையசையாக அமைந்தவற்றிலும் ஈற்றில் வரும் உயிரும் மெய்யில் முடியும் உயிரும் ஆக்கநிலை உருபுகளாகலாம் (அழ்-அகழ், இழ்-முகிழ்; இர்-துளிர், இ-அணி, அல்-குழல்; இல்-துயில்; அறு-கிணறு; கு, சு, டு, து, பு, று, வடக்கு, முழைஞ்சு, பண்டு, மருந்து, வம்பு, உரறு என வரும். டு, று புணர்ச்சியால் வந்தவையாகலாம் என முன்னரே குறித்துள்ளோம்) தெரிவு=தெலுபு (Telugu); தெல் (தெள், தெளி)+தல், தேறல், ஏர்=ஏழு; பழம்=பயம் என வருபவற்றை ஆராயும்போது ல, ள, ரல, ரழ என்பவவை மாறாடியதனையும் ரகர ளகர மெய்ம்மயக்கத்தினையும் காண்கிறோம் உயிர்கள் மாறுவதனை முன்னரே குறித்தோம்

சில பகுதிகள் இரண்டு அடிச்சொல் சேர்ந்தமைந்தவையாம் (காமரு=காமம்+வரு, அணர்=அண்வ்ரு; கொணர்=கொண்டுவரு; காமம் மரு என்று பிரித்துக் காட்டுவதுமுண்டு).

சொல்லாக்க உருபுகள் வேறுபடுவதால் பொருள் வேற்றுமையும் இருந்திருத்தல் வேண்டும் இன்று அவற்றை வேறு பிரித்து அறிவது அருமை தொல்காப்பியர் காலத்தில் இவை எல்லாம் பகுதியிலும் வேறாகக் கருதப்படவில்லை. இரு சொற்கள் தொகைச் சொல்லாக அமையும்போதும், வேற்றுமையுருபு பெறும்போதும், அச்சொற்கள் அந்நாளில் வழங்கிய வடிவத்தோடு இடையே ஒருசில சொல்லுருபுகளைப் பெற்றன இவற்றைத் தொல்காப்பியர் சாரியை

என்பர். இவற்றைக் கால்டுவெல் மிகப் பழைய காலத்து வேற்றுமையுருபுகள் என்று கருதுவர். வேற்றுமைப் புணர்ச்சியிலேயே இவை பெரும்பான்மையும் வரும் என்றே தொல்காப்பியரும் உருபியலில் இவற்றைக் கூறுகிறார். சாரியை வரும் தொகைச் சொற்களையும் வேற்றுமை உருபு வந்த இடமாகக் கால்டுவெல் கருதுவர். இவ்வாறு இவற்றைக் கருதக் கூடிய நிலை தொல்காப்பியர் காலத்திலேயே எழுந்தது எனலாம். ஆனால், வேற்றுமை அல்லாத இடங்களிலும் வருவதனை அல்வழி வந்த சாரியை என்பது இலக்கண வழக்கு. புதிதாக ஒன்று தோன்றுவதிலும் இருந்தது கெடுவது இயல்பாகும். எனவே, பழைய காலத்தில் சொல்லின் முழு வடிவின் ஈற்றில் அமைந்தவையே இவை என்றும், பின் விரைந்து ஒலிக்கும் பேச்சு வழக்கில் இவை கெட்டன என்றும், என்றாலும் ஒரு சொல் நீர்மை பெற்ற தொகைச் சொற்கள், உருபேற்ற சொற்கள் முதலியவற்றில் பயின்று வழங்கி வந்தமையால் தம் வடிவை இன்றளவும் இழவாது அங்கே காட்டி வருகின்றன என்றும் .கொள்ளுதல் கூடுமோ என ஆராய்தல் வேண்டும்.

யான்-யாம்; உன்-உம், தான்-தாம் என்பவற்றை ஆராயும்போது ஒருமையைக் குறிக்கும் விகுதியாக னகரமும், பன்மையைக் குறிக்கம் விகுதியாக மகரமும் இந்த மூவிடப் பெயர்களில் இன்றும் வழங்கக் காண்கிறோம். எல்லாச் சொற்களிலும் ஆண்பால், பெண்பால் என்ற வேற்றுமையின்றி, ஒருமையை னகரமும் பன்மையை மகரமும் காட்டிய நிலை மிகமிகப் பழைய காலத்துத் திராவிட மொழியில் வழங்கிய நிலை எனக் கொள்ளக்கூடும்.

மகரமும் னகரமும் குறிப்பிட்ட ஒன்பது சொற்களில் அன்றிப் பிற அஃறிணைச் சொற்களின் ஈற்றில் மாறாடுவதனைத் தொல்காப்பியர் குறிக்கின்றார். ஒருமை பன்மை என்ற வேற்றுமை தெரியாதபடி அங்கே மயங்கிய காலமாகும் அது. மகரமும் னகரமும் ஈற்றில் முழுவதும் ஒலியாமையால் கெடும்போது அவற்றின் முன்னுள்ள உயிர் அந்த மூக்கொலியைப் பெறுவதனை எங்கும் காண்கிறோம். இவ்வாறு மரம் மரன் என்பவை மர0 (mar $\tilde{a}$) என்ற ஒலியாக ஒலிக்கும்போது ஒருமை பன்மை எவ்வாறு காண்பது? இவ்வாறு நிகழ்ந்தபோது அஃறிணைச் சொற்கள் ஒருமை பன்மை என்ற வேற்றுமை காட்டமாட்டாது நின்றன. இவற்றையே தொல்காப்பியர் அஃறிணை இயற்பெயர் என்பர்; பின்வந்தோர் பால்பகா அஃறிணை என்பர். அஃறிணையில் ஒருமை பன்மை வேறுபாடு பின் புகுந்தது அன்று; முன்னிருந்து மறைந்தது

என்றே கூறவேண்டும். பகுதியளவிலே இயற்கை னகர ஈறாக முடிந்தவை ஒன்பது என்பர் தொல்காப்பியர்; பிற எல்லாம் விகுதிபெற்ற நிலையில் ஒருமையில் னகரமும் பன்மையில் மகரமும் பெற்றவை எனல் வேண்டும்.

மகர ஈறும் னகர ஈறும் ஒன்றான நிலையில் தெலுங்கு னகர ஈற்றையே இயல்பீறு எனக்கொண்டது (மரம்=ம்ரானு; குளம்=கொலனு); தமிழ் மகர ஈற்றைக் கொண்டது. மகரம் மெல்லொலி இழந்து வகரம் ஆகும். நீவிர் என்பதின் இடைவகரம் பன்மை மகரமே ஆம். கன்னடத்தில் வகரம் பன்மையைச் சுட்டுதலைக் காணலாம். தமிழிலும் வகரம் அவ், இவ், உவ் என்பவற்றில் பன்மையைச் சுட்டுகிறது. சில மெய்கள் கெடும்போது அவை யகர (அல்லது இகர) ஒலியாகத் தேய்தலும் உண்டு.(அம்=அவ்(அஉ=அஇ=அய்)=ஐ+அ(அவை-செல்வ); உகரம் இகரமாகவோ உகரமாகவோ கொள்ளக் கூடியபடி ஒலித்த நிலையில் ஒருசில மொழியில் அது உகரமாகவும் வேறு சில மொழிகளில் இகரமாகவும் வந்தனபோலும்.

இவற்றில் னகர ஈற்று வடிவங்கள் தமிழில் அருவழக்காய் வழங்கின. அவை வேற்றுமையுருபு ஏற்கும் போது சாரியை பெறாது வரும்.

இவ்வாறு பலகாலம் வழங்கிய நிலையில் ஈற்று அம், அன் என்பன கெட்டுச் சொற்கள் வழங்கி வந்தகாலத்துச் சிலசொற்களில் பழமை எஞ்சியது புறநடையாகத் தொகைச் சொற்களிலும் வேற்றுமைப் புணர்ச்சியிலும் வந்தன; இவற்றைச் சாரியை எனலாயினர். இன், இம் என்பனவும் இத்தகையனவே போலும். அன் சாரியை அது, இது, உது என்ற ஒருமைப் பெயர்களின் பின்னர் வருதலையே தொல்காப்பியர் விதிக்கிறார். எண்ணுப் பெயர்கள் அன் பெறுவதும் கூறுகின்றார். எண்ணுப் பெயர்கள் ஒவ்வொன்றும் தொகையாக ஒன்றெனக்கொண்ட நிலையை உணர்த்துவதால் அவற்றை ஒருமை என்று கொள்ளலாம். பலவாய் நின்று உறழும் பெருக்கல் வாய்ப்பாட்டில் எண்ணுப் பெயர்கள் பன்மையாம்; ஆதலின் அங்கே இற்றுச் சாரியை வரும். இற்று என்பது பன்மையாம்.

அம் சாரியையோடு நிற்கும் சொற்கள் பழைய பன்மை வடிவங்கள் எனல் வேண்டும் பனை=பனம் (பனங்காய்). ஆவிரை, ஆவிரம் முதலானவை காண்க. ஐ=அம் என மேலே கூறியது இங்கு உண்மையாதல் காண்க பனை, பன என மகரம் கெட்டு அகர ஈறாய்ப்

பன+அட்டு=பனாட்டு என வருதலும் காண்க. இவற்றின் பழைய ஒருமை வடிவம் பனையன்., ஆவிரன் என்பனவாம். மகரவீறே அன்றி னகரவீறும் வன்மைக்கினமாய்த் திரிந்த காலத்தின் பின், மகரமே வன்மைக்கினமாய்த் திரியும் என்று கொண்ட காலத்துப் புணர்ச்சியில் திரிந்த பழைய அன் அம் என்ற இரண்டையும் அம் என்று தானே பிரித்துக் காட்டக்கூடும்? புளியன், வேலன், ஆலன் என்ற னகர ஈற்றுப் பெயர்கள் இந்த மரங்களுக்கு இன்றும் பெயராய் வழங்குவது காணலாம். குற்றுகர ஈற்றில் சில, பழைய காலத்தில் அன் ஈறாகவும், சில இன் ஈறாகவும் வழங்கி இருத்தல் வேண்டும். இம் என்பது பன்மை வடிவம் எனலாம்.

அற்று என்பதனை வற்றுச்சாரியை எனத் தொல்காப்பியர் விதித்தது அங்குள்ள வகரம் பன்மையைச் சுட்டலின் பன்மைக்கே வரும் இயல்பினைக் குறிக்கவே போலும். ரகரவீறு ஆண் பெண் ஏன்று பாகபாடு இன்றிப் பன்மையை மட்டும் காட்டும் நிலையும் திராவிட மொழியில் வழங்கியது என்பதனை நீர் என்ற சொல் இன்றும் நமக்கு விளக்குகிறது. அர், இர் என்பன இவ்வாறு பன்மையைச் சுட்டுவன அர்+து=அற்று; இர்+து=இற்று என்று ஆயின எனலாம். *து* என்ற விகுதி பழைய திராவிடமொழியில் எத்தனையோ இடங்களில் ஆக்கநிலை உருபாக ஒருமையைச் சுட்டாமல் வரக்காண்கிறோம். தொல்காப்பியர் காலத்தில் *து* ஒருமையைச் சுட்டினாலும் அவர் காலத்துக்குமுன் ஒருமையைச் சுட்டாத காலமும் உண்டெனல் வேண்டும்.

மகரம் பன்மை விகுதியாவதனை, எல்லாம் என்பதிலும், பலாஅம், சிலாஅம் என்று தொல்காப்பியர் காட்டுவனவற்றிலும் காணலாம். கும், றும், டும், தும் என மகரத்தில் முடிவன பன்மை காட்டுவதும் காண்க செய்யும் என்ற வாய்பாடு மகரவீற்றை இவ்விடங்களில் இயல்பாகக் கொள்வதற்கு ஏற்ப நிலைத்துவிட்டாலும் தெலுங்கில் பெயர்ச்சொற்களின் னகர ஈற்றிணை அம்மொழி இயல்பாகக் கொண்டதற்கு ஏற்ப நகரவீறு செய்யுந் வச்சுந் என வினையிலும் ஒருமையில் வழங்கக் காண்கிறோம். (தெலுங்கில் ன இல்லை; ந உண்டு) இவ்விடங்களில் எல்லாம் பழைய திராவிட மொழியில் தொல்காப்பியர்க்கு முன்னைய காலத்தில் *ன்* ஒருமையும் *ம்* பன்மையும் காட்டின எனலாம்.

இந்த வேறுபாடு மறைந்தபோது இவற்றைச் சாரியை எனக்கொண்டனர் பின்னோர். பழைய வழக்குப் பெரும்பான்மையும் வேற்றுமையுருபேற்ற சொல்லில் நிலைத்துவிட்டதால் வேற்றுமைப்

புணர்ச்சியோடு தொடர்புபடுத்திச் சாரியைகளை ஆராயலாயினர் இவற்றைச் சாரியை என வேறு பிரித்தபின் பிற இடங்களில் இன்னோசைக்காகச் சேர்ப்பதும் இயல்பாயிற்றுப்போலும். இராமன் ஆனவன், மரம் ஆனது என்ற இந்நாளைய வழக்குப்போல *மரம் அது* என்பதும் பழைய வழக்கு; அதற்கும் முன்னர் து என்பதனைப் பெயரோடும் சேர்ப்பது மிகப்பழைய வழக்கம்போலும். பிற குற்றியலுகரங்களில் ஒற்றிரட்டுவது போல இதுவும் இரட்டியபோது பெறும் வடிவே அத்துச்சாரியை, மரத்து என்பது குறிப்பு வினையாலணையும் பெயராய் வேற்றுமையுருபு பெற்றது என்றும் கொள்ளுதல் கூடும்

திங்கட்பெயர் முன்வரும் இக்குச்சாரியையும் நாட்பெயர் முன்வரும் ஆன் சாரியையும் உண்மையில் இட உருபுகளே ஆம். தொல்காப்பியர் காலத்தில் ஆன் உருபும் கு உருபும் இவ்வாறு பயின்று வழங்காமையால் இவற்றைச் சாரியை எனக்கொண்டனர் எனலாம்

தொல்காப்பியர் *காலத்தில் சாரியையாகக் கருதப்* பெற்றவை அ, உ, அக்கு, இக்கு, வற்று, அன், இன், ஒன், அத்து, ஏ, தம், நம், நும், கெழு என்பனவாம் உகரம் இன்னோசைக்காக மெல்லீற்றின் பின்னும் இடையீற்றின் பின்னும் வந்தது. அ என்பது ஆறாம் வேற்றுமையுருபே ஆம். அக்கு என்பதில் கு கெடும், *மிகுதி நிற்பது* பழைய அம் ஈறே ஆம். ஏ, கெழு, நம், நும், தும் என்பன சொற்களாக முன் நின்றவையே ஆம். ஏ உம்மைப் பொருளில் வருகிற எண் இடைச்சொல் ஆம்.

வேற்றுமையுருபுகள் ஐ, ஒடு, கு, இன், அது, கண் என்பர் தொல்காப்பியர். எழுவாய் திரிபில்லாத பெயராக வரும். ஐ என்பது செயப்படுபொருளைச் சுட்டும். ஐ பழங்கன்னடத்தில் அம் என வழங்கும். அதுவே அதன் பழைய வடிவம் எனலாம் அம், ஐ ஆதலை மேலுங் கண்டோம். இந்த உருபு அ என்றும் வரும். *காவலோனக் களிறஞ்சும்மே* என்பது எடுத்துக் காட்டு. காவலோனம் என்ற மகர ஈறு ஒற்றழிந்து உயிரீறொப்பப் புணர்ந்ததெனக் கொள்ளலாம்.

*தனிக் குறில் முன்னொற்று உயிர்வரின் இரட்டும்* என்ற விதி வழங்காத காலமும் இருந்தது. அந்தக் காலத்திலே வழங்கியவை *எனக்கு* (4ஆம வேற்றுமை), *என* (6ஆம் வேற்றுமை) முதலியவை என்னை, என்னால், என்னோடு, என்னில் என்பவை அந்தக் காலத்துக்குப பிந்திய காலவழக்கு எனலாம் எனவே, ஐ என்ற வேற்றுமையுருபும் காலத்தால் பிந்தியதே ஆம்.

அஃறிணை அ0(ã) என்றே முடிந்ததால் மேலும் அ0(ã) என்ற இரண்டாம் வேற்றுமையுருபைச் சேர்க்காமல் வழங்குவதே முன்னாளில் இயல்பாதல் வேண்டும். ஒடு என்பது உடனிகழ்ச்சிப் பொருளிலும் கருவிப் பொருளிலும் (ஊசியொடு குயின்ற தூசு) வழங்கியதனை ஒட்டித் தொல்காப்பியர் அதனை மூன்றாம் வேற்றுமையின் உருபு என்றும், அப்பொருள்களை அதன் பொருள் என்றும் கூறுகிறார்.

ஆன் என்பது, *தூங்கு கையான் ஓங்கு நடைய* என்பது போன்ற இடங்களில் உடனிகழ்ச்சிப் பொருளில் வந்தது. ஆன் என்பது மூன்றாம் வேற்றுமைப் பொருளில் தொல்காப்பியர் காலத்தில் பெருவழக்காமையால் அதனைச் சிறப்பாக எடுத்துக் கூறவில்லை. 7ஆம் வேற்றுமைப் பொருளிலும் 5ஆம் வேற்றுமைப் பொருளிலும் தொல்காப்பியர் காலத்தும் ஆன் வரக் காண்கிறோம். ஆன் என்பது அவ்விடம் என்று பொருள்படும் 5ஆம் வேற்றுமையும் 3ஆம் வேற்றுமையும் கருவிப்பொருளில் ஒன்றாய் இருந்தனபோலும் இன் என்பது ஒப்பு, உறழ்ச்சி என்ற பொருளில் வழங்கிய போது சிறப்பாகியது; நீக்கப்பொருள் இதிலிருந்தும் எழுந்த வளர்ச்சியாம் பின்னர் இடப்பொருள் வளர்ந்த போது இன் என்பதன் னகரம் மெல்லோசை இழந்து லகரமாகிய மாற்றத்தின் பயனாக 7ஆம் வேற்றுமை உருபாக இல் என்பதனோடு இது மயங்கியது. கண் என்பதனைக் கு+அண் என்று கொள்வர் ஜூலே பிளாக் (Jules Bloch). நடுவண், அவண், அங்கண் (அங்கு+அண் அங்கு>ஆங்கு=ஆன்+கு) என்பவற்றில் இந்த அண் வரக் காண்கிறோம். அண் என்பது இடப்பொருளைக் குறிப்பது வெளிப்படை. ஆனால், தொல்காப்பியர் காலத்திற்குள் கண் என்பது தனிச்சொல்லாகக் கருதப்பெற்று வழங்கலாயிற்று. இடப்பொருளைக் குறிக்கும் எந்தச் சொல்லின் பொருளையும் இது குறிப்பது இயல்பாயிற்று. எனினும் பிற சொற்களும் இடப்பொருளைக் குறிக்கும் 7ஆம் வேற்றுமை உருபாக வழங்கக் காண்கிறோம்

கு என்பதற்குக் கொடைப்பொருள் சில இடத்து வரினும், வடக்கு, தெற்கு என்பதில் கு என்பது திசையை-போக்கை-அதாவது சென்று முடியும் இடத்தைச் சுட்டுவதுபோலவே வினை சென்று முடியும் இடத்தைச் சுட்டியது எனலாம். எல்லைப்பொருள் அதற்கு இயல்பு. அவனுக்கு மகன் என்ற முறையைச் சுட்டும் வழக்கு இந்த அடிப்படையில் எழுந்ததேயாம்

அ என்பதே பழைய ஆறாம் வேற்றுமைக்குருபாகும். அக்குச் சாரியை என்பது இந்த ஆறாம் வேற்றுமை விகுதியும் கு என்பதும் ஒன்றுசேர்ந்து வரும் என ஐயம் எழுகிறது. இந்த ஆறாம் வேற்றுமை அகர ஈறு தொல்காப்பியர் காலத்தில் வழங்கிய அஃறிணைப் பன்மை விகுதிபோலத் தோன்றியதாலும், *என கை* என்பதனை *என்னுடையன கைகள்* என்று எழுவாயும் பயனிலையுமாகக் கொள்ளவும் இடந்தந்ததாலும் அகரவுருபைப் பன்மைக்கே வரும் உருபெனக்கொண்டு பன்மையில் மட்டும் வழங்கும் வழக்கம் தொடங்கியது. *அஃறிணை* விகுதியோடு மயங்கிய மயக்கத்தால் அஃறிணை ஒருமை ஈறாம் அது என்பதனை ஆறாம் வேற்றுமை ஒருமை உருபாகக்கொண்டு வழங்கும் வழக்கமும் தொல்காப்பியர் காலத்தில் நிலைபெறலாயிற்று அது என்றும் அ என்றும் முடியும் அஃறிணை வினைச்சொற்களை வினையாலணையும் பெயராக்கி, வேற்றுமையுருபேற்றி வழங்கும் பழைய வழக்கம் ஆறாம் வேற்றுமையையும் அஃறிணை விகுதியையும் மயங்கும் மயக்கத்தை மேலும் நிலைபெறச்செய்தது. ஆறாம் வேற்றுமையுருபு ஏற்ற பெயர் வேற்றுமையுருபுகளை எல்லாம் ஏற்றுவரும் என்ற கொள்கையும் இதனாலேயே எழுந்தது.

விளி வேற்றுமை என்பது தொடக்கத்தில் முன்னிலை வடிவமாக அமைந்ததே போலும். தொல்காப்பியர் காலத்தில் படர்க்கை வடிவத்தோடும் பெயர்கள் சில மாறுதல்களோடு விளிப்பெயராய் வழங்கும் வழக்கமும் நிலைபெற்றுவிட்டது.

காலங்காட்டும் இடைநிலைகள் தனியே ஓரிடைச் சொல்வகையாகக் கருதப்பட்டன என்று எண்ண இடமுண்டு. தொல்காப்பியர் அன், அள் என ஈற்றினைப் பிரித்துக் கூறுதலின், அதற்கு முன்வரும் கால எழுத்துக்களாம் இடைநிலைகளையும் தனியே வேறு கொள்வர் போலும் வீரசோழியம் இடைநிலையையும் விகுதியையும் ஒன்றாகச் சேர்த்து, *கிறான், கிறாள்* என்பன போல வேறுபடுத்திக்காட்டும். *வினைச்சொல் மருங்கில் காலமொடு வருந* என்று தொல்காப்பியர் கூறுவதற்கு இவ்வாறும் பொருள் கொள்ளுதல் கூடும். வ என ஓர் ஈற்றினைக் கூறுகின்றார் அன்றோ? தொல்காப்பியர் காலத்தில் இடைநிலையின்றி விகுதியே காலங்காட்டியதும் உண்டு எனவே வினைச்சொல்லின் விகுதியாக வருபவையும், இப்படி விகுதியாக வருமபோது காலக் கிளவி அல்லது காலங்காட்டும் இடைநிலையோடு

வருபவையும், காலங்காட்டும் இடைநிலையின்றி வருபவையும் எனப் பலதிறப்படுவதனையே இங்குத் தொல்காப்பியர் கூறுகின்றார் என்று கொள்ளுதல் கூடும். ஆனால், பின்வந்த நன்னூலார் கூறுவதுபோலக் காலங்காட்டும் இடைநிலைகள் இவை என்றோ, இவை என்ன என்ன காலங்காட்டும் என்றோ அவர் கூறவில்லை.

முக்காலமென்று கூறிவந்தாலும் தமிழின் போக்கு முடிந்த செயல், முடியாத செயல் என்ற இரண்டினையே வற்புறுத்தும் இந்த இயல்பே திராவிட மொழியின் வினைச் சொல்லின் இயல்பு போலும். செய்யும் என்ற வாய்பாடு நிகழ்காலம் காட்டுவது தொல்காப்பியர் காலநிலை செய்பு என்பதும் நிகழ்காலம் காட்டும் வினையெச்சம் என்று உரையாசிரியர்கள் விளக்குகிறார்கள்

இறந்த காலம், இறந்திலாக்காலம் என இரண்டினையே தொல்காப்பியர் காலத்தில் தெளிவாக எடுத்துக்காட்டுதல் கூடும். இறந்தகாலத்தைக் குறிக்கப் பகுதிக்குப் பின் தகரம் வந்தது பெரும்பான்மை எனலாம். பகுதியின் ஈற்றெழுத்து லகரமோ ணகரமோ ஆனால் தகரம் றகரமாகும், ளகர ணகரமானால் டகரமாக மாறும். ஒரு சில இடங்களில் இதற்கும் பகுதிக்கும் இடையே மெல்லெழுத்தொன்று வரக் காண்கிறோம் (சார்ந்தான்); சில இடங்களில் தகரம் இரட்டிக்கும் (பார்த்தான்), மெல்லெழுத்து இவ்விடங்களில் வருவது பல இடங்களிலும் வல்லெழுத்தாகித் தன்வினை வடிவத்தைப் பிறவினை வடிவமாக்கிவிடும். பகுதிகள் கு முதலிய சொல்லாக்க உருபுகளைப் பெற்று விரியும் போது மெல்லெழுத்துப் பெற்றுத் தன்வினையாகியும், வல்லெழுத்துப் பெற்றுப் பிறவினையாகியும், அடங்கு-அடக்கு என்பன போல வருவதும் உண்டு. இந்த மெல்லெழுத்து பகுதியோடு சேர்ந்ததா (வந்தான்-வம்), அல்லது இடைநிலையோடு சேர்ந்து வருவதா(சென்று என்பதில் சென் எனப் பகுதியைப் பிரியாது செல் என்றே கொண்டு ந்து என்பது இடைநிலையாக வர, அதனால் ல்+ந்து=ன்று என ஆயிற்று எனக் கொள்ளலாம்), அல்லது பகுதிக்கும் இடைநிலைக்கும் இடையே அவற்றின் எல்லையைக் காட்டி நிற்பதா (சந்தி), என்பதனை முடிவாகச் சொல்வதற்கில்லை.

குற்றியலுகரமாக நிற்கும் பகுதிகளின் பின்னே இ என்பது அடங்கு>அடங்கி என்பது போல இறந்த காலங் காட்டக் காண்கிறோம். நிலைஇ=நில+இ; உரைஇ=உர+இ, போய்=போ+இ, நிலீஇ=நில்+இ என

வரும் இடங்களில் குற்றியலுகரம் இல்லா இடத்தும் இகரம் இறந்தகாலம் காட்டக் காண்கிறோம். இது பழைய வழக்குப் போலும்.

செய்யூ என்றொரு வடிவம் இறந்த காலத்தில் வருவதைக் காட்டுகின்றார் தொல்காப்பியர். பகுதியோடு உ என்பதைச் சேர்த்து இறந்த காலம் குறித்தார்கள். செய்தென, செயற்கென என வருபவை காரிய காரணப் பொருளில் இறந்த காலத்துமம் எதிர் காலத்தும் முறையே வந்தன.

சில சொல்லாக்க உருபுகளைப் பகுதிகள் பெறுவதால் தொழிற்பெயர் ஆயின என்று கொள்ள இடமுண்டு. செய்பு என்பது அத்தகைய தொரு வடிவம், செயல், செய்தல், செய்கை முதலியன யாரும் அறிந்தனவே. அர் என்ற சொல்லாக்க உருபும் தமிழில் உண்டு. அது அல் என்பதன் மற்றொரு வடிவமோ என்று கொள்ளக் கிடக்கிறது. இ என்பது பிறவி, பிறை (பிற+இ) முதலியவற்றிற் போலத் தொழிற் பெயர்ப் பொருளை விளைவித்தது விரிந்து போகக் காண்கிறோம். செய்யி (கை=சேய் எனத் தெலுங்கில் வரும்) என்பதும் அத்தகைய பழைய வடிவமெனக் கொண்டால் அதனோடு அர் என்பது சேரச் செய்யியர், வாழியர் போன்ற வடிவங்கள் கிடைக்கும். இவை தொழிற்பெயராயிருந்து பின்னர் வினையெச்சமாகவும் வியங்கோளாகவும் வளர்ந்தன எனலாம். செய என்பதிலும் அகரம் இத்தகைய ஆக்கநிலை உருபென்று கொள்ளலாம். அல்லது, செய்யியர் என்பது செய்யிய என ஈறு கெட்டு நின்றது போலச் செயல் என்பதும் செய என ஈறுகெட்டு நின்றது என்றும் கொள்ளலுமாம். இந்த வடிவங்கள் இறந்ததில்லாக் காலத்தைக் காட்ட வந்தன.

வந்தக்கால், வந்தக்கடை என இடப்பொருள் உணர்த்தும் சொற்களோடு இறந்தகாலப் பெயரெச்ச வடிவம் போன்றதை முன்னர்க் கூட்டிப் பின் இவை ஒருசொல்நீர்மைப்பட்டதனை உணர்த்த இடையே வல்லொற்று மிக்கும், பெயரெச்சத்தின் அகரங்கெட்டு உயிர்மொழி முதலோடு புணர்ந்தும் வினையெச்சமாகி வரக் காண்கிறோம். செயின் என்பது செய்தால் எனப் பிற்காலத்தே வருவதால் அங்கே இன் என்பது மூன்றாம் வேற்றுமையும் ஐந்தாம் வேற்றுமையும் ஒன்றாய் கருவிப்பொருள் தந்து நிற்கும் கன்னட உருபினை நினைவூட்டுகிறது. எனவே, இதுவும் முன்னர் உருபேற்ற முதனிலைத் தொழிற் பெயராய் நின்று பின்னர் நிபந்தனையைச் (Conditional) சுட்டும் எச்சமாயிற்று எனலாம். செயற்கு என்பதும் உருபேற்ற தொழிற் பெயரே ஆம்; பின்னர் இது வினையின் நோக்கத்தை விளக்கும் வினையெச்சமாயிற்று.

சிலபோது விகுதியே காலங்காட்டி வரும். செய்யும் என்பதில் வரும் உம் நிகழ்காலம் காட்டும் என்பர் போலும் தொல்காப்பியர். முக்காலத்தும் ஒத்தியல் வழக்கை இந்த வடிவால் வழங்குவது அந்நாளைய வழக்கம். இது சேயுந் எனத் தெலுங்கில் வரும் எனக்குறித்தோம். எனவே, வினையிலும் னகரவீறு ஒருமைக்கும் மகரவீறு பன்மைக்கும் வழங்கிய காலம் தொல்காப்பியத்திற்கும் மிகப் பழைய காலமாகும். இசின், இகும் என்பன முன்னிலை அசை என்பர் தொல்காப்பியர். இவ்வாறு அசையாவதற்கு முன் விகுதியாக நின்ற நிலையில் னகரவீறும் மகரவீறும் ஒருமையும் பன்மையும் சுட்டி இருக்கும். பின் தொல்காப்பியர் காலத்தில் முன்னிலையல்லாத பிற இடங்களிலும் அசையாக இவை வந்தனவாம். நுவன்றிசினே எனத் தொல்காப்பியரே தன்மையொருமைவினையில் (102) வழங்கியுள்ளார். உம் என்பதும் க், ட், த், ற் என்பவற்றோடு சேர்ந்து கும், டும், தும், றும் எனத் தன்மைப் பன்மை ஈறாகி வருதலைத் தொல்காப்பியர் கூறுகிறார். புணர்ச்சி விதிப்படி தகரமே டகரமும் றகரமுமாகத் திரிந்தது; செல்+து என்பது சேறு என்றாயது மிகமிகப் பழைய நிலை. அவ்வாறு நின்ற வடிவம் இறந்தகாலம் காட்டாது இருந்தது; பின் இறந்ததல்லாக் காலத்தைக் காட்டியது. வருதி முதலிய இடங்களிலும் தகரம் இவ்வாறு இறந்ததல்லாக் காலம் காட்டி வருதல் காண்க. சொல்லாக்க உருபாக வல்லெழுத்துக்கள் வந்து, அந்த வினையைத் தொழிற் பெயராக்கி நின்றவை பின்னர்க் காலம் காட்டின போலும். சொல்லாக்க உருபுகளில் முதலில் இகரமும் பின் தகரமும் இறந்தகாலம் காட்டும் இடைநிலைகள் எனக் கொள்ளப்பெற்றன. மற்றவை இறந்ததல்லாக் காலம் காட்டின போலும், கு என்பதும் இறந்ததல்லாக் காலம் காட்டியது. கும் என்ற விகுதி காண்க. பெருவாரியாகச் சொல்லாக்க நிலை உருபாக வந்தமையால் அதனை எதிர்கால இடைநிலையாகக் கொள்ளும் வழக்கு அருகியது (செல்குவ). பகரம் ஒன்றே இறந்ததல்லாக் காலத்திற்கு எஞ்சியது பகரம் உயிரின் பின் வகரமாக மாறியபோது வ் என்பதும் இறந்ததல்லாக் காலம் காட்டியது.

வினைச்சொல் இறந்த காலம் ஒன்றுமே சுட்டிய நிலை மிகப்பழைய நிலை. அங்கும் சொல்லாக்க உருபு ஏற்ற வினைகளைக் கால வகையில் அடுக்கி வரும்போது முன் நிற்பன இறந்த காலம் என்பது தெளிவாம் அத்தகைய நிலையிலேயே மிகப் பயின்று வழங்கும் போது சொல்லாக்கநிலை உருபுகள் இறந்த காலத்தைச் சுட்ட வந்தன எனலாம் உண்மையில் திராவிட மொழிகளில் சொற்றொடர்கள் வினைவடிவில அமைந்தவை அல்ல, பெயர் வடிவில் அமைந்தவையே ஆம் எல்லா

வாக்கியங்களும் *அவன் சாத்தன்* என்பது போன்றவையே. *இவன் வந்தான்* என்பது, *இவனே வந்த அவன்* என எழுவாயும் பயனிலையும் பெயர்ப் பொருளில் வருவதே ஆம். இப்படி அமைந்தவையே பின் பெயரும் வினையுமாக அமையும் சொற்றொடராக வளர்ந்தன. பயனிலையாக வருவது வினை என முடிந்தது.

கும், டும், தும், றும் என்பன தன்மைப் பன்மையில் மட்டும் வழங்குகின்றன. ம் பன்மையானால் குன், டுன், துன், றுன் என்ற ஒருமை வடிவங்கள் இருந்திருத்தல் வேண்டும்; இவற்றின் ஈற்று னகரம் கெட்ட வடிவேமே கு, டு, து, று என்பன, இவை தன்மையில் வழங்கும். தன்மையல்லாத பிற இடங்களில் செய்யும் என்ற வாய்பாடே வழங்கிற்று. ஈதும் ஒரு காலத்தே பன்மைக்கே வழங்க உன் என்ற ஈறு ஒருமைக்கு வழங்கி இருத்தல் வேண்டும். வருந என்பது போன்ற வடிவங்களைத் தொல்காப்பியத்தே காண்கிறோம். இவற்றில் வருந் என்பது தெலுங்கிற்போலச் செய்யுன் என்ற ஒருமை வாய்பாடு எனலாம். இந்த வடிவம் ஒருமை என்பதனை மக்கள் மறந்துபோன காலத்தில் இதுவே பகுதியாக நின்று ஒருமைக்குத் து என்ற விகுதியையும், பன்மைக்கு அ என்ற விகுதியையும் பெற்று வழங்கலாயிற்று. செய்யும் என்பது பன்மைக்கே அன்றி ஒருமையிலும் வழங்கியது. செய்யுந்து, செய்யுந என்ற சொற்களைக் காண்க.

வினையெச்ச வடிவங்கள் பழையன எனலாம் சொல்லாக்க நிலையுருபுகள் பெற்ற பகுதியின் வடிவங்களே இவை ஆம். வினை யெச்சத்தோடு அ என்ற சொல்லுருபு பெற்றுப் பெயரெச்ச வடிவம் அமைந்தது பழைய ஆறாம் வேற்றுமையுருபு வினை குறிக்கும் தொழிலையுடைய என்ற பொருளில் வந்து பின்வரும் பெயரோடு தொடர்ந்து நின்றது போலும். செய்யும் என்னும் பெயரெச்சம் (செய்யும், செய்யுன் என்ற இரண்டு வடிவமும் செய்யும் என்றே பின் வழங்கின) தொடர்ந்த பெயர், உண்மையில், குறிப்பு வினையாலணையும் பெயரும் இயற்கையான பெயரும் இரு பெயரொட்டாய்த் தொடர்ந்த நிலையே ஆம். பெயருக்கு முன் வருவதெல்லாம் பெயரடை ஆன நிலையில் பெயரெச்சம் என்ற இனம் ஒன்று வளர்ந்தது. வினைச் சொல் பகுதியாக நின்று, பெயர் அடையாகி வினைத்தொகை என வருவதும் காண்க வினைப்பகுதியும் ஆக்கநிலையுருபுமாய் நின்ற சொற்கள் ஒருமைக்கு அன்னும் பன்மைக்கு அம்மும் பெற்றவை, அவ்வீறுகள் மயங்கியும், கெட்டும், வகரமாகத் திரிந்தும் நின்ற நிலையில் சாரியை எனக் கருதப் பெறறபோது, மேலும் அன், அள், அர், அது முதலிய பால் காட்டும

விகுதிகள் பெற்று, வந்தனன், வந்தவன், என்மனார். செய்ம்மன, என்மார் என்றெல்லாம் வந்தனபோலும். வந்தனன், வந்தவன் என்பவற்றை வந்த+அன் எனப் பிரித்து, இடையில் வரும் னகரத்தையும் வகரத்தையும் உடம்படுமெய் என்பர் கால்டுவெல். உடம்படுமெய் வாராக் காலத்தை இங்கு ஆராய்கிறோம் என்பதனை மறத்தல் ஆகாது. வருந என்பவற்றில் நகரமே இருத்தலால் பழைய ஒருமை ஈறு நகரம் எனக்கொண்டால் னகரம் அதனினும் வேறாய் ஆண்பாலைச் சுட்ட வரலாம். அஃறிணை, உயர்திணை என்ற பாகுபாடு திராவிட மொழிகளின் இயல்பு என்பது உண்மையே. திராவிட மொழிகள் பலவாய்ப் பிரிவதற்கு முன்னரே இந்தப் பாகுபாடு எழுந்தது என வேண்டும். தொல்காப்பியர் காலத்தில் அன், ஆன் ஆண்பால் விகுதியாயின. அள், ஆள் பெண்பால் விகுதியாயின அர், ஆர் பலர்பால் விகுதியாயின து (இது டு,று என்றும் திரியும்) ஒன்றன் பால்விகுதியும், அ, வ என்பன பலவின்பால் விகுதியும் ஆயின (இது யாவை முதலியவற்றில் ஐ யீறும் ஆம்) அது என்ற உகரவீறு இகர ஈறாகத் தெலுங்கில் ஆயபோது தோழி, கிழவி, மனைவி முதலியவற்றில் வரும் பழைய பெண்பால் விகுதியான இகர ஈற்றோடு மயங்கியமையால் தெலுங்கு முதலிய மொழியில் பெண்பாலும், ஒன்றன் பாலும் ஒன்றாயின போலும். இல்லையேல் பெண்பாலை ஒருமைப்பாலின் நின்றும் வேறு பிரித்தது, தெலுங்கு பிரிந்த பின் கன்னடம், தமிழ், மலையாளம் முதலிய தென் திராவிட மொழிகளில் மட்டுமே எனல் வேண்டும்

எதிர்மறைவினை என ஒருவகை வினை தனியே உண்டு. பகுதிக்கும் விகுதிக்கும் இடையே அ என்ற எதிர்மறை இடைநிலை வரும். இது விகுதியோடு சேரும்போது விகுதியின் முதல் எழுத்து அகரமானால் இரண்டும் சேர்ந்து ஆ என நெடிலாம் பிற உயிரானால் இரண்டும் சேர்ந்து வந்த உயிரின் நெடிலாம் (வார்+அ+அன்=வாரான், வார்+அ+ஏன்=வாரேன், வார்+அ+இர்=வாரீர்)

வியங்கோள் என்பது மரியாதை ஏவல் என்பர் போப்பையர் தொல்காப்பியர் காலத்தில அது படர்க்கையில் மட்டுமே வந்தது வாழி, வாழியர், வாழ்க, வாழ்தல், வாழல் என வந்ததனை நோக்கினால் தொழிற் பெயர் வடிவங்களே வியங்கோளாய் வளர்ந்தமை விளங்கும தொல்காப்பியர் கூறும விதிச் சூத்திரங்கள் பல வியங்கோளாகவே அமைந்துள்ளன

தொல்காப்பியர் வினைத்தொகை, வேற்றுமைத் தொகை, உவமத்தொகை, உம்மைத்தொகை, பண்புத்தொகை, அன்மொழித் தொகை என்பவற்றையே கூறுகின்றார். வினையொடு வினை சேர்ந்து வருவது மிகப் பழைய நிலையாம். இதனைத் தொல்காப்பியர் கூறாமை ஒன்று. வினை, துணைவினையோடு அனைத்துமொரு பகுதியாவது தமிழில் இன்றுவரை தொடர்ந்து வரும் வழக்கு. செயப்பாட்டுவினை இவ்வாறு வளர்ந்ததொரு தொகையே ஆம். இடைப்படில் முதலிய போன்றவை பெயரும் வினைப்பகுதியும் ஒன்றாகித் தொகையாகி வருவதனைத் தொல்காப்பியர் தம் நூலில் வழங்கினாலும் அவரதனைத் தொகை எனக் குறிக்கவில்லை காமர் (காமம்+வரு) முதலியன முன்னர்க் கண்டோம். உவமைத்தொகை வேற்றுமைத் தொகையில் ஒருவகை என அடக்குதல் தகும். தொகைகளை ஒரு சொன்னீர்மைப்பட்ட பெயர், ஒரு சொன்னீர்மைப்பட்ட வினை எனப்பகுத்து ஆராய்வது தமிழ் மொழியின் இயல்புக்கு ஏற்றதாம்

உவம உருபுகள் உரு, வடிவு, வினை; பயன் என்ற உவமங்களுக்கு வெவ்வேறு வருவதனைத் தொல்காப்பியர் விளக்குகின்றார். சங்ககாலத்தில் தொல்காப்பியர் வழக்கே வழங்கியது என்றாலும் சிற்சில மாறுதல்கள் இல்லாமல் இல்லை. உரையாசிரியர்கள் உரையிற்கோடலாலும் இலேசினாலும் கொண்ட விதிகள் சங்க கால வழக்கினைத் தொல்காப்பியத்திற்குள் அடக்க முயன்ற முயற்சியே ஆம். உவம உருபுகள் தொல்காப்பியர் கூறிய நியதிப்படியன்றி விரவி வந்தன. மரபுளி (3ஆம் வேற்றுமைப் பொருளில் உளி) பிறந்தமாறே (பிறந்ததனால்) போன்ற வழக்குகளும் வழங்கின. மேலே, தொல்காப்பியர் கூறாத தொகைகள் வளர்வதனைக் காண்கிறோம். சங்ககாலத்தில் வியங்கோள், தன்மையிலும் முன்னிலையிலும் வாழ்த்து, வேண்டுகோள், சாபம் முதலிய பல பொருளில் வந்தது. ஒற்றளபெடைகள் பாட்டின் குறையை நிரப்ப எழுந்தன. கேண்ம், சென்ம் போன்ற வழக்காறுகள் பல்கின. போகின்று என்பது போயிற்று என்ற பொருளில் வருவது இது போன்றவை கின்று என முடியும் வடிவின. இவை இறந்த காலம். ஆனாலும், நிகழ்காலப் பொருளில் வருவனபோல ஐங்குறுநூற்றுரையாசிரியர் உரை எழுதுகிறார். போகு பகுதி; இன் குறிற்யலுகரப் பகுதியின் பின்வரும் பழைய ஒருமை விகுதி; ஈற்று னகரம் ஒலியாமைக்கு ஏற்பப் போகின் என்பது ஈறுகெட்டுப் போகி என நின்ற வடிவம் பின் இறந்த காலம் காட்டும் வினை எச்சமாகியது. னகரம கெடாத நிலையிலும் மேலும் துவ்விகுதி பெற்று இறந்த கால ஒன்றன்பால் வினைமுற்றாயது ஆனால், இறந்த காலம் காட்டாத

பழைய வழக்கும் சில போது எஞ்சியிருந்ததன் பயனாக இறந்ததல்லாக் காலத்தைச் சுட்டவும் வந்ததுபோலும் இத்தகைய வடிவங்கள் முற்றுக்களாகித் தொடர்ந்து வரும்போது முற்றெச்சமாகும் முற்றெச்சமே வினையெச்சமாகிவிட இவை நிகழ்கால வினையெச்சமாகத் திருநாவுக்கரசர் காலத்தில் வழங்கின. பின் வழக்கொழிந்தன இத்தகைய வினையெச்சங்களோடு அகரத்தைச் சேர்த்துப் பெயரெச்சமும் (போகின்ற), பால் காட்டும் விகுதிகளைச் சேர்த்து வினைமுற்றும் (போகின்றான்) அமையும் போக்கினை ஒட்டி, நிலையாக அமைந்துவிட்டன. பரிபாடலிலும் கலித்தொகையிலும் பையத் தலைகாட்டி உலக வழக்கினைப் பெரிதும் பின்பற்றும் திருக்குறளிலும் சிலப்பதிகாரத்தும் மிகமிக உள் நுழைந்து பல்லவர் காலத்தில் இவை நிலைபேறெய்திவிட்டன எனலாம்

என் என்ற தன்மை விகுதி அன் என்று பையமாறிய வழக்கு இலக்கியத்திற் புகுந்தது. புறநானூற்றில் ஓரோரிடங்களில் இவ்வாறு காண்பது பின்னர்ப் பெரு வழக்காயிற்று அன் என்பதன் ஈற்று மெல்லெழுத்து மெல்லோசை இழந்து ல் என நின்றதால எழுந்த அல் ஈறு அன் என்பதற்கு முன்பாக இலக்கிய வழக்கில் பரவியது. இங்கே அல் என்பது பழைய தொழிற்பெயர் விகுதியுமாகலாம கள் ஈறு முதலில் அஃறிணையிலும் பின் பைய உயர்திணையிலும் வருவது பல்லவர் காலத்தில் உறுதியாகி விட்டது. நாம் என உளப்பாட்டுத் தன்மைப் பன்மைக்கு ஒரு வடிவம் தொல்காப்பியர் கூறுகிறார் உளப்பாட்டுத் தன்மை என்பது பன்மையே ஆதலின் இதற்கேற்ற ஒருமை வடிவம் இருப்பதற்கு இல்லை. ஒற்றுமை நயத்தால் யாம், யான் என்பனபோல நாம் நான் எனப் பேசத் தொடங்கியதால் நான் என்ற தன்மை ஒருமை வடிவமும் பல்லவர் காலத்திற்குள் நிலைபேறெய்தியது. நீம் என்பது பேச்சு வழக்கில் வழங்கியது, இலக்கியத்திலும் வந்தது. நீங்கள் என்ற வடிவம் நிலைபெற்றது. நும் என்பதற்கேற்ப நுன் என்பதும் தோன்றியது. இவற்றின் மாற்றங்களான உன், உம் என்பன நிலைபெற்றன. வந்தனன் என்பதிற்போல (அன்) குறில் முதலான விகுதிகளின் வழக்குக் குறைய, வந்தான் என்பதிற் போல நெடில் முதலான விகுதிகளின் (ஆன்) வழக்கே மேலெழுந்து வர, இன்று பேச்சு வழக்கில் பின்னைய வழக்கே உள்ளது என்று கூறும்படி ஆய்விட்டது. பார்ப்பனர் பேச்சில் மட்டுமே எதிர்காலத்தில் குறில் முதலான விகுதிகள் இன்று நடையாடுகின்றன(வருவன்)

ஆன் என்பது அவ்விடம் என்ற பொருளுடையது; திங்கட் பெயரோடு ஏழாம் வேற்றுமைப் பொருளில் வந்ததனைச் சாரியை எனத் தொல்காப்பியர் காலத்தில் வழங்கியது கண்டோம். பின்னர் மூன்றாம் வேற்றுமைக் கருவிப் பொருளில் தொல்காப்பியர் காலத்திலிருந்து வழங்கத்தொடங்கிச் சங்க காலத்தில் ஆன் என்பதே நிலைபேறெய்தியது ஓடு உடனிகழ்ச்சிப் பொருளிலேயே நின்றது ஊரான் ஒரு தேவகுலம் என்பது போன்ற பழைய வழக்கில் ஆன் என்பது ஒவ்வோர் ஊரிலும் அல்லது ஊர்தோறும் என்றதொரு பொருளில் வழங்கியது ஆன் என்பது ஆல் எனத் திரிந்தது ஆன் என்பது வினையெச்சத்தோடு சேர்ந்து, செயின் என்ற வாய்பாட்டு எச்சம்போன்று வந்தாலும், இறந்த காலத்தில் மட்டுமே வழங்கத்தொடங்கியது வந்தக்கால், வந்துழி முதலிய வடிவங்கள் வழக்கில் பெருகின செய்தால் என்ற வாய்பாடு உம பெற்று வருவதும், செய்தாலுங்கூட (Even though) என்ற பொருளில் வழக்காயிற்று.

கொள் முதலிய பகுதிகள் கொளீஇ என வினையெச்சமாக வந்த வழக்கு, பழைய பகுதி உகரச்சாரியை பெற்று, இகர விகுதி வர கொளுவி என்பதுபோல வழங்கலாயின அவர்க்கு என்பதும் அவருக்கு என இடையே உகரச்சாரியை பெறுவது இயல்பாயிற்று பல வினைச் சொற்கள் விடு முதலிய துணைவினையோடு வழங்குவதும் பெருவழக்காயிற்று இந்த முறையில் செயப்பாட்டுவினை ஏறகுறையக் கலித்தொகையின் காலத்தில் தன் முழு வடிவத்தை அடைந்துவிட்டது எனலாம் (உ-ம கைப்படுக்கப்பட்டாய்).

வான் பான் என்ற எதிர்கால வினையெச்ச வடிவங்களும், திருக்குறளில் பாக்கு என்ற ஈற்று வினையெச்ச வடிவமும் வழங்கலாயின இங்கும் ஆனீற்றினையும ஆனீறு குவ் விகுதி பெற்று மருவிய வடிவினையும் காண்கிறோம் எனலாம். இவை செய்வதற்கு என்ற பொருளில் வரும் வினையெச்சங்களாம் செய்யிய என்ற எச்சம் சங்ககாலத்தில் இந்தப் பொருளில் வழங்கியது பைய அதன் இடத்தை இந்த வினையெச்சங்களே கொண்டன. பின், செய என்ற வினையெச்சமும் அந்தப் பொருளில் வந்தது. செய என்பது முக்காலத்தும் பிற்காலத்தில் வழங்கலாயிற்று. வி, பி என்ற ஈரேவல் வினைகளும் பல்கிப் பெருகின இருப்ப முதலிய செயவென் எச்சத்திற்குப் பதிலாக இருக்க என்ற வடிவம் வந்தது வினைப்பகுதியோடு கு என்ற ஆக்க நிலையுருபு சேர்ந்து வழங்கியதன்

பயனாகும் இது. இருந்து என்பதிற்போலப் பகுதியின் பின் மெல்லொற்றுப் பெற்றவை இந்தக் கு பெறும்போது வல்லொற்று பெறக் காண்கிறோம். கின்று என்பது நிகழ்கால இடைநிலை பெறும்போதும் இந்தப் பகுதிகள் வல்லொற்றே பெறுகின்றன (உ-ம் இருக்கின்றன).

தன்மைப்பன்மையில் வரும் அம் ஈறு நடந்தோம் என்பதிற்போல ஓம் என்றாயிற்று உண்டு என்பது ஐம்பாற் பொதுவினை ஆயிற்று கில் என்பது செய்கிற்போம் என்பதிற் போல ஆற்றலைக் காட்டும் இடைநிலை ஆயிற்று. எல்லாம் என்பதும் மூவிடத்திற்கும் பொதுவாகியும எஞ்சாமைப் பொருட்டாகியும் வந்தது

அ என்பது எதிர்மறை இடைநிலையாய் வினைச் சொல்லில் வந்தபோது அந்தவினை முக்காலத்திற்கும் பொதுவாம. இறந்தகாலம் முதலியவற்றையும் சுட்டிய வினையெச்சத்தோடு இல் என்பது எதிர்மறையாய் வரப் பின் பாலவிகுதி சேர்ந்து நிறக, ஒருவகை வினைச்சொல் அமைந்தது (வந்திலன், காண்கின்றிலன்). செய என்னும் வினையெச்சத்தோடு இல்லை, அல்ல என்ற எதிர்மறைச்சொல்லைச் சேர்த்து எதிர்மறை வினைத்தொடர் அமைப்பதும் தொடங்கியது (வரவில்லை). இதுவே இந்நாளில் பல்கிப் பெருகி வழங்குகிறது உம் என்பது வாரும் என்பதிற்போல முன்னிலைப் பன்மை ஏவலாயிற்று, செய்ம்மின் என்றவடிவம் சிறிது பழையதே ஆம் நீர் என்பது மரியாதைப் பன்மையாக வழங்கலாயிற்று.

சோழர் காலத்து முடிவினுக்குள் வேற்றுமையுருபுகள் வடமொழி நடையைப் பின்பற்றி வரலாயின. ஊரைச் சென்றான் என்பது ஊருக்குச் சென்றான் எனலாயிற்று மூன்றாம் வேற்றுமை கருவி வேற்றுமையாயிற்று செயப்பாட்டு வினையின் வளர்ச்சியால் ஏவற் கருத்தா, இயற்றுதற் கருத்தா என்ற வேறுபாடு சிறந்தது. செயப்படு பொருளாய் இரண்டாம் வேற்றுமை உருபு ஏற்பது முதல் வேற்றுமை வடிவம் கொண்டு செயப்பாட்டுவினையில் எழுவாயாகும்போது முன்னின்ற வினைமுதல் மூன்றாம் வேற்றுமை உருபு ஏற்றது. நான்காம் வேற்றுமை கொடைப்பொருளிற் சிறந்து வரலாயிற்று. ஐந்தாம் வேற்றுமையோ நீக்கப் பொருளிற் சிறந்தது. ஏழாம் வேற்றுமையோடு ஒன்றாயது. ஆனால், முன்னையதில் நீக்க வினையே வரும் எல்லாவகை இயைபையும் சுட்டும் ஆறாம் வேற்றுமை உடைமைப்பொருளில் முடிதலாயிற்று, எல்லாவகை இயையும் ஒருவகையில் உடைமையாக முடிந்தது எனலாம் இடப்பொருளில்

வரும் சொல்லெல்லாம் ஏழாம் வேற்றுமை உருபாக வர அமைந்தன என்றாலும், இல் என்பதே பெரும்பான்மை வழக்காயிற்று. எல்லாப் பெயர்களும் ஓ என்பதனை முன் பெற்றோ, ஏ என்பதனைப் பின்பெற்றோ விளிவேற்றுமை ஆயின

ஒற்றுமை நயமொழி வழக்கு (Synthetic), வேற்றுமை நயமொழி வழக்காக (analytic) மாறி வளர்ந்து வருவதற்கு ஏற்ப வேற்றுமை உருபுகளிடத்தில் சொல்லுருபுகள் வழங்கலாயின ஆனவன், ஆனவள், ஆனவர், ஆவது, ஆவன என்பன எழுவாய் வேற்றுமையின் சொல்லுருபுகளாம் கொண்டு (வான்கொண்டு), மூன்றாம் வேற்றுமையின் சொல்லுருபாம் பொருட்டு, ஆக என்பன (வினைப்பொருட்டு, வினைக்காக) நான்காம வேற்றுமையின் சொல்லுருபாம் இருந்து, நின்று என்பன ஐந்தாம் வேற்றுமையின் சொலலுருபாம் உடைய என்பது ஆறாம் வேறறுமையின் சொல்லுருபாம் இடப் பொருளில் வரும் எல்லாச் சொறகளும் ஏழாம் வேற்றுமையின் சொல்லுருபாம்

18ஆம் நூற்றாண்டின் முடிவிற்குள் பேச்சு வழக்கில் எழுந்த மாறுதல்களை அம்மானைப் பாடல்களில் காணலாம் கு என்ற ஆக்கநிலை உருபு பல பகுதியிலும் அழுகு, உண்கு, தருகு என வழங்கக் காண்கிறோம் ல் முதலியன ஈறாக வரும்போது உகரச் சாரியை பெறுவதனைக் கண்டோம் ஆனால் பகுதியினுள் பல்கு போல் வரும் லகரமும் உகரச் சாரியை பெற்றுப் பலுகு என வருதலைச் சில இடத்தில் இப்பொழுது காண்கிறோம் காண் என்ற பகுதி போன்றவை கண்ட என முதல் குறுகிவருவது போலாது, காண்ட, காண்டான் என்பனபோல முதல குறுகாது வருதலையும் காண்கிறோம்

தோற்றரவுபோல வாட்டரவு முதலான தொழிற் பெயர்கள் அரவு என்ற விகுதிபெற்று வருவன பல்குகின்றன கட்டடம், கரவடம் முதலியபோலத் தெலுங்கின் வழிவந்த அடம் என்ற விகுதி பெற்றும், இருக்கட்டும், வரட்டும் முதலியபோல ஒட்டும் என்ற ஈறு மருவி வந்தனவும, வேண்டும் வேணும் என மருவி வருவதும் வழங்கலாயின சதிகாரன் முதலான சொற்கள் காரன் என்ற விகுதிபெற்றுப் பெருகியவை இனறு எங்கும் வழங்கக் காண்கிறோம் தன்மசாலி, புத்திசாலி முதலியவற்றிற்போலச் சாலி என்ற விகுதியும் தனவான், தனவந்தர் என்பன போன்ற வழக்கினை ஒட்டிச் செல்வவான், செலவந்தர் போன்றவையும் வழங்கலாயின

வினையாலணையும் பெயர் காலம் காட்டாதும் (ஆள்வான்), பாற் பொதுமை பெற்றும் (வந்தது-வந்தமை) வரக் காண்கிறோம். வேறு, இல்லை, உண்டு, அல்ல என்பன பாற் பொதுவாகின்றன. எனவேண்டும், எனத்தகும் போன்ற வழக்குக்களும் பல்குகின்றன.

செய்து என்னும் வினையெச்சம் தன் வினைமுதலே கொண்டு முடியும் என்ற விதி புறனடையாகிறது இருக்கையில், குளிக்கையில் என வரவேண்டியவை. இருக்கில், குளிக்கில் என வருகின்றன. பண்ணுகிற்பின் அல்லது பண்ணிநின்றால் என்ற பொருளில் பண்ணுகின்றால் என வருவதனை மற்றொருவகை மாற்றத்திற்கு எடுத்துக்காட்டாக்கலாம் தவம் உடையார் என்பது தவத்துடையார் போல வருவது மற்றொரு போக்கு

முழுவதும் முடிவதனை வற்புறுத்துவது தமிழ் வினைகளின் தொடக்க இயல்பெனக் கண்டதற்கேற்பச் செய்து, போட்டது போன்றவை தொழில் முடிபினை வற்புறுத்தத் துணைவினை கொண்டு வருகின்றன

*ஆண்டு, வருஷம்* முதலியனபோல ஒரே பொருளுள்ள இரண்டு சொற்கள் ஒன்று தமிழும் மற்றொன்று வேற்றுமொழியுமாய் வருகிற இருபெயரொட்டு வழக்கும் வளர்கிறது. கெரோசின் ஆயில் எண்ணெய் முதலானவை இன்றும் பெருகுகின்றன.

*தாய் தகப்பன்* போன்ற உம்மைத் தொகைகள் ஒரு சொன்னீர்மைப்பட்டு ஈற்று ஒருமைவிகுதி கெடாது வழங்குகின்றன உம், ஓடு, உடன், செவ்வெண் என்பன ஒரு தொடரில் கலந்துவரவும் காண்கிறோம்.

*எவன் வந்தானோ அவன் போனான்* என்பது போன்ற வழக்குகள் முன் வடமொழியையும் இன்று ஆங்கில மொழியையும் ஒட்டி வளர்ந்துகொண்டே வருகின்றன

பெயரெச்சங்கள் தொடர்ந்து அடுக்குவதிலும் ஆறாம் வேற்றுமைத் தொகையிலும், *நடுவே மடிந்த பிள்ளை அக்கதை* என்பதிற்போல இடைப்பிற வருதலும்; *அஞ்சி அஞ்சி* என்பதுபோல வினையெச்சம் மிகுதிப் பொருளிலும், தொடர்ந்து நிகழ்தலைக் குறிக்கும் பொருளிலும் அடுக்கிவருதலும் காண்கிறோம். பேச்சில் சொற்றொடர்களின் முடிவு உணர்ச்சி வயத்தாலோ, எண்ணம் மாறுவதாலோ இடையிடையே

மாறுவதும் இயல்பாகிறது. சொற்றொடரின் அமைப்பு முறையானது (Syntax) மாறுவதைத் தனியே கூறுவதாய் இருந்தாலும் இங்குக் கூறியவற்றையே திருப்பிக் கூறுதல் வேண்டும்.

*செய்து* போன்ற துவ்வீறும், *அடங்கி* போன்ற இகரவீறும் பெற்றவையும், *செய்தால், செய்யாமல், செய்யாமே, செய* போன்றவையுமே வினையெச்சங்களாக வழங்குகின்றன *செய்யூ* என்பது *செய்யா* எனத் திரிந்து வழங்கியது; பின் அருகியது. பிறவகையான வினையெச்சங்கள் வழக்கொழிந்தன *செய்யாத* என்ற பெயரெச்சம் ஈறுகெட்டுச் *செய்யா* என நின்று வழங்கியதும் பின் அருகியது.

அரசனையும் கடவுளையும் ஒருமையால் மட்டுமே வழங்கிய காலம் உண்டு மரியாதைப் பன்மை என்ற வழககு பின் எழுந்து பெருகியது உயர்திணையில் ஆண், பெண் என்ற வேற்றுமை ஒருமையில் அன்றிப் பன்மையில் இல்லை பன்மையிலும் பால் வேற்றுமை குறிக்க, *அரசன்மார் தோழிமார்* என்ற வழக்கு *மார்* ஈற்றோடு பல்லவர் காலத்தில் தொடங்கியது. மார் விகுதி வழக்கற்றபின் *கள்* என்பதே விகுதியாய்வர, *அரசன்கள், அரசனுங்கள், அரசிகள், அரசிங்கள்* என்ற வழக்கு இன்று நிலைபெற்றுவிட்டது வினையிலும் *வருவான்கள், வருவானுங்கள், வருவார்கள், வருவாருங்கள்* என இந்தப் பால் வேறுபாடு இன்றைய பேச்சுவழக்கில் புகுந்திருக்கக் காண்கிறோம். சமுதாயத்தில் ஏற்றத்தாழ்வு கற்பிப்பது பெருகிய காலத்தில் முன்னிலையில் நின்று பேசுவார், தன்மையில் நின்று பேசுவோரினும் தாழ்ந்தவர், உயர்ந்தவர் என்பவற்றிற்கு எல்லாம் *ஏற்பச் சில* சொற்கள் முடிக்குஞ்சொல்லில் விகுதித் தன்மை பெற்று வழங்கக் காண்கிறோம் *அவர் வந்தாருங்க* (உங்கள் என்பது விகுதி நிலை பெறுகிறது) என்பது உயர்ந்தோரிடம் பேசும் வழக்காம். அவர் வந்தார் என்பது ஒத்தாரிடம் பேசுவதாம். *அவர் வந்தார்ப்பா* என்பது உயர்நிலை இளைஞரோடு பேசுவதாம். *அவர் வந்தார் ஓய், அவர் வந்தாருடா* என்பன தரங்குறைந்து கொண்டே போவன.

ஒருமையில் பேசுவது உயர்வன்று என்று தோன்றிய பின் தாய், தமக்மை, தங்கை, அண்ணன் முதலியோரை ஒருமையிற்பேசச் சிலர் கூசினர் தெலுங்கில் பெண்ணை ஒன்றன்பாலாக்கி வழங்குகிற வழக்கம் ஒருபுறம், துறவிகள் அஃறிணையாகத் தமமைத்தாமே இழித்துப் பேசி வந்த வழக்கம் பெருவழக்கானபோது இழிவு ஒன்றும் இன்றிப் பிறரும் *அடிகள் வந்தது* எனப்பாராட்டும் உயர்வழக்கானது மற்றொருபுறம்.

இவ்விரண்டின் போக்காலும் மரியாதை வழக்காகப் பெண்களையும் உயர்ந்தோரையும் ஒன்றன்பாலிற் பேசுவதும் வழக்காயிற்று. *தம்பி வந்தது, தங்கை வந்தது, அக்காள் வந்தது, அண்ணன் வந்தது* போன்ற வழக்குகளைக் காண்க.

இருபதாம் நூற்றாண்டில் முடிந்த பல மரூஉ வழக்குகளின் பயனாக, சேரி வழக்கில் சில மாறுதல்கள் எழக்காணலாம். ஈற்று மெல்லெழுத்து கெட, அதன் முன் நிற்கும் உயிர் மூக்கொலி பெறுவதும் கண்டோம். இதனால், வந்தான்-வந்தா0( $\tilde{a}$ ), வந்தாள்-வந்தா, வந்தேன்-வந்தே0, வந்தாய்-வந்தே என வருவதால் *ஆ0* (ஆண்பால் ஒருமையும், *ஆ* பெண்பால் ஒருமையும், *ஏ0* தன்மை ஒருமையும், *ஏ* முன்னிலை ஒருமையும், *ஓ0* தன்மைப் பன்மையும் காட்டும் விகுதிகள் ஆகின்றன

நிகழ்கால இடைநிலை க்ற் (இருக்றான்) அல்லது ற் (போறான்) ஆம்,ச் (வைச்சான்), ன் (நின்னான்)· என்பவை இறந்தகால இடைநிலையாம் பகுதியோடு துவ்விகுதி சேர்ந்து பாடுது என நிகழ்காலத்து வருவது பெரும்பான்மையாம் துணைவினையாம் வரு என்பது ஆ என ஆகிறது. கொண்டா (கொண்டுவா-கொண்டா, ஓடிவா-ஓடியா, கொண்டு என்பது கினு (குளிச்சிக்கினு) என்றும், விட்டு என்பது ட்டு (குளிச்சிட்டு) என்றும் வரும். இவை இழிவழக்கென்றாலும் மொழியின் போக்கினைக் காட்டுகின்றன. படிக்கிறாய், படிக்கிறே, படிக்கிறியா? படிக்கிறோம், படிக்கிறமா? என்பன போன்ற வினாச்சொற்களும் அமைகின்றன விகுதியின் ஏ, ஓ என்பன இ அல்லது அ, ஆகி, ஆ வினா ஏற்றல் காண்க. செயப்பாட்டு வினைகள் பெருகி வழங்குகின்றன. அஃறிணையில் பன்மை எழுவாய்க்கும் ஒருமைப் பயனிலையே வரும் வழக்கானது பேச்சில் நிலைத்துவிடுகிறது

தமிழ்ச் சொற்பரப்பை மொழி வரலாற்று வழியே ஆராய்ந்தால் பலவகை மாறுதல் காண்கிறோம். நாற்றம் முதலியன போன்ற சொற்கள் முன் நறுமணத்தையும் பின் தீமணத்தையும் உணர்த்திப் பொருள் மாறிவரும் வளர்ச்சி ஒன்று. அளகு (ஆண் கோழி, ஆண் ஆந்தை) என்பது போன்ற சொற்கள் வழக்கொழிந்தமை மற்றொன்று. தொல்காப்பிய மரபியல் வழக்கு தொல்காப்பியர் காலத்திலேயே மாறிவருவதனைப் புறனடைச் சூத்திரத்தால் அவர் குறிக்கின்றார் சங்ககாலத்தில் மேலும் மாறின புதிய சொற்கள் புகுந்துவருதல் மூன்றாவது மாறுதல். கின்று என்ற இடைநிலை வரும் சொற்கள் முதலியன இத்தகையனவாகக் காணலாம் நான்காவதாகப புதிய

சொற்கள் வேற்று மொழியிலிருந்து வந்ததனைக்கொண்டு காலத்தினை வரையறுக்கலாம். முதலில் பிராகிருதத்திலிருந்தும், பின் சமஸ்கிருதத்திலிருந்தும் தமிழ்நாட்டினை முறையே ஆளவந்த தெலுங்கர், மகம்மதியர், கன்னடர், மராட்டியர், போர்ச்சுகேசியர், டச்சுக்காரர், பிரஞ்சுக்காரர், ஆங்கிலேயர் முதலியோர் வழங்கிய மொழிகளிலிருந்தும் சொற்கள் தமிழிற் புகுந்தன பழைய சொற்கள் (உ-ம்.இப்பொழுது, இப்போழ்து, இப்போது, இப்போ, இப்பவும், இப்பம், இப்ப) காலம் போகப்போக மாறிவருவது ஐந்தாவது வகை மாறுதலாம்

தமிழ்மொழி வரலாறு பரந்து நின்றாலும் முழுதும் ஆராயப்பெறாமையால் பருப்பொருட்டாக ஒரு சிறிதே இவ்வாறு கூறக்கூடும்.

# இலக்கண வரலாறு

தமிழுக்கு முதல் இலக்கணம் செய்தவர் அகத்தியனார் என்ற நம்பிக்கை தமிழ் நாட்டில் வேரூன்றியுள்ளது அகத்தியர் எழுதியதாகச் சிற்றகத்தியம், பேரகத்தியம் என்ற இரண்டு நூல்களில் கிடைத்த சூத்திரங்களைச் சிலர் வெளியிட்டுள்ளார்கள் ஆனால், அச்சூத்திரங்கள் மிக அண்மைக் காலத்தன என்றே தோன்றுகின்றன அகத்தியர் செய்தனவாக சில சூத்திரங்களை யாப்பருங்கல உரையின் காலத்திலேயிருந்து உரையாசிரியர்கள் எடுத்துக் காட்டி வருகிறார்கள் நாடகத்தில் இழிந்தோர் கூற்று என்பதைபபற்றிய சூத்திரம், ஆனந்தக் குற்றமெனப் பாட்டியலார் ஒப்புவது போன்ற கொளகை, வேறறுமையின் எண்களைப்பற்றிய சூத்திரம், கொடுந்தமிழ பனனிரண்டைப்பற்றிய சூத்திரம் முதலியவை காட்டபபெறுகின்றன இவையும தொலகாப்பியம் போல் பழையன என்று கொள்வதற்கில்லை இவற்றிடத்தே உரையாசிரியர்கட்கும் சில இடத்து நமபிக்கையில்லை எனத் தெரிகிறது அகத்தியர் என்ற பெயர் கொண்டு தமிழாசிரியர்களிலும் பலர் வாழ்ந்திருக்க வேண்டும் என்பது இதனால் தெரிகிறது அகத்தியனார் இயல்,இசை,நாடகம் என்ற மூன்றிற்கும இலக்கணம கூறினார் என்பர்

இன்று நமக்குக் கிடைக்கும் நூல்களில் மிகபபழையது தொல்காப்பியம் என்ற இலக்கண நூல் ஆனால தனக்கு முன்னர் நிகழ்ந்தஆராய்ச்சியின் பயன்களை *என்மனார், என்ப* எனறு சுட்டுதலால அவருக்கு முன்னும் இலக்கண நூலகள் இருந்திருத்தல வேண்டும இவர் எழுத்திலக்கணம், சொல்லிலக்கணம், பொருளிலக்கணம் என மூன்றாக பிரித்துத் தமிழ் இலக்கணத்தை ஆராய்கின்றார் எழுத்துக்களின் வகை, அந்த வகைகளின் பெயர்கள், சொல்லின் முதலிலும ஈற்றிலும வரும எழுத்துக்கள், எந்த எழுத்துக்களின்பின் எந்த எழுத்துக்கள் வரும என்ற நியதி, சொற்களின் புணர்ச்சி என்ற இவற்றை எழுத்திலக்கணத்தில ஆராய்கிறார். சொற்கள் வாக்கியமாய் அமையும போது அவறறிடையே விளங்கவேண்டிய பொருத்தங்களையும், வேறறுமை ஏற்கும் போதும பிற இடத்தும் விளஙகுகின்ற நிலையையும வாக்கியத்திற்குள்ளே சொற்கள் பெயர் என்றும வினை என்றும நிற்பவறறின பல்வேறு வகையினையும், சொற்களின் அகத்துறுபபாகவும புறத்துறுபபாகவும வருவனவறறை இடைநிலை, விகுதி உருபு முதலாக வரும இடைச்சொற்கள் என்றும அடிச்சொலலாய வரும உரிசசொறகள

என்றும் பிரியும் பிரிவினையும் பிறவற்றையும் சொல்லதிகாரத்தில் ஆராய்கிறார். பொருளிலக்கணத்தை ஆராய முற்பட்டுத் தமிழ் இலக்கியத்தில் வரும் பொருள்களை அகம் என்றும் புறம் என்றும் பிரித்து, அகத்திணையைக் களவு, கற்பென வகுத்து விரித்துக் கொண்டு பாக்களில் வரும் பல துறைகளையும் விளக்கி, இவ்விரண்டிற்கும் பொதுவான சில நியதிகளைக் குறிப்பிட்டபின் பாட்டுக்கு இன்றியமையாத சுவை அல்லது மெய்ப்பாட்டினை ஆராய்ந்து, உவமையின் பலவேறு வகைகளைச் சுட்டி, யாப்பிலக்கணத்தையும் கூறி, அஃறிணையில் வரும் ஆண், பெண் பாகுபாட்டைக் குறிக்கும் சொற்களையும், இளமையைக் குறிக்கும் சொற்களையும், புல், மரம் என்ற பாகுபாட்டால் எழும் மரபினையும் கூறி முடிக்கிறார். மரபியலில் பிற சூத்திரங்கள் எல்லாம் இடைச்செருகல் போலும். இவருடைய காலம் இன்று கிடைக்கும் சங்க நூல்களுக்கு முந்தியதெனலாம் இவர் கூறிய சில விதிகளும் வழக்குகளும் சங்ககாலத்திற்குள் மறைந்து போயிருக்கக் காண்கிறோம் எனவே,. கிறிஸ்து பிறப்பதற்கு முன்னிருந்தவர் இவர் எனலாம் இலக்கணம் என்ற சொல் வியாகரணத்தைக் குறிப்பது வடமொழியிலே கி.மு. நான்காம் நூற்றாண்டிலேயே வழக்கற்றுப்போனதால், அச்சொல்லுக்கு வரருசியார் பொருள் கூறவேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. தமிழிலோ அந்தப் பழைய வழக்கு இன்றும் வழங்குகிறது. எழுத்திலக்கணத்தையும், சொல்லிலக்கணத்தையும், பொருளிலக்கணத்தையும் இலக்கண ஆசிரியர்கள் எத்தனை வகையிலெல்லாம் பிரித்துக்கொண்டு ஆராய்ந்தார்கள் என்பதை விளக்க, தொல்காப்பிய உரையாசிரியர்கள் ஒவ்வொன்றையும் எண் வகையால் ஆராய்வது சிலர் போக்கென்றும், எட்டிறந்த பல்வகையால் ஆராய்வது சிலர் போக்கென்றும் கூறுகின்றனர். இவை எல்லாம் தொல்காப்பியர் காலத்திற்குப் பின் எழுந்த ஆராய்ச்சியாம். பூதபுராணம், மாபுராணம் என்ற நூல்கள் இடைச்சங்ககாலத்து நூல்கள் என்பர். ஆனால் அவை தொல்காப்பியத்திற்குப் பின் எழுந்த வளர்ச்சியையே கூறுகின்றன எனலாம்

தொல்காப்பியரை அகத்தியருடைய மாணாக்கர்கள் பன்னிருவரில் ஒருவர் என்பர் பன்னிரு மாணவர்களும் தலைக்கொரு படலமாகப் புறத்திணை ஒவ்வொன்றினைப்பற்றியும் பாடியவற்றின் தொகுப்பே பன்னிருபடலம் என்ற நூல் என்றும், அதன்வழியே புறப்பொருள் வெண்பாமாலை எழுந்தது என்றும், புறப்பொருள் வெண்பாமாலையின் பாயிரம் கூறும பனனிரு படலத்தின் முதற்படலம் வெட்சிப்படலம்

இதனை எழுதியவர் தொல்காப்பியர் என்பர். தொல்காப்பியர் புறத்திணை இயலில் கூறும் கருத்திற்கும் இப்படலத்திற்கும் அடிப்படையிலேயே வேற்றுமை இருப்பதால் இதனைத் தொல்காப்பியர் பாடியிருக்கமுடியாதென்று இளம்பூரணர் முதலியோர் ஐயுறுகின்றனர். அவிநயனார் தொல்காப்பியரோடு அகத்தியரிடம் ஒருங்கு பயின்றவர் என்பர். இவர் இயற்றிய அவிநயம் என்ற நூல் வெண்பாவாலும் ஆசிரியப்பாவாலும் ஆகியது என அறிகிறோம் அவ்விநயனார் ஜைனர் என்பதும் விளங்குகிறது. தொல்காப்பியத்திற்குப் பின் எழுந்த இந்த நூல் தொல்காப்பிய உரையாசிரியர்களுக்கு முன்னரே சிறந்து விளங்கியது என அறிகிறோம் இதற்கு இராஜபவித்திர பல்லவதரையர் என்பவர் சிறந்த உரை ஒன்று எழுதினார் என்றும் தெரிகிறது.

காக்கை பாடினியாா என்பவர் தொல்காப்பியரின் ஒருசாலை மாணவராம். இப்பெயர் உள்ளோர் இருவர் என்றும் அவர்கள் சிறுகாக்கை பாடினியம, பெருங்காக்கை பாடினியம் என இரு வேறு நூல்களை யாப்பினைப்பற்றி ஆராய்ந்து எழுதியுள்ளார்கள் என்றும கூறுவது மரபு. காக்கை பாடினியார் கூறுகின்ற செய்யுள் இலக்கணம் தொல்காப்பியர் கூறுவதிலும் சிறிது வேறுபாட்டிருத்தலினாலும், யாப்பென்பதனைப் பொருளிலக்கணத்தின்றும் பிரித்து ஆராய்வது பிற்காலப்போக்கு ஆதலினாலும, தொல்காப்பியர்க்கும் பிந்தியவர் என்றே இவர்களைக் கொள்ளவேண்டும். இந்த நூல்கள் எல்லாம் சங்ககாலத்தின் பின்வந்த பல்லவர் காலத்தில் தோன்றி இருக்கலாம்

இறையனாரகப்பொருள் உரை தமிழ் இலக்கணங்கள் நான்கு என்று கூறுகிறது அவையாவன, எழுத்து, சொல், பொருள், யாப்பு என்பனவாம் மூன்றென்று இருந்த ஆராய்ச்சி இவ்வாறு நான்கென விரிகிறது. பொருளினை ஆராயும ஆராய்ச்சி மறைந்ததென்றும் அந்த உரை கூறுகிறது. எனவே, அந்நாளைய தமிழ் இலக்கணம் வடநூல் இலக்கண மரபை ஒட்டிப் பொருளினை இலக்கணத்தில் ஆராயாதுவிட்டது போலும் பொருள் இலக்கணத்துளும அகப்பொருளினையே இறையனார் அரிய பொருளாக வைத்து ஆராய்வதால், அதற்கு முன்னரே பன்னிருபடலம் போன்ற புறப்பொருள் நூல்கள் எழுந்தன போலும் இறையர் அகப்பொருளுரை காட்டும் பாண்டிக்கோவையின் பாடல்கள் கி பி ஏழாம் நூற்றாண்டில் ஆண்ட நின்றசீர் நெடுமாறனைப் பற்றியதாதலின் அநத உரை எழுத்தில எழுதப் பெற்ற காலம் அதற்கும முந்தியதாகாது தொலகாப்பிய

பொருள் இலக்கணம் கூறுமிடத்து ஒவ்வொரு பாடலும் ஒன்றற்கொன்று தொடர்ச்சியின்றித் தனித்தனி நாடகப் பாத்திரங்களின் கூற்றாக அமைந்த நிலைக்கே இலக்கணம் கூறுகிறார். பின் வந்தோர் அவ்வாறின்றி, அத்துறைகள் எல்லாம் ஒரு தொடராய்க் கதையாக முடிவனபோலக் கொண்டு இலக்கணம் கூறுகின்றார்கள். ஆசிரியப்பாவாலேயே இலக்கணம் கூறிய நிலை மாறி, வெண்பாவினாலும் இலக்கணம் கூறும் மரபு அவிநயத்திலும், புறப்பொருள் வெண்பா மாலையிலும், மாபுராணம், பூதபுராணம் முதலியவற்றிலும் காண்கிறோம். இறையனார் அகப்பொருள் உரையின் காலத்தில் எழுத்து, சொல்,பொருள்,யாப்பு என்ற நான்கு பாகுபாடே வழங்கினாலும் பொருளை அகம் என்றும் புறம் என்றும் தனித்தனியாக ஆராய்கின்ற நிலைமை ஏற்பட்டதால் உண்மையில் ஐந்து வேறு ஆராய்ச்சிகள் நிகழ்ந்தன எனலாம் காக்கை பாடினியார் போன்றவர்களுடைய யாப்பாராய்ச்சியும் இதற்கு முன்னரே உருப்பெற்றிருத்தல் வேண்டும் அகப்பொருள், புறப்பொருள் என்பவற்றைப்பற்றி மேலே கூறிய நூல்களின் வேறானவற்றின் பெயர்கள் தாமும் நமக்கு எட்டவில்லை. யாப்பினைப்பற்றியோ பல நூல்களின் பெயரை யாப்பருங்கலவிருத்தி உரையில் அறிகிறோம்.

பின், அணியைப்பற்றிய ஆராய்ச்சியும் தமிழ்நாட்டில் எழுந்து வளர்ந்திருத்தல் வேண்டும் தண்டி, பல்லவர் அவையில் வீற்றிருந்ததன் பயனாக அவருடைய தணடியலங்காரம் என்னும் சமஸ்கிருத நூல் தமிழ்நாட்டில் பெருஞ் சிறப்புப் பெற்றது. உவமை ஒன்றன் வேறுபாடுகளாகவே பல செய்யுட் கருத்தமைதியைத் தொல்காப்பியர் விளக்கினார் நிகண்டுகளை ஆராய்வோமானால் வேறுபல அணிகள் தோன்றி, நாளடைவில் எண்ணிக்கையில் வளர்ந்துகொண்டே வருவதைக் காண்போம். அணியியல் என ஒரு நூலிலிருந்து சில உரையாசிரியர்கள் எடுத்துக்காட்டுக்கள் தருகிறார்கள். இவற்றிற் சில இன்று வழங்கும் தண்டியலங்காரத்திலும் பொன்னேபோல் போற்றப்படுகின்றன என்று கருத இடமுண்டு. தண்டியலங்காரத்திற்கு இரண்டு மொழிபெயர்ப்புகள் சோழப்பேரரசர் காலத்தில் எழுந்தன ஒன்று வீரசோழியத்திலுள்ள அலங்காரப்படலம், மற்றொன்று பன்னிரண்டாம் நூற்றாண்டில் எழுந்தது எனக் கருதப்பெறும் தமிழ்த் தண்டியலங்காரம் பின்னையது எடுத்துக்காட்டுக்களையும் இனிய தமிழில் மொழிபெயர்த்துத்தருவது மேலும் சில அணிகளைச்சேர்த்து மாறனலங்காரம் பதினாறாம் நூற்றாண்டில் விளக்கியது இதனை இயற்றியவர் திருக்குருகைப் பெருமாள் கவிராயர் சந்திராலோகம் என்ற

சமஸ்கிருத நூலை ஒட்டி நூறு அணிகளின் இலக்கணங்களை வசனமாக மொழிபெயர்த்தும் எடுத்துக்காட்டுக்களைப் பாட்டில் மொழிபெயர்த்தும் விசாகப் பெருமாளையர் சென்ற நூற்றாண்டில் உதவினார். ஆசிரியப்பாவிலும் ஒரு மொழிபெயர்ப்புப் பின்னர் வந்துள்ளது. சந்திராலோகத்தின் வடமொழியுரையாய குவலயானந்தம் என்பதும் சென்ற நூற்றாண்டில் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டது இவையேயல்லாமல் ஐந்திலக்கணம் கூறும் நூல்களான இலக்கண விளக்கம், தொன்னூல் விளக்கம், முத்துவீரியம் முதலியனவும் அணியியலினைத் தண்டியலங்காரத்தைப் பின்பற்றி எழுதியிருக்கக் காண்கிறோம்.

அகப்பொருள் இலக்கணமாக இறையனார் அகப்பொருளுக்குப்பின் சிறந்து விளங்குவது நம்பியகப்பொருளாம் இதனை இயற்றியவர் நாற்கவிராச நம்பி என்ற சைனப் புலவர் அகத்திணையியல், களவியல், வரைவியல், கற்பியல், ஒழிபியல் என ஐந்து பிரிவுகளாகக்கொண்டு இவர் ஆராய்கின்றார். இவர் பன்னிரண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த குலசேகரன் முதல் சடையவர்மன் என்ற பாண்டியன் காலத்தவர் ஆவர். திருக்கோவையாருக்கு உரைகண்ட பேராசிரியர் துறைகளை விளக்கச் சில கொளுக்களைச் சூத்திரம் போலத் தருகின்றார் இவற்றை ஒருங்குசேர்த்தால் அகப்பொருளை விளக்கும் இலக்கணமாக முடியும் இவை இவரே செய்தனவோ முன்னோர் செய்தனவோ அறியோம் இந்தப் பேராசிரியர் தொல்காப்பியத்திற்கு உரைகண்ட பேராசிரியரினும் வேறானவர். பேராசிரியர் என்பது புலமையைச் சுட்டும் ஒரு சிறப்புப்பெயர் ஆதலின் ஆத்திரையன் பேராசிரியன், பேராசிரியர் நேமிநாதர் என்று பலர் அப்பட்டம பெற்று வழங்குதலின் இவரை எவரெனக் கூறுவது அருமையாகிறது. மாறனகப்பொருள் பதினாறாம் நூற்றாண்டில் திருக்குருகைப்பிரான் கவிராயர் எழுதியது வீரசோழியத்தில் மிகச் சுருக்கமாக அகபபொருள் கூறப்பெற்றுள்ளது. தொல்காப்பியத்தையும் நம்பியகப்பொருளையும் ஒட்டி இலக்கணவிளக்கம் அகத்திணை இயலை அமைத்துள்ளது. தொன்னூலும் மேனாட்டுக் கருத்துக்கேற்பப் பொருளைப் பொதுவாம விளக்கத் தொடங்கிப் பின் புறப்பொருளையும் அகப்பொருளையும் தமிழ் நூல்களை ஒட்டியே விளக்குகிறது இதனை இயற்றியவர் வீரமாமுனிவர். முத்துவீரியம், நெய்தல் களவிலேதான் வரும் என்பது போன்ற குறிப்புக்களோடு நம்பியகப பொருளைப் பின்பற்றி அகப்பொருள் இலக்கணம் கூறுகிறது இது சூத்திரத்தை ஓரடியில் கூறுவது. தமிழ் நெறி விளக்கம் என்ற நூலும ஐந்திலக்கணம் கூறும்

நூலோ என்று ஐயுறலாம். இதில் கிட்டியது அகப்பொருள் கூறும் பொருளியல் ஒன்றே. இறையனார் களவியலை ஒட்டி எழுந்த களவியற் காரிகையின் உரை இதன் பொருளியலில் இருந்து எடுத்துக் காட்டுவதாலும், பரிமேலழகர் இதில் கூறுகிறபடி ஆயிடைப் பிரிவு, சேயிடைப்பிரிவு என்று பிரிப்பதாலும் இவர்களுக்கு எல்லாம் இந்த நூல் முந்தியது எனலாம்.

புறப்பொருள் வெண்பாமாலைக்குப் பின் புறப்பொருளைத் தனியாக ஆராய்கின்ற நூல்கள் எழுந்தனவோ என்பது ஐயத்திற் கிடமாம். அத்தகைய நூல்கள் நமக்குக் கிட்டவில்லை. ஐந்திலக்கணம் கூறும் வீரசோழியமும் இலக்கண விளக்கமும், தொன்னூல் விளக்கமும், முத்துவீரியமும் பழைய நூல்களை ஒட்டிப் பழைமையையே விளக்குகின்றன

யாப்பிலக்கணம் மேலே காட்டியபடி ஒரு தனியாராய்ச்சியாக வளர்ந்தபின் பற்பல கொள்கைகள் எழுந்தவற்றை ஒருங்குவைத்து ஆராய்ந்த யாப்பு நூல்களில் தலைசிறந்து இன்றும் விளங்குவது யாப்பருங்கலக் காரிகையாம். இதனை இயற்றியவர் அமித சாகரர். இவரே யாப்பருங்கலமும் இயற்றியுள்ளார் காரிகையின் உரையாசிரியர் குணசாகரர். அமிதசாகரருடைய ஆசிரியர் பெயரும் குணசாகரரே ஆதலின் அவரோ இந்த உரையை இயற்றினார் என்ற ஐயம் எழுகின்றது. யாப்பருங்கலத்திற்குச் சிறந்ததொரு விருத்தியுரை உண்டு. அந்த உரையினைக் குணசாகரர் எடுத்தாள்கிறார். மேலே சொன்ன காரிகையால் பெயர்படைத்த காரிகைக்களத்தூரினைப் பதினோராம் நூற்றாண்டுக் கல்வெட்டு குறிப்பிடுதலால் மேலே சொல்லிய நூல்களும் உரைகளும் பத்தாம் நூற்றாண்டிலேயே தோன்றிவிட்டன எனலாம். ஐந்திலக்கணம் கூறும் நூல்கள் போகச் சிறப்பாக யாப்பினைத் தனியே எடுத்துக் கூறும் பிற்கால நூல்கள் நமக்கொன்றும் கிட்டவில்லை. பாவிற்கு இலக்கணம் கூறுவதற்குப் பதிலாக அப்பாவகைகளுக்கு எடுத்துக்காட்டுக்கள் கூறுவதே விளக்கமாகும் என்ற கொள்கையில் சில நூல்கள் எழுந்துள்ளன பதினாறாம் நூற்றாண்டில் திருக்குருகைப்பிரான் கவிராயர் இயற்றிய மாறன் பாப்பாவினம் என்ற நூலும், குமரகுருபரர் இயற்றிய சிதம்பரச் செய்யுட்கோவையும், இருபதாம் நூற்றாண்டில் பாம்பன் சுவாமிகள் விரிவாக இயற்றிய பல்சந்தப் பரிமளம் என்ற நூலும். இத்தகையனவாம் விருத்தப் பாவியல் என்ற நூல் சென்ற நூற்றாண்டின் இறுதியில் வசனத்தில் விருத்தத்தை வடமொழி வகையே ஆராயத் தொடங்கி வெளிவந்தது வண்ணங்களைப் பற்றிய

இலக்கணங்களைக் கூறுவதாகத் தண்டபாணி சுவாமிகள் வண்ணவியல் என்ற ஒரு நூலை 18-ஆம் நூற்றாண்டின் முடிவில் இயற்றினார்.

யாப்பாராய்ச்சியில் பாட்டியலாராய்ச்சி என்பதும் அடங்கும் (பாட்டு=பிரபந்தம்). இந்த ஆராய்ச்சியில் இரண்டு பகுதிகளைக் காண்கிறோம். ஒன்று பிரபந்த வகைகளைப் பற்றியது. மற்றொன்று எழுத்துக்களுக்கும் சீர்களுக்கும் சாதி, கணம், நட்சத்திரம் முதலியன வகுத்துக்கொண்டு, பாட்டுடைத் தலைவன் பெயரோடு பிரபந்தத்தில் முதற்பாட்டில் வரும் முதற்சீர் பெறும் பொருத்தத்தினை மணப்பொருத்தம் கூறுகிற சோதிட நூல்வகையில் ஆராய்வது. இங்கே வரும் குற்றந்தான் ஆனந்தக் குற்றமென்று முன்னர்ச் சுட்டியது. பன்னிரு பாட்டியல் என்பது இந்த வகையில் பழைய நூல். சங்கப் புலவர்கள் பெயரைப் பிற்காலத்திலும் கொண்டு விளங்கிய புலவர்களில் பன்னிருவரான, பொய்கையார், பரணர், இந்திரகாளியார், அவிநயனார், கல்லாடர், கபிலர், சேந்தன் பூதனார், கோவூர்கிழார், சீத்தலையார், பல்காயனார், பெருங்குன்றூர்கிழார் தனித்தனிப் பாடிய பாட்டியல் நூல்களிலிருந்து தொகுத்ததே பன்னிரு பாட்டியலாகும். இது சோழர் காலத்துக்கு முன்னரே எழுந்த நூல எனலாம். மாமூலர் பாட்டியல் என்ற ஒன்றை இலக்கண விளக்கவுரை குறிப்பிடுகின்றது. பாட்டியல் மரபுடையாரை யாப்பருங்கலவிருத்தி சுட்டுகிறது. நேமிநாதர் தம்முடைய ஆசிரியர் பேரால் வச்சணந்திமாலை என்ற பாட்டியல் நூலை வெண்பாவில் பாடினார். பிற்காலத்தவரான சம்பந்தர் என்பவர் பேரால் பின்வந்த ஒருவர் இயற்றிய சம்பந்தப் பாட்டியல் என்பது வரையறுத்த பாட்டியல் என்ற பெயரோடு மங்கலச் சொற்களின் பொருத்தத்தை மட்டும் 10 பாடல்களில் கூறுகிறது. பதினாறாம் நூற்றாண்டில் பரஞ்சோதியார் என்பவர் சிதம்பரப் பாட்டியல் பாடினார். அகத்தியர் பாட்டியலை (பருணப்பாட்டியல்) ஒட்டி நவநீத நடர் என்ற அரிபத்தர் கட்டளைக் கலித்துறையில் எழுதிய நவநீதப் பாட்டியல் என்பது பழைய நூலாம் என்பர். ஐந்திலக்கணம் கூறும் நூல்களிலும் பாட்டியலைக் காணலாம். இலக்கண விளக்கத்தில் வரும் பாட்டியல் தியாகராச தேசிகர் இயற்றியது. வீரமா முனிவர் பொருத்தம் முதலியவற்றைப் பற்றிக் கூறாமல் பிரபந்தவகைகளில் சிலவற்றை மாத்திரம் கூறுகிறார்.

எழுத்தும் சொல்லுமே இலக்கணம் எனச் சிறப்பன என்ற கொள்கையில் 12ஆம் நூற்றாண்டில் குணவீர பண்டிதர் எழுதிய

நேமிநாதமும் (சின்னூல்), பவணந்தி எழுதிய நன்னூலும் தோன்றின எனலாம். நேமிநாதம் தொல்காப்பியத்தைச் சுருக்கிக் கூறுவது. நன்னூல் ஐந்திலக்கணமும் கூறியது என்றும், அவற்றில் இப்போது நமக்குக் கிடைப்பன எழுத்தும் சொல்லும் கூறும் இரண்டதிகாரங்களே என்றும் கொள்வாரும் உண்டு. தொல்காப்பியத்தில் வழக்கிழந்தன போகப் பிறவற்றை வகை செய்து சுருக்கியும் விளக்கியும் கூறிச் செல்கிறார் நன்னூலார். நன்னூலுக்கு மயிலைநாதர் உரையும் அதற்குப் பின் 18-ஆம் நூற்றாண்டின் முதலில் வந்த சங்கரநமச்சிவாயர் உரையும் சிறந்தனவாம் சங்கரநமச்சிவாயர் உரையைப் பதினெட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் சிவஞானசுவாமிகள் திருத்தியதனையே விருத்தியுரை என வழங்குகிறோம். சென்ற நூற்றாண்டில் வாழ்ந்த இராமானுசக் கவிராயரும் உரை எழுதியுள்ளார். ஆறுமுக நாவலர் எழுதிய காண்டிகை உரையே இன்று யாவரும் முதலில் கற்கும் உரையாகும். நன்னூலுக்கு எழுந்த உரைகள் பல எனலாம்.

வீரசோழியம் பதினோராம் நூற்றாண்டில் வீரராசேந்திர சோழர் பெயரால் புத்தமித்திரனார் இயற்றியதாகும். வடமொழி இலக்கணத்தை ஒட்டி இந்நூல் இலக்கணம் கூறிச் செல்கிறது. சந்திப்படலம், வேற்றுமைப்படலம், உபகாரப்படலம், தொகைப்படலம், தத்திதாந்தப் படலம், தாதுப்படலம், கிரியாபதப்படலம் என்ற தலைப்புக்களில் எழுத்தும் சொல்லும் கூறுகிறார். மற்றைய பகுதிகளைப் பற்றி முன்னரே கூறியுள்ளோம்.

சேனாவரையர் முதலானோர் வடமொழி இலக்கணக் கருத்துக்களைத் தமிழோடு தமிழாக்கிக் கூறுவர். வீரசோழியத்தைப் பின்பற்றிப் பதினேழாம் நூற்றாண்டின் முடிவிலே சுப்பிரமணிய தீட்சிதர் என்பவர் வடமொழி முறையே பிரயோக விவேகம் என்ற நூலினை உரையோடும் எழுதி வெளியிட்டார் இலக்கணச் சூத்திரங்களைக் கட்டளைக் கலித்துறையில் கூறுவதனை யாப்பருங்கலக் காரிகையில் முதன் முதலாகக் காண்கிறோம். வீரசோழியமும் பிரயோக விவேகமும் இந்த முறையைப் பின்பற்றுவனவாம்.

நன்னூலிலுள்ள குற்றங்களைக் கண்டு அதனை நீக்கியும், ஒருவரோடு ஒருவர் முரண்படுகின்ற உரையாசிரியர்களின் கருத்துக்களில் தம் ஆராய்ச்சிக்கு உகந்தவற்றை முறை செய்தும், இலக்கண விளக்கம் என்ற ஐந்திலக்கண நூலினைப் பதினேழாம் நூற்றாண்டில் வாழ்ந்த வைத்தியநாத தேசிகர் உரையுடன் வெளியிட்டார் இதனைக் குட்டித்

தொல்காப்பியம் என்று வழங்குவர் இதற்கு மறுப்பாக இலக்கண விளக்கச் சூறாவளி என்ற நூலினைச் சிவஞான சுவாமிகள் இயற்றினார்.

பதினெட்டாம் நூற்றாண்டின் முதலில் வீரமாமுனிவர் தொன்னூல் விளக்கம் என்ற நூலையும் பத்தொன்பதாவது நூற்றாண்டில் முத்துவீர நாவலர் என்பவர் முத்துவீரியம் என்ற நூலையும் ஐந்திலக்கண நூல்களாக வெளியிட்டனர். 19ஆம் நூற்றாண்டில் இளைஞர்க்கெனப் பல இலக்கணங்கள் வெளிவந்தன. இவை வசனத்தில் எழுதப் பெற்றுச் சிலபோது வினா விடை வடிவமாகவும் அமைந்தன. இராமானுசக் கவிராயர், மகாலிங்க ஐயர், தாண்டவராய முதலியார், ரேனியஸ், ஆறுமுக நாவலர் முதலியோர் இத்தகைய தொண்டில் ஈடுபட்டனர் எனலாம். விசாகப் பெருமாளையர் பஞ்ச இலக்கண வினாவிடை என்ற ஒரு நூலை இயற்றினார்.

எழுத்ததிகாரத்தில் தொல்காப்பியத்திற்குப் பின்னர் ஆராய்ந்தவர்கள் சார்பெழுத்து வகைகளைப் பலவாறாக விரித்தும், போலி எழுத்துக்களை ஆராய்ந்தும் வந்தமை யாப்பருங்கலக் காரிகையின் உரை முதலியவற்றில் காணலாம். இவ்வாறு வளர்ந்ததன் முடிபினை நன்னூலிற் காண்கிறோம் பதங்களின் உறுப்புக்களைப் பிரிப்பதனைத் தொல்காப்பியர் சுட்டினாலும் அதனை அவர் விளக்கவில்லை. வீரசோழியம், பிற்காலத்தே நாம் இடைநிலை என்றும் விகுதி என்றும் கூறுவனவற்றை ஒருங்கு சேர்த்து விகுதி என்றே வழங்கக் காண்கிறோம் நன்னூலார் காலத்திற்குள் இந்தப் பகுபத ஆராய்ச்சி [illegible]ும் சிறந்து விளங்கியது. பகுபதம், பகாப்பதம் என்ற பிரிவும் எ[illegible]ு இடுகுறிப் பெயர், காரணப் பெயர் என்ற பாகுபாடு[illegible] வளர்ந்தது தொல்காப்பியரோ, காரணம் விளங்காமற் போனாலும் எல்லாச் சொற்களும் காரணச் சொற்களே என்ற கொள்கையினர்.

தொல்காப்பியத்திற்கு முதல் உரை கண்டவர் இளம்பூரணர். இவர் யாப்பருங்கலம் எழுந்த பத்தாம் நூற்றாண்டிற்குப் பிற்பட்டவர் எனலாம். இவருக்குப்பின் நச்சினார்க்கினியர் இவரைப் போலத் தொல்காப்பியம் முழுவதுக்கும் உரை எழுதியுள்ளார். பின்வந்த இலக்கண நூல்களின் கருத்துக்களை மறுத்துத் தொல்காப்பியத்தின் கொள்கைகளையே நிலைநாட்டுகின்ற மனப்பான்மை உடையவர். சங்கநூல் வழக்கிற்கெல்லாம் தொல்காப்பிய விதி உண்டெனக் காட்ட முயல்பவர் இவர் பதினைந்தாம் நூற்றாண்டில் வாழ்ந்த மல்லிநாதனின் தந்தையாரான கபர்தி என்பவர் எழுதிய கபர்தி காரிகையிலிருந்து

மேற்கோள் கூறுவதால் பதினைந்தாம் நூற்றாண்டிற்கு முந்தியவராதல் முடியாது.

சொல்லதிகார ஆராய்ச்சி வடமொழிக் கொள்கைகளைக் கொண்டு வந்து புகுத்தியதற்குமேல் ஒருவகையிலும் சிறக்கவில்லை என்றே கூறவேண்டும். பகுபத ஆராய்ச்சி இங்கு விளக்கம் தந்தது. ஆகுபெயர், தொகை, பகுபத உறுப்பாக வருபனவற்றின் பொருள்கள் இவற்றைப்பற்றி விளக்கங்கள் பெருகின. இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும் எழுதிய உரைகளோடு வடநூற் கடலை நிலை கண்டுணர்ந்த சேனாவரையர் உரையும், வடநூல் வல்ல தெய்வச் சிலையார் உரையும் இவர்கள் உரைகளை எல்லாம் தழுவி எழுதும் கலலாடனார் உரையும் சொல்லதிகாரத்துக்குக் கிடைத்துள்ளன. கி.பி பதின்மூன்றாம் நூற்றாண்டின் ஈற்றில் சில சாசனங்கள் ஆசிரியர் மாணாக்கர் முறையில் நிலம் பெற்று வந்த சேனாவரையர் ஒருவரைக் குறிப்பது இந்தச் சேனாவரையரானால் இவர் அந்த நூற்றாண்டினர் எனலாம் இவர் நன்னூலைக் குறிக்கிறார் என எண்ண இடமுண்டு. நச்சினார்க்கினியர் தெய்வச்சிலையாரையோ கல்லாடரையோ குறியாததனால் அவருக்கும் பிந்தியவர்கள் இவர்கள் ஆவார்கள். கல்லாடரைப் பிரயோக விவேகம் குறிப்பிடுவதால் அதனைப் பதினாறாம் நூற்றாண்டைய நூல் எனலாம்.

பொருளதிகாரத்துக்கு இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும் பேராசிரியரும் உரை வகுத்தார்கள் என அறிகிறோம். தொல்காப்பிய மரபு மறைந்து போனதை இவ்வாசிரியர்கள் அறிந்து விளக்க மிகமிக முயன்றுள்ளார்கள். முழு வெற்றி கண்டார்கள் என்று கூறுவதற்கில்லை.

இலக்கண ஆராய்ச்சியாக நூல்கள் பதினேழாம் நூற்றாண்டிலிருந்து வெளிவரத் தொடங்கின. ஈசான தேசிகர், பல நூல்களிலும் பலர் உரைகளிலும் சிதறிக் கிடந்த இலக்கணங்களைத் தொகுத்து, இலக்கணக் கொத்து எனச் சூத்திரமும் உரையுமாகச் செய்தார். பதினெட்டாம் நூற்றாண்டில் தொல்காப்பியப் பாயிர விருத்தியும் தொல்காப்பிய முதற் சூத்திர விருத்தியும் சிறந்த இலக்கண ஆராய்ச்சிகளாக எழுந்தன. இவற்றை இயற்றியவர் சிவஞானசுவாமிகள் மேனாட்டார் தமிழ் நாட்டில் வந்தபோது தமிழைப்பற்றிய இலக்கணங்களை எழுதலாயினர். கொச்சை மொழி அல்லது கொடுந்தமிழுக்கும் இலக்கணம் எழுதத் தொடங்கினர் பால்டே (Balde) என்பவர் டச்சு மொழியில் பதினேழாம் நூற்றாண்டில் எழுதிய இலக்கணம் இந்த வகையிற் பழையதாகும வீரமாமுனிவர்

பதினெட்டாம் நூற்றாண்டில் கொடுந்தமிழ் இலக்கணம் ஒன்று லத்தீனில் எழுதினார். பத்தொன்பதாவது நூற்றாண்டில் போப்பையர் தமிழைப் பற்றித் தமிழ் இலக்கணம் எழுதியதோடு தமிழ் மொழியைப் பற்றிய ஆராய்ச்சியையும் தொடங்கினார் 19ஆம் நூற்றாண்டில் சில வாத நூல்கள் இலக்கண ஆராயச்சியில் ஈடுபடவும் காண்கிறோம். 20ஆம் நூற்றாண்டில் மறைமலையடிகள், அரசஞ் சண்முகனார், திருமயிலை சண்முகம்பிள்ளை, யாழ்ப்பாணத்து இலக்கணச் சாமியார், மாயவரம் சோமசுந்தரம் பிள்ளை, சுன்னாகம் குமாரசுவாமிப்பிள்ளை முதலியோர் இலக்கண ஆராய்ச்சிக் கட்டுரைகளும் நூல்களும் எழுதியிருப்பது காணலாம்

இதற்குள் மேனாட்டில் மொழிகளை ஒப்பிலக்கண வகைகளில் ஆராயும் முறை வளர்ந்தது. கால்டுவெல் இந்த முறையைத் தழுவித் தமிழ் மொழி இலக்கணத்தின் அடிப்படையை உணர்த்தத் திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம் (Çomparative Grammar of Dravidian Languages) என்ற அரிய நூலை இயற்றினார் இவருக்கு நன்னூலுக்கு முந்தி இங்கிருந்த இலக்கண நூல்கள் கிடையாமையால் மேலும் பல உண்மைகளைக் காண முடியாமற் போயிற்று. வடநாட்டு மொழிகளைப் பேசும் இடங்கள் வழியாக ஆராய்ந்தது போலத் திராவிட மொழிகளைப் பரக்க ஆராயாமற்போனாலும் சுருக்கமான அளவில் அவற்றைப் பற்றிய ஒரு பகுதியை இந்திய மொழிப் பரப்பு அளவீட்டு ஆராய்ச்சி (Linguistic Survey of India) வெளியிட்டது. இதனை அடிப்படையாகக் கொண்டு திராவிட மொழி ஆராய்ச்சி வளர்ந்தது. ஜூலே பிளாக் (Jules Bloch) என்பவர் திராவிட மொழிகளின் அமைப்பைச் சுருக்கமாகப் பிரெஞ்சு மொழியில் விளக்கி வெளியிட்டுள்ளார். ரஷ்யா முதலிய பிற மேனாட்டு மொழிகளிலும் தமிழைப் பற்றிய இலக்கணக் குறிப்புக்கள் எழுதப் பெற்றன. பர்ரோ (Burrow), எமனோ (Emeneau) போன்றவர்கள் திராவிட மொழிகளை ஆராய்ந்து வருவதோடு வடமொழியில் வேர் அகப்படாத வடசொற்களிற் பல திராவிட மொழிச் சொற்களாதலை மொழி ஆராய்ச்சி வழியே காட்டி வருகிறார்கள்.

தமிழ் மொழியின் வரலாற்றைச் சூரிய நாராயண சாஸ்திரியார் சுருக்கமாகக் காட்டினார் மொழி நூல் பற்றிய பல கட்டுரைகள் வெளிவருகின்றன. கால்டுவெல் கண்ட ஆராய்ச்சியைப் பழமையோடு வைத்துப் பொருத்தித் திராவிட மொழிகளின் உண்மை இயல்பையும் தமிழின் சிறப்பு நிலையினையும் காண வேண்டுவது எதிர்காலத்தொண்டு தமிழ் இலக்கணத்தை மொழி வரலாற்று

வகையிலும் இடவகையிலும், சமுதாய வகையிலும், இப்போதுள்ள நிலையை விளக்கும் வகையிலும் பிற மொழிகளோடு ஒப்பிடும் வகையிலும் எழுத்து, சொல்லுறுப்பமைதி, சொற்றொடராக்கம், பொருள் மாற்றம் முதலிய துறைகளிலும் ஆராயத் தமிழர் முற்பட்டுள்ளனர்

# இலக்கணம்

*இலக்கணம்* (Grammar) என்பது சிறப்பியல்பு. இலக்கணம் கூறப்பெறுவது எதுவோ அஃது இலக்கியம் எனப் பெயர் பெறும். எடுத்துக்காட்டாக, மண்ணுக்கு இலக்கணம் கூறப்புகுந்தால், மண் இலக்கியமாகும். இலக்கணம் பெற்று விளங்கும் இலக்கியத்தன்மை இலக்கியத் தன்மையாகும். எங்கெங்கு மண்ணுண்டு, அங்கங்கெல்லாம் மண்தன்மை உள்ளது என்று சொல்லலாம்படி, மண்ணுக்கு அப்பால் இல்லாமலும் (அதிவியாப்தி, மிகைபடல்), மண்ணில் ஓரிடத்திலன்றி அதன் எவ்விடத்தும் நில்லாமலும் (அவ்வியாப்தி, குறைபடல்), மண்ணில் இல்லாததாகவே இல்லாமலும் (அசம்பவம், மாறுகொளல்), மண்ணாகிய இலக்கியத்தன்மையை, இம்மண் தன்மை எல்லை கட்டி வரைந்து கொள்கிறது, மண் தன்மையோடு நியதமாகப் பிறழ்ச்சியின்றி ஒருங்கு நிகழ்வது மண்ணின் சிறப்பியல்பாகிய மணமுடைமையே ஆம்; அதுவே மண்ணின் இலக்கணம் என்பர் தருக்க நூலோர். எனவே, இலக்கியத் தன்மையை வரைந்துகொள்வதனோடு நியதமாய் ஒருங்கு நிகழ்வது இலக்கணம் என்பது தருக்கநூலோர் முடிவு. இதுவே இலக்கணத்தின் இலக்கணமாகும்.

இலக்கியம் என்பது ஆங்கிலத்தில் லிட்டரேச்சர் (Literature) என வருதற்கு நேரான தமிழ்ச் சொல்லாக வழங்கிவருகிறது. எனினும், பேச்சும் இலக்கியமே எனக் கொள்ளுதல் வேண்டும். இந்த இலக்கியத்தில் காணும் சிறப்பியல்பே-மொழிநடையின் சிறப்பியல்பே-இலக்கணம் என்று தமிழில் பெயர் பெறுகின்றது. *இலக்கியம் கண்டதற்கு இலக்கணம் கூறல்* என்பது நன்னூல். மொழியைப் பேசிவரும்போது பேசுவோனும் கேட்போனும் ஒருவரை ஒருவர் அறிந்து கொள்ளும் பொதுநிலை-அல்லது பொது மரபு-இருத்தல் வேண்டும். இதுவே இலக்கணம். ஒருவகையால் நோக்கினால் இது வழக்காறே ஆகும். ஒரே இலக்கணமரபு உலகு எங்கும் பரவியில்லை. மொழிக்கு மொழி இந்த மரபு மாறும்; காலத்துக்குக் காலம் மாறும். இதனாலேயே வடமொழி, லத்தீன் முதலிய பழைய மொழிகள் வழக்கின்றிப் போக, அவற்றின் மாறிய வடிவங்களாகிய இந்தி, இத்தாலி முதலியவை புதிய மொழிகளாக வழங்கிவருகின்றன. ஆகையால் ஒரு மொழியின் இலக்கண மரபுகொண்டு மற்றொரு மொழியின் இலக்கணத்தினை விளக்குவது தக்கதன்று. லத்தீன் இலக்கணமே ஆங்கில இலக்கணம் என்று பல நாள் ஆராய்ந்தவர் உண்மை காணாது மயங்கினர். வடமொழி இலக்கணமே தமிழிலக்கணம் என்ற ஆராய்ச்சியும் இத்தகையதே.

*சொற்கள் வாக்கியமாகிக் கருத்தினை எவ்வாறு விளக்கி வருகின்றன என்பதை ஆராய்வதே இலக்கணம்* என மேனாட்டில் வழங்கிவருகிறது

வடமொழி வியாகரணமும் இத்தகைய ஆராய்ச்சியே ஆம். ஆனால் தமிழர் ஐந்திலக்கணம் எனக் கூறிவருகின்றனர். எழுத்தின் ஓசை, மாத்திரை, புணர்ச்சிமாற்றம் முதலியவற்றை ஆராய்வது எழுத்திலக்கணம் சொற்கள், பெயர், வினை, இடை, உரி என்ற பாகுபாட்டோடு பலவாறு சொற்றொடராக இயைந்துவரும் மரபுகளை ஆராய்வது சொல்லிலக்கணம். இலக்கியங்களில் வரும் பொருள்பாகுபாட்டினை அகம் என்றும் புறம் என்றும் முறை செய்வது பொருள் இலக்கணம் தமிழ் இலக்கணம் இந்த மூன்று பிரிவாக மட்டும் அமைந்தது தொல்காப்பியக்காலம் இந்த பொருட்களைப் பாட்டாகவும் உரைநடையாகவும் கூறும்போது இலக்கியம் செய்யுளாக (Literary Compositions) வரும்; செய்யுளின் அமைப்பு முறையைத் தனியே ஆராய்வது யாப்பிலக்கணம். இந்த நான்கு பிரிவாகத் தமிழ் இலக்கணம் அமைந்த காலம் இறையனார் அகப்பொருளுரை காலம் எனலாம் வடநூல் ஆராய்ச்சியின் பயனாக உவமை முதலிய அலங்காரங்களை ஆராய்ந்தவர்கள் அணி இலக்கணம என ஐந்தாம் பிரிவும் கூறிய காலம் தண்டியலங்காரக் காலம் எனலாம்

பிற நாட்டிலும் இப்படிப்பலவற்றையும் இலக்கணத்துள் அடக்கியதுண்டு டையனீஷியஸ் (Dionysius) என்ற ரோமானிய அறிஞர் எடுத்தல், படுத்தல் முதலிய இசை வேறுபாடு கூறும் ஒலி இலக்கணமும், சொற்பொருளை விளக்கும சிறப்பியல் இலக்கணமும், அணிகளை விளக்கும் அணி இலக்கணமும் கூறுவர் அவர் *கற்ற எழுத்தாளரோடு செயல்முறை வகையால் நம்மை அறிமுகம் செய்வதே இலக்கணம்* என்பர். இலக்கண மாறுபாட்டுக்கு அடிப்படையாகாத ஒலியியல் நாம் கூறிவரும் இலக்கண விதியாவது இல்லை சொற்பொருள் கூறுவது அகராதியும் நிகண்டுமேயன்றி இலக்கண நூலன்று. அணி இயல் அலங்கார சாத்திரமே அன்றி இலக்கண நூலன்று. பொருள் பாகுபாடு இலக்கிய நூலன்று அணி இயல் அலங்கார சாத்திரமே அன்றி இலக்கண நூலன்று பொருள் பாகுபாடு இலக்கிய ஆராய்ச்சியாதலின் அதுவும் நாம் வழங்கும் இலக்கணமாவதில்லை இதனால்எழுத்திலக்கணத்தையும் சொல்லிலக்கணத்தையும் மட்டுமே நன்னூலும் தொன்னூலும் கூறுகின்றன.

சொல், சொற்றொடர் இவற்றின் இயைபுகளை விளக்கும் முறை அல்லது மரபினை ஆராய்வதே இலக்கணம் 1 சொற்றொடரில் சொல் நிற்கும் இடம் (*இராமன் சோறு தின்றான்* என்பதில முதலில் நிற்பதனாலேயே *இராமன்* எழுவாய். இரண்டாவது நிற்பதாலேயே *சோறு* என்பது இரண்டாம் வேற்றுமை உருபு இன்றியும் செயப்படுபொருளாம்) 2 ஒலி வேற்றுமை (*அவன் வந்தான், வந்தான் போனான்* என்பதில முதலிலுளள *வந்தான்* என்னும் சொல் பகுதியில்

எடுத்தலோசை பெற்றுப் பயனிலையாம், இரண்டாவது உள்ள *வந்தான்* என்னும் சொல் விகுதியில் எடுத்தலோசை பெற்று எழுவாயாம்). 3. சொல்லமைப்பு; 4. சொல்லுருபு மாற்றம் (*இராமன், இராமனால்* எனக் காண்க. துணைச்சொற்களோடு *வாள் கொண்டு* என வருதல் காண்க). இவை சொற்கள் ஒன்றோடொன்று எழுவாய், பயனிலை முதலியவைகளாய் இயைந்துவரும் இயைபினை விளக்குகின்றன. இவற்றை *வந்தான்* போல வரும் சொல்லமைப்பு அல்லது சொல்லாக்கம், *இராமன் சோறு உண்டான்* என்பது போன்ற சொற்றொடரமைப்பு அல்லது சொற்றொடராக்கம், *இராமன், இராமனை* முதலியன போன்ற உருபு அமைப்பு அல்லது உருபு ஆக்கம் (Accidence) என மூன்றாக அடக்கி மேனாட்டார் ஆராய்வர்.

மொழி, பேச்சாக எழுவது, எழுத்து அதன் மாற்றுவடிவம். ஆதலின் மொழி ஒரு நிகழ்ச்சி, அல்லது ஒரு செய்தி இலக்கணம் அதனை உள்ளவாறு விளக்கினாற் போதும் ஆனால் கொள்கைக்கேற்ப இந்த விளக்கம் மாறுபடுவது நம் மனத்தின் இயல்பு. பலவகையாக வரும் மொழிச் செய்திகளையும் ஒரு கொள்கையும் இன்றி முழு நிலையாக விளக்க முடியாது. விஞ்ஞான வழக்கின்படியே இவற்றைக் கோவை செய்து வகைப்படுத்தி முறை காணவேண்டும். ஒரு மொழியோடு ஒரு மொழியை ஆராயும் ஒப்புமை ஆராய்ச்சி முறை (Comparative method) இவ்வாறு எழுகின்றது ஒரு காலத்தில் ஒன்றுபோலத் தோன்றுவன பிற்காலத்தில் ஒரு தொடர்பும் இல்லாதவையாய்ப் போகலாம். தமிழ் *அஞ்சு* வடமொழி பஞ்ச் என்பதுபோலத் தோன்றினாலும் *பஞ்ச* என்பது *கவிங்க், பீன்ப்* போன்று முன் இருந்ததனையும், *அஞ்சு* என்பது *ஐந்து, ஐது, ஐ* என்றெல்லாம் இருந்ததனையும் ஆராயும் போது இவற்றின் ஒற்றுமை மறைகிறது. பிற மொழிகளிலிருந்து கடன் வாங்கி வழங்கப்பெறும் சொற்களும் உண்டாதலின் ஒரு மொழியில் பிறமொழிச் சொற்கள் இருப்பதால் மட்டும் பிறமொழியாகிவிடாது. ஆகையால் பழைய வடிவங்களை ஆராயவேண்டும் என்பதாயிற்று. இதுவே வரலாற்று முறை ஆராய்ச்சி (Historical method) ஒப்பிலக்கணங்களும் வரலாற்றிலக்கணங்களும் என்ற இவை இரண்டும் சேர்ந்த வரலாற்று ஒப்பிலக்கணங்களும் தோன்றி வருகின்றன. இன்று இந்திய ஐரோப்பிய மொழிகளே இவ்வாறு பரக்க ஆராயப்பெற்றுள்ளன

பேச்சு என்பது, வாக்கியம் வாக்கியமாகத் தொடர்ந்து ஓடும் ஒரு பேராறு. கருத்தை முழு முழு வாக்கியமாகவே விளக்குகிறோம். வாக்கியமே கருத்தின் முழுநிலையளவுகோல் அல்லது தனியன் (Unit) வாக்கியத்தில் வரும் சொற்கள் அதன் உறுப்பே அன்றித் தனியே வழங்கும தனிநிலை பெற்றன

அல்ல. ஆனால், அகராதியில் எண்ணக்கிடக்கும் இந்தச் சொற்கள் எண்ணிறந்த கருத்துக்களை உணர்த்துவது எப்படி? அவை ஒன்றோடொன்று எண்ணிறந்த பலவகையில் சேர்ந்து, இவ்வாறு எண்ணிறந்த கருத்துகளை விளக்குகின்றன. ஒன்றிற்கொன்றுள்ள பலவகை இயைபு, இந்த இயைபுகளின் பலவகை வெளிப்பாடு என்ற இவற்றின் காரணமாக வாக்கியம் பலவகையாக மாறுபடும். இது பல மொழிகளில் பலவகையாக வரக்காண்கிறோம்.

ஒரு வாக்கியத்தை ஒரு சொல்போல வழங்குகிற மொழிகளும் உண்டு. அமெரிக்கச் செவ்விந்தியர் பேசும் மொழிகள் இத்தகைய பலவின் ஒற்றுமைநயம் பெறு மொழிகளாம். (Polysynthetic languages). இங்கே ஒரே தொகையாக வாக்கியம் விளங்குகிறது எனலாம். ஆனால், இங்கே பல சொற்கள் என்ற பேச்சில்லை வினை என்பதே இல்லாதபோது வினைச்சொற்கள் என்று இங்குப் பேச இடம் ஏது? ஆப்பிரிக்காவில் வழங்கும் தொகைநயம் பெறு மொழிகள் (Incorporating lgs.) என்பவை இவற்றின் வளர்ச்சி போலத் தோன்றும் செயப்படுபொருளை வினையினின்று பிரிக்காமல் இரண்டும் சேர்ந்த தொகையாகவே இவை வழங்கிவருகின்றன. பலவகைக் கருத்துக்கள் சொல்லில் தொடர்ந்து திணிக்கப்பட்டவை போல விளங்கும் தனிமைநயம் பெறு மொழிகள் (Isolating lgs.) இவற்றிற்கு முழுதும் முரணானவை. ஒவ்வொரு கருத்தின் பாகுபாட்டினையும் ஒவ்வொரு சொல்லாகத் தனித்தனி பிரித்து இவை அமைக்கின்றன. சீனம் முதலியன இத்தகையன. சொல்லுக்கும் சொல்லுக்கும் உள்ள இலக்கண இயைபானது இங்கே வாக்கியத்தில் சொற்கள் நிற்கும் இடத்தினைப் பொறுத்ததாகும். இந்தச் சொற்கள் தனித்தனி நில்லாது ஒட்டிக்கொண்டவைபோல வருவது ஒட்டு மொழிகளின் (Agglutinative lgs.) இயல்பாம். திராவிட மொழிகள் இத்தகையன என்பர். போகின்றான் என்பதில் போ என்ற வினைச்சொல்லும், கின்று என்ற நிகழ்காலச் சொல்லும், ஆன் என்ற ஆண்பாற்சொல்லும் ஒட்டி இருக்கின்றன என்பர். ஒரு காலத்தில் பொருளுடையவாய் இருந்து, பின் பொருளற்றுத் தேய்ந்துபோன இடைச்சொற்கள், அடிச்சொற்களின் பின்னோ முன்னோ சேர்ந்து இலக்கண இயைபினை இந்த மொழிகளில் விளக்கிவரும் தேய்ந்த சொற்கள் என்றே தோன்றாதபடி உருபுகள் எழுத்துக்களாய் ஒழியும் போது இவையே உருபு மொழிகள் (Inflexional lgs.) என வளர்கின்றன. (தமிழில் கு என்ற நான்காம் வேற்றுமை உருபினைக் காண்க). இந்திய ஐரோப்பிய மொழிகள் இத்தகையனவ. உயிர் ஒலி மாறுவதாலோ விகுதியுருபு மாறுவதாலோ சொன்முதல் மாறுதலாலோ இலக்கண இயைபு விளங்கலாம். நாளடைவில் ஒவ்வொரு கருத்தையும் தனித்தனிச் சொல்லாக வேறுபிரித்து வழங்கும் ஒற்றுமைநயம் பெறு மொழிகளாக (Analytical lgs.) இவை வளர்கின்றன

இந்திய ஐரோப்பிய மொழியில் ஆங்கில மொழியின் வளர்ச்சி இதனை விளக்குகிறது. இவ்வாறு மொழிகள் பலவகையாக வாக்கிய அமைப்பின் அடிப்படையில் வெவ்வேறே ஆனாலும் அவை வளர்ச்சியின் பயனாய் வரையறையின்றிப் பலவகை நிலையிலும் பின்னிக்கொண்டு கிடக்கக் காண்கிறோம். இருந்தாலும் இவற்றின் இலக்கண முறை வெவ்வேறே ஆம். இலக்கண ஒற்றுமை உள்ள மொழிகளை ஓர் இனம் எனக் கொள்ளலாம். பிறவகையான ஒற்றுமைகள் போலி ஒற்றுமைகள் என முன்னர்க் கண்டோம்.

இந்திய ஐரோப்பிய மொழியாராய்ச்சி அந்தக் குடும்ப மொழிகளைப் பற்றிச் சில உண்மைகளைக் கண்டுள்ளது. சொற்களை அவற்றின் அடிப்படைச் சொற்களாகப் பிரிக்கலாம். இந்த அடிச்சொற்கள் இரண்டு வகை. முதல் ஒத்திருப்பன ஒருவகை; இவையே பகுதிகள் எனலாம். கடை ஒத்திருப்பன மற்றொருவகை; இவையே விகுதி முதலிய இடைச்சொற்கள் ஆம். பகுதிகளோ கருத்துக்களை விளக்கும். இடைச்சொற்களோ இலக்கண இயைபினை விளக்கும். சொற்றொடரில் சொல் அமைந்த இடமும் இந்த இயைபினை விளக்கும். நாளடைவில் பழக்கத்தால் சில சொற்கள் சில இடத்தில் மாறாது வரும் அல்லவா? இடைச்சொற்கள் முதலில் தெளிவின்றியும், வரையறை இன்றியும் வந்திருக்கும். வழக்காற்றில் பயின்றுவருதல் காரணமாகப் பின்னர் வரையறை ஏற்பட்டிருக்கும். இவற்றில் ஒரு சில இலக்கணக் கருத்தினைமட்டும் விளக்கலாம். வேறு சில பெயர், வினை என்ற சொற்பாகுபாட்டுக் குறிகளாக வந்திருக்கலாம். இதனாலேயே ஒ^ர உருபு பல பொருளில் வரக் காண்கிறோம். இவற்றில் ஒருசில ( தாடக்கத்தில் இருந்தே இடைச்சொற்களாக இல்லாமல் பொருளுள்ள ( சாற்களாக வழங்கிவந்து, பின்னர் நாளடைவில் பொருளிழந்து, தேய்ந்து, உ நபாகவும் வெறும் உயிர் ஒலியாகவும் நின்று விட்டிருக்கலாம். இம்மொழிகளில் எட்டு வேற்றுமைகள் உண்டு. எழுவாய், செயப்படுபொருள், விளி என்ற மூன்றும் வல் வேற்றுமைகள் (Strong cases); பிற எல்லாம் மெல் வேற்றுமைகள்: பின்னவையே பெயரடையும் (Adjective) வினையடையும் (Adverb) ஆயின. இவ்வுருபுகள் பின்னர் முந்தமை சொல்லாக 1(Preposition) மாறின. 1,2,6ஆம் வேற்றுமைகள் இலக்கண நெறி வேற்றுமைகள்; 3,5,7ஆம் வேற்றுமைகள் தருக்க நெறி வேற்றுமைகள். இந்த மொழிகளில் வரும் இருமை எண் (Dual numbers) பன்மையிலும் பழையது. இங்கே ஆண், பெண், அலி என்ற இலக்கணப் பால் பாகுபாடு சொற்களின் ஒப்புமை நயத்தால் எழுந்தது என்பர். பால் பாகுபாடு இல்லாத காலமும் உண்டு. *செய* என் வினையை ஆராய்ந்தால், பெயர், வினை என்ற பாகுபாடு இல்லாத காலமும் உண்டு எனத் தெரிகிறது. இறப்பு, நிகழ்வு, எதிர்வு என்ற காலக்கருத்தும் நாளடைவில் நுழைந்ததே ஆம் வினைச் சொல் முதல் எழுத்தினை

இரட்டுவித்துக் காலம் காட்டுதல் பழைய முறை. இம்மொழிகளில் செயப்படுபொருள் வினை, செய்வோன் என வாக்கியம் அமைந்து வந்தது.

இந்த உண்மைகள் பிறமொழிகளுக்கும் ஒத்துவருமா என்பதே இன்றைய ஆராய்ச்சி. தமிழிலக்கணம் ஒருவகையில் பொது இலக்கணம் எனலாம். கருத்தில் விளக்கும் கூற்றோ, முடிபோ, ஏதேனும் ஒன்றைப் பற்றிக் கூற முன்வருவது எதுவோ அதுவே எழுவாய்; அதனைப்பற்றி ஏதாவது ஒன்று கூறுவது எதுவோ அதுவே பயனிலை தமிழ் இலக்கணம் எழுவாயைப் பெயர் என்றது. பயனிலையை வினை என்றது. அவ்வளவே இங்குள்ள பாகுபாடு பிற சொற்கள் எல்லாம் பெயரின் அடையாகவும் வினையின் அடையாகவும் நுழைந்து, எழுவாயும் பயனிலையுமாகவே முடியும். பெயர், வினை என்ற இரண்டு சொற்களைப் பிரித்து ஆராய்ந்தால், பொருளுக்கு உரிமையான அடிப்படைப் பகுதிகள் ஒருபுறம் நிலைத்துள்ளன. காலம், இடம், பால், வேறறுமை முதலிய இலக்கண இயைபினைக் காட்டும் விகுதி, இடைநிலை, வேற்றுமை முதலிய இவை மற்றொரு புறம் பிரிகின்றன. பகுதியே உரிச்சொல்; விகுதி முதலியன இடைச்சொல் இவ்வளவே தமிழ் இலக்கணம் பிறமொழிச் சொற்களும் திசைச் சொற்களும் தமிழ் மொழியில் வழங்கி இடம்பெறும் தமிழில் காலம், பால் முதலிய இலக்கணப் பாகுபாடுகள் இல்லாத நிலையும் இருந்திருக்கலாம்; பகுதிகள் வினைக்கும் பெயர்க்கும் பொதுவாக இன்றும் உள்ளன. எழுவாய், செயப்படுபொருள், பயனிலை என்பது தமிழ் வாக்கியத்தின் பொது அமைப்பு. இடைச் சொற்கள் முன்னொரு காலத்தில் தனிச்சொற்களாக விளங்கினவே என்பது இன்றும் விளங்குகிறது.

இலக்கண விதிகள் இலக்கண நூல்கள் ஏற்படுத்தும் சட்டங்கள் அல்ல; வழக்காற்றின் மரபுகளாய்க் குறித்த காலத்தில் வழங்குவனவே ஆம். இலக்கண நூல்கள் சூத்திரவடிவமாய்ச் சுருக்கமாக வழங்குவதற்கு வாய்ப்பாக இருப்பதால் ஐயம் ஏற்பட்டபோதெல்லாம் அவற்றை எடுத்துக் காட்டுவது இயல்பாகிவிட்டது இதனால் அவை கட்டாயம் பின்பற்றத் தக்கன என்ற எண்ணம் பரவியது.

கிரேக்க நாட்டில் குடியரசு பரவிய போது பொது மக்களிடையே கருத்துக்களைத் தெள்ளத் தெளிய விளக்கிப் பேசி மனத்தைக் கவரும் பேச்சாளிகளுக்குச் சிறந்த இடம் தோன்றியது. எவ்வாறு மனத்தைக் கவர்வது என்ற ஆராய்ச்சி மொழியியலை ஆராய்வதாக முடிந்தது; இலக்கணம் தோன்றியது; சொலலின் ஒலிக்கும் பொருளுக்கும் இயற்கையான தொடர்பு உண்டு என்ற நம்பிக்கைக் கோட்டை தகர்ந்தது. சொல்லுவோன் தருவதே பொருள் என்பது விளங்கியது இங்குப் பயன்படும் மரபுகளே இலக்கணம்

என்பதாயிற்று. 1.பெயர்ச்சொல் (Noun) 2. வினைச்சொல் (Verb), 3 பெயரடைச் சொல் (Adjective), 4.வினையடைச்சொல் (Adverb), 5. குறிப்புப் பெயர்ச் சொல் (Pronoun), 6. மேல், கீழ் என்பன முதலாக வரும் முந்து அமைசொல் (Preposition), 7. சொற்றொடர்களின் பொருள்களை ஒற்றுமை நயத்தாலோ வேற்றுமை நயத்தாலோ தொடர்புபடுத்திச் செலுத்திவரும் and, but போலப் பிணைப்புச்சொல் (Conjunction) 8 *உணர்ச்சி ஒலியாக வரும் ஒலிக் குறிப்புச்* சொற்கள் (Interjection) என்ற இவையே எட்டுவகைச் சொற்கள் என மேனாட்டார் கூறலாயினர் a,an,the எனப் பெயர்முன்னுருபு (Article) என்பதொன்றும் உண்டு. அரிஸ்டாட்டில் *காலத்திலிருந்து* இந்தப் பாகுபாடு தொடங்கியது.

இலக்கணம் எந்நாளும் மாறாது ஒருதன்மைத்தாக இருப்பதானால் அன்றோ பேச்சாளி அதனை எளிதில் அறிந்து வெற்றிபெறுதல் கூடும்? இவ்வாறு ஒரு தன்மையதே என்றனர் ஒரு கொள்கையினர். ஆகையால் *வந்தான்* என்பதை அறிந்தால், *தந்தான்* என்பது போல ஒப்புமை முறையால் பிற வடிவங்களை அமைத்தல் கூடும் என்றனர். இதுவே ஒப்புமைக்கொள்கை (Analogy). *குதிரைக்கு குர்ரம் என்றால் யானைக்கு யர்ரமோ* என்ற பழமொழியை அறிவோம் இதனை ஒட்டி, விதிகள் இருந்தாலும், விதிக்குப் பல புறனடைகளும் உண்டு என்பது புறனடைக் கொள்கை. ஒப்புமைக் கொள்கையினர் அரிஸ்டார்க்கஸ் (Aristarches) என்பவரைப் பின்பற்றினர், புறனடைப் கொள்கையினர் கால்ட்ஸ் (Calts) என்பவரைப் பின்பற்றினர். ஒப்புமைக் கொள்கை சிலபோது இலக்கணக் கொடுங்கோலாக மாறுவதை இன்றும் காணலாம். ஆனால், கி.பி. நான்காம் நூற்றாண்டிலேயே இலக்கணம் எழுதி வந்தவர்கள் இந்தப் போராட்டத்தை ஒருவாறு நிறுத்தி, பெரிதும் விதிகளும் புறனடைகளும் கொண்டதே இலக்கணம் என முடிவு செய்தனர். கிரேக்க இலக்கணம் லத்தீன் இலக்கணத்திலும் நிழலிட்டது. லத்தீன் இலக்கணம் ஐரோப்பா முழுதும் பரவிப் பிறமொழி இலக்கணங்களின் அடிப்படையாக முயன்றது. 18 ஆம் நூற்றாண்டில் வடமொழியை மேனாட்டார் கற்கத் தொடங்கியதிலிருந்து வரலாற்று ஒப்பிலக்கணம் வளர்ந்து வருகிறது விஞ்ஞான முறைப்படி ஆராய்ச்சி நிகழ்ந்து வருகிறது.

# தமிழ்ச் சங்கம்

தமிழ்ச் சங்கம் என ஒன்று பாண்டியர் தலைநகரில் இருந்து, பிரெஞ்சு அக்காடமி போலத் தமிழை வளர்த்து வந்தது என்பது தமிழர் குறைந்தது 1,200 ஆண்டுகளாக நம்பிவரும் ஒரு குறிக்கோள் நிரம்பிய கதை. கடல்கோளை ஒட்டி மூன்றாம் சங்கம் இன்றைய மதுரையில் எழுந்தது என்பது மரபு. இன்று வழங்கும் சங்க நூற்பாக்களிற் பல அந்தக் காலத்தனவாம். கடல்கோள் ஒன்று கி.மு.150-ல் நடந்தது என மகாவமிசம் கூறும். யவனரைப்பற்றிச் சங்க நூல்களில் காணும் குறிப்பும், அகஸ்ட்டஸ் சீசர் காலத்திலிருந்து வரும் ரோம நாணயங்களும் யவனக் கலைப்பொருள்களும் அங்கங்கே தமிழ் நாட்டில் கிடைப்பதும், அரிக்கமேட்டில் தோண்டிப் பார்த்த போது கிடைத்த குறிப்புக்களும், கிரேக்கரும் ரோமரும் கி.பி.இரண்டாம் நூற்றாண்டிற்குள் எழுதிய குறிப்புக்களும், பாண்டி நாட்டிலிருந்து அகஸ்ட்டஸ் சீசரிடம் தூதுவர் வந்ததைப் பற்றிய மேனாட்டுக்குறிப்பும் சிலப்பதிகாரத்தில் கி.பி.இரண்டாம் நூற்றாண்டில் அரசாண்டவனாக அறியலாகும் இலங்கைக் கயவாகுவும் செங்குட்டுவனும் ஒரு காலத்தவர் என்ற விளக்கமும், சங்க நூல்கள் பல்லவரைக் குறிப்பிடாமையால் அவர்களுக்கு முந்தியவாதல் வேண்டும் என்ற உய்த்துணர்வும் கொண்டு, சங்க காலம் கி.மு.முதலாம் நூற்றாண்டிலிருந்து கி.பி.இரண்டு மூன்று நூற்றாண்டுகளுக்குட்பட்டிருக்க வேண்டும் என்பர் பலர். இந்தச் சங்கமே இங்கு இல்லை என்பாரும் வச்சிர நந்தி கி.பி.ஐந்தாம் நூற்றாண்டில் நிலை நாட்டிய சைன திராவிட சங்கமே இந்தச் சங்கம் என்பாரும் உள்ளனர். இந்தச் சங்கத்தைப் பற்றிய கதையைத் திருநாவுக்கரசரே குறிப்பதால் ஏழாம் நூற்றாண்டுக்கும் முந்தியது இக்கதை எனலாம். சங்கத்தில் இருந்தாராகக் குறிப்பிடப்படுவோர் அனைவரும் ஒரே காலத்தில் கூடி இருந்திருக்க முடியுமா? அவர்களில் ஒவ்வொருவரும் தலைமை ஏற்று நடத்தினரோ? இவ்வாறு பல கேள்விகள் கிளம்புவதும் உண்டு.

வரலாறு எவ்வாறாயினும் ஒரு குறிக்கோளை இந்தக் கதை குறித்தலின் அதனை அறிவது நன்று. சங்கத்தினைப்பற்றிய விரிவான குறிப்பு இறையனாகரகப்பொருள் உரைப் பாயிரத்தில் வந்துள்ளது. வேள்விக்குடிச் செப்பேட்டில் அகத்தியர் தமிழ்ச் சங்கம் வளர்த்தகுறிப்புண்டு. திருவள்ளுவமாலை என்பது சங்கப் புலவர்கள்

ஒவ்வொருவரும் திருக்குறளைப் பாராட்டிப் பாடிய பாடல்களின் தொகுதியே என்பர். நாற்பத்தொன்பது புலவர்களின் பேரும் அங்கே கிடைக்கும். அதிலே வரும் முதற்பாடல் இறைவன் பாடியதாம். இந்தக் குறிப்பு கல்லாடத்திலும் காணப்பெறுகிறதால் இது அதற்கு முந்திய கதையாதல் வேண்டும். ஒட்டக்கூத்தர் காலத்திருந்த நேமிநாதர் எழுதிய நூலின் உரையில் இந்த மாலையின் செய்யுள் ஒன்று வருகிறது. நேமிநாதம் பன்னிரண்டாம் நூற்றாண்டினதாம். அதே நூற்றாண்டினரான அடியார்க்கு நல்லாரும் சிலப்பதிகார உரையில் சங்கங்களைக் குறிப்பிடுகின்றார். பதின்மூன்றாம் நூற்றாண்டினது என்று டாக்டர்.உ.வே.சாமிநாதய்யர் கூறும் திருவாலவாயர் திருவிளையாடளிலும் சங்கத்தைப்பற்றிய கதை பரந்து செல்கிறது. சிற்றம்பலக் கவிராயர் வீட்டிலிருந்த ஏட்டில் கண்ட அகவலொன்று சங்கத்தைப்பற்றிய குறிப்புக்கள் இறையனார் அகப்பொருளுரையில் வரும் குறிப்புக்களோடு பெரிதும் ஒப்பனவாகக் கருதப்பெறுகின்றன. தொல்காப்பியத்திற்கு உரை கண்ட கல்லாடரை நச்சினார்க்கினியர் குறிப்பிடாமையால் 15ஆம் நூற்றாண்டிற்குப் பிந்தியர் எனலாம். அவரைச் சங்கத்துச் சான்றோரோடு மயங்கும் இந்த அகவல் 16,17ஆம் நூற்றாண்டினதாகலாம். மூன்று சங்கங்கள் தொடர்ந்து வந்தன என்பது இந்த மரபாம். முதற் சங்கம் கடல்கொண்ட தென்மதுரையில் இருந்ததாம். இரண்டாம் சங்கம் கபாடபுரத்தில் இருந்ததென்பர். சீதையைத் தேடிச் சென்ற வானரர் பாண்டியர்களுடைய பொன்னால் ஒளிர்ந்த கபாடம் முத்துக்களால் அணிபெற்று விளங்குவதைக் கண்டனர் என்று வால்மீகி பாடுகிறார். இதுவே கபாடபுரத்தைப் பற்றிய குறிப்பென்று கொள்வோர் சிலர். இந்தப் பெயர் கதையில் புகுத்தப்பட்டதென்போரும், வால்மீகி வாயிலைக் கூறினாரேயன்றிக் கபாடபுரத்தைக் கூறவில்லை என்றும், இக்குறிப்பினைத் தவறாகக் கொண்டு கபாடபுரக் கதையைச் சங்க வரலாற்றில் நுழைந்துவிட்டனர் பின்னோர் என்றும் கூறுவோரும் உள்ளனர். முச்சங்கங்களைப் பற்றிக் கண்ட குறிப்புக்களை அடுத்த பக்கத்தில் காணலாம்.

முச்சங்கங்களைப் பற்றிக் கண்ட குறிப்புக்களைக் கீழே வகை செய்திருக்கக் காணலாம்:

| சங்கம் | ஊர் | அரசர் எண் | பாடிய அரசர் களின் எண் | இருந்த ஆண்டு | சங்கப் புலவர் | பாடிய புலவர்கள் | வழங்கிய இலக்கணம் | பாடிய நூல்கள் சில | புலவர்கள் சிலர் |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| தலை | கடல் கொண்ட மதுரை | 80 (காய்சின வழுதி முதல் கடுங்கோன் வரை) | 7 | 4440 (4449) | 549 | 4449 (நான்காயிர நூற்றொடு நாற்பத் தொன்பது) | அகத்தியம் | (எத்துணையோ) பெரும் பரிபாடல், முதுநாரை, முதுகுருகு, களரியாவிரை | அகத்தியர், இறையனார், முருகவேள், முரிஞ்சியூர் முடிநாகர், நிதியின் கிழவர் |
| இடை | கபாட புரம் | 59 (வெண் டேர்ச் செழியன் முதல் முடத் திருமாறன் வரை) | 5 | 3700 | 59 | 3700 | அகத் தியம், தொல் காப்பியம், மாபுராணம் இசை நுணுக்கம், பூதபுராணம் | பெரு ங்கலி, குருகு, வெண்டாளி, வியாழமாலை (அகவல்) | அகத்தியர், தொல்காப்பியர், இருந்தையூர்க் கோழிகிழார், மோசி, வெள்ளூர்க் காப்பியனார் சிறு பாண்டரங்கன், திரையன் மாறன் மதுரை ஆசிரியன்மாறன்), துவரைக்கோன், கீரந்தை |
| கடை | இன்றைய மதுரை | 49 (முடித்திரு மாறன் முதல் உக்கிரப் பெருவழுதி வரை) | 3 | 1850 (1950) | 49 | 449 | அகத் தியம், தொல் காப்பியம் | நெடுந்தொகை நானூறு, குறுந்தொகை நானூறு, நற்றிணை நானூறு புறநானூறு, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, நூற்றைம்பது கலி, எழுபது பரிபாடல், கூத்து வரி, சிற்றிசை, பேரிசை, முத்தொள்ளாயிரம், மேலும் சில (அகவல்) | சிறுமேதாவியர், சேந்தம் பூதனார், அறிவுடையரனார், பெருங்குன்றூர் கிழார்,ஷ இளந்திருமாறன், மதுரை ஆசிரியர் நல்லவ்துவனார், மருதனிள, நாகனார் நக்கீரனார். |

# பத்துப்பாட்டு

நாலடியார் முதலான பதினெண் கீழ்க் கணக்கு நூல்களைச் சங்கம் மருவிய நூல்கள் என்று பிற்காலத்தார் வழங்கி வருகின்றனர். சங்க நூல்கள் என்று பழைய உரையாசிரியர்களால் பாராட்டப்பட்டவை, பாட்டும் தொகையும் என்று சிறப்பிக்கப் பெறுகிற பதினெண் மேல்கணக்கு நூல்களேயாம் தொகை என்பது எட்டுத் தொகை நூல்களைக் குறிக்கும் பல புலவர்கள் பாடிய பாக்களை எட்டுத் தொகுதிகளாக வகுத்து வைத்த நூல்கள் இவை இவற்றில் வரும் பாக்களில் மிக நீண்டு வரும் பாக்களைப் பாட்டு என வழங்கி, அத்தகைய பாட்டுக்கள் பததினையும் திரட்டி வைத்த நூலே பத்துப்பாட்டு ஆகும் இதில் வரும் பாட்டில் சிற்றளவு 103 அடிகள்; பேரளவு 782 அடிகள்

இவற்றில் ஆற்றுப்படையாக 5 நூலகள் அமைந்துள்ளன தொல்காப்பியக் கொள்கைப்படி, நிலையாமையை வற்புறுத்தும் காஞ்சித் திணையில், மதுரைக்காஞ்சி என்ற பாட்டு அமைந்துள்ளது அகப்பொருளில் குறிஞ்சி, முலலை, நெய்தல், பாலை, மருதம் என்ற ஐந்தில் மருதம் நீங்கலாக, மற்றை நான்கையும் நான்கு பாட்டுக்கள் கூறுகின்றன அவற்றுள் குறிஞ்சிப் பாட்டு, முல்லைப்பாட்டு, பட்டினப்பாலை என்பன தம் பெயராலேயே திணையை விளக்கும் நெடுநல்வாடை என்பது நெய்தற்றிணை எனக்கூறலாம் என்றாலும், அகப்பாட்டில் மக்களில் சிறந்தாரது ஒழுக்கத்தினை மேல் வரிச் சட்டமாக நாடகத் தமிழாய்ப் புனைந்துரைப்பதே அன்றித் தனியொருவர் ஒழுக்கமாகப் பெயர் கூறிப்பாடுவது பழைய தமிழ் வழக்கமன்று இந்த நூலில் பாண்டியனைக் குறிப்பிடுவதால் இது அகப்பாட்டு ஆகாது, அரசனது போர்ப்பாசைறையைப் பற்றியதே என்று உரையாசிரியர் கூறுகின்றார்

ஆற்றுப்படை என்பது ஒருவகையான பாடல் மரபுடையது புரவலரைக் காணாது வறுமையில் வாடுகின்றான் ஒரு கலைஞன் புரவலன் ஒருவனைக் கண்டு பரிசில்கள் பெற்றுச் சீரும் சிறப்புமாகத் திரும்புகின்றான் மற்றொரு கலைஞன் இவன் அவனைப் பார்க்கின்றான், இரக்கத்தால அவன் வாழ வழி காட்டுகின்றான் அவன் புரவலனிடம் சென்றால், *வறுமை தீரும, கலை வளரும், தன்மானம் அழியாது* என்றுகூறி அப்புரவலனுடைய பெருமையையும் விளக்கி, அவன்

ஊருக்குப் போகும் வழியையும் சுட்டுகின்றான்; பெறப்போகும் பரிசில்களைப் பற்றிக் கனவு காணுமாறும் செய்கின்றான். பொருநர், பாணர், கூத்தர் என்ற கலைஞர்கள் தம்முன் ஒருவரை ஒருவர் ஆற்றுப்படுத்தும் மரபை இங்கே காணலாம் (தொல்காப்பியம் 103), பொருநன் என்பான் மற்றொருவர்போல வேடம் கொண்டு போர்க்களம் பாடுவோன் ஆவான். பாணன் என்பான் பாடுகின்ற பழைய குலத்தைச் சேர்ந்தவன். இப்பாணன் மரபினர் சிறு பாணர், பெரும்பாணர் என்று இருவகையினராவர். ஏழு நரம்பு உள்ள சீறியாழ் கொண்டு பாடுவோர் சிறுபாணர். 21 நரம்பு உள்ள பேரியாழ் கொண்டு பாடுவோர் பெரும்பாணர். கூத்தர் என்பார் எண்வகைச் சுவையும் மனத்தின்கண் பட்ட குறிப்புக்களும் புறத்துப் புலப்பட ஆடுவோர். எனவே மூவகையினரானாலும் உண்மையில் நால்வகையினர் ஆவர். இந்த நான்கு வகையினரையும் ஆற்றுப் படுத்துகின்ற முறையில் நான்கு ஆற்றுப் படைகள் பத்துப் பாட்டில் அமைந்துள்ளன.

பத்துப்பாட்டில் இரண்டாவதாகிய பொருநராற்றுப் படை முடத்தாமக் கண்ணியார் பாடிய பாட்டு. பாட்டு ஆசிரியப்பா வகையைச் சார்ந்தது. 248 அடிகள் கொண்ட இந்த ஆசிரியப்பாவில் வஞ்சியடிகளும் இடையிடையே வருகின்றன. கொலைஞரையும் கள்வரையும் திருத்தும் யாழின் இனிமையில் ஈடுபட்டு, மணப்பெண் போல் அது விளங்குவதாகக் கொண்டு, அதனை மீட்டுகிற பெண்ணை, அதற்கேற்ப அழகே உருக்கொண்டது போல் ஒளிர்கின்ற நிலையில் வைத்து, அவள் கையில் யாழினைக் காண்கின்றார் புலவர். அழகிய பெண்ணின் புனைந்துரையும் அங்கே எழுகின்றது. கலையின் வாட்டம் புண்பட்ட அழகின் வாட்டமாவதனை நிழலுக்கும் பஞ்சமான காட்டிடையே புலவர் காட்டுகின்றார். ஆனால், கலையோ மூவேந்தரும் ஒன்று கூடியதுபோலத் தன்மான வீறுகொண்டு விளங்குகின்றது. புரவலனைக் கண்டபின் பட்டினியால் வாடுகின்றவர்களுக்கு உணவு வருமென்று கூறவேண்டும். ஆனால், கலைஞனைச் சாப்பாட்டு ராமனாக்க விரும்பாத இந்தக் கலைஞனது உள்ளம், தான் உண்ட உணவின் பெருமையை எல்லாம் தன்னுடைய தனியின்பமாகப் பாடிக் கொண்டு போய்க் கேட்போன் மனத்தில் பதியச் செய்கின்றது. விருந்தினைப் பாட்டாகப்பாடிப் புகழ்பெற்றவர் மலையாளக் குஞ்சன் நம்பியாருக்கு முன்னே கண்ணியர் ஒருவரே எனலாம். பின்னர்த் தான் கண்ட புரவலனாம் கரிகாற் பெருவளத்தானின் பெருமையும் வீரமும் பரிசில் வழங்கும் வள்ளன்மையும் கலைஞரைப் பிரிவதற்கு அஞ்சி வாடும் அவன் அன்புள்ளமும் கேட்போர் மனத்தில் இனிக்க இனிக்க உரைக்கின்றான்

பொருநன். ஏழைப் பொருநன் அவனிடம் சென்றதும், அவன் செய்யப்போகும் பாராட்டினை எல்லாம் கலையின் பெருமிதம் குறையாமல் வீறுபெறப் புகழ்கின்றான். கரிகாற் பெருவளத்தானது சோழநாட்டின் பெருமையையெல்லாம் ஒவ்வொன்றாகச் சுவைத்துச்சுவைத்து ஆறஅமர இருந்து, திளைத்து உண்பார்போலக் கூறி முடிக்கின்றான் அவன் வாய்மொழியாகக் கூறும் பாடற் பகுதியில் பின்னாளைய நாட்டுப்படலத்திற்குப் புலவர் வித்திடுகின்றார். இதனைப் பாடிய புலவரது பெயரால் இவரைப் பொன் என்று கூறுவாரும் உளர் இவரை முடமென்று கூறுவாரும் உண்டு

இந்தப் பாட்டின் தலைவன் உருவப்பல்தேர் இளஞ்சேட் சென்னியின் மகனான கரிகால்வளவன், வெண்ணிப் போர்க் களத்தே சேரனையும் பாண்டியனையும் வென்றவன், தாய் வயிற்றிலிருந்தே தாயம் எய்தியவன்

மூன்றாம் பாட்டாம் சிறுபாணாற்றுப்படை 269 அடிகள் கொண்ட ஆசிரியப்பா, இதனைப் பாடியவர் இடைக்கழிநாட்டு நல்லூர் நத்தத்தனார் இடைக்கழிநாடு (இடக்கநாடு-மரூஉ) சென்னைக்குத் தெற்காகக் கடலையொட்டி உப்பங்கழி பாயும் பகுதியேயாம். அங்குள்ள நல்லூரில் பிறந்த இவர் தலைசிறந்த பாடல் பாடியதன் பயனாகச் சிறப்பினைக் குறிக்கும *ந* என்ற அடையோடு நத்தத்தனார் என்று வழங்கப் பெறுகிறார் ஒய்மான் நாட்டு நல்லியக்கோடனைப் புகழ்ந்து பாடிய பாட்டே இந்தப் பாட்டு ஓவியர் குடியின் தலைவனை ஓய்மான் என்பர் அவன் நாடு ஓய்மான் நாடு *கிடங்கிற்கோமான்* என்று புலவர் அவனைப் புகழ்கின்றார் கிடங்கில் (கிடங்கால்-மரூஉ) என்பது தென்னார்க்காடு மாவட்டத்தில் திண்டிவனத்தில் இருக்கிறது. மாவிலங்கை என்பது அவனுடைய அரண்மனை இருந்த இடம். இஃது அருவாநாடு, அருவாவடதலை நாடு என்ற இரண்டும் சேரும் இடத்தில் இருந்தது என்பர். எயிற் பட்டினமும் அவனுடையது கிரேக்க பூகோள ஆசிரியர்கள் கூறும் சோபடான் இதுவேபோலும். உப்புவேலூர் என இப்பொழுது வழங்கும் வேலூரும் ஆமூரும் அவனுடைய ஊர்களே. இவையெலலாம தொண்டை மண்டலத்தில் உள்ளவை முருகனை வழிபட்டுப் பகைவரை வெல்லப் பூவையே வேலாகப் பெற்றான் அவன் என்பது செவிவழிச் செய்தி

பொருநராற்றுப்படையிற்போல் யாழை மீட்டும் விறலியின் அழகினைக் கற்பனைத் திறமெலாம் தோன்றப் புகழ்ந்துகொண்டே தொடங்குகிறது இந்தப்பாட்டு. இயற்கையும் பெண் அழகும் ஒன்றோடொன்று முதலும் நிழலுமாக அமைந்திருக்கின்ற ஒற்றுமை நயத்தைச் சொற்றொடர்களிலும் எதிரொலிக்குமாறு பாடுகின்றார் புலவர் பின்னர் மூவேந்தர் நாடு பரிசில் தருகிற வண்மை குன்றிக் கிடப்பதனை அந்தந்த நாட்டுப் பெருமையோடு வைத்துப்பாடிப் புலம்புகின்றார். எருமை பூக்களை மேய்ந்து, மிளகின் கொடிபடர்ந்த பலாமரத்தின் நிழலில், மஞ்சளின் இலை தன்னைத் தடவப் பூப்படுக்கையில் அசைபோடுவதனை மலையும் காடுமாய்ச் சிறந்த சேர நாட்டின் அழகாகக் காண்கின்றார். குரங்குகள் சிறுவரைப் போல் கிளிஞ்சலுக்குள் முத்தினை வைத்துக் கிலுகிலுப்பை ஆட்டும் அழகினை முத்தாற் சிறந்த பாண்டிய நாட்டின் அழகாகக் காண்கின்றார். தண்ணீர்த் துறையருகே வளர்ந்த மரங்களின் வரிசைகளிடையே மகரந்தப் பொடிகள் கோலமிட்டாற் போலத் தோன்றச் செக்கச் சிவந்த செந்தாமரையில் வண்டுகள் பாடுவதனை நீர்வளஞ் சிறந்த சோழநாட்டின் அழகாகக் காண்கிறார்; மறைந்த கடையெழு வள்ளல்களின் கலைவாழ்வினைப் புனைந்துரைத்துப் புலம்புகிறார். கலையழகில் ஈடுபட்டு முல்லைக் கொடியில் அழகு வாடாதபடி பெருந் தேரினைத் தந்தான் பாரி; மயிலின் பல நிற ஓவியப் பேரழகு மழையால் கெடாதபடி போர்வையைத் தந்தான் பேகன்; சிற்பியின் கனவு கலைச் செல்வமாய்ச் சிவனது திருமேனியாய் விளங்குவது கெடாதபடி அரிய கலிங்கம் தந்தான் ஆய்; அன்பும் அறமும் பாடுகிற புலவர் சொற்களில் ஈடுபட்டு, அவர்கள் வாடாது ஏறிப்போகக் குதிரையும் தேரும் தந்தான் காரி; தன்னை நட்புரிமை கொண்டு வந்தடைந்த கலைஞர் வருத்தமின்றி வாழ்க்கை நடாத்த, நடைப் பரிகாரம் தந்தான் நள்ளி; தான் நீண்டநாள் வாழாது செத்தாலும் கலையே நீடு வாழவேண்டுமெனக் கலைவடிவான அவ்வைக்கு நெல்லிக்கனி தந்தான் அதிகன்; கோடியருடைய பாட்டிலும் கூத்திலும் ஈடுபட்டு, அவர்கள் நலிவின்றி வாழ நாட்டையும் கொடுத்தான் ஓரி என முறையே பாடி, அவர்கள் வள்ளன்மையை எல்லாம் நல்லியக்கோடனிடம் கண்டு மகிழ்கின்றார் புலவர். நல்லியக்கோடனது ஊருக்குச் செல்லும் வழியைக் கூறுவாராய், அவன் நாட்டின் வளத்தினைப் புகழத் தொடங்கி, எயில் பட்டினத்தாற் சிறந்த அவனுடைய நெய்தல் நிலத்து நுளையர் வாழ்க்கையினையும், வேலூரோடு சார்ந்து விளங்கும் முல்லை நிலத்து எயிற்றியர் விருந்தோம்பும் திறத்தினையும், ஆமூரால் சிறந்த அவனது மருத நிலத்தில் வாழும் அந்தணரது ஊறுகாய்ச் சோறும், உழத்தியர் தரும்

கவைத்தாள் நண்டின் கலவையும் என இவற்றையும் எல்லாம் இருந்ததனை இருந்தபடி கூறும் இலக்கியச்சுவை தோன்றப் பாடுகின்றார். நல்லியக் கோடனில் சிறப்பினையெல்லாம் கூறி யாழினைப் புனைந்துரைப்பதில் மற்றைய புலவரோடு போட்டியிடுகின்றார் மூங்கில் தோலுரித்தாற் போன்ற துணியும், பாம்பு சீறினாற் போன்ற கள்ளும், வீமபாகத்தாற் சிறந்த விருந்தும், கலைஞருக்குக் கிட்டுமென்று சுட்டுகின்றார் மாடு பூட்டிய தேரும் தந்து, ஏழடிவந்து வழியனுப்புவான் என்று உறுதி கூறி முடிகின்றது இந்தப் பாட்டு மற்றைய ஆற்றுப் படைகள் எல்லாம் நாடு கிழவோனே, மலைகிழவோனே என்று முடிவது போல் இது முடியவில்லை.

நான்காம் பாட்டாம் பெரும்பாணாற்றுப்படை என்பது 500 அடிகளால் அமைந்த ஆசிரியப்பா. இதனைப் பாடியவர் கடியலூர் உருத்திரங் கண்ணனார். இவர் பெயர் கண்ணன் என்பது இவருடைய தந்தையார் பெயர் உருத்திரன் என்புது இந்தப் பாட்டு தொண்டைமான் இளந்திரையனது புகழைக் கூறுவது. இவன் காஞ்சியிலிருந்து அரசாண்டவன், சங்கப் பாடல்கள் சிலவற்றைப் பாடியவன்; பல்லவர்களது முன்னோன் என்று சிலரால் கருதப்படுகின்றவன், இப்பாட்டும் யாழினை மனம் கவரப் புனைந்துரைப்பதோடு தொடங்குகிறது. இந்தப் பாணனது வறுமையைச் சுட்டி, வருகின்ற பாணன், திரையனிடம் போனால் யானையும் குதிரையும் வாரிக் கொண்டு வரலாம் என்று ஊக்கம் ஊட்டுகின்றான்; அவனுடைய குடிப்பெருமையும், கொடியோர் இல்லாத அவன் நாட்டின் சிறப்பையும் கூறி, மற்றைய ஆற்றுப் படைகளில் போல் அவன் ஊருக்குச் செல்லும் வழியைக் கூறும் வழியாக அவன் நாட்டுப் பூகோளத்தை இலக்கியச் சுவை தோன்றப் பாடுகின்றான். உப்பு வாணிகர்கள் தங்களுடைய வண்டிகளிலே வீட்டினையே ஏற்றிச் செல்வதுபோல் போகின்ற வியப்பினையும், அங்கே மிளகு பொதி ஏற்ற வருவார் முதலியோரிடம் சுங்கம் வாங்கிக் கொண்டு, காவலாளர் கவர்த்த வழியைக் காக்கின்ற பெருமையையும் கொண்டு அவனது குறிஞ்சி நிலப் பெருமையை அறியலாம் எயிற்றியர் ஈச்சம் ஓலை வேய்ந்த குடிசையில் பிள்ளை பெற்றவள் வீட்டிலே கிடக்கத் தாம் போய்ப் புல்லரிசி கொண்டு வந்து, கிணற்று நீரில் இட்டு, முரிந்த அடுப்பில் ஏற்றிச் சமைத்து, ஊன்புழுக்கலோடு விருந்து தரும் பெருமையினையும், பன்றியும் முயலும் வேட்டையாடி, வில்லும் அம்பும் சார்த்திய வீட்டில் உடும்பின் வறுவலை விருந்தாகத் தருவதனையும் குறிஞ்சி நிலத்துப் பெருமையாகப் பாடுகின்றார் புலவர், முல்லை நிலத்தில் இடைப்பெண்

மோர் விற்றுக் குடும்பத்தைக் காப்பாற்றி, நெய் விற்று எருமை வாங்கிச் செல்வத்தால் சிறக்கின்ற நுட்பத்தைக் குறித்துவிட்டு, அங்கே கிடைக்கும் பாலொடு சேர்ந்த தினை அரிசி விருந்தினையும் வாயாரப் புகழ்கின்றார். அங்குள்ள மக்களது இயல்பினை இருந்தது இருந்தவாறே இனிக்கப் பாடுகின்றார். மருத நிலத்தில் கோரையில் பூவைக் கட்டிச் சூடிக்கொண்டு உழவர்கள் இனிதே தங்கள் தொழிலை வளமெலாம் பெருக உழுது விளைவிக்கும் பெருமையைப் பாராட்டி அங்குக் குழவிகள் விளையாடும் வீட்டிலே வெண்ணெல்லின் சோறும் கோழிக்கறியும், கருப்பங் கட்டியும், கள்ளும் விருந்தாக வருதலைப் புகழ்கின்றார் வலைஞர் வாழும் நெய்தல் நிலத்தில் வடித்த கள்ளும், மீனும், வந்தார்க்கு அவர்கள் வழங்குவதனைக் கூறித் தூண்டினைப் புனைந்துரைக்கின்றார். அடுத்துள்ள அந்தணரது தூய இருப்பில் மாங்காய் ஊறுகாயுடன் சோறு விருந்தாகக் கிடைப்பதில் ஈடுபடுகின்றார்; நீர்ப்பெயற்று என்ற கடற்கரைப் பட்டினத்தின் செல்வத்தினையும் கலங்கரை விளக்கத்தினையும் தமிழ் நாட்டின் பழைய வாணிகப் பெருமை யெல்லாவற்றையும் நம் கண்ணெதிரே தோன்றப் பாடுகின்றார். பிறகு காஞ்சியில், வெஃகாவில் காந்தளஞ்சிலம்பில் களிறு படிந்தாங்குப் பாம்பணைப்பள்ளி அமர்ந்தோனைக் காட்டு கின்றார். காஞ்சி நகரின் சோலைகள், தெருக்கள் இவை எல்லாம் பிரமன் பிறந்த தாமரைப் பூப்போல் தோன்ற, அதிலுள்ள கொட்டைபோல் திரையனது செங்கல் அரண்மனை தோன்றுகிறது. அவன் பகைவரை வென்று செல்வத்தினை வந்தோர்க்கு வாரி வழங்குகின்றான். அவனைக் காணக் கூட்டம் கூட்டமாக அரசரும் காத்திருக்கின்றனர்; *அவனைப் பாணர்களே நீங்கள் பாடினால் விருந்தூட்டி உங்கள் விறலியர்க்குப் பொற்றாமரை அணிவித்து, உங்களுக்குப் பொன்னரி மாலையும் சூட்டி வெள்ளைக் குதிரை நான்கு பூட்டித் தேரில் உங்களை ஏற்றிப் பரிசில் தந்து விடை கொடுப்பான்* என்று வந்த பாணன் கூறுவது போல் கூறி முடிக்கின்றார். 1ஐந்திணை, அந்தணர் முதலிய பற்பல குடியினர் அவர்களுடைய பழக்க வழக்கங்கள், விருந்தோம்பும் முறைகள், கடற்கரைப் பட்டினத்தின் இயல்பு, கச்சிநகரின் நிலை, திரையனது பெருமை, யாழ்ப்பாணரது மரபு முதலியன எல்லாம் இந்தப் பாட்டில் இலக்கியச் சுவை ததும்ப விளக்கம் உறுகின்றன.

பத்தாம் பாட்டாம் மலைபடுகடாம் என்பது ஒரு கூத்தராற்றுப் படை. இதனைப் பாடியவர் இரணியமுட்டத்துப் பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகனார். இரணிய முட்டம் என்பது மதுரையை அடுத்த ஒரு பகுதி இந்தப் பாட்டின் தலைவன் நன்னன் இவன் பல்குன்றக்

கோட்டத்துச் செங்கண்மாத்துவேள் நன்னன்சேய் நன்னன் என இந்த நூலில் உரை முடிவில் காண்கின்றோம். பல்குன்றக் கோட்டம், திருவண்ணாமலை, திருவேங்கடம் முதலியவை அடங்கிய ஒரு பகுதி. செங்கண்மா என்பது அதன் தலைநகரம். இஃது இன்று திருவண்ணாமலைக் கருகே செங்கம் என வழங்குகிறது. இந்த நாட்டில் சேயாறு பாய்வதனையும், காரியுண்டிக் கடவுள் நவிர மலை (பர்வத மலையென்று இன்று வழங்கும்)யில் இருப்பதனையும் இந்தப் பாடல் பாடுகின்றது.

இந்தப் பாட்டு 583 அடிகளைக் கொண்டதொரு பெரிய பாட்டு. பலவகை இசைக் கருவிகளின் பெயர்களையெல்லாம் சொல்லி யாழினைப் புனைந்துரைத்துக் கொண்டு தொடங்குகிறது இந்தப் பாட்டு. இருந்த கூத்தனை, வந்த கூத்தன், *என்னைப் பார்த்ததால் உங்களுக்கு நல்ல காலமே* என்று கூறிப் புரவலனைப் பற்றி என்னென்ன சொல்லப் போகின்றான் என்பதனை முன்னரே சில தலைப்புக்களில் தொகுத்துச் சுட்டி விளக்கி விடுகின்ற முறையைக் கையாளுகின்றான். போகின்ற வழியைப் புனைந்துரைக்கத் தொடங்கிப் பூக்களையெல்லாம் இன்பம் சொட்டச் சொட்டப் பாடுகின்றான். அவரைப் பூக்கள் தயிரைத் தெளித்தாற்போல் இருத்தலும், வரகின் கதிர்கள் வாதிகள் கையில் இணைந்த விரல்கள் போல் தோன்றுதலும், முழவுபோலப் பலாப்பழம் தொங்குதலும் குறித்துப் பேசுகின்றான் இந்த மலைச்சாரலில் வாழும் நன்னனுடைய காவலாளரும், புரவலரும் பலவகை ஊனோடு சேர்த்து விருந்திடுகின்றனர். இப்பகுதியின் *சிறப்பாவது வழியில்* தோன்றும் இடையூறுகளையும், அதற்கு முன் காவலாகச் செய்ய வேண்டுவனவற்றையும் விரித்துக் கூறும் முகத்தான் நாட்டின் வளத்தைச் சிறப்பித்தலேயாம். *வழி வழுக்கும், பாம்பிருக்கும், பல்லி பிடிக்கும் பொறியிருக்கும்; ஆதலின் கையைப் பிடித்துக் கொண்டு கோலூன்றிச் செல்லுங்கள். வியத்தகு காட்சிகளைக் கண்டாலும் திடீரென மேல் நோக்கிப் பாராதேயுங்கள்* என்றெல்லாம் கூறிப் பாடுகின்றான் கூத்தன். கவர்த்த வழியில் சரியான வழி இது எனப் பின்வருவோர்க்குத் தெரிவிப்பதற்காகப் புல்லை முடிந்து வைத்து, நம் *சாரணச் சிறுவர்கள்* இன்று கைக்கொள்ளும் முறையை அன்றே இந்தப் பாடலில் பாடுகின்றான். வழியில் நன்னனுடைய காவலாளர்கள் வழிகாட்டி உடன் வருவார்களாம் வழியே போகும்பொழுது பற்பல ஓசைகள் கேட்பதனையெல்லாம் இலக்கியச் சுவைதோன்றக் கூத்தன் வாய்மொழியாகப் புனைந்துரைக்கின்றார் புலவர். கடாம் என்றால் மதம். மதம் பிடித்தபொழுது யானை முழங்கும் மதயானை பிளிறுவது போல்

இந்த மலையும் பிளிறுகிறது. அந்த ஓசையினையே மலைபடுகடாம் என்று, இப்பாட்டுக் கூறுகின்ற அழகிலே ஈடுபட்டுப் பிற்காலத்தினர் இந்த நூலின் பெயராக வழங்கலாயினர். முள்ளம்பன்றியால் இறந்தவனுக்காக அழுதல், புலியால் தாக்கப்பெற்ற கணவன் புண்ணாற மகளிர் பாடுதல், மலைப் பிளவில் குட்டி விழுந்ததற்காகக் குரங்குகள் வருந்தி ஆரவாரித்தல், தேன்கூட்டை அழிக்கும் ஆரவாரம், ஏறு தழுவும் முழக்கம் என்று பற்பல ஓசைகள் எழுவதனை வீறுகோளணி ஒரு சிறிதுமின்றி, உள்ளது உள்ளவாறே எல்லோர் மனமும் இனிக்குமாறு பாடுகின்றார் புலவர். விழாவைப் போன்றது அவனுடைய மலை. மேலும் பல பாதுகாவல்களைக் கூறுகின்றான் வழி கூறும் கூத்தன், மலையைக் கடந்து ஆயர் இடத்தே சென்றால், அவர்கள் தரும் விருந்தினைக் கூறுகின்றான். பின் நன்னனுடைய மருத நாட்டு வளம் காக்களும் பள்ளிகளுமாய்ப் பழையரது விருந்தோடு வரவேற்கின்றது. *ஆறு எனக் கிடக்கும் தெருக்கள், மலையென ஓங்கும் மாடங்கள், இவையுள்ள அவன் ஊர் அருகேதான் உண்டு. அவன் எதிரே சென்றால் பலவகைப் பொருளையும் காணிக்கையாகத் தந்து பலர் காத்துக் கிடக்கக் காண்பீர். அவனை நீங்கள் பாடியதும் நும்மில் தலைவன் தாமரை மலைய, விறலியர் விளங்கிழை அணியத் தந்து நீரியக்கம்போல் செல்லும் தேரும், மலைபோன்ற யானையும், மாட்டு மந்தையும், குதிரைகளும், மண் தின்று கிடந்த பொற்காசுகளும் வாரி வழங்கி நன்னன் வழி விடுவான்* என்று வந்த கூத்தன் கூறுவதுபோல் பாடி முடிக்கின்றார் புலவர்.

திருமுருகாற்றுப்படை என்பது பத்துப் பாட்டின் முதலிலே அமைந்த ஆற்றுப்படை. இது 317 அடிகளால் அமைந்த ஆசிரியப்பா. இதனைப் புலவர் ஆற்றுப்படை என்று நச்சினார்க்கினியர் விளக்குகின்றார். பிற ஆற்றுப்படைகள் எல்லாம் வழிகாட்டப்படுகின்றவனது குடிப் பெயரால் பெயர் பெறும். முருகனிடம் வழிகாட்டப்படுவோர் உலக மக்கள் அனைவரும் ஆதலின் அந்த வகையால் இதனை வேறுபடுத்த முடியாது. புரவலன் பெயராலேயே முருகாற்றுப் படை என இந்த நூல் பெயர் பெறுகிறது. ஆசிரியரின் பொதுமை அறப் பெயராலேயே இவ்வாறு அங்கு விளங்குகின்றது. உலகத்தில் எல்லோர் அறிவையும் மயக்கிக் குழப்புவது, நன்மை தீமைகளும், இன்ப துன்பங்களும் உலகில் சிக்கிக் கிடக்கின்ற நிலையேயாம், தீமையினை விளக்குவதே தத்துவ சாத்திரங்களின் பெருமுயற்சி; கடவுட் புலவர்களின் பேரவா. இந்த ஆற்றுப் படையைப் பாடிய நக்கீரரும் இந்த முயற்சியில் ஈடுபட்டுப் பாடுகின்றார். ஒளி வடிவான ஞாயிற்றைக் காணும் பொழுதும் முருகன்

காட்சி அளிக்கின்றான். வெயிலுக்கும் ஒளிக்கும் எதிர்மறையான மழையிலும் இருளிலும் தொட்டுப் பார்த்து, அதன் உருண்டை வடிவால் கடப்பம் பூவென அறியும் இடத்திலும் அப்பூவில் ஆழ்ந்து ஒளிர்கின்றான் ஆண்டவன். நன்மையின் வடிவம் சூரர மகளிர். தீமையின் வடிவம் பேய் மகள். இவை இரண்டும் முருகனது இருவேறு வழிபாட்டு வடிவமாகத் தோன்றுகின்றன. ஆற்றுப் படையில் பெண்ணழகினைப் புனைந்துரைக்கும் வழக்கத்தினைக் கண்டோம். இங்கும் பெண் அழகு செய்துகொள்ளும் இயற்கையான ஒப்பனையைப் புலவர் பாடுகின்றார். ஆற்றுப்படையில், இருந்தவனது வறுமையும், வந்தவனது செல்வமும் முரண்பட்டுத் தோன்றும். இங்கே உலகின் அடிப்படையான இன்பதுன்ப, நன்மைதீமைகளின் முரண்பாடு தோன்றுவதனைக் காண்போம். நன்மை பெற விரும்புவோனை நோக்கி, *உனக்கு விருப்பம் இருக்குமானால் நீ நினைத்ததை இப்போதே பெறலாம்* என்று உறுதி கூறுகின்றார் புலவர். மதுரையின் வனப்பையும், சிறந்த கடைத்தெருவின் செல்வத்தினையும், பகைவரைப் பெண்களென இகழும் கொடி மரத்தால் தோன்றும் வீரத்தினையும், சில அடிகளில் விளக்கி வைத்து, அதற்கு மேற்கில் உள்ளது முருகன் வாழும் பரங்குன்றம் என்கின்றார். ஆன்மா சேற்றில் அழுந்திப் பின் விடுபட்டு உயர்நிலையை அடைவதனைக் குறிப்பார்போல் வண்டு தாமரையில் சிக்கிப் பின் நெய்தல் ஊதிப் பின் உயரப் பறந்து, புலரி விடிந்ததும் சுனை மலரில் ஒலிக்கின்ற அழகைக் குறிக்கின்றார். முருகன் உள்ள பிற இடங்களையும் சுட்டிக் காட்டுகின்றார். திருச்சீரலைவாயில் (திருச்செந்தூர்) வேழத்தின்மேல் முருகன் விளங்குவதாகப் பாடுகின்றார். விலங்குலகையும், சட உலகையும் கடவுளானவர் அறிவு இன்பமாக ஆளுகிற காட்சி இது. பொதுமையறத்தில் அனைத்தும் ஒன்றாகத் தோன்றும் காட்சியைக் காண்கின்றோம். முருகனது முடியிலே பலவகை வடிவங்களும் ஒன்றாக இணைந்து விளங்குவது இதனையே குறிக்கின்றது. உலகிலுள்ள மக்கள் காதல், போர், ஞானம், விஞ்ஞானம், சட்டம் என்று பற்பல துறையில் முயல்கின்ற முயற்சியை எல்லாம் ஆறு பிரிவாகப் பகுத்து, அவற்றையே ஆண்டவரின் ஆறு முகங்களாக்கி, அவற்றின் இயக்க நிலையைக் குறிக்கும் செயற்பாடுகளில் ஈடுபடுவனவாகப் பன்னிரண்டு கைகளையும் புகழ்ந்து, இவ்வாறு அனைத்துலகையும் முருகனது வடிவாக்கி, அங்கே இயற்கையும், அந்தப் பெருங் காட்சியில் ஈடுபடுவதால் மூங்கில்கள் குழல் ஊத, சங்குகள் ஒலிக்க,இடியே முழவாக ஒலிக்க, ஆண்டவனது பிரபஞ்ச விரிவின் வடிவான மயிலே கொடியாக வெற்றி முழக்கம் செய்ய, அடியார்க்கருள முருகன் விரைந்து வருவதனைத் திருச்சீரலைவாயின்

பெருமையாகப் பாடுகின்றார் புலவர். திருஆவிநன்குடி அவர் கூறும் அடுத்த இடம். அங்கு சிறந்ததோர் ஓவியத்தினைத் தீட்டுகின்றார் புலவர். மில்ட்டன், முன்னோர் வழிபட்ட கடவுள்களையெல்லாம் நரகத்தில் சாத்தானது தலைமையிலே நிறுத்திக் கண்டு களிக்கின்றார். நக்கீரரோ கடவுளர்களை யெல்லாம் குழவியைக் காணவரும் பெருமக்களாக வைத்து, முருகன் எதிரே நிறுத்திக் காண்கின்றார். இங்கு ஓர் ஊர்வலம் வருகிறது. இதன் முன்னணியில் நிற்பவர்கள் எலும்பும் தோலுமாய், அறிவாலும் ஒழுக்கத்தாலும் சிறந்த முனிவர்கள். அடுத்து வருபவர்கள் அழகிற்சிறந்து, காதலில் ஒன்றாகி, இசையில் பண்பட்டு, உயர்ந்த மனத்தோடு விளங்கும் கந்தருவத் தம்பதிகள். திருமாலின் பெருமையை, அவனேறும் கருடன் பதைபதைக்க, ஆட்டிவைக்கும் பாம்பின் வழியே சுட்டுகின்றார் புலவர் மூவெயில் முறுக்கிய செல்வரும் உமையோடு வருகின்றார். ஆயிரம் கண்படைத்து யானைமேல் வரும் இந்திரன் பெருமையைச் சொற்றொடர்களின் ஒலியாலேயே புலவர் விளக்குகின்றார். வான்மீன் பூத்தாற்போன்றது இவர்களது தோற்றம். காற்றடித்தாற்போன்றது இவர்கள் நடை. அதனோடு தீயும் பற்றிக்கொண்டாற்போன்றது இவர்களுடைய ஆற்றல். தீப்பறக்க இடிஇடித்தாற் போன்றது இவர் குரல். மடந்தையோடு வீற்றிருக்கும் முருகனை இவர்கள் வேண்டிக்கொள்ளுகின்றனர், உலகில் படைப்பாற்றல் விளங்க வேண்டுமென்று நான்முகனது விடுதலைக்காக வேண்டிக் கொள்ளுகின்றார்கள். அந்நாளைய புராணங்களையெல்லாம் இக்காட்சி ஒற்றுமைப்படுத்துகின்றது.

இனித் தமிழ் நாட்டில் வழங்கிய பலவகை வழிபாடுகளையும் முருகன் வழியே ஒற்றுமை கொண்டு பாடப் புகுகின்றார் புலவர். திருவேரகத்தில் அந்தணர்கள் 48 ஆண்டுக்குப் பின் மணந்து, ஈரத்துணியோடும் பூணூலோடும் மந்திரம் கூறிப் பூவைத் தூவி வழிபடுகின்றனர். உலகெங்கும் ஆண்டவன் கோயில் கொண்டு இருப்பதனைப் பொதுமையறம் ஓங்கக் கூறுவார்போல் குன்றுகள் எல்லாம் அவன் கோயில்களே என்று குன்றுதோறாடலைப் புகழ்கின்றார் புலவர். வேலன் கள்ளுண்டு பெண்களோடு கூடிப் பாழாகாது முருகனை எண்ணிக் குரவைக் கூத்தாடுகையில் முருகப் பெருமானே அங்கு வந்து அடைவதாக நக்கீரனாருக்குத் தோன்றுகிறது. கண்ணன் கோபிகைகளோடு ஆடிய குரவைக் கூத்தாம் ராசலீலை ஆண்டவன் ஒருவனாய்ப் பல ஆன்மாக்களிடத்தும் ஒருங்கு மகிழ்ந்து குலாவி நிற்கும் சிறந்த உண்மையைக் குறிப்பதுபோல இங்குக் கூறப்பெறுகின்ற குரவைக் கூத்தும் குறிக்குமென்று கொள்ளுதல் வேண்டும்.

எஞ்சி நிற்கும் பலவகையான வழிபாடுகளை அடுத்த பகுதியில் புலவர் சுருக்கிக் கூறுகின்றார். வழிபாடு என்று கருதக்கூடாத ஓரிடம் இந்நாளைய மக்களுக்குத் தோன்றுவதுபோல நக்கீரருக்கும் தோன்றியுள்ளது. இதுவரையில் கூறிய வழிபாடுகள் எல்லாம் முருகனுக்கு ஏற்றவையானாற்போல் இதுவும் அவனுக்கு உகந்ததாகவே புலவர் சுட்டுகின்றார். அச்சத்தை ஊட்டும் வெறியாட்டுச் செந்நூல், வெண்பொறி, கிடாய் பலி, இரத்த அரிசி, வெறியாட்டு வாத்தியங்கள், குறமகள்மேல் ஆவேசம் இத்தனையும் புலவர் கூறுகின்றார். இங்கும் இத்தனை கொடுமைகளுக்கு இடையே, வழிபடுவோர் தம்மை மறந்து தமக்கும் அப்பாற்பட்டதொரு பேராற்றலுக்கு முடிவணங்கி, நைந்துருகியாடும் பொழுது அச்சத்தைத் தரும் வாத்தியமெல்லாம் கடவுளது இன்னிசையாக நக்கீரருக்குக் கேட்கின்றன. பகைவர் அஞ்சலாம், அன்பர் அஞ்சுவதேன்? முருகன் அங்குத் தோன்றுகின்றான் குறத்தி அங்கே முருகாற்றுப்படுத்துகின்றாள். நம்ப முடியாத இடத்திலேயும் கடவுள் வருவதனை நம்பும்படி செய்து, முருகாற்றுப் படுத்த வியன்நகர் என்று புகழும் சிறப்பை நோக்கி, அந்தத் தொடரே இந்த நூலுக்குப் பெயர் ஆயிற்று என்று சொல்வோரும் உண்டு. எங்கேனும் ஆண்டவனை வழிபட்டால் அவன் தோன்றுவான் அவனைப் புகழ்ந்து, அவன் அடியில் விழுந்தால் தனது இளமை வடிவைக் காட்டி உலகில், நீயே உனக்கு உவமையாகும்படி சிறந்த நிலையைத் தருவான் என்று புலவர் கூறி முடிக்கின்றார். முடிவிலே பழமுதிர்சோலையும் முருகனது இடம் எனறு கூறுவார். அங்கு வீழும் அருவி, பழமும் தேனும் பொன்னும் கொண்டு வந்தாலும் விலங்குகள் அஞ்சி ஓடுவதனைக் காட்டிப் புலவர் புகழ்கின்றார். ஆண்டவன் அருள் வெள்ளம் உலகில் பெருக்கெடுத்து ஓடினாலும், பொன்னும் மணியும் பூவும் உணவுமாய்ப் பொங்கினாலும், அதனைக் காணக் கண்ணின்றி மக்கள் விலங்குகள் போல் வாழ்ந்து, அஞ்சியோடித் தங்களுடைய பழைய துன்ப இருட்டுக்குள்ளேயே நுழைந்து வாடுகின்றார்கள் என்பதனைச் சுட்டுவது போன்றுள்ளது இந்த அருவி வருணனை.

அகப்பொருளைப்பற்றிய பாட்டுகளை ஆராய்வதற்கு முன் புறப்பொருளைப் பற்றியதாய்ப் புரவலன் பெயரை வெளிப்படக் கூறும் ஆறாம் பாட்டாம் மதுரைக்காஞ்சியினை ஆராய்வோம். இது 782 அடிகளைக் கொண்ட மிக நீண்ட பாட்டு. இஃது ஆசிரியப்பா, வஞ்சியடிகள் வருவதால் வஞ்சிப்பாட்டு என்றும் கூறுவர். இதனை இயற்றியவர் மதுரைக்காஞ்சிப் புலவர் என்று புகழப் பெறும் மாங்குடி

மருதனார். தலையாலங்கானத்துப் பகைவரை வென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் இதனுடைய தலைவன், அவன் பாடிய புறப்பாட்டு, *யான் பகைவரை வெல்லேனாயின் மாங்குடி மருதனாரைத் தலைவராகக் கொண்ட புலவர் என்னுடைய நாட்டைப் பாடாது ஒழிக* என்று வஞ்சினம் கூறுவதால், இப்புலவரை எவ்வளவு உயர்வாகக் கருதியிருந்தான் அவன் என்பது தெளிவாகிறது. பின் வந்தோர்கள் காஞ்சி என்பதனைப் படையெடுப்பைத் தடுத்துப் போராடல் எனப் பொருள் கொண்டாலும், இப்புலவர் தொல்காப்பியர் கூறும் பொருளையொட்டி நிலையாமை என்றே பொருள் கொண்டு, நெடுஞ்செழியனுக்கு நிலையாமையை மதுரையில் நிகழும் ஓணவிழாவன்று அவ்வாரவாரத்தினிடை அறிவுறுத்தி நல்வழிப்படுத்துகின்றார். உலகம் புகழ வாழ்ந்த நெடுஞ்செழியனது முன்னோரது செல்வ வாழ்வையும், திக்குவிசயத்தால் இந்தியா முழுதையும் ஆண்ட ஒப்பிலா உயர்வையும் கூறி, அவர்களுடைய வழி வந்தவனே என்று நெடுஞ்செழியனை விளிக்கின்றார். கடலில் கப்பல்களில் சென்று பொருளேற்றிக்கொண்டு வந்து சேரும் நெல்லூரின் பெருமையைப் பாண்டியர்கள் தமதாக்கிக் கொண்டனர். கடற்கரையிலுள்ள முதுவெள்ளிலை என்ற ஊரினை வென்று, பின் தலையாலங்கானத்து ஏழரசரை ஒரே சமயத்தில் அவன் வென்ற புகழினைப் பாடி, *அடுதிறல் உயர் புகழ் வேந்தே* என்று இந்த நயமெல்லாம் தோன்ற அவனை அன்புடன் புலவர் அழைக்கின்றார். *பல்குட்டுவன்கோ, பரதவர் ஏறு* என்று அவன் வெற்றியைப் புகழ்ந்து, அவனுடைய போர்ச் சிறப்பினைத் தொல்காப்பியத்திற்கு உரிய புறத்திணைத் துறைகள் தோன்றப் பாடுகின்றார். *கொள்ளார் தேயம் குறித்த கொற்றம் தொல் எயிற்கு இவர்தல், குடுமி கொண்ட மண்ணும் மங்கலம்* முதலியன எல்லாம் இப்பாட்டில் வருகின்றன. *பாழாயின நின்பகைவர் தேயம் அரசியல் பிழையாமல் அறம் வளர்த்த பெரியோர் சென்ற வழியில் சென்று வளர்பிறை போல் வளர்க நின் கொற்றம்* என்று வாழ்த்தி, அவனுடைய நட்பினையும் பழிக்கு அஞ்சும் பெருமையினையும் சிறப்பித்துக் கூறி, அவனைச் செவி சாய்த்துக் கேட்குமாறு புலவர் செய்கின்றார் *இனி இந்த உலகத்துப் பொருளே ஓ மேலும் என்ன தொடர்ப்பாடு? பெரியதொரு கடவுள் நிலை கூறுகின்றோம். உன் துன்பமெலாம் கெடுவதாக* என்று முதலில் சுருங்கக்கூறி நிலையாமையை வற்புறுத்தத் தொடங்குகிறார் புலவர். *இதற்கு முன் புகழுடன் வாழ்ந்து மாண்ட மன்னர் திரையிடு மணலினும் பலரே* என்று சுட்டிக் காட்டுகின்றார். கரும்பாலை முதலிய பல ஓசைகளோடு விளங்கும் மருத நிலமும, பற்பல நிறங்களோடு பூத்துக்

கிடக்கும் முல்லை நிலமும், கிளிகடி பூசலும், யானையையும் பன்றியையும் வேட்டையாடும் ஆரவாரமும் என்ற இவை மலையில் எதிரொலிக்க வளம்படைத்துக் கிடக்கும் குறிஞ்சி நிலமும், நிழலும் தன் உருவிழக்கும் பாலைநிலமும், கப்பலில் ஏற்றிவந்த குதிரையோடு வேறுபிற பொருள்களால் சிறந்த நெய்தல் நிலமும், பாண்டியநாட்டைச் சிறப்பிக்கச் சிறப்பிக்க அதனால் உயருகின்றது மதுரையம்பதி. வெளியே சோலைகள், வைகையின் துறைதோறும் பெரும்பாணர் குடியிருப்பு, அகழ்மதில், மதிற்கதவம், அதன்மேல் மலைபோலுயர்ந்த மாடம், அதனைத் தாண்டியுள்ளே சென்றால் ஆறுபோன்ற பெரிய தெருக்கள், ஓவியம் போன்ற பெரிய கடைத்தெருக்கள், பற்பல விழாக்கள், விற்கும் பற்பல பொருள்களையும் சுட்டி எழுதி எடுத்துக் கட்டியுள்ள கொடிகள் இவற்றை எல்லாம் பாடிக்கொண்டு, மதுரை ஓண விழாவிற்குக் கொண்டு செல்கின்றார் பூ விற்பவர், சுண்ணம் விற்பவர், வெற்றிலைப் பாக்கும் சுண்ணாம்பும் விற்பவர், பல்வேறு தின்பண்டங்களையும் எல்லா மாந்தரும் சிரித்து மகிழ்ந்து வாங்க வீடு வீடு சென்று விற்பவர். இப்படிப் பலரை ஓண விழாவிற் காணலாம். இங்கு வழிபெற்றுக் கடந்து போவது போரிடைத்தப்பிப் போவது போலாகுமாம் இவ்வாறெல்லாம் திருவிழாவின் ஏழாம் நாள் மாலையில் பகலில் கூடிய நாளங்காடியில் எழுந்த ஆரவாரம் இது. செல்வர்களது குதிரை காற்றைப் போலப் போகவும், பெண்கள் போகின்ற மணமெலாம் தெருவிலே வீசவும், பேரிளம் பெண்டிர் குழந்தைகளைத் தழுவித் தூக்கிக் கொண்டு, பூவும் புகையும் ஏந்திக் கடவுளைத் தொழுகின்றனர். அந்தணர் பள்ளியும், நோன்பு நோற்கும் பெரியோர் வாழும் நறும் பூஞ்சேக்கையும், தராசுக்கோல்போல அறங்கூறும் சபையும், மந்திரிகள் சபையும், நாற்பெருங் குழுவும் காணலாம். சங்கு கடைவோர், இரத்தினங்களைச் சாணை படிப்போர், நகைகள் செய்வோர், துணிகள் விற்போர், ஓவியம் எழுதுவோர் இவர்களை எல்லாம் மதுரையில் நிறையக் காணலாம். பலவகையான பழங்கள், உணவுகள் இவையெல்லாம் மாலையில் விளங்கும் அல்லங்காடியில் வருகின்றன. இரவு வந்ததும் பெண்கள் விளக்கேற்றிப் பூக்களைச் சூடிக்கொண்டு கணவன்மாரோடு இன்பமாய்க் காலங்கழிக்கின்றனர். பரத்தை மகளிர் வாழ்வும் அங்குண்டு. குழந்தையைப் பெற்ற பெண்கள் கடவுளை வழிபடச் செல்லுகின்றனர். நடுயாமத்தில் மகளிரும் கடைவிற்பவரும் தூங்குகின்றனர் கள்வரைப் பிடிக்கக் காவலாளர்கள் மழை பெய்யும் போதும் திரிந்துவருகின்றனர் பொழுது விடிந்ததும் வேதம் முழங்குகிறது. யாழ்கள் இசைக்கின்றன; சூதர் முதலியோர் அரசனை வாழ்த்தி நாழிகை கூறுகின்றனர் பிற நாட்டிலிருந்து கொண்டுவந்த

செல்வங்கள் தெய்வலோகம்போல் மதுரையில் கிடக்கின்றன. அரசன் இரவில் பெண்களோடு கூடியிருந்து, காலையில் பள்ளியெழுச்சி பாடியதும் எழுந்து, ஒப்பனை செய்துகொண்டு, முருகன்போல் தோன்றிப் போரில் உயிர்க்கஞ்சாது போர்செய்த வீரர்களை யெல்லாம் கான வரும்படி அழைத்தும், பாணரையும் விரலியரையும் புலவரையும் வருகவென வரவேற்றும், அனைவரையும் ஒருங்கு வைத்து விருந்தூட்டிப் பரிசில் வழங்குகிறான். இவற்றை எல்லாம் கூறுமுகத்தான் மதுரையையும் அவனையும் பாடுகின்றார். *நீ குடிகளையெல்லாம் வாழ்வித்து, உயர்ந்த ஞானத்தை எய்திச் சுற்றத்தாருடனும் தலைவர்களோடும் இன்பமாய்ப் பலநாள் வாழ்வாயாக* என்று வாழ்த்தி முடிக்கின்றார் புலவர். நிலையாமையைக் கூறினாலும் உலக வாழ்வினைப் புலவர் இகழ்ந்து ஒதுக்கவில்லை; நிலையாத உலகத்தில் நிலைத்த புகழை நிலைநாட்ட வேண்டும் என்கிறார். தன்னலமே கருதி வாழாது, சுற்றமும் தலைவரும் கலைஞரும் குடிகளும் சிறக்க வேண்டும் என்ற குறிக்கோளோடு பிறர்க்கென வாழ்தலே சிறப்பு எனக் கருத வைக்கின்றார் புலவர். மிகச் சிறந்த அறிவையும் பெறுவதே பெருமை; சிற்றின்பத்தையோ, சிறிய நன்மையையோ கருதி அறத்தையும் மானத்தையும் கைவிடுதல் ஆகாதென்று, இவ்வாறு நிலையாமையை வற்புறுத்த வந்தவர் வாழ்வின் உயர்ந்த குறிக்கோள்களைச் சுட்டி வாழுமாறு தம்முடைய தலைவனை வாழ்த்துகின்றார். அந்நாளைய அரசர் வாழ்வையும், நகர நிலைமையையும் படம்பிடித்து இந்தப் புலவர் காட்டி, இத்தனை செல்வத்தோடும், உயர்ந்த குறிக்கோளோடும் சனகனைப் போல வாழ்வதனை வற்புறுத்துவது ஒரு புதுமையே ஆகும்.

மிகுதி நிற்கும் அகப்பாட்டுக்களில் முதலாக வருவது ஐந்தாம் பாட்டாம் முல்லைப்பாட்டு. இது 103 அடிகள் கொண்டது. இதனைப் பாடியவர் காவிரிப்பூம் பட்டினத்துப் பொன்வாணிகனார் மகனார் நப்பூதனார். வணிகராயிருந்தும் சிறந்ததொரு தமிழ்ப் பாட்டைப் பாடியதால் ந என்ற சிறப்படையோடு நப்பூதனார் எனத் தமிழ் உலகில் இன்றும் அவர் போற்றப்படுகின்றார். இதற்கடுத்துள்ள இரண்டு பாட்டுக்களும் நெடுஞ்செழியனைப் பற்றியன. ஆதலின், இதுவும் அந்தப் பாண்டியனைப் பற்றியதே எனச் சிலர் கருதுகின்றனர். இந்தப் பாட்டு மூன்று பிரிவுகளாகப் பிரியக் காண்கின்றோம். முதற் பகுதியில் வாமனர் திருவிக்கிரமாவதாரம் எடுத்ததுபோலச் சிறிய மேகம் வான் முழுதும் பரவி மழை பொழிகின்ற காட்சியையும், அந்த மழையில் ஒரு மாலைக் காலத்தில் நாழியில் நெல்லும் முல்லைப் பூவும் கொண்டு சென்று தூவிப் பெருமுதுபெண்டிர் எதிர் காலத்தினை விளக்கத்

*திடீரெனக் கேட்கும் நற்சொல்லை நாடி நிற்கின்றதனையும் (விரிச்சி), தலைவியின் துயரம் தீரத் தலைவன் எப்போது வருவான்* என்று அறிதற்கு அன்போடும் அச்சத்தோடும் நிற்கின்ற இவர்கள் காதில் விழ, ஓர் இடைப்பெண், தாயைப் பிரிந்த கன்றுகளின் துயரத்தை நோக்கி, *இப்பொழுதே உங்கள் தாய்மார்கள் வருவார்கள்* என்று கூறி ஆற்றுவதவனையும், அதுகேட்டு அவர்கள் தலைவியிடம் வந்து, *தலைவன் வருவான்* என உறுதி கூறுவதனையும், அவர்கள் கூறும் உறுதியில் நம்பிக்கை கொள்ளாது, தலைவி வருந்துவதனையும் புலவர் பாடுகின்றார். பாட்டின் இரண்டாம் பகுதி தலைவனது போர்க்களத்திற்குப் போகின்றது. காட்டாறு சுற்றியுள்ள நல்ல இடத்தில் புதர்களையெல்லாம் வெட்டி முள்ளையே மதிலாக இடப் பெற்றுள்ளது பாடி அங்கே வீடுகள் ஒழுங்காக இருக்கின்ற தெருவிலே புளியேப்பம் மிக்க யானைகள் காவல் நிற்கும் இடையில் கூடாரம் அடித்து, வேல்களைச் சுற்றிக் கிடுகுகளை வரிசையாக வைத்து, விற்கோட்டையாகக் கட்டியுள்ள விடுதியில் அரசனுக்கெனச் சித்திரத் திரையிட்ட இடத்தில் பெண்கள் வாளும் விளக்குமாய்ச் சுற்றிவர, நடு யாமத்தில் மணியோசை யெல்லாம் அவிந்துபோகின்றன; பின் களைத்துப் போன காவலாளர் காற்றில் புதர்கள் அசைவதுபோல் தூங்கி விழுந்து கொண்டு நடையாடி வருகின்றனர். நாழிகை அளப்போர் அரசனுக்கு நாழிகை கூறுகின்றனர். யவனர்கள் புலிச் சங்கிலி விட்டுப் படிகமணி விளக்கு ஒளிர வைத்துள்ள திரையறையில் ஊமை வீரர்கள் காவல் நிற்க அரசன் இருக்கிறான். வீரர்கள், யானைகள், குதிரைகள் இவையெல்லாம் போரால் மெலிந்து, புண்பட்டு, உலக வாழ்வினை வெறுத்து நிற்கின்ற காட்சியினைப் பள்ளிமேல் கையூன்றி நினைத்துக் கொள்கின்றான் அரசன், தன் விரலால் வீழ்கின்ற கண்ணியைத் திருத்துகின்றான் அதில் ஒரு வெற்றி பிறக்கின்றது. இவ்வாறு அரசன் தூங்காது கிடக்கின்றதனை இரண்டாம் பகுதி விளக்குகின்றது. முன்றாம் பகுதியில் தலைவி தன்னுடைய கட்டிலின் மேல் வீழ்ந்து கிடந்து, தன்னுடைய நெஞ்சினை அவனிடம் செல்லவிட்டமையால் தனியே கிடந்து, அவன் வருந்துவது போலெல்லாம் அவள் இங்கு வருந்துகின்றாள் பின்னர் மழையில் வரும் தண்ணீர் விழுவதனை உற்றுக் கேட்டுக் கொண்டிருக்கின்றாள். அந்தச் சமயத்தில் அவள் காதெலாம் குளிரக் காட்டின் அழகெலாம் கண்டு வெற்றியோடு திரும்புகின்ற தலைவன் ஏறிய குதிரைகள் ஆரவாரிக்கின்றன. இன்ப ஆரவாரம் கேட்கிறது.

இப்பாட்டிற்கு வேறுபல பொருள்கள் பலர் கூறியிருந்தாலும் இவ்வாறு பொருள்கொள்வது நல்லதெனத் தோற்றுகின்றது. போரின் கொடுமையைக் காட்டி, அதில் தலைவன் வெல்லுவான் என்று தன்னுடன் இருந்தார் கூறியதைத் தலைவி கேளாது அவன் அன்புள்ளத்தை அறிந்தவளாகையால் போரில் புண்படுவார் புண்ணையெல்லாம் தனதாகக் கொண்டு வருந்தித் தூங்காது கிடப்பான் என அவனோடு அஞ்சி, அன்பால், அருளால் நடுங்குகின்றனள் அரசி. அசோகனது அருள் உபதேசத்தை நமக்கு நினைப்பூட்டுவதோடு ஈருடலும் ஓருயிருமாய் இருக்கின்ற அகவாழ்வின் நுட்பத்தையும் காட்டி நிற்கின்றாள் இந்தத் தலைவி. இன்பத்தில் முடிகின்றது இந்தப் பாடல்

அடுத்து வரும் அகப்பொருட் பாட்டு ஏழாம் பாட்டாம் நெடுநல்வாடை என்பதாகும். இது 188 அடிகளால் அமைந்த ஆசிரியப்பா, திருமுருகாற்றுப்படை பாடிய நக்கீரனாரே இதனையும் பாடியவர். இப்பாட்டின் தலைமகன் தலையாலங்காலத்துச் செருவென்ற நெடுஞ்செழியன், முல்லைப்பாட்டு இன்பத்தில் முடிய, இங்கோ அந்த இன்பம் இன்னும் உருக்கொள்ளவில்லை. மழை தொடர்ந்து பொழிவதால் எல்லோரும் குளிரால் வருந்துகின்றனர். கோவலர் தன் கையைக் கொள்ளிக்கட்டையால் காய்ச்சுகின்றனர். குளிரால் அவர்கள் பற்கள் நடுங்குகின்றன. குரங்கு கூன் போடுகின்றது. பறவைகள் கீழ் வீழ்கின்றன. தாய் அன்பிற் சிறந்த பசுவும் குளிரால் கன்றை உதைக்கின்றது. பூக்கள் அழகாகப் பூக்கின்றன. பூக்களில் நீர்த் துளிகள் தொங்குகின்றன. அவற்றில் பலவகைப் பூக்களின் நிறமும் நிழலிடுவதால் நிறமூட்டிய துளிகள் போல் தோன்றுகின்றன. இத்தகைய குளிர் காலத்தில் கள் குடித்த திண்ணர்கள் மட்டும் தெருவில் திரிகின்றார்கள். பூக்கள் மலர்ந்தது கொண்டே மாலைக்காலம் வந்ததைப் பெண்கள் அறிகின்றனர். விளக்கேற்றுகின்றார்கள். பெண்கள் தாம் மிக விரும்பும் சந்தனம், விசிறி முதலியவற்றையும் குளிரின் கொடுமையால் மறக்கின்றார்கள். தென்றற்காற்று வீசும் கதவும் அடைபட்டுக்கிடக்கின்றது. தண்ணீர் உண்ணாது வெந்நீர் உண்கின்றனர். இவ்வாறு நாட்டிலும் நகரத்திலும் குளிரே அரசு வீற்றிருக்க, அனைவரும் வருந்துகின்றனர். அரண்மனைக்குள் புகுகின்றோம். கஜலட்சுமியின் தோற்றம், யானை போகும் வாயில், புதுமணல் பரப்பிய முற்றம், மலைபோல் விளங்கும் அரண்மனை, யவனர் ஏற்றிய பாவை விளக்கு, அஃது எரிகின்ற காட்சி இப்படியெல்லாம் கண்டு அரசி படுத்திருக்கும் கட்டிலுள்ள அறையைக் காண்கிறோம் பற்பல சித்திர

வேலைப்பாடமைந்த கட்டிலில் புனையா ஓவியம் போலத் தலைவி மயங்கிக்கிடக்கின்றாள். செவிலித் தாயார் ஏதேதோ சொல்லிப் பார்க்கின்றனர். மேலே சூரிய வீதியும், அதிலே திங்களோடு பிரியாது இருக்கும் உரோகிணியையும் அரசி காண்கின்றாள். பின் ஏதோ நினைந்து பெருமூச்சு விட்டுக் கண்ணீரை விரலால் கீழே தெரிக்கின்றாள். உலகத்தின் இயற்கை மட்டும் அன்று அண்டங்களின் இயல்பும் இதுதான் என்று தனக்கும் அண்டத்திற்குமாக வருந்தி, அதில் ஓர் ஆறுதல் பிறக்கக் காண்கிறாள் போலும் இங்கு இவ்வாறாகப் போர்களப் பாடியில் பாண்டிய அரசன் நள்ளிருளில் வாடைக் காற்று வீசுவதால் தெற்காக வளையும் விளக்கின் வெளிச்சத்தில் புண்பட்ட வீரரையெல்லாம் சுற்றிப் பார்த்து வருகின்றான் யானையும் குதிரையும் மழையில் நனைகின்ற துளி இவன்மேல் விழுகின்றது. எல்லோர்க்கும் அன்புரை கூறிப் புத்துயிர் கொடுத்துப் பிரிந்து வருகின்றான் அரசன் கண்டவரையெல்லாம் உடன்பிறந்தாராகக் கொண்டு வாழ்கின்ற இந்த அரசர் வாழ்வு அண்டங்களோடு தன்னை உடன்பிறப்பாகக் கொள்ளும் அரசியின் வாழ்விற்கெனவே வெற்றியோடு முடிவதாக என அரசியைச் சேர்ந்தோர் கொற்றவையை வேண்டிக்கொள்ளுகிறார்கள். இந்த வேண்டுகோளுடன் இந்தப்பாடல் முடிகின்றது. இவ்வாறு அனைத்தையும் ஒன்றாகக் காணும் காட்சியும், புறத்தேயுள்ள துன்பத்தோடு அரசியின் உள்ளத்தே ஓங்குகின்ற துன்பத்தையும் ஒன்று படுத்தும் காட்சியும், இயற்கையை இருந்ததனை இருந்தபடி கூறும் ஆற்றலும் நக்கீரருக்கு இறவாப் புகழைத் தருவதனை இப்பாட்டில் காண்கின்றோம்.

தலைவனும் தலைவியும் பிரிந்து நின்று, அந்தப் பிரிவை எண்ணுகின்ற பாலை ஒழுக்கத்தைக் கூறுவது பட்டினப்பாலை என்னும் ஒன்பதாம் பாட்டு. இது 301 அடிகளால் அமைந்தது. வஞ்சியடிகள் நிறைய வருதலின் இதனை வஞ்சி நெடும்பாட்டு என்பர். இதனைப் பாடியவர் பெரும்பாணாற்றுப்படை பாடிய கடியலூர் உருத்திரங்கண்ணனாரே. இந்தப் பாட்டுக்குத் தலைவன் சோழன் கரிகாற் பெருவளத்தான் என்று கூறுவர். அவனே பொருநராற்றுப் படைக்கும் தலைவன் ஆனால், இந்தப் பாட்டில் திருமாவளவன் என்ற பெயர் மட்டுமே வருவதால் கரிகாற்பெருவளத்தானின் பெயரனான திருமாவளவனே இதன் தலைவன் என்பர் வேறு சிலர் காவிரியின் பெருஞ் சிறப்பு வானம் பொய்க்கினும் தான் பொய்யாத நிலையோடு தொடங்குகிறது இந்தப் பாட்டு கரும்பும் நெல்லுமாய்க் கிடக்கின்ற சோழநாட்டில் வாழை, கமுகு, மஞ்சள், மா, பனை, சேம்பு,இஞ்சி என்பவை விளைந்துள்ள இடத்தில் எருமைக்கன்று நெற்கூட்டின

நிழலிலே தூங்குகிறது. அந்நாட்டு மக்கள் காட்சி அளிக்கின்றனர். உலர்த்திய நெல்லைத் தின்ன வரும் கோழிமேல் குழையை எறிகின்றனர் பெண்கள். அது குழந்தைகள் உருட்டும் சிறுதேருக்குத் தடையாகின்றது இத்தகையன அங்குள்ள பாக்கங்கள் படகுகள் கழிசூழ் படப்பையில் உப்பை விற்று நெல்லோடு வந்து குதிரைகள் போலக் காவிரிப்பூம்பட்டினத்தில் கட்டப்பெற்றிருக்கின்றன இருகாமத்து இணையேரி உண்டு, கோட்டைக் கதவில் புலிப் பொறி தோன்றுகிறது, அறச்சாலைகளில் சோறாக்கிய கஞ்சி ஆறாக ஓட, அதில், யான் முந்தி நீ முந்தி என்று எருதுகள் பாய்ந்து சேறாக்கத் தேரோடியதும், அவையெலாம் தூசாகப் பறந்து வெள்ளிய அரண்மனையின் மேல் படிவதால் அரண்மனை நீராடிய களிறுபோல அழுக்கேறித் தோன்றுகின்றது எருத்து மாடுகளின் சாலைகள், தவப்பள்ளிகள், தூதுணம் புறாக்கள் ஒடுங்கி நிற்கும் காளிகோயில், இறாமீனும் ஆமையும் தின்று, அடப்பம் பூவும், ஆம்பல் மலரும் சூடிக் கவணகல்லை வீசிப் போராடிக் களிக்கும் பரதவர் குப்பம், செம்மறியாடும், கௌதாரியும், பன்றிகளும் விளையாடும் புறச்சேரிகள், தூண்டிற் கோலைச் சாத்தியதில் நிலவிடை இருள்போல மீன் வலை உலருகிற முற்றத்தில் சுறாமீன் கொம்பை நட்டுக் கடவுளை வழிபட்டுத் தாழை சூடிப் பனங்கள் குடித்துப் பெண்களோடு இன்பமாக வாழ்ந்து மலைமேல் தவழும் செம்மேகம் போலக் கடலின்மேல் காவிரி பாயத் தாய் மார்பிலே குழந்தை விளையாடுவது போலக் காவிரியில் அப்பரதவர்கள் விளையாடி வாழுமிடம், இவ்வாறு வானுலகினை ஒத்த பலவகையான காவிரித் துறையினைக் காண்கின்றோம் காம இன்பம் பெற்ற காதலனும் காதலியும் கடையாமத்தில் கண்ணுறங்குகின்றார்கள் ஆனால், சுங்கம் கொள்வோர் சோர்வின்றிச் சூரியனது தேர் பூண்ட மாப்போலச் சோர்வின்றிச் சுங்கம் வாங்குகின்றார்கள் ஏற்றுமதியும் இறக்குமதியும் ஆகின்ற அந்தக் துறையில் புலிப்பொறியை மூட்டைகளின்மேல் பொறிக்கின்றார்கள் வெறியாட்டெடுக்கும் ஆரவாரத்தோடு திருவிழா இடையறாது நிகழும் கடைத்தெருவில் முருகன் கோயிற்கொடி தோன்றுகிறது வீர வழிபாட்டுக் கொடியும் தோன்றுகிறது கற்றறிஞரது வாதக் கொடிகளும் தோன்றுகின்றன பல பொருள்களையும் விற்பார் ஒவ்வொரு பொருளுக்குமாக ஒவ்வொரு கொடி கட்டியிருக்கின்றார்கள் கடலில் வந்த குதிரைகள், வண்டியில் வந்த மிளகுகள், வடமலையிலிருந்து வந்த மணியும் பொன்னும், குடமலையிலிருந்து வந்த ஆரமும் அகிலும் தென் கடலில வந்த முத்தும், குணகடலில் இருந்து வந்த பவளமும கங்கைக கரையிலிருந்து வந்த வளங்களும் ஈழநாட்டிலிருந்து வந்துள்ளனவும, கீழ்த்

தீவுகளிலிருந்து வந்த ஆக்கச் செல்வங்களும் அங்கே தலைமயங்கிக் கிடக்கின்றன. கொலையும் களவும் நீங்கிய பெருமையால் வலைஞன் முற்றத்தில் மீன் திரளும்; புலால் விலைஞர் வீட்டினெதிர் விலங்குகள் மேயும் அறம் செய்வோர் அருள் வாழ்க்கை வாழ்ந்து, நடுநிலையில் நீங்காது மெய்யே பேசி, விலையும் ஓரளவிற்குமேல் கொள்ளாது, கொடுக்கும் பண்டங்களையும் குறையாது தந்து வாணிகம் செய்து அங்கு வாழ்கின்றனர் திருவிழாக் காலத்தில் பல நாட்டினரும் ஓர் ஊரில் சேர்வது போல இந்தக் காவிரிப்பூம்பட்டினத்திலும், பல நாட்டு மக்களும் ஒருங்கு சேர்கின்றனர். இவ்வாறு காவிரிப்பூம்பட்டினத்தின் சிறப்பைப் பாடுகின்றார் உருத்திரங்கண்ணனார். நெஞ்சமே இத்தகைய சிறந்த பட்டினத்தை நான் பெறுவதாயிருந்தாலும் தலைவியை விட்டு வாரேன் என்று கூறுகிறான் தலைவன் பிரிவு எண்ணம் தோன்றுவதுதான் பாலை. தலைவி பிரிந்தபொழுது துறக்கமே போன்ற பட்டினமும் இன்பமாகத் தோன்றாது துன்பமாகத் தோன்றும் என்கின்ற பிரிவின் கொடுமை இவ்வாறு அழகாக, காவிரிப்பூம்பட்டினத்தின் சிறப்பின் வழியே பாடப்படுகிறது. பாலைக்குப் புறமாவது வாகை அல்லது வெற்றி. அந்த வெற்றி பாட்டுடைத்தலைவனது வெற்றியாகப் பின்னே காண்கிறோம். அவ்வெற்றி வெறுங்கொலையாக முடியாது பழம்பெரும் தமிழ் நாகரிகத்தின் நிலையமாம் காவிரிப்பூம்பட்டினத்தினைக் காத்து நிற்கும் சிறப்பாக முடிவதனை முந்துறமுந்தப் புலவர் காட்டுகிறார். அப்பெருநகரினையும் புறக்கணிக்கும் வீரவுள்ளம் தலைவனது காதலுள்ளமாகச் செழித்தோங்கி வெற்றி பெற்றொளிர்கிறது. இனி, திருமாவளவனது புகழைப் பாடுகின்றார் புலவர். புலிக்குட்டி அடைபட்டு வாழ்ந்தாற்போலப் பகைவரிடையே சிறையுண்டு வாழ்ந்தவன். அந்தப் புலி, யானையைக் குத்திக் கொன்று வெளிவருதல் போலச் சிறையினின்றும் தப்பி அரச உரிமையைப் பெறுகின்றான். வளவன் அதோடும் அமையானாய்ப் பகைவர்மேல் பாய்கின்றான். பகைவர்களது நீர்வள மிக்க பொய்கைகள் எல்லாம் வறண்டு, கலைமான் துள்ளி விளையாடும் காடாகின்றன. விழாக்கள் நிகழ்ந்த மந்திரங்கள் பேயாடும் இடமாகின்றன. கிளி கொஞ்சிய வீடெல்லாம் கோட்டான் குழறும் பாழ் இடமாகின்றன. அதனாலும் அமைதி பெறாது, கடலைத் தூர்ப்பேன், மலையை அகழ்வேன், வானை வீழ்த்துவேன், காற்றை மாற்றுவேன் என்று வளவன் முனைந்து செல்லுகின்றான். எல்லா அரசரும் தன் அடி பணியச்செய்து, தன்நாட்டின் வளத்தைப் பெருக்குகின்றான் அரசன். தன்னுடைய புதல்வர் ஏறி விளையாடுதலாலும், மனைவிமார் தழுவுதலாலும் செஞ்சாந்து சிதைந்த மார்பினோடு சிங்கம்போல் தோன்றுகின்றான் திருமாவளவன் இவ்வாறு புகழ்கின்றது இப்பாட்டு

இவனது போரின் கொடுமையை உணர்த்திய இப்பாட்டு, இவ்வரசன் தன்னுடைய பகைவர்மேல் இவ்வாறு வீசத் தூக்கிய வேலைவிடக் கொடியதாகும், தலைவியைப் பிரிந்து நாம் செல்லும் கானம் என்று தலைவன் நெஞ்சுக்கு உணர்த்துகின்றதுபோலப் பாடி முடிக்கின்றது. திருமாவளவனது செங்கோலின் அருளெலாம் உணர்த்திய பின்னர்த் தலைவன், தலைவியின் தோள் அவனது செங்கோலிலும் மிக மிகக் குளிர்ந்து இன்பமாகும் என்கிறான் அவ்வாறாயின் எங்கே பிரிவது? பட்டினம் பெற்றாலும் அவளைவிட்டு வாரேன் என்று தலைவன் கூறுவதாக இந்தப் பாட்டு முடிகின்றது காவிரிப்பூம்படடினத்தையும் திருமாவளவன் போர் வேலையும அவனது செங்கோலையும் புகழும் முகத்தான் பாலைப் பிரிவின் துன்பத்தையும் பிரியா நிலையில் இன்பத்தையும் மிகமிகப் புதுமை தோன்றப் பாடியுள்ளவை புலவர்களுக்கெல்லாம் ஒரு பெருவிருந்தாம் இந்தப் பாட்டுப் போகின்ற போக்கில் காவிரிப்பூமபட்டினத்தின் வளமும், இயல்பும், பண்டைய தமிழர் பண்பாடு தோன்றுகின்ற சிறப்பும் கூறுவதான வரலாற்று நூலாராய்ச்சிக்குப பெரிய கருவூலமாக விளங்குகிறது. அகப்பொருளும் புறப்பொருளும் இயைந்த இயைபும் நுட்பமுடையதாகும்

முடிவாக ஆராய நிற்பது எட்டாவதாகிய குறிஞ்சிப்பாடடு. 261 அடிகளை உடைய ஆசிரியப்பாவாக அமைந்த இந்த நூலுக்குப் பெருங்குறிஞ்சி என்ற பெயரும் உண்டு இதனை இயற்றியவர் கபிலர் ஆரிய அரசன் பிரகத்தனுக்குத் தமிழ் அறிவித்தற்காக இதனைப் பாடினார் என ஒரு வரலாறு உண்டு தமிழ் அறிவுறுத்துவது என்றால் தமிழுக்குச் சிறந்த அகவொழுக்கத்தினை விளக்குவதேயாம் என இறையனார் அகப்பொருளுரையால் விளங்கும

குறிஞ்சியானது காதலர்கள் கூடுவது அந்த ஒழுக்கத்தின் சிறந்ததொரு நிலையினைக் கபிலர் இந்தப் பாட்டில் எடுத்து விளக்குகிறார். தலைவன் தலைவியைக் களவொழுக்கத்தில் கூடுவதின் அருமையும், அவன் வருவழியிலுள்ள இடர்ப்பாடுகளும் போன்ற இவையெல்லாம தலைவியின் உள்ளத்தைக் கலக்குகின்றன களவொழுக்கத்தினைப் பெற்றோர்க்குக் கூறி, மணத்திற்கு ஏற்பாடு செய்து கொள்ளலாமே என்ற கற்புநிறைந்த எண்ணம் தோன்றுவது இங்கு இயல்பு. அறத்தோடு நிற்றல் என்பது இதுதான் தோழியும் இதில் ஈடுபடுகின்றாள் தலைவியின் செவிலியே தோழியின் தாயாவாள நடந்ததை அவளுககுத் தோழி எடுத்துக் கூறுவதே இந்தப் பாட்டாகும

களவொழுக்கம் என்றதும் செவிலி தவறாக எண்ணுதலும் கூடும். களவொழுக்கத்தினை எடுத்துக் கூறுவதும் எளிதன்று. இந்த இக்கட்டுக்குள்ளே சிக்கித் தோழி பேசுகின்றாள். தலைவியின் வாட்டங்கண்டு அதனை நோய் என்று கருதிச் செவிலி வெறியாடுவித்தும், கழங்கு பிடித்தும், அந்த நோயினை அறிந்து தீர்க்க முயலுகின்றாள். அந்த முயற்சியை நினைப்பூட்டிக்கொண்டே தோழி பேசத் தொடங்குகின்றாள். அப்பொழுதன்றோ செவிலி நன்றாகச் செவிசாய்த்துக் கேட்பாள்? கற்பின் உயர்வைப் புகழ்கின்றாள் தோழி. அது கெடின் மாற்றொன்றுமில்லை என்பதனை நினைப்பூட்டுகின்றாள். *தாங்களே முடித்துக் கொண்ட மன்றல்* என்று ஒன்று சுட்டுகின்றாள். ஆனால், இன்னும் உண்மையைத் தெளிவாகச் சொல்லவில்லை. தோழி தன் முயற்சியின் பெருமையைப் போரிடும் இருவேந்தரிடையே அமைதியை நிலைநாட்ட முயலும் சான்றோரின் தொண்டோடு ஒப்புமைப்படுத்தி உயர்த்திப் பேசுகின்றாள் இந்த முன்னுரையோடு செவிலியின் காதினையும் மனத்தினையும் தன் வழிப்படுத்திக்கொண்டு உயாந்ததொரு செய்தியை எதிர்பார்க்குமாறு அவள் செய்துவிடுகின்றாள்.

செவிலி அனுப்பியபடி தலைவியும் தானும் தினைப்புனம் காக்கச் செல்வதனை அவள் கூறத் தொடங்குகின்றாள். செவிலியின் மனத்தினைத் தோழி முடுக்கிய முறுக்குச் சிறிது நெகிழ்கிறது. மழை பெய்த புது நீரில் தாங்கள் ஆடியதனைக் கூறித் தழைப் பாவாடை தைப்பதற்குப் பூக்களைத் தாம் கொண்டு வந்ததனை அவள் விளக்குகின்றாள். நூற்றுக்குமேல் பூக்களின் பெயர்களைக் கூறுகின்றாள். இன்று இதனைப் படிக்கின்றவர்கள் மனமெலாம் களைத்துப் போகின்றதாம். இதற்குக் காரணம் பல. இந்தப் பூக்களை நாம் நேரில் துய்த்து அறியாமை ஒன்று. அந்நாளைய மகளிர் தழையுடுப்பதில் ஈடுபட்டுப் பலவகைப் பூக்களிலும் இன்பம் கொண்டு திரிந்து பறித்தமையை இந்நாளில் நாம் அறிய முடியாமை மற்றொன்று. பாட்டின் சொல்லின்பத்தினையும் அம்மலர்களைப் பற்றிய புனைந்துரைகளின் பொருத்தத்தினையும் நாம் மறந்து விடுவது மூன்றாவது. தோழியின் மன நிலையைப் பாட்டொடு வைத்து உணராதுபோதல் நான்காவது. களவொழுக்கத்தை வெளிப்படையாகச் சொல்ல முடியாமல் இடர்ப்படுகின்ற தோழிக்கு அதனைப்பற்றி எண்ணச் சிறிது பொழுதும் வேண்டும் புதுமை ஒன்றுமில்லாது பழகிய நிலத்திலேயே செவிலியின் மனத்தைக் கொண்டு செல்லுதலும் வேண்டும் இந்த இரண்டு எண்ணங்களும் நிறைவேற வேண்டிய அந்த நாளைய பெண்கள்

விரும்பிய தழையைப் பற்றிக் கூறுவாளாய்ப் பூக்களை எல்லாம் நன்கு புனைந்துரைத்துச் சொல்லின்பம் தோன்றப் பாடிச் செவிலியின் மனத்தை ஓயவைத்துத் தன் வழிப்படுத்துகின்றாள் தோழி

இந்த விளையாட்டுக்குப் பின்னே இவர்கள் உயிர்க்கே உலைவைத்தாற்போல யானை வருவதனைக் கூறப்புகுகின்றவள், அதற்கு முன்பாகத் தலைவன் அவர்கள் எதிரே வந்த ஆண்மையை எல்லாம் அழகை எல்லாம் பாடுகின்றாள். யானையினின்றும் அவன் தம்மைக் காத்தலையும், அக்காட்சி செவிலியின் கண்ணெதிரே தோன்றுகின்ற வகையில் பாடுகின்றாள். இந்த இடையூற்றின் இடையே யானைக்கு அஞ்சித் தலைவி தலைவனைத் தழுவிக் கொள்வதனையும் கூறிவிடுகின்றாள் அவ்வாறு தழுவியதனைக் காதலெனக் கொண்டு தலைவன் அவளைக் காதலிப்பதனையும் விரித்துரைக்கின்றாள் இங்கே யார் மேல் குற்றம் கூறக்கூடும்?

ஆனால், ஓர் ஐயம் செவிலியின் மனத்தில் எழலாம் *தலைவன் தலைவியின் குடிக்கு ஏற்றவனா?* என்றெழும் அந்த ஐயத்தையும் நீக்குகின்றாள் தோழி தம்மினும் சிறந்தவன் என்று நேரே கூறினால், செவிலி ஒப்புக் கொள்வாளா? மலையின் முடியிலே மலர்ந்த பூக்கள் அங்கே விளையாடும் வரையர மகளிரால் கீழே விழுந்து வெறியாடும் களம்போல விளங்குகின்ற நாட்டின் தலைவன் என்று கூறுமுகத்தான் உயர்குடியிலிருந்து வந்து, தெய்வத்தின் முயற்சியால் தலைவியோடு கூடி, அவள் அழகு செய்வதனைச் சுட்டுகின்றாள் தோழி *மிளகு நிறைந்த பாறை; அதனிடையே ஒரு சுனை; மாம்பழமும் பலாப்பழமும் விழுந்ததால் தெளிந்த சாறாய்க் கிடக்கின்றது சுனை தேனும் பாய்கிறது, மயில் அதனைக் குடித்துத் தளர்கிறது* என்று தோழி அவன் நாட்டைப் புகழ்கின்றாள் இதன் கருத்து என்ன? *அந்தப் பாறையே தலைவன் வாழும் ஊர்; அந்தச் சுனையே அவன் பிறந்த குடி; மாவும் பலாவும் அவன் தாய் தந்தையர்; அப்பழங்களிற் பிறந்த சாற்றின் தெளிவே தலைவன்; தேனே தலைவிதி; மயிலே தலைவி; தேனை உண்ணுதலே களவொழுக்கம்* இவ்வாறு உள்ளுறை உவமமாகத் தம் குடிக்கு ஒரு குறைவும் தோன்றாத வகையில் தோழி கூறிவிடுகின்றாள் இந்தத் தலைவனின் குறிக்கோள் இழிந்த காமமன்று தன் வீட்டின் கதவினை அடையாது, திருவிழாக் காலத்தில் அனைவருக்கும உணவிடுவதுபோல எபபோதும் உணவிட்டு, உயர்ந்தோரோடு விருந்துண்டு, எஞசியதனைத் தலைவியும் தலைவனும் உண்ணவேண்டுமெனபதே அவன குறிககோள இதனை அவனே கூறித தலைவியையப பிரியேன் என முருகன் மேல

ஆணையிட்டுத் தண்ணீரையும் குடித்துச் சூளுறவு செய்கிறான் என்று கூறித் தோழி முடிக்கின்றாள். மாலை வரும்வரை தலைவியோடு இருந்த தலைவன், *நுமர்தர நாடறி நன்மணம் செய்து கொள்வேன்* என்று கூறியதைத் தன் மகள் வாயாகக் கேட்ட செவிலி, தலைவன் தங்களை மறவாமைக்காக மகிழ்வாளன்றோ? இவர்கள் களவொழுக்கத்திற்கு ஏற்படுகின்ற இடர்ப்பாடுகளை எல்லாம் அடுக்கிக்கொண்டே போகின்றாள் தோழி. அப்பொழுதும் அன்பு குறையாது அவன் வந்து போதலைக் குறிப்பிட்டு, அவன் வருகின்ற வழியிலே பாம்பும் புலியும் முதலையும் பேயும் சதுப்பு நிலமும் இருப்பதனை எண்ணித் தலைவி வருந்தி வாடுவதே தலைவியின் நோய்க்குக் காரணமென்று செவிலியின் ஐயத்தைப் போக்குகின்றபோது, செவிலியின் மனமும் தலைவனுக்காகவும் தலைவிக்காகவும் பரிந்து உடன்வாடுமன்றோ? இந்த வகையில் நோக்கும் பொழுது களவொழுக்கத்தின் உயரிய குறிக்கோளையும், அதற்குச் சுற்றுப்புறச்சூழலாக அமைந்த குறிஞ்சி நிலம், இரவு, கூதிர்க்காலம் என்ற இவற்றின் இயற்கை அழகினையும் எடுத்துக் கூறுவதோடு பிறர் மனத்தினை அறிந்து, அதற்கேற்பப் பேசும் கலை தலை சிறந்து விளங்குகின்ற நிலையில் இப்பாட்டு அமைந்திருக்கின்ற வியப்பினை நாம் பாராட்டாமல் இருப்பதற்கில்லை.

# திருக்குறள்

திருவள்ளுவர் எழுதிய அறநூல் பதினெண்கீழ்க் கணக்குத் தொகையில் முப்பால் என இது வழங்குகிறது அறம், பொருள், இன்பம, வீடு என்பவை மக்கள் நாடும் உறுதிப்பொருள்கள் எல்லாவற்றையும் விடும் வீட்டினை நீக்கி, மற்றவற்றைத் *திரிவர்க்கம்* என்று வழஙகும் வழக்கம் உண்டு. முப்பால் என்பது இந்தக் கருத்தினையே குறிககும் ஆனால, திருவள்ளுவர் முப்பாலால் நாறபாலும் கூறுகிறார் என்பது திருவள்ளுவமாலை. அறம என்பது ஒழுக்கம் என்பதையே அன்றி, அடிப்படையான நடத்தை முறை அனைத்தினையும் குறிபபதும் உண்டு *மோக்ஷ தருமம்* முதலிய வழக்கினை நோக்குக பௌதததா முதலியோா தருமம் அல்லது அறம எனற சொலலை இந்தப் பரந்த பொருளில் பயன்படுததுவது வழக்கம அந்த வகையிலேயே வளளுவரும பயன்படுத்தி, அறத்துபபால் எனற முதறபகுதியில வீட்டினை, *மறறீண்டு வாரா நெறி* முதலியவாகக் கூறித துறவற நெறி நினறு, அதனை அடையும் வழியையும் சுட்டுகிறார் எனலாம

தனிப்பட்டவரின் அறம பொதுவாக ஒழுக்கம் என்று பேசப்பெறும் அறநூல் இதனையே கூறும் சமுதாய நிலையிலிருந்து இதனை ஆராய்வது அருத்த சாத்திரம் இது அரசியல் நூல, சமுதாய நூல், தண்ட நீதி, பொருட்பால் என்றெல்லாம பெயர்பெறும் இரண்டு நிலையிலிருந்தும் நடத்தையினையே ஆராய்கின்றோம் இவ்வாறன்றி உள்ளீடான அன்பு அனுபவத்தினைக் காதலனும் காதலியுமாக ஒன்றி வாழும் இன்ப விளக்கத்தினை இந்த அற அடிபபடையிலே ஆராய்வது மூன்றாவது வகையாம் இவ்வாறு ஆராயும் நூலினைக் காமசாததிரம என்று வடநூலார் கூறுவர் இதனை அகம எனலாம் தமிழர் அகம், புறம் என்று கொள்ளும பாகுபாடு இந்த அடிபபடையில் எழுந்ததே ஆகும

இந்த முப்பாலையும் பலவகையாக ஆராயக்கூடும் ஒவ்வொரு நாட்டிலேயும் வழங்கும் அறவொழுக்கத்தினைக் கோவை செய்து வெளியிடும் சட்ட நூல்கள் ஒருவகை இவை இருககும நிலையை இருக்கிறபடியே கூறுவன சுருதிகள் இவ்வாறு தாம் தோன்றிய காலத்தில வழங்கிய வழக்கினை விளக்குவனவே அவவாறே பொருள நூல அலலது அருத்த சாத்திரத்தில் சிலவும் அவ்வப்போது இருககும அரசியல் அமைபபு கோட்டை அமைப்பு, வரிததிட்டம

முதலியவற்றைக் கூறுவது உண்டு. காமசாத்திரத்திற் சிலவும் இப்படியே ஆணும் பெண்ணும் கொள்ளும் காமம் எந்த எந்த வகையாலெல்லாம் வெளிப்படுகிறது என்பதனையும், பரத்தையர் கூட்டம், பிறர் மனைவியரோடு கூடுதல், முதியோர் கூட்டம், இளைஞர் கூட்டம், விலங்கின் கூட்டம் என்ற பலவகையினையும், அவற்றிற்கென மக்கள் கொள்ளும் வழி வகையினையும் கூறுதல் உண்டு. இவையெல்லாம் இருப்பதனை ஆராயும் விஞ்ஞான முறையில் செல்வனவாம்.

இவ்வாறன்றி, எவ்வாறு இருக்கவேண்டும் என்று ஆராயத்தொடங்கிக் குறிக்கோளை விளக்குவது மக்கள் உயர்வதற்கு வழிகாட்டும் முறையாம். நீதி நூல் என்பவை இத்தகையனவே. திருக்குறள் இந்த வகையைச் சேர்ந்த நூல். *அறத்திற் சிறந்தது எது? சமுதாய அமைப்பிற் சிறந்தது எது? இன்பத்தில் சிறந்தது எது?* என்று ஆராயவே முற்படுகிறது இந்த நூல். இந்த ஆராய்ச்சியிலேயும் இருவகையான போக்குகளைக் காணலாம் *மக்கள் அடையும் முடிவு எல்லோர்க்கும் நல்லதாய், அறப்பாங்கில் சிறந்ததாய் இருந்தால் மட்டும் போதும் அதை அடைகின்ற வழி அறம் பிறழ்ந்தும், பலர்க்குத் தீயதாயும் இருந்தாலும் அதனைப்பற்றிக் கவலைகொள்ள வேண்டுவதில்லை. முடிவு நல்லதானால் அதனை அடையக்கூடிய எந்த வழியும் நல்லதே ஆம்* என்று கொள்வது ஒருவகைப் போக்கு. முடிவினைப் போல வழியும் அப்பழுக்கில்லாததாய் இருத்தல் வேண்டும் என்று கொள்கின்ற போக்குத் திருவள்ளுவர் போக்கு. இதனாலேயே *ஆபத் தர்மம்* முதலியவற்றைத் திருவள்ளுவர் ஒப்பவில்லை

இவ்வாறு முடிவும் வழியும் தூயனவாக அமைய வேண்டும் என்று வற்புறுத்தும்போது அத்தகைய நிலை ஒரு சிலர்க்கே கைகூடும் என்று கருதி, அதற்கேற்ப எழுதிப்போவோரும் உண்டு. ஆனால், திருவள்ளுவர் மனித வாழ்வில் நம்பிக்கை கொண்டவர் ஆதலால் எல்லோரும் பின்பற்றும் வகையில் விளக்கிச் செல்கின்றார். அடிப்படை உண்மைகளை வற்புறுத்தி, எல்லோரும் ஒப்புக் கொள்வனவற்றையே எடுத்துக்காட்டித் தங்கடமையை நிறைவேற்றுகின்றார் *நூலோர் தொகுத்தவற்றுளெல்லாம் தலை* என்றும், *பல்லாற்றான் நாடினும்* என்றும் கூறிவரும் இடங்கள் இப்போக்கினை வற்புறுத்தும். காலத்திற்குக் காலமோ,இடத்திற்கு இடமோ, குலத்திற்குக் குலமோ மாறுபடும் வழக்க ஒழுக்கங்களைக் கூறாது, எல்லோருக்கும் ஒப்ப முடிந்த பொது நெறியையே வள்ளுவர் கூறுகின்றார் என்பது திருக்குறளை ஆராய்வோரும் உரைகாண்போரும் கண்டு கூறும்

உண்மை ஆகும். தமிழ் நாட்டில் ஒருவரோடு ஒருவர் மன்றாடும் பழைய சமயவாதிகளும் புதிதாக வந்த சமயங்களைப் பின்பற்றுவர்களும் இன்றைய சீர் திருத்தக்காரர்களும் ஒருமுகமாகக் கொண்டாடும் நூல் திருக்குறள் ஒன்றே ஆம். மிகப் பழங்காலத்திலேயே இந்த உண்மையைக் கல்லாடர் எடுத்துக்காட்டிப் பாடியுள்ளார்.

குறிக்கோள் வாழ்க்கையை வற்புறுத்தி இந்நூல் மிக உயரத்தே பறந்தாலும், அக்கொள்கைகள் ஒவ்வொருவர் வாழ்விலும் மலரப் பல செயல்முறைக் குறிப்புக்களைக் கூறிச் செல்வதால் திருக்குறள் அன்றாட வாழ்க்கைக்கு உதவும் நூலாக ஒளிர்கின்றது. தன்னுயிர்போல் மன்னுயிரை எண்ணுதல் கொன்றன்ன இன்னா செய்யும் மகளிடத்தும் எல்லாம் தீமையே ஆக முடியாமல் ஒன்றேனும் நன்று இருக்கும் என்ற ஆழ்ந்த நம்பிக்கை ஆதலால் அந்த நன்றியையே நினைத்துக் கொண்டு இருப்போமானால் அவன் நமக்குச் செய்த தீமையை மறந்துவிடக்கூடும் என்ற வாழ்க்கை நுட்பம், இவைகளை எல்லாம் திருக்குறளில் காண்கிறோம்.

இந்த நூலில் முதலிலே கடவுள் வாழ்த்து என்பது ஒன்றும், கடவுள் அருள்நெறி விளக்கமான மழையைப் பேசும் வான்சிறப்பு ஒன்றும், இவற்றை நம்பி, எல்லாவற்றையும் துறந்து, அந்தண்மை கொண்டு ஒழுகும் அறவோரைப் பற்றிப் பேசும் நீத்தார் பெருமை ஒன்றும், அறவோர்க்கே அறம் சிறப்பானாலும் எல்லோர்வாழ்விலும் அது அடிப்படை ஆதலை வற்புறுத்தும் அறன் வலியுறுத்தல் ஒன்றும் ஆக நான்கு அதிகாரங்கள் இந்நூலுக்குப் பாயிரமாக அமைகின்றன. இங்கே நாம் கூறிவந்த பொதுமை சிறப்பாக விளங்குவதைக் காணலாம். *அறன் என்பட்டதே இல்வாழ்க்கை, மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்தறன்* என்று கூறும் பகுதிகள் காண்க. இவ்வாறு அடிப்படையாக விளங்கும் இந்தப் பாயிரத்தினை வள்ளுவர் செய்யவில்லை என்று கூறுவாரும் உண்டு.

திருக்குறளில் முதலில் வருவது அறத்துப்பால். இதனை இல்லறம், துறவறம் என்று வள்ளுவர் பகுத்துக் கூறுகிறார். துறவு என்பது *பிறப்பறுக்க நோற்பார்க்கு உடம்பும் மிகை* என்ற அளவு சென்றாலும், மனைவி முதலியோரைத் துறத்தல் என்ற பொருளில் அன்றி, *யான், எனது* என்ற உணர்ச்சியையே துறத்தல் என்ற பொருளில் இங்கு வழங்கக் காண்கிறோம். யான் எனதென்னும் செருக்கறுப்பானே துறவி *யான் பிறர்* என்றும், மக்கள், ஊர், நாடு, அரசு, மொழி, சமயம், பொருள்

முதலியவற்றை *எனது பிறரது* என்றும் வளரும் உணர்ச்சியுடைய பெரும்பான்மையோர் வாழ்க்கைப் போக்கே *வரையறைப்பட்டது* என்ற பொருளில் அறமெனப் பேசப்பெறும் இல்லறமாம். இத்தகைய வரையறையின்றி அனைத்தினையும் ஒரு குடும்பமாகவே-ஏன், தானேயாகவே-கொண்டு, பிறிதின் நோய் தன் நோய்போல் போற்றி வாழ்தலே துறவறமாம். நம்மவர் எனத் தொடர்புகொண்டு, அத்தொடர்பினைச் சுற்றி வளரும் அறமே அன்பினை அடிப்படையாகக் கொண்ட இல்லறம். இத்தகைய தொடர்பு ஒன்றும் நோக்காது மன்னுயிரை எல்லாம் தன்னுயிர்போல் எண்ணி நெகிழ்ந்துருகி வாழ்வது அருளில் வளரும் துறவறம். புத்தர் பெருமான், இயேசுநாதர், இராமகிருஷ்ணர், இராமலிங்கர் முதலியோர் இவ்வாறு இயற்கையிலேயே துறவுணர்வாம் அருளுள்ளத்தோடு பிறந்தோர்கள்

இயல்பாகவே இவ்வாறு உலகமாக மலர்ந்துள்ளவர்கள் நீங்கலாக, மற்றவர்கள் படிப்படியாகவே இந்த உயர் நிலையை அடைதல் கூடும் வரையறை பெற்ற இல்லற நிலையில் இருந்து, அன்பு வளர்ந்தபின், அந்த அன்பு அருளாக மலருகிற நுட்பத்தை வள்ளுவர் கூறுகிறார் *அருள் என்னும் அன்பீன் குழவி* என்பது வள்ளுவர் கண்ட உண்மை. மனிதன், தன்னைப் பிறரினும் வேறென முதலில் காண்பதில்லை. பின்னர் உலகில் பழகி வரும்போது தன்னை வேறு பிரித்து நோக்க வேண்டியதாகின்றது. தன்னலப்பேய் அவனைப் பிடித்துவிடுகிறது. இந்தப் பேயை ஓட்ட முன்னிருந்த ஒற்றுமை நிலையை அவன் அடைதல் வேண்டும். இயல்பாக அன்பென்பது அவன் உள்ளத்து நிலைபெற்றுள்ளது. இதுமலர மலர இவன் ஆளுமையை (Personality) உலகம் முழுவதுமாக மலர வைப்புதே இங்குள்ள வழி என்கிறார் வள்ளுவர். அன்பே இல்லறத்தில் உயிர்நிலை உயிர் உண்டா ஒருவனுக்கு எனக் காண வள்ளுவர் அவன் நாடியைப் பாரார்; மூச்சினைப்பாரார்; *அன்புண்டா?* என்றே கேட்பார். *அன்பின் வழியது உயிர்நிலை*. தன்னலத்தால் பிறர் மாட்டு எழும் உள்ளப்போக்கே அவா, தன்னலமே இன்றிப் பிறர் நலமே கருதி எழும் உள்ள நெகிழ்ச்சியே அன்பு அன்புடையார் என்பும் உரியர் பிறர்க்கு. இந்த நிலையை அடையும்பொது அன்பே சிவமாம். ஆனால், அதற்கு வேண்டிய வித்து ஒவ்வொருவரிடமும் உண்டு. மனைவி, மக்கள், நண்பர், நன்றி செய்தார், ஊரார் என்று இவ்வாறு இந்த அன்பு சிறுகச் சிறுகப் பெருகி, உலகம் முழுவதுமாகப் பரவி, அனைத்தினையும் தன்னகத்தே கொள்கிறது. ஒப்புரவு என்பது இந்த நிலையைச் சுட்டும் *கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட் டென்னாற்றுங் கொல்லோ உலகு* என்று வள்ளுவர் இந்த நிலையைப் புகழ்கின்றார்

அன்பின் மலர்ச்சியால் வரும் பயனே அறன். உணர்ச்சி என்ற ஊற்றத்தாலேயே ஒழுக்கம் செயற்படும் என்ற உண்மை இங்கே நினைவுக்கு வருகிறது. அறத்தினை விளக்கும் புதுப்போக்கு இது. *அன்பே இல்லறத்தின் பண்பு, அறனே அதன் பயன்* என்பது வள்ளுவர் காணும் சிறந்த உண்மை. விருந்து, இன்சொல், நன்றி, நடுவு நிலைமை, அடக்கம், ஒழுக்கம் முதலியவை இந்த நோக்கில் ஆழ்ந்த பொருளைத் தருகின்றன. இவை வாழ்வின் குறிக்கோளாகவும் அமையக் காண்கிறோம். பிறர்மனை நயவாமை, பொறுமை, அழுக்காறாமை, வெஃகாமை, புறங்கூறாமை, பயனில சொல்லாமை, தீவினை அச்சம் என்ற தலைப்புக்கள் இங்கு நாம் அஞ்சுதற்குரிய தீமைகளை மறைமுகத்தால் சுட்டுகின்றன. பிறரோடு கலந்து வாழும் வாழ்க்கையை இத்தீமைகளே நஞ்சாக்குவன. இந்தத் தலைப்புக்கள் எதிர்மறை நிலையைச் சுட்டுவன போலத் தோன்றினாலும், இவை எல்லாம் உடன்பாட்டு நிலையாம்; அன்பின் விளக்கமே ஆம் விளக்கம் என்றால் இருள் ஒழிதலும் உண்டன்றோ? ஆகையால், அன்பு என்பது பலவகைக் கோணங்களில் தோன்றும் காட்சியையே இவ்வாறெல்லாம் நாம் காண்கிறோம். இவ்வாறு பழகியவன் எங்கும் நண்பென்னும் நாடாச் சிறப்புப் பெற்றுச் சட்டத்திற் கஞ்சாமல் அன்பு ஒன்றினாலேயே பாத்தூண் வாழக்கை வாழ்கிறான். இதுவே தலைசிறந்த பொதுமை அறம். பாத்தூண் என்பது வள்ளுவர் கண்ட பொருள் நிறைந்த அழகிய சொற்றொடர். பாத்தூண் வாழ்க்கையின் பெருவிளக்கமே ஒப்புரவு. கைம்மாறு வேண்டாது பொழியும் மழைபோல இவனும் இன்னார் இனியார் என்னாது எல்லோர்க்கும் உதவுகின்றான். *தனக்கென வாழாப் பிறர்க்குரியாளன்* என்று சங்க நூல்கள் பேசும் நிலை இதுவே ஆம். இங்கே உலகம் முழுவதும் நம்மோடு தொடர்புடையது என்பதும், உலகமின்றி நாம் வாழ முடியாது என்பதும் தோன்றும் *காக்கை, குருவி எங்கள் சாதி* என்று பாரதியார் பாடுவது தமிழன் கண்ட உண்மை. எனவே, ஈதலும் வள்ளுவர்க்குப் பாத்தூண் வாழ்க்கையே ஆகிறது. ஈத்துவக்கும் இன்பம் அப்போது விளங்குகிறது *ஈதல் இயையாக் கடை சாதலே நல்லது* என்ற உணர்சியாக அங்கு அன்பு பழுக்கிறது. இறப்பதா முடிவு? இல்லை. இறப்பார் யார்? மண்ணோடு மண்ணாய்ப் போவாரே அவர். நிலையாமையே தன் புகழாகக் கொண்ட உலகில், மண்ணோடு மண்ணாக மண்ணான உடம்பை வீசி எறிந்தும் தம் செயலால் உலகினை வாழச் செய்து, என்றென்றும் பேர்பெற்று வாழ்வாரே சாவையும் வென்று புகழுடம்போடு என்றென்றும் சாவாது வாழ்பவர் ஆவர் ஈது ஓர் அரியவித்தை. *நத்தம்போல் கேடும் உளதாகும் சாக்காடும்*

*வித்தகர்க்கல்லால் அரிது.* இதனையே புகழ் என்று வள்ளுவர் இல்லறத்தின் பயனாகப் பாடி முடிக்கின்றார்.

இவ்வாறு, உலகமாக அன்பு மலருமானால் அதற்கே அருள் என்று பெயர். இந்த அருளே துறவின் அடிப்படை. ஆதலின், அருளை விளக்கிக்கொண்டு துறவற இயலைத் தொடங்குகின்றார் *வள்ளுவர்.* மன்னுயிர் ஓம்பினான் தன்னுயிர்க்கு அஞ்சவேண்டாம். எவ்வாறு இதனை வளர்ப்பது? வாழ்க்கையில் பேருண்மைகள் செயற்படற்கு வேண்டிய சிறு குறிப்பும் தருகின்றவர் வள்ளுவர். குறிக்கோளுலகில் உயரப் பறந்தாலும், மண்மேல் கால்வைத்து நடந்தே பின் உயர இவர் வழி காட்டுகிறார். *வலியார் முன் தன்னை நினைக்க, தான் தன்னின் மெலியார்மேல் செல்லுமிடத்து.* இங்கே உலகமாய்ப் பரந்த அருள் பிறிதொன்றற்குத் தீமை செய்ய அஞ்சும். புலாலுண்ணாமை அங்கு இயல்பாகிறது. *தன்னூன் பெருக்கற்குத் தான் பிறிதூன் உண்பான் எங்ஙனம் ஆளும் அருள்* துறவு வழியில் தவம் பெரிது. ஆனால், தவம் என்பதும் அருளின் விளக்கமே. *உற்றநோய் நோன்றல் உயிர்க்கு உறுகண் செய்யாமை அற்றே தவத்திற்கு உரு.* கூடா ஒழுக்கம் இங்கு உலகினை வஞ்சிப்பதே ஆம். கள்ளாமை, பொய்யாமை, சினவாமை, இன்னா செய்யாமை, கொல்லாமை முதலியன இங்கே சிறப்பாகப் பாதுகாக்க வேண்டியவை. வாய்மை என்பதற்குத் திருக்குறள் புதிய இலக்கணம் தருகின்றது. யாதொன்றும் தீமை இலாத சொல்லே வாய்மை. ஏன் சினம் வேண்டா? நகையையும் உவகையையும் அது கொல்லும். மன்னுயிரைத் தன்னுயிராக நினைத்தால் இன்னா செய்வது எது? *தன்னுயிர்க்கு இன்னாமை தான் அறிவான் என்கொலோ மன்னுயிர்க்கு இன்னா செயல்* இன்னா செய்யாமையே பழி தீர்ப்பதுமாகும் *இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர் நாண நன்னயம் செய்துவிடல்* கொல்லாமை என்பது அஹிம்சையாம். எதிர்மறை வாய்பாட்டால் இவ்வாறு கூறினாலும் இது ஓர் உடன் பாட்டு நிலையே ஆம். அருளின் பெருவிளக்கமாம் பாத்தூண் வாழ்க்கையின் தலையாய சிறப்பு *பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல் நூலோர் தொகுத்தவற்றுள் எல்லாம் தலை* கொல்லாமை இவ்வாறு உயிர் ஓம்புதலாக முடிதல் காண்க.

நிலையாமை உணர்ச்சி பெருகுகிறது. *நெருநல் உளன் ஒருவன் இன்றில்லை என்னும் பெருமையுடைத்து இவ்வுலகம்* எனவே, இதில் பற்று ஏன்? உடம்பு மிகையானபோது எதனை விடுவது? *யான் எனது என்னும் செருக்கறுப்பான் வானோர்க்கு உயர்ந்த உலகம் புகும்.*

எவ்வாறு விடுவது? ஒரு கிளையைப் பற்றியவன் மற்றொரு கிளையைப் பற்றினால், முன் பற்றிய கிளையைத் தானாக விடுவது இயல்பு. எல்லாமாகி நிற்கும் பற்றற்றவனது பற்றினைப் பற்றினால் பிற பற்றுக்கள் தாமே விடும் அப்போது மெய்யுணர்வு பிறக்கும். பொருள் அல்லவற்றைப் பொருள் என்று உணரும் மருட்சி தீரும். எப்பொருள் எத்தன்மைத்தாயினும் அப்பொருள் மெய்ப்பொருள் காண்பதறிவு. இந்த மெய்யுணர்வு பிறந்த பின்னும் பழைய பழக்கம் ஒழியாது; ஆதலின் அந்தப் பழைய பற்றினை விழிப்போடு அறுத்தெறியவேண்டும். ஆரா இயற்கை அவாநீப்பின் அந்நிலையே பேரா இயற்கை தரும். இவ்வாறு அன்பு அழியாத இன்பமாக மலர்கிறது.

அறத்துப்பாலின் முடிவில் ஊழ் என்ற அதிகாரம் ஒன்று உள்ளது. ஊழ் என்பது முறைமை, காரணகாரியத் தொடர்பாக அமைந்த உலக இயல்பு இது. ஆதலின், நம் முயற்சியினிடையே இதனை மறந்து நம்மையும் பிறரையும் வெறுத்துத் திரிவதால் பயனில்லை. ஊழிற் பெருவலியாவுள? ஆதலின் நமக்கு உள்ளது கொண்டே அதற்கேற்ப அன்பு வாழ்க்கையை உருப்படுத்தவேண்டும். சீட்டாடுவோர் அறிவோடே ஆட வேண்டும்; ஆனால் கைக்கு வந்த சீட்டுக்கு ஏற்ப அன்றோ ஆடுதல் வேண்டும்? வந்த சீட்டுப்போன்றது ஊழ்நிலை.

திருக்குறளின் இரண்டாவது பிரிவு பொருட்பாலாகும். இந்திய நாடு முழுவதிலும் அருத்தசாத்திரம் எல்லார்க்கும் ஒத்த ஓர் அடிப்படை கொண்டு விளங்கியது. படை, குடி, கூழ், அமைச்சு, நட்பு, அரண் ஆறும் உடையானே அரசன். குறளில் பொருட்பாலைப் பிரிப்பவர்கள் பற்பல வகையாகப் பிரித்தாலும் திருவள்ளுவர் கொண்ட இந்த அடிப்படையில் பிரிப்பவர் பக்கமே வலியுடைத்தாகும். குடி என்பது குடிமக்கள். அவர்களைப்பற்றியே முடிந்த முடிபாக இந்தப் பொருட்பாலின் கடைசி 13 அதிகாரங்கள் பேசுகின்றன. அவர்கள் சமுதாயத்துக்குச் சுமையாகாமல் தாமே உழைத்து உண்பாராயபோது பிறருக்கும் பயன்பட வரும் அவர் தம் உழவே சிறந்து இனிக்கிறது. வாணிகத்தினைவிட உழவின் சிறப்பே இங்குக் கேட்கிறது. சமுதாயக் குடி மக்கள் அதன் தேவைகளை நிரப்பிடும் குறிக்கோள் தோன்றுகிறது. பொருள் இல்லார் இல்லாத சமுதாயமே வேண்டும். இரப்பாரையும் ஓர் அமைப்பாகக் கொண்டு சமுதாயத்தை அமைப்பது கொடுமையே ஆம். இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டின் பரந்து கெடுக உலகியற்றியான். பாரதி, தனி ஒருவனுக்கு உணவில்லையெனில் சகத்தினை அழித்திடுவோம் என்று பாடியதற்கு வித்து இதுதான் ஆவிற்கு நீர் என்றுகூட இரவாது

வாழ்தலே மேல். வறுமை கொடிது; தீமைக்கு வித்து அதுவே; ஆதலின், வறுமை ஒழிவதே நாட்டின் குறிக்கோள் இரவச்சம் பெரிது. ஆனாலும், இரவாதார் இல்லாது ஒருநாளில் மறைந்து போவாரோ? இரத்தலும் இன்றியமையாது வேண்டப்படும்போது என் செய்வது? கரவாது ஈவார் முன் இரப்பதும் ஈதலே போல இன்பந்தரும். இத்தகைய இரவு ஒருவகையால் மனிதப் பண்பாட்டைச் சாணை பிடித்துப் பளபளக்கச் செய்கிறது. இரப்பாரை இல்லாயின் ஈர்ங்கண்மா ஞாலம் மரப்பாவை சென்று வந்தற்று மக்கட் பண்பாடு இல்லாதவர் மக்களே போலத் தோன்றினும் கயவரே ஆவர். இவர்களும் இல்லாது போவாரோ? ஈர்ங்கையும் விதிராது, மேவன செய்தொழுகி, நெஞ்சத்து அவலமின்றி, மறை ஒன்றும் காவாது வரும் இவர்கள் கொல்வார்க்கு மட்டுமே பயன்படுவர் ஆதலின் அச்சமே இவர்கள் ஆசாரம். சிறிது தன்னலமும் இவர்களை நல்லவர் ஆக்கலாம். இத்தகையார் அல்லாதாரே சிறந்த குடிகள் தம் குடி அல்லது குடும்பம் வாழவேணும் உழையாதான் சமுதாயத்திற்கு ஏன வாழ்வது ஏது? குடி செய்வதனையே குறிக்கோளாகக் கொண்டால், குடும்பங்களையே அடிப்படையாகக் கொண்டு அவற்றின் ஒற்றுமைக் காட்சியையே நாட்டின் சிறப்பாகக் கூறவேண்டும்

வயிறு வளர்த்தால் மட்டும் போதுமா? வாழ்க்கையின் சிறப்பு, உயர்ந்த குறிக்கோளின் அடிப்படையில் நடக்கும் குடிமக்கள் பண்பாடே ஆம். இங்கும் பொருளாதார அடிப்படையை மறக்க முடியாது. செல்வம் என்றால் புதைத்து வைப்பதன்று. தாமும் துய்த்துப் பிறர்க்கும் உதவி மகிழும் நன்மையுடையதே செல்வமாம். நன்றியில் செல்வத்தால் பயன் என்ன? ஏதமே பெரிதாம். எனவே, ஈயாமையே அன்றிப் பிற மறுவிற்கும் நாணுகின்ற உள்ளமே குடிகளின் சிறப்பாம். தீமை செய்யக் கூசும் நெஞ்சம் மக்கட்கு இயல்பாகப் படிந்துவிடுவதே சமுதாயத்தின் சிறப்பு. அந்த நுட்ப நெஞ்சம் இல்லையானால் சமுதாயம் மரப்பாவைகளின் கூத்தாட்டாக முடியும். இந்த உட்கூச்சத்தாலன்றிக் குடிசெயலும், இரந்தோர்க்கு ஈதலும், உழவும், கயமை இல்லாத நிலையும் பிறப்பது ஏது? பண்புடைமை என்பது பாடறிந்தொழுகுதலாதலின் இதனால் அன்பும் நகையும் உலகில் வளரும்; நாடும் பயனெல்லாம் பெறும். இந்தப் பண்பின் விளைவே நாணுடைமை. இக்குணங்கள் மக்கட்கு வழக்கமாகப் படியவேண்டுமானால், குடிமையின் சிறப்பாய்க் குடும்பங்கள் அமையவேண்டும் குணம் வளருகிற பாத்தியே குடும்பம் ஒழுக்கம், வாய்மை, நாண், நகை, ஈகை, இன்சொல், இகழாமை முதலியன அங்கு

வளரும் பயிர்கள். அப்படி வாழ்ந்து உயர்ந்து குணம் பெற்றோர் மானமே உயிரினும் பெரிதாகக்கொண்டு மானங்கெடவரின் உயிரை விடுவதன்றி ஆபத்தர்மம் என உயிரைக் காப்பாற்ற முயலாமல் உயிரைவிட்டேனும் அறத்தைக் காப்பதே வள்ளுவர் கண்டவழி. இத்தகைய குறிக்கோள் வாழ்க்கையிற் சிறந்து வாழ்வதே பெருமை. இவ்வாறன்றிப் பிறப்பின் உயர்வு தாழ்வாலோ, செல்வத்தின் சிறப்பாலோ, அதிகாரத்தின் ஆரவாரத்தாலோ, பிறர் அருளாலோ பெருமைவராது; தன்னில் தானே வளரும் அருமையுடையது அது. இங்கே எல்லா நற்குணங்களும் நிறைந்திருப்பதனையே சமுதாயம் நாடும். சால்பு என்பது அத்தகைய குணங்களின் நிறைவேயாம். *இன்னாசெய்தார்க்கும் இனியவே செய்யாக்கால் என்ன பயத்ததோ சால்பு?* இவ்வாறு சிறந்த குணப்பெருங் கடல்களைக் குடிமக்களாகக் கொள்வதற்கென்று நாடு தோன்றுகிறது. இவ்வாறு சமுதாயம், அரசியல் என்பவற்றின் பெருமை எல்லாம் இத்தகைய குடிமக்களை விளைவிப்பதே எனக்கொள்ளும் அரசியலமைப்பு வள்ளுவர் கண்ட புதுமை எனலாம். பிறரும் பெருமக்கள் பற்றிக் கனவு கண்டனரேனும் அவர்களைச் சமுதாயத்தில் அரசியலின் பேரொளியாகக் கண்டவர் வள்ளுவரே எனலாம். வள்ளுவர் கூறுவது முடியரசே. ஆயினும் இவ்வாறு குடிமக்களை முடிந்த பயனாகக் கூறுவதால் குடியரசுக் கொள்கையில் தம் அரசியலை முடிக்கின்றார் எனலாம். இவர் பின் வந்த கம்பன் அரசர்களை உடம்பாக்கிக் குடிமக்களை உயிராக்குவது வியப்பன்று.

படையையே முதலில் கூறுகின்றார் வள்ளுவர். புறப்பகையோ, அகப்பகையோ நாட்டைச் சிதைக்கும் போது படையே உறுதுணையாம் சட்டத்தை எதிர்ப்பாரை முடிவில் அடிபணியச்செய்வதும் படையேயாம். படையேயில்லாத அன்பரசியலும் அறிவரசியலுமாகச் சமுதாயம் அமையவேண்டுமாயினும் படையினை அறவே மறக்க முடியாது. படை என்பது தன்னையும் அழிய மாறி உதவும் தியாக வீரத்தின் விளக்கமே ஆம். படை நடத்தத் தலைமக்களும் வேண்டும். *மறம், மானம், மாண்ட வழிச்செலவு, தேற்றம்* இவை உடையது படை. *சிறுமையும் துணியும் வறுமையும் இல்லது படை* எனச் செயல்முறை நுட்பமும் கூறுகிறார் வள்ளுவர். படை என்பதன் பெருமை தியாகத்தில் பழுத்த படையாளர் செருக்கே ஆகும். பேராண்மை எல்லாம் ஊராண்மையாக முடிகின்ற சிறந்த வீரத்தியாகத்தில், சாவும் இரந்துகொள்ளத்தக்கதாகிறது

பகை இருப்பதால் வேண்டுவது படை. பகையாகி வளர்வன பற்பல துன்பங்கள் பகைக்கு எதிர்மறை நட்பு உலகம் பற்பல நாடுகளாகப் பிரிந்து விளங்குகிறது அகநிலை அரசியல் ஆராய்ச்சி ஒருபுறம் இருக்கப் புறநிலை அரசியல் ஆராய்ச்சி வெளிநாட்டுக் கொள்கையாக முடிகிறது. நட்புடன் வாழும் உலகமே எல்லோரும் இங்கு விரும்புவது. நட்பும் பழைய உறவும் இங்கு வளரத்தக்கன. அரசியல் நட்பு என்று வெளிநாட்டுக் கொள்கையைக் கூறினாலும் எல்லாத் துறையிலும் விளங்குகிற நட்பு என்ற அடிப்படை உண்மையை வள்ளுவர் ஆராய்வதால் தனிப்பட்டவர்களின் வாழ்க்கையிலும் அந்த நட்பின் விளக்கம் தோன்றுவது தெளிவாகிறது. பிசிராந்தையார், கோப்பெருஞ்சோழர் முதலியோர் வாழ்வின் நுட்பமும் இவ்வாறு விளங்குவதாக உரையாசிரியர்கள் காட்டுகின்றார்கள். இந்த அடிப்படை ஆராய்ச்சியின் பயனாகவே பொருட்பால் அரசியலுக்கே அன்றிக் குடிமக்கள் தனிவாழ்விற்கும் உதவுவதாக முடிந்து முடியரசு நூலாகிறது; நட்பென்றால் தீ நட்பும் உண்டு, மெய்ந் நட்பும் உண்டு. பொய்ந் நட்பும் உண்டு. இங்கே பகையினைத் துன்ப இயல் என ஆராயும் உரையாசிரியர்களும் உள்ளார்கள் பொருள்களின் உண்மைத்தன்மையை அறியாத பேதைமையும், அதனினும் கொடிய சிற்றறிவும் உட்பகையாம். பெரியாரைப் பிழைத்து, அவர் உள்ளம் வெதும்ப நடத்தலும், காமத்தினால் கண்மூடிப் பெண்வழிச் செல்லுதலும், பரத்தைமை வாழ்வும், கள்ளும், சூதும் பெரும் பகையாகும்; பெருநோயாம்; பெருந்துன்பமாம். இவை இல்லாமையே நோய்தீரும் மருந்தாம் இவையே அன்றி, உடல் நோயின்றி மருந்துண்டு வாழ்வதும் அரசியலின் முடிவாம் வாழ்வன்றோ அரசியலின் குறிக்கோள்?

படையின் பெருமை பகை தோன்றும் உலகத்தின் பெருமையே ஆம் ஆதலின், இங்கே அது விளங்குகிறது நாடு அரண் பெற்று விளங்கவேண்டும் அரசாங்கம் என்பதுபோல நாட்டங்கம் அல்லது நாட்டணி என்றும் வள்ளுவர் பேசுவர். *பிணியின்மை, செல்வம், விளைவு, இன்பம், ஏமம், அணி என்ப நாட்டிற்கு இவ் ஐந்து அரண்* என்றால் அக அரணும் (நாட்டமைதியும்) உண்டு, புற அரணும் உண்டு. வேந்தமைதியும் வேண்டும் பொருளும் வேண்டும். பொருளின்றி அறனும் இன்பமும் கூட நிலைக்குமோ? பொருளாதார அடிப்படையில் அரசியல் அமையவேண்டுமன்றோ? வரிவாங்குவதும் அரசியலின் கடமை. தேனீட்டும் வண்டுபோல், மக்கள் வாழ மக்களிடம் வரியீட்டலும் வேண்டும் வகுத்தலும் வேண்டும் அங்கும் வரி கொடாரிடம் படையே வெளித்தோன்றி அரசியலைக் காக்கும்.

இவ்வாறெல்லாம் நோக்கும்போது அரசனது கோலே எதிர் தோன்றுகிறது. இதுவே இறைமையின் அடையாளம். தண்டநூல் எனப் பொருட்பால் சிலபோது பெயர் பெற்றாலும், அதன் குறிக்கோள் நேர்மையான பொது அறமே ஆம். எனவே, கோடாத செங்கோல் எனப் பேசுகின்றனர் பெரியோர். கொடியோரை ஒறுத்தல் அங்கே அறமாகிறது. ஒறுக்காமையே பழியாம் ஆனால், கொடுங்கோன்மையும் வெருவந்த செய்தலும் நாட்டைக் கெடுத்துக் காடாக்கும். இங்கேதான் கண்ணோட்டம் நாகரிகம் எனப் பெயர்பெறும் நுட்பத்தை வள்ளுவர் விளக்குகிறார். குடிமக்களின் நலத்தைக் கெடுப்பாரைப் பொறுக்க முடியாதேனும், தன்னலக் கேட்டினைப் பொறுத்து வாழ்தலே அரசனின் அன்பு வாழ்க்கையாம்.

அரசனின் .தோற்றப் பொலிவு இவ்வாறு ஆரவாரமாக அமைந்தாலும், அவனிடம் சில உள்ளப்பாங்குகளும் உயிர்ப்பாங்குகளும் உண்டு. அரசன் இன்ன இன்ன நூல்களைக் கற்க வேண்டும் என்றெல்லாம் பிற பொருள் நூல்கள் கூறும். ஆனால், வள்ளுவரோ அரசன் என்று புறக்கோலத்தில் ஈடுபடுவதைவிட்டு, அவன் ஒரு மனிதன் என்ற கண்கொண்டு காணச் செய்து, அந்த மனிதப் பண்பாட்டிற்கு வேண்டிய கல்வியின் உயர்வை வற்புறுத்துகிறார். ஆதலின் இந்த நோக்கில் கூறுவன மக்களிற் சிறந்த அரசனுக்கு இன்றியமையாதன எனத் தோன்றுவதோடு, மக்களாய்ப் பிறந்தார் எல்லார்க்கும் பொதுவாக வேண்டும் சிறப்பாகவும் தோன்றுதல் காண்க இதனால் முடியரசே கூறாது குடியரசே வள்ளுவர் கூறுகின்றார் என்பது போலவும் தோன்றுகிறது. அரசனைப் பண்பியாகக் கூறாமல் அரசு, வேந்து, இறை எனப் பண்பாகக் கூறுவதும் இறைமைக் குணத்தை (Sovereignty) வற்புறுத்துவதாக முடிகிறது. முடியரசுக்கே அன்றிக் குடியரசுத் தலைவருக்கும் இவை பொருந்தி வரும்

இறைமாட்சி, கல்வி, கல்லாமை, கேள்வி, அறிவுடைமை, குற்றங்கடிதல், பெரியாரைத் துணைக்கோடல், சிற்றினஞ் சேராமை, தெரிந்து விளையாடல், வலியறிதல், இடம் அறிதல், காலம் அறிதல் என அரசன் இயல்புகளை உடன்பாட்டாலும் எதிர் மறையாலும் நோக்கிக் கண்டு, அறிவென்ற அடிப்படையில் அமைத்து, அரசியலை அறிஞரோடு சேர்ந்து வளரும் சிறப்பாக விளக்கித் தீமை நீங்கி இனிக்கும் இன்பமாக வள்ளுவர் முடிப்பது காணலாம்

அரசியலில், அமைச்சர் முதலான அலுவலாளரைத் தேர்ந்தெடுப்பது ஒரு பெருஞ் சிக்கல் இங்கும் எல்லா அலுவலாளர்க்கும் பொதுவான நிலையே கூறுகிறார் வள்ளுவர். தெரிந்து தேர்ந்தெடுத்தல் வேண்டும் இதுவே தெரிந்து தெளிதல் எனப் பெறும். இந்திய நாடு கண்ட உண்மையை வள்ளுவரும் இங்கே உடன்படுகிறார். *அறம், பொருள், இன்பம், உயிரச்சம் நான்கின் திறந்தெரிந்து தேறப்படும்*. பின் தெரிந்து வினையாட வேண்டும் *இதனை இதனாலிவன் முடிக்குமென்றாய்ந்து அதனை அவன் கண் விடல்* நாடோறும் மன்னன் நாடுதல் வேண்டும். ஒருவரிடமும் கோடாமை உண்டானால், அலுவலாளராகத் தெரிந்தெடுப்பாரிடம் வல்லமையும் கண்டுளதானால், சுற்றந்தழுவுதலும் அரசியலுக்கு அரண் செய்வதாம் கடமையே அரசனின் முதற் பொறுப்பு என்றும் விழிப்பாக இருத்தல் வேண்டும். பொச்சாவாமை இன்றியமையாததாம் இதன் விளக்கமே செங்கோல். ஒற்றர்கள் இங்கே கண்ணாக அமைகின்றனர் ஆனால், ஒற்றர்களை அறிய ஒற்றர்களும் வேண்டும் இல்லையேல் தீமை பெரிதாம். எண்ணியும் அறிந்தும் வருவன எல்லாம் முடிவில் செயற்படவே அன்றோ? கீரை ஆய்ந்து கொண்டே இருந்தால் உண்பது என்று? ஆதலின் செயற்பாட்டின் சிறப்பினைப் பேசுவாராய், ஊக்கமுடைமை, மடியின்மை, விடாமுயற்சியாம் ஆள்வினை உடைமை, இடுக்கணழியாமை என்பனவற்றை வள்ளுவர் வற்புறுத்துகிறார் *இடுக்கண் வருங்கால் நகுக, ஊழையும் உப்பக்கங்காண்பர், முயற்சி திருவினை ஆக்கும், நெடுநீர் மறவி மடிதுயில் நான்கும் கெடுநீரார் காமக்கலன், உள்ளுவது எல்லாம் உயர்வுள்ளல்* என்பவை பழமொழிகளாய் விட்டன

இத்தகைய அரசனின் அங்கமே அரசாங்கம் அவற்றில் படை, அரண், பொருள், குடி, நட்பு என்பவை குறளில் பின்னே கூறப் பெறினும், அவற்றை முன்னே கூறிவந்தோம். அரசாங்கம் என்றால் சிறப்பது அமைச்சரே ஆம் துரைத்தனம் அவரதே அன்றோ? அமைச்சர் வெளிநாட்டுக் கொள்கையும் அறிதல் வேண்டும் அரசனோடு பழகவும் ஆற்றல் வேண்டும்; அமைச்சர் குழுவினும், மக்கள் அவையினும, அரசர் அவையினும் பேசவல்லராதலும் வேண்டும் செய்யவேண்டும் செயல், அதைச் செய்யும் வழி, காலம், செயல்வகை, செயலின் பயன் என்றவை எல்லாம் அறிந்து, அஞ்சாமை, குடிகாத்தல், கல்வி, அறிவு (நூலறிவு, மதிநுட்பம், இயற்கை அறிவு), ஆள்வினை முதலிய உடையராய்ப் பிற அரசினைப் பிரித்தலும் பொருத்தலும் வல்லவராய், ஆராய்ச்சியும் செயலும் சொல்வன்மையும்

பெற்று, அறவழியில திறமையுடையவராய் விளங்குவதே அமைச்சர் சிறப்பு அவையின் சிறப்பு அந்நாளைய தமிழகத்தின் சிறப்பு, அதனை வள்ளுவர் கூறும்போது இந்நாளைய குடியரசின் சட்டசபைகளையே கூறுவதுபோலத் தோன்றுகிறது சொல்வன்மை, அவை அறிதல், அவை அஞ்சாமை, தூது என்ற அதிகாரங்கள். பேசும் திறம் அவையிற் பயன்படுகிற நுட்பத்தை விளக்குவனவாம் அரசனோடு பழகுதலே ஒரு கலை குறிப்பறிதலும் இதற்கு ஒத்த பெருங்கலையாம் செயற்படுதலன்றோ அரசியலின் முடிவு? நிருவாகம் (Executive) என அரசியலை நிறைவேற்றுவோர் அமைச்சரே ஆவர் ஆதலின் இவர்கள் செயல் நிலையை வினைத்திட்பம் என்றும் வினை செய்வகை என்றும் கூறுகிறார் வள்ளுவர் வினைத்திட்பம் மனத்திட்பமே ஆம் துளங்காது தூக்கம் கடிந்து செயல் வேண்டும், சூழ்ச்சியின் முடிவு துணிவெய்தலே வினையால் வினையாக்கிக் கொள்ளும நுடபம கூறகிறார் வள்ளுவர்

இங்கே வினைத்தூய்மை என ஒன்றும கூறுகிறார் வள்ளுவா முடிவு நல்லதாய் இருந்தால் போதாது முடிவினை அடையும வழியும் தூயதாதல் வேண்டும், *ஈன்றாள் பசி காண்பானாயினும் செய்யற்க சான்றோர் பழிக்கும் வினை* இதனை எல்லாப் பொருள் நூலாரும ஒப்புவதில்லை அறததினையே வறபுறுத்தும் கூட்டத்தைச் சேர்ந்தவர் வள்ளுவர் ஆதலின், பிறபொருள் நூலோர் செல்லும தேய்ந்த வழியில் இவர் செல்லவில்லை எனலாம் பொருடபாலில் இவர் செலவது பிறர் செல்லாத வழியும அன்று ஆனால, பிறர் எல்லாம் பொருள வாழ்வின் அடிப்படையாகக் கொள்ளாதவறறை இங்கே நுழைத்துக கடைகாலாய் அமைக்கின்றார் இவர் அரசியலின் முடிமணியாகவும் அமைககின்றார் அன்பு, குடி, தூய்மை, அறம, நாகரிகம், குடும்பம் என்பன இவர் இஙகே நுழைத்தன எனலாம

திருக்குறளில் மூன்றாவது பால் காமத்துப்பால் ஒருவனும் ஒருத்தியும இறைவழியேயும் இயற்கை வழியேயும் நின்று, முனைபபடஙகி, அன்பால் ஒருவராய்க் கணவனும் மனைவியுமாக வாழ்கிற இன்ப வாழ்வினை இங்கே கூறுகிறார் வள்ளுவர் குடுமபமே அடிபபடை என்று கண்டோம் அதன் அடிப்படையே அன்பு அன்பால் இருவர் ஒன்றாகும் காட்சியே இன்பக்காட்சி இதன் நுடபத்தினை நக்கீரர் உரை என வழங்கும் இறையனார் அகப்பொருளுரையில் முற்பகுதியில் காண்கிறோம் அந்தக் கண்கொண்டு கண்டால்தான் பரிபாடல் கூறுவதுபோல் இந்தக் காதல கடவுட காதலாக விளங்குகிற நயத்தை உணர முடியும் இருவர் கூடுதல் குறிஞ்சி மணம முடியுமுன

இடையறவுபடும்போது, கற்பிழந்தபின் உயிர்வாழ்வதோ? எனக் கலங்கிக் கடவுளன்பு வாழ்வு வாழ்ந்து, உலகினை வாழ்வியாமைக்கு இரங்கி உள்ளமுடைந்து புலம்புதலே நெய்தல், பிரிவே பாலை, பிரிந்தபோதும் ஒருவர் உட்கோளை ஒருவர் உட்கொண்டு இருத்தலே முல்லை. இருவரான இருமையானது ஒருமை அன்பாகப் படிப்படியாகப் பொருத்த முற்றுத் திருத்தம் பெறுகிற ஊடாட்டமே மருதம்; இந்த ஐந்திணையையும் ஒவ்வொன்றற்கு ஓரைந்து அதிகாரமாக 25 அதிகாரமாகக் காமத்துப்பாலில் வள்ளுவர் கூறுகிறார் என்பது ஒரு கொள்கை. களவும் கற்பும் என இரண்டு பகுதிகளாகக் கூறுகிறார் என்பது மற்றொரு கொள்கை. ஆண் கூற்று, பெண் கூற்று, இருவர் கூற்று எனக் கூறுகின்றார் என்பது மூன்றாம் கொள்கை இப்பாலினைக் காதல் காப்பியமாக்கிக் காதலர் கூற்றாக அமையும் நாடகநிலையில் வள்ளுவர் அமைத்துள்ளார் சங்கநூலில் வரும் அகப்பாட்டுக்களும் இவ்வாறு அமைந்தவையே ஆம் ஒவ்வொரு பாட்டும் ஒவ்வொரு சிறுகதையாய் விரிவதாம் அன்பே சிவமரம் என்ற உண்மையை விளக்குவதுபோல முறுகிவளரும் அன்பின் உயர்வை இங்கே காணலாம்

அறியாது கூடுதல், பிரிந்து கூடுதல், ஊடிக் கூடுதல் என வருதல் கொண்டே இக்காமத்துப் பாலுக்கும் வாத்சாயனர் காம சாத்திரத்துக்கும் ஒற்றுமை காண்போரும் உளர். வாத்சாயனர் உலகில் உள்ளதனைத் தீமை நன்மை என்ற பாகுபாடு இன்றி விளக்குகின்றார். வள்ளுவரோ என்றும் இனியது, நல்லது என நாட்டப்பட்டதாகிய இன்ப வாழ்வினைக் குறிக்கோள் வாழ்வாகக் கூறுகின்றார். இதன் பயனாகப் பண்டை இலக்கியங்களில் வரும் பரத்தையர்ப் பிரிவையும் நேராக எடுத்து மொழியாமல் மருதத்தை ஈருள்ளமும் ஒருள்ளமாகும் அரியதோர் ஊடாட்டமாகக் கண்டு, புலவி நுணுக்கம் முதலியன பாடுகிறார். எனவே, இங்கும் பிறர் கூறாத வகையில் காமசாத்திரம் எழுதுகிறார் வள்ளுவர். பழந்தமிழைப் போற்றுகின்றார் எனக் கூறலாமேனும் இங்குப் பரத்தைமை இல்லாப் புது வழியே கூறுகிறார் எனல் வேண்டும்.

திருக்குறளின் தூய்மையைப் புகழாத மேனாட்டார் இல்லை எனலாம். பல மொழிகளில் மொழி பெயர்க்கப் பெற்ற தமிழ் நூல் ஒன்றுண்டென்றால் அது திருக்குறளே ஆம் திருக்குறள் இரண்டடிகளால்-வெண்டளை வரும் ஏழு சீர்களால்-அமைந்த குறள் வெண்பாவால் ஆனமையின் இப்பெயர் பெற்றது. அடிமுதலில் எதுகை பெறுதலும், சிலபோது முதலடியில் முதற் சீரும் கடைச்சீரும் எதுகை பெறுதலும் காண்கிறோம் குறளுக்கு அமைந்த செப்பலோசை

உபதேசம்போல் ஒலிக்கிறது. சுருக்கமான சூத்திரம் போலவும் குற அமைகிறது சுருக்கமாகக் கூறினாலும் ஒவ்வொரு கருத்தினை பற்றியும் பத்துக்குறள் கொண்ட அதிகாரம் கூறுதலின் விளக்கமு உள்ளது

அதிகார அமைப்பு ஏறக்குறைய எங்கும் ஒன்றுபோலவே காணப்பெற்றாலும், இயல் அமைப்பு உரையாசிரியருக்கு உரையாசிரியர் மாறுபடக் காண்கிறோம் ஆனால், நூலின் முதற்குறளும் கடைசிக்குறளும் மட்டும் மாறவில்லை. இதனால் வள்ளுவர் தனிக்குறள்களாகப் பாடியவற்றைப் பின்வந்தார் அதிகாரங்களாகவும் இயல்களாகவும் அமைத்தார்கள் என்று கொள்வாரும் உண்டு ஆனால், ஆயிர ஆண்டுகளாக இன்று வழங்கும் அதிகார அமைப்பு நின்று நிலவுகிறது எனல வேண்டும பத்துப்பத்துக் குறளாக அதிகாரங்கள அமையும் அழகு இயற்கையாகத் தோன்றுவதால் அதிகாரப் பிரிவினைப் பிறரொருவர் புகுத்தியது என்பது நமபுவதற்குரியதன்று

இதற்குப் பழைய உரை எழுதினோர் பத்துப் பேர் எனபர் அவற்றில் பல மறைந்து போயின பரிதியார், காளிங்கர், மணக்குடவர், பரிமேலழகர் என்பார் உரைகள் வெளியாகி உள்ளன பரிமேலழகர் உரையே சிறந்தது எனப் பலா கொளகின்றனர் ஆராய்ச்சியாளா அவ்வுரையினையும் திருத்த முற்பட்டுள்ளனர் பரிபெருமாள், கவிராச பண்டிதர் முதலிய பின்வந்தோர் உரையும் வெளியாகி உள்ளன இந்நூலுக்கு இன்றும் பற்பல உரைகளும மொழிபெயர்ப்புக்களும வெளிவந்து கொண்டே இருக்கின்றன

# திருவள்ளுவர்

திருக்குறள் எழுதிய ஆசிரியரின் பெயர் திருவள்ளுவர் என வழங்குகிறது இவர் குலத்தால் வள்ளுவர் என்பர் சிலர். ஆதி என்கிற புலைச்சிக்கும பகவன் என்கிற பார்ப்பனருக்கும் இவர் பிறந்தார் என்று கபிலரகவல் என்ற நூல் கூறும் கபிலரகவல் பத்தொன்பதாம் நூற்றாண்டில் கட்டிவிட்டதொரு நூல்போலும் எனக் காலஞ் சென்ற பாம்பன் சுவாமிகள் கூறக்கேட்டதுண்டு. யாளிதத்தன் என்ற பார்பபனருக்கும் ஒரு புலைச்சிக்கும் பிறந்ததாக ஞானாமிர்தம் என்கிற பழைய நூல் வள்ளுவரைச் சுட்டுகின்றது திருவள்ளுவரையும் திருக்குறளையும் புகழ்ந்து பாடும் திருவள்ளுவ மாலை கீழ்வரும் பாடடில் வள்ளுவர் குலத்தைத்தான் சுட்டுகிறதோ என்ற ஐயமெழுகிறது

*அறமபொருள் இன்பம்வீடு என்னுமந் நான்கின்*
*திறமதெரிந்து செப்பிய தேவை - மறந்தேயும்*

*வள்ளுவன் என்பான்ஓர் பேதை அவன்வாய்ச்சொல்*
*கொள்ளார் அறிவுடை யார்*

- மாமூலனார்

இந்த மாலை திருவள்ளுவர் காலத்திலேயே எழுந்ததென நம்புவதற்கிலலை ஆனாலும் நேமிநாத உரையிலும கல்லாடத்திலும் இத்தனிப் பாடல் குறிக்கப் பெறுவதால் எண்ணூறு, தொள்ளாயிரம் ஆண்டுகளாக இந்நூல் வழங்கி வருகிறது எனலாம்

வள்ளுவர் சாதியினைப் பற்றிப் *பறையருள் குருவாகவும் அரசரின் ஆணையைத் தெரிவிப்போராகவும் உள்ள ஒரு சாதி* எனத் தமிழகராதி கூறும நிமித்தம பார்ததுச் சோதிடம் கூறும் நிமித்திகனை வள்ளுவன் என்ற சொல சீவக சிந்தாமணியில் சுட்டுகிறது (419) இன்றும் இச்சாதியினர் சோதிடம் கூறக காண்கிறோம ஞானவெட்டியான் என்ற நூலும் இந்தக் குலத்தைச் சேர்நத வள்ளுவர் எழுதியதாகத் தன்னைக் கூறிக் கொள்கிறது திருக்குறளைப் படிக்கின்ற சாதிச் செருக்குடையவர்களுக்கு அதன் பொது அறம் இத்தகைய கதைகளைக் கற்பித்துக காணத் தூண்டியது போலும

அரசர்க்கு உள்படு கருமத் தலைவர் வள்ளுவர் என்று பிங்கலந்தை கூறும். அரசன் ஆணையை யானைமேல் வைத்து முரசறைந்து தெரிவிக்கும் அரசியல் வெளியீட்டுத் தலைவர்களுக்கும் வள்ளுவர் என்ற பெயர் உண்டு என்பது மணிமேகலை முதலியவற்றால் நாம் அறிவதாம். அரசியல் நுட்பங்களை எல்லாம் கூறும் திருக்குறள் அத்தகையோர் அதிகாரியால் எழுதப்பட்டிருக்கலாம் என்று கருதுவது இயல்பேயாம். வல்லபர் என்ற வடமொழிச் சொல் வள்ளுவர் என்று திரிந்தது எனக் கூறுவாரும் உண்டு. திருக்குறள் செய்த ஆசிரியர் அவர் என்பதற்குமேல் வள்ளுவர் என்ற வழக்கால் நாம் வரையறுத்துக் கூறுவதற்கு ஒரு கருவியும் இல்லை.

ஏலேலசிங்கர் என்பவருடைய கப்பல்கள் கரை தட்டிப் போனபோது வள்ளுவர் தம் ஆற்றலால் அவற்றைக் கரை சேர்ப்பித்தார் என்று ஒரு கதையும் உண்டு. ஏலேலசிங்கர் என்ற தமிழ் அரசர் சிங்களத்தை கி.மு.இரண்டாம் நூற்றாண்டில் ஆண்டதனை நாம் அறிவோம். இனி ஏலாசாரியர் என்பது வந்தவாசிக்கு அடுத்த மலையில் கி.மு. முதல் நூற்றாண்டில் தவம் செய்துவந்த குந்தகுந்தாசாரியரின் பெயர் என்று சைனர் கூறுவர். இவர்தாம் திருக்குறளைச் செய்தார் என்றும் , இவருடைய மாணவராய் இல்லறத்தில் வாழ்ந்த வள்ளுவர் இதனை உலகிற்கு அறிவித்தனர் என்றும் திரு.சக்கரவர்த்தி நயினார் கூறுவர். இங்கும் உறுதி கூறுவதற்கு ஏற்ற பிற செய்திகள் நமக்குக் கிட்டுமாறு இல்லை.

இவருடைய மனைவியின் பெயர் வாசுகி என்றும், இவர் ஒரு நெசவுத் தொழிலாளி என்றும் கூறும் பல கதைகளும் உள.

இவர் சென்னையைச் சார்ந்த மயிலையில் வாழ்ந்தார் என்பது பழைய வழக்கு. வடமதுரைக்குக் கண்ணன் போலத் தென் மதுரைக்குத் திருவள்ளுவர் எனத் திருவள்ளுவமாலை பாடுகிறது. தமிழ் வளர்ந்த மதுரைக்குப் பெருமை தமிழ் வளர்த்த இவரால் வந்ததோடு மதுரையிலும் இவர் வாழ்ந்தார் என்றும் கூறுவர். மயிலையில் வாழும்போது கிறிஸ்துவின் அடியாராகிய தோமய்யர் (Saint Thomas) கிறிஸ்துவின் மலைச் சொற்பொழிவினை விளக்கியதனை வள்ளுவர் கேட்டிருக்கலாமென்று போப்பையர் கருதுகிறார்.

வள்ளுவருடைய கொள்கை யாதென்பதனை முன்னரே விளக்கியுள்ளோம் (பார்க்க: திருக்குறள்). இவரைச் சமணர் என்று

வற்புறுத்துவாரும் உண்டு. அம்மதத்தின் அடிப்படைக் கொள்கையாம் அஹிம்சை இங்கு விளங்குவது உண்மை ஆனால் எல்லோர்க்கும் ஒப்பமுடிந்த கொள்கைகளையே வற்புறுத்திப் பரப்ப வேண்டும் என்றெழுந்த தம் முயற்சியில் தாம் இன்ன மதத்தினர் என்பதைத் தெள்ளத் தெளிய வள்ளுவர் கூறாது செல்வதால் அவர் விரும்பாத ஒரு பட்டத்தை அவருக்குச் சூட்டுவதில் பயனில்லை தேவர் என்றும் நாயனார் என்றும் திருவள்ளுவரை வழங்குவதாலேயே அவரைச் சமணர் என்பதற்கில்லை அப்பெயர்கள் சமணரல்லாதார்க்கும் வழங்கக் காண்கிறோம் நீலகேசியின் உரையாசிரியர் பதினான்காம் நூற்றாண்டில் திருக்குறளை எமது ஒத்து என்கிறார். திருக்குறளில் இருந்து அவர் எடுத்துக் காட்டும் பகுதி சமண மறையின் கோட்பாடாக விளங்குகிறது என்ற அளவில் அவ்வுரைப் பகுதிக்குப் பொருள் கொள்ளுதல் கூடும். *அவிசொரிந்து* எனவரும் குறளின் கருத்து மனுவிலும் வருவதால் சமணப் பாட்டெனை முடிவு செய்வதற்கில்லை பிற்காலத்தே தாம் கொல்லாது வந்த புலாலைப் பௌத்தர்கள் உண்டு வாழ்ந்தாலும் புலால் உண்ணாமை பழங்காலப் பௌத்தர்கள் கைக்கொண்டதோர் அறம் என மணிமேகலை கூறும் சாதுவன் கதையால் அறிகிறோம். ஆதலின், *தினற் பொருட்டால்* என்ற குறள் பௌத்த மதத்தின் கண்டனம் என்று ஒரு தலையாகக் கொள்வதற்கில்லை. *அளறு இருள்* போன்ற நரகங்களின் பெயரும, *பரத சக்கரவர்த்தியே சமுதாயத்தை அமைத்தார்* என்பது போன்ற குறிப்பும், அவசர்ப்பிணி முதலிய காலப் பாகுபாட்டின் குறிப்பும, ஓர்ப்பு என்ற கருத்தும் திருக்குறளின் சமணமத அடிப்படையைச் சுட்டும் எனக் கொள்வதற்கு இடம் இருந்தாலும், இவற்றை எல்லோர்க்கும் பொதுவென்ற முறையில் உரையாசிரியர்கள் விளக்குகிறார்கள் என்பதை மறந்துவிட முடியாது திருக்குறளைப் பொதுமறை எனக் கூறுவதே திருக்குறளின் சிறப்பும் வள்ளுவரின் பெருமையும் ஆம்

இவர் காலத்தைப பற்றியும் முடிவான கருத்து ஒன்று விளங்குவதாகக் கூறுவதற்கில்லை வள்ளுவர் சங்க காலத்துப் புலவர்களுக்கு முந்தியவர் என்றும் பிந்தியவர் என்றும் இருதிறக் கொள்கைகள் வழங்குகின்றன. *உய்வில்லை செய்ந்நன்றி கொன்ற மகற்கு* என்பது குறள் *செய்தி கொன்றார்க்கு உய்திஇல்* என்பது புறம் *நாடாது நட்டலிற் கேடில்லை, நடடபின வீடில்லை* என்பது குறள் *பெரியோர் நாடி நட்பின் அல்லது நடடு நாடார்* என்பர் கபிலர் *நீரின்றமையாதுலகு* என்பது குறள் *நீரின்றமையா உலகம்* என்பர் கபிலா *பெயக்கண்டும் நஞ்சுண்டமைவர் நயத்தக்க நாகரிகம வேண்டுபவர்* எனபது குறள் *முந்தையிருநது*

*நட்டோர் கொடுப்பின் நஞ்சும் உண்பர் நனிநாகரிகர்* என்பது குறள். என்பது நற்றிணை. *ஈன்றபொழுதிற் பெரிதுவக்கும்* என்பது குறள். *ஈன்றஞான்றினும் பெரிதுவந்தனளே* என்பர் நச்செள்ளையார். சங்கப் புலவர்கள் திருக்குறளை எடுத்தாள்கின்றார்களா, திருவள்ளுவர் சங்கக் கருத்துக்களை எடுத்தாள்கிறாரா என்று எவ்வாறு கூறுவது? *அறம் பாடிற்றே* என்று கூறும் புறநானூறு அறம் என்பதால் வள்ளுவரின் திருக்குறளையே குறிக்கின்றது என்பாரும் உண்டு. திருவள்ளுவமாலை சங்கப்புலவர் ஒருங்கிருந்து பாடியது என்று இன்று நம்புவாரில்லை.

தொல்காப்பியத்தில் காணாத வழக்குகள் பாட்டிலும் தொகையிலும் அருகி வருபவையாய்த் திருக்குறளில் பயின்று வருதலால் திருக்குறள் சங்க நூல்களுக்குப் பின்னையது என்று கூறுவாரும் உளர். ஆல், இல் என்ற உருபுகளும், இன் என்பதன் பின்வரும் இல் என்ற உருபும், பொருட்டு, மாட்டு, வேண்டி முதலிய சொல்லுருபுகளும், உயர்திணையில் வரும் கள் விகுதியும் ஒருமையான துவ்வீற்றின் முன் வரும் எல்லாமும் என்பதும், உயர்திணைப் படர்க்கையில் வரும் எல்லாமும் என்பதும், மரியாதை ஒருமையாக வரும் நீர் என்பதும், வினையடிச் சொற்களின் பின்வரும் உகரச்சாரியையும் துணை வினையாக வரும் விடு முதலியனவும், ஈரேவலாக வரும் வி, பி என்பனவும் தன்மை ஒருமையில் வரும் அன் ஈறும், எதிர்மறை இடைநிலையாக வரும் இல் என்பதும், தன்மையிலேயும் முன்னிலையிலேயும் வரும் வியங்கோளும், செயப்பாட்டு வினையை அமைக்க வரும் படு என்பதும், செயின் என்னும் வினையெச்சப் பொருள் தரவரும் கால், ஆல், ஏல், இல், ஆனும், ஏனும் போன்ற விகுதிகளும், செயற்கென என்ற வினையெச்சத்தின் பொருளில் வரும் செய என்னும் எச்சமும், எதிர்கால வினையெச்ச ஈறாக வரும் பாக்கு என்பதும், வேண்டாம் எனப் பிற்காலத்தே மருவிய வேண்டாவாம் என்ற வடிவமும், நன்னூலார் அறிந்த எங்ஙனம் என்ற வடிவமும், போதர என்பதிலிருந்து அமைத்துக் கொண்டது போல் தோன்றும் போதாய் என்ற வடிவமும் குறளில் பயின்று வருகின்றமையால் சங்க காலத்திற்குக் குறள் பின்னையது என்பர். ஒருவந்தம் போன்ற அரிசமாசமும் (வடமொழியும் தமிழும் கலந்த தொகைச் சொல்) சங்ககால அகவல் ஓசையிலும் வேறான செப்பல் ஓசை வரும் வெண்பா யாப்புப் பயின்று வருவதும் பிற்கால வழக்கு என்பர். இவை எலாம் திருவள்ளுவர் புதியனவாகப் புகுத்தியன ஆகா. பேச்சு வழக்கிலோ, திசை மொழி வழக்கிலோ பயின்று வழங்குவன நாளடைவில் இலக்கிய வழக்கிலும் புகுவதே இயல்பு. இவை அனைத்தும் சங்ககாலம் அறியாதனவும்

அல்ல. திருவள்ளுவர் எல்லார்க்கும் பொதுவானதொரு நூலை எழுத வந்ததன் காரணமாகப் பேச்சு வழக்கில் உள்ளவற்றையும் தடையின்றித் தம் நூலில் ஆண்டார் என்று கொள்வதில் வியப்பொன்றும் இல்லை; வடமொழிச் சொற்கள் வருவதும் இந்த நோக்கத்தின் பயனே ஆம். வடமொழி என்று பார்ப்பான், மாதர் முதலிய சொற்களையும் காட்டுவாரும் உண்டு. எப்படிக் கணக்குப் பார்த்தாலும் நூற்றுக்கு இரண்டுக்குமேல் குறளில் வடமொழிச் சொற்கள் இருப்பதாகக் காணோம் பழைய சொல் வழக்காறும் அங்குக் காண்கிறோம். ஆய்தம், ஆன், வயின், மிசை, கண், உழி என்ற உருபுகளைப் பெறுகுவம், செய்யன்மின், செய்யற்க, வாழிய, வாழி, படாஅதி, அயர்கம், வாழ்வர், செய்கலான், அவலமிலர், உளரல்லர், பெறுதி, இழத்தும், உரைக்கோ, உவ, யான், யாம், சொல்லிசை அளபெடை, அன்சாரியை பெற்ற இறந்த காலம், அஃறிணை ஒருமை வினைகள், முதலிய வடிவங்கள் எதிர்மறை வியங்கோளாக வரும் அல்ஈறு, அல்ஈற்று வியங்கோள் முதலியன வருதலும், உன், உம் முதலிய முன்னிலைச் சொற்கள் வழங்காமையும் குறளின் பழைமையைக் காட்டும் என்பர். ஆதலின் சங்ககாலத்தின் முடிவிலோ அதனை ஒட்டியோ இந்நூல் எழுந்ததாகல் வேண்டும் என்று மட்டுமே கூறக்கூடும் சிலப்பதிகாரம், மணிமேகலை முதலிய பழைய நூல்கள் திருக்குறளை மேற்கோளாக எடுத்தாள்வதும் இதன் பழைமையை வற்புறுத்தும் வள்ளுவரால் சங்கம் அழிந்தது என்ற செவிவழிச் செய்தியும் உண்டு.

# காப்பியம்

கவி எழுதுவதெல்லாம் காப்பியமானாலும், காப்பியம் என்பது வால்மீகி, கம்பர் முதலியோர் எழுதிய இராமாயணம், இளங்கோவடிகள் எழுதிய சிலப்பதிகாரம், ஹோமர் எழுதிய இலியடு, ஆடிசி, வர்ஜில் எழுதிய ஈனிடு, மில்ட்டன் எழுதிய துறக்க நீக்கம் (Paradise Lost) முதலிய செய்யுளில் அமைந்த கதைவகைகளின் பெயராக அமைகிறது. அத்தகைய காப்பியம் எழுதுவதற்குத் தக்கதொரு சூழ்நிலை வேண்டும். பல இனத்தவர்கள் ஒன்று சேர்ந்து கலங்கிக் கலந்து அமைதியடையும்போது இத்தகைய காப்பியங்கள் எழக் காண்கிறோம். தனி மனிதனின் வீறு, வீரர்களின் சிறப்பு அப்பொழுது துலங்குகிறது. பலர்க்கும் கேட்க இனிக்கின்றது தோல்வியுற்ற பொழுதும் இது தோன்றலாம். 'ஒரு நாட்டின் குரலொலியாக எழுவதோடு சிறுசிறு எல்லைப்புறத்தவரின் இன்னிசையாகவும் சிலபோது காப்பியம் எழும். தேசிங்குராசன் கதை, பாஞ்சாலங்குறிச்சி கட்டபொம்மன் பாட்டு முதலியவை ஒருவகையால் காப்பிய நடையில் பயின்றவையே. தனி மனிதன் வீறு தான் காப்பியகாலத்தின் சிறப்பு. இவ்வீறு வீரமாகலாம்; அறத்தின் உயர்நிலை ஆகலாம்; கற்பின் திறமாகலாம். ஆனால், அங்கு எல்லோரும் ஒரு நிலை, எல்லோரும் ஒரு நிறை என்பதில்லை

பழங்காலத்தில் ஓய்வாக இருந்தபொழுதெல்லாம் விருந்துண்டு அமர்ந்து அரசரும், வள்ளல்களும் காப்பியச் செய்யுள் கேட்டுக் களித்து மகிழ்ந்தனர். கதையே செய்யுளாக ஓடியபொழுது இன்னோசையாக நிலைபெற்று, மறக்க முடியாதபடி மக்கள் மனத்தே ஊன்றி நின்றது. பொதுமக்கள் உள்ளத்தைக் கவர்ந்த கதைகள் பொதுமக்கள் காப்பியங்களாகவும் வளர்ந்தன. இத்தகைய காப்பியங்களைப் பாராட்டுவதால் தமக்குப் புகழ்வரும் எனக்கருதிய அரசர்கள் அதில் ஈடுபட்டதும் உண்டு. அரண்மனையிலிருந்து குடிசைக்கும், குடிசையிலிருந்து அரண்மனைக்குமாகப் புரண்டு புரண்டு வளர்ந்தோங்கியது காப்பியம்.

காப்பியக் கதை என ஒன்று இருந்தால் மட்டும் போதாது. அதற்கோர் உருவம் கொடுத்து, உயிர் கொடுத்து, அக்கதையில் மக்கள் சமூகத்திற்கேற்ப நிலையான பொருளினையும் புகட்டி, வற்புறுத்துமொரு கவர்ச்சியையும் தந்து, அதனை நிலை நிறுத்துவதற்குக் காப்பியக்

கவிஞன் வேண்டும். காப்பியம் என்பது ஒருவராக எழுதுவதன்று, பலர் எழுதியவற்றைச் சேர்ந்ததே என்று கூறுவன எல்லாம் நம்பமுடியாத கட்டுக்கதைகள் ஹோமரின் இலியடு, வால்மீகியின் இராமாயணம், இளங்கோவடிகளின் சிலப்பதிகாரம் என்ற இவை ஒருவர் எழுதியன அல்ல, முன்னரே பலர் எழுதியவற்றை ஒருவர் ஒன்று சேர்ந்து வைத்தவையே என்று கூறுவோர் இக்காப்பியங்களுள் ஒவ்வொன்றினும் தனித்தனி விளங்கும் ஒற்றுமைச் சிறப்பினை உணராதவர்களேயாம்

மக்கட் சமுதாயம் நாகரிகத்தில் முன்னேறி வரும்பொழுது பின்னாளில் இத்தகைய இயற்கைக் காப்பியங்கட்குத் தேவையில்லாது போயிற்று மக்களின் அடி மனத்திலிருந்து எழுந்த கட்டாயம் இவ்வாறு நீங்கவே, பாவலரும் கற்றோரும் அழகுணர்ச்சியில் ஈடுபட்டு, மிக முயன்று காப்பியம் பாடவும் சுவைக்கவும தொடங்கினர் இம்முயற்சி காரணமாகப் பின்னைய காவியங்களைச் செயற்கைக் காப்பியம் என்பதும் உண்டு இவ்வாறு எழுவனவே கல்விக் காப்பியங்களாம் இயற்கைக் காப்பியங்கள் கேள்விக் காப்பியங்களாக விளங்கின காப்பியமென்பது பொதுமக்களுடைய உள்ளத்தின் துடிப்பே எனலாம் கவி ஒருவன் பாடினாலும், பொதுமக்களின் உள்ளத்துடிப்பின் இன்னோசையே கவியாகப் பொங்கி வழிகிறது கல்விக் காப்பியம் கற்பதற்கென்றே எழுவது அஃது இயற்கைக் காப்பியம் போல நெகிழ்ந்து ஓடிப் பன்னிப் பன்னிப் பேசி வாழ்வதற்கில்லை கல்விக் காப்பியம் செறிவோடு சுருக்கமாகவும் அமைதல் வேண்டும் கல்விக் காப்பியத்தின் குறிக்கோள் கேளவிக் காப்பியத்தின் குறிக்கோள்போல் எல்லோருக்கும எளிதில விளங்குவதாக அமைவதில்லை. முன்னில்லாத புதிய கருத்துக்கள, புதிய குறிக்கோள்கள் மனித வளர்ச்சியின் காரணமாக எழுகின்றன ஹோமரிலும் கடவுளர் வருகின்றனர். ஆனால் மக்கள் வாழ்வாக எழுந்த அக்கதைக் கோட்டைக்கு அழகுக் கொடிகளாகவே அவர்கள் விளங்குகின்றனர் ஆனால், மில்ட்டனில் வரும் கடவுளோ அவர் எழுப்பும் கோட்டையும் கொத்தளமுமாக அமையும் கதைப பகுதிக்கெல்லாம் அடிப்படையும் உயிர் நிலையுமாக விளங்குகிறார் அப்படித்தான் வால்மீகி இராமாயணமும் கமபராமாயணமும் வேறுபடுகின்றன கேள்விக் காப்பியம் பாடவருவோர் கதைப பொருளைத் தேட வேண்டுவதில்லை மக்கள் விரும்பும் கதையையே பாடுகின்றனர் கல்விக் காப்பியம எழுதுவோரோ மககள் விருமபும கதை என ஒன்று இல்லாத நிலையில், தாமே தம காலத்திறகேறற பொருளைத தேடி, அதன் உருவாலும தம திறமையாலும மககள உளளத்தைக கவர்ந்து தம் உயிரின் குரலோடு

மக்களின் உள்ளத்தே எழும் இன்னோசையே ஒன்றாக இயையவைத்துப் பாடுகின்றார்.கேள்விக் காப்பியம் பாடுவதற்கென்றே எழுந்தது. கல்விக் காப்பியமோ படிப்பதற்கெனவே எழுந்தது. கல்விக் காப்பியங்களின் நடைப்போக்கு •உயர்ந்த நிலையை அடைந்துள்ளது. மற்றவகையில் இவ்விரண்டற்கும் வேற்றுமையில்லை எனலாம். தன் காலத்தின் சூழ்நிலையை அறிந்து, அப்போது தோன்றும் வாழ்வின் குறிக்கோளை, வாழ்வின் பொருளாழத்தைத் தக்கதொரு கதை வடிவில் உருப்படுத்தித் தருகின்றான் காப்பியப்புலவன். மக்கள் மனத்தைக் கவர்ந்த கதையினையே காப்பியப்புலவன் பாட வருவான். அது மிகப் பழையதொரு கதையாக இருக்கும். அதன் பழமை காரணமாக எதுவும் அங்கே நிகழலாம். கற்பனைக்கு ஒரு கட்டுப்பாடு அங்கு இல்லை. அதனாலே அதன் பொருளாழம் மிக மிகப் பெரிதாகும் ஆனால் அக்கதை நடந்தது போலவே தோன்றும். மக்களின் வாழ்க்கை அனுபவத்தை அங்கும் காணலாம்

காப்பியத்திற்கு இலக்கணம் கூறுவ்து எளிதன்று. வால்மீகி, கம்பன், இளங்கோவடிகள், ஹோமர், மில்ட்டன், வர்ஜில், தாசோ, காமியான் என்ற இவர்கள் எழுதியிருப்பன போன்றதே காப்பியம் என்று கூறுவதற்கு மேல் என்ன கூற முடியும்? இங்கெல்லாம் ஒரு கதை உண்டு. அக்கதையும் மிக அழகாகச் சொல்லப்பெறும். அக்கதையினூடே ஆழ்ந்த பொருளொன்று எழுந்தோங்கி விளங்கும். ஆனால், அப்பொருளைக் காப்பியப் புலவன் விளக்குவது உள்ளுறை உவமம் கூறுவதுபோன்று அன்று; தத்துவார்த்தம் கூறுவதுபோலவும் அன்று. வாழ்க்கையின் பொருள் இன்னது என்று சொல்லிக்காட்டுவதன்று காப்பியம். பொருளாழம் உள்ளதாக வாழ்க்கையைக் கலையில் உருப்படுத்திக் காட்டுவதே காப்பியம். அப்பொருளாழத்தோடு விளங்கும் வாழ்க்கையே கதையாக உருப்பெற்றுப் புத்துயிரோடு புகுந்து உலவுகிறது. அறம், பொருள், இன்பம், வீடு என்றவற்றின் பொருளாழமாகக் காப்பியக்கதை திரண்டு உருண்டு எழவேண்டுமென்பது இந்தியக்கொள்கை.

முன்னோர் மனத்தில் மகிழ்ந்து மலர்ந்து வீசும் இவை பிற்காலத்து மக்களுக்குப் பழையனவாய்ப் போவதில்லை பின் வருபவையும் முன் வந்தவற்றின் புதுமணமாகவே பொலிகின்றன. இதனால் காப்பியத்தின் கதை நடந்தது நடந்ததுபோலச் செல்லுகின்றது வாழ்க்கை அனுபவம் அடிப்படையில் மாறுபடுவதில்லை கதையில் வருவோன் பத்துத் தலையனானாலும், ஆயிரம் கையனானாலும்,பறப்பவனானாலும்,

மிதப்பவனானாலும், அசுரன் எனப் பெயர் பெற்றவனானாலும், அமரன் எனப் பெயர் பெற்றவனானாலும் மனிதப் பண்பும், மனித உள்ளமும், மனித வேட்கையும், மனிதக் குறிக்கோளும் கொண்டே அவன் விளங்குகிறான் உண்மை வரலாறு, பொருளாழம் காட்டும் காப்பியமாகாது வரலாற்று நிகழ்ச்சிகளில் மனித வாழ்க்கை ஊழ்த்து மலரும் போக்கினைக் காட்ட முடியாது. இச்செய்திகள் கற்பனைப்புடத்தில் தூய்மையாகிச் சுடர்விடும்பொழுது, பொருள் ஆழத்தோடு மின்னிப் பொலிகின்றன ஆனால் கவி கூறும் செய்யுட்பாக்கள் எல்லாம் காப்பியமாவதில்லை பொருளாழம் இல்லாதவற்றை, மக்களின் உறுதிப் பொருள் எல்லாம் விளக்காதவற்றைச் சிறுகாப்பியம் என்று இந்தியர் கூறுவர். இதனால் காப்பியத் தலைவன் மிகச் சிறந்தவனாக அமைதல் வேண்டும். இராமனோ, கண்ணகியோ, அக்கிலீஸோ, யுலிசீஸோ, சாத்தானோ இவ்வகையில சிறந்திருத்தல் கண்கூடு இப்பொருளாழமும் சிறந்த குறிக்கோளும தமக்கேற்ற அழகிய இன்னிசை கொண்ட சொற்கோவையையும் காப்பிய நடையையும் அமைத்துக்கொள்கின்றன அண்டம முழுதும நின்று விளங்கும் பொருள் ஆழத்தினைக் காப்பியம் விளக்க வரும்பொழுது அதனை வற்புறுத்தவேண்டிய இயற்கைக்கு அப்பாற்பட்ட நிகழ்ச்சிகளும் வந்தே தீரும். அன்றாட வாழ்வில் அறிவுக்கும் எட்டாத உண்மையே காப்பியம் கூறிவருகிறது என்பதனை இவை வற்புறுத்துகின்றன இருந்தாலும், மனிதப் பண்பிற்கு மாறாகக் காப்பியம் நடைபெறுவதில்லை மனிதப் போக்கினையும் தூயதாக்கிச் சூழ்நிலைகளையும் வேண்டிய அளவில் திருத்திப் பொருத்திக் கதையை நடத்துவது காப்பியப் புலவனுக்கே இயலுவதொன்றாகும்.

ஹோமர் என்னும் கிரேக்கப் புலவர் காப்பியம் என்ற இலக்கிய வகையை மேனாட்டுக்குத் தந்தார் இந்திய நாட்டில் வால்மீகி அந்த இலக்கிய வகையைத் தந்ததோடு அதன் தலைசிறந்த நிலையையும் விளக்கிக் காட்டினார். இளங்கோவடிகளும் கம்பனும் காப்பியத்தின் நோக்கினைத் தெள்ளத் தெளியச் சீர்பெறு நிலையில் வைத்து விளக்கிக் காட்டினர் காப்பியத்தில் இங்கு ஒரு பாட்டும் அங்கு ஒரு பாட்டும், இங்கொரு பேச்சும் அங்கொரு பேச்சும், இங்கொரு கதையும் அங்கொரு கதையும் எடுத்துக்காட்டிப் பயனில்லை. காப்பியம் முழுவதையும் ஒன்றாக வைத்துக் காணுதல்வேண்டும். துன்பம் நிறைந்த இவ்வாழ்க்கை நரகந்தான் ஆனால், அங்கும் வாழ்க்கையின் பொருளைக் காண்போர் அந்நரகத்தையும் நாடக உலகமாகக்கொண்டு வாழ்ந்து செலவா அந்த வகையில் நரகத்தை அடக்கி ஆள்வர்

ஹோமரின் காப்பியத்தில் எதிர் நிற்கும் இயற்கைக்கு அடங்கி ஒடுங்காத மக்களின் மனத்தின் ஊக்கமும், உறுதியும், வீறும், திறமும் விளங்குகின்றன. அத்தகைய மக்கள் மனம் கடவுள் மனமாகத் திகழ்வதனை இராமாயணத்தில் காண்கிறோம். மக்களில் ஒருத்தியான கண்ணகி அவ்வழியே கடவுளரில் ஒருத்தி ஆகின்றாள். பாத்திரங்களின் சிறப்பு, காப்பியத்தில் விளங்காமல் இல்லை. ஆனால், இச்சிறப்பினும் உயர்ந்தது முன்கூறிய அடிப்படை வால்மீகி எழுதிய காப்பியத்தில் இராமன் கடவுளேயாம். ஆனால், வால்மீகியைப் படிக்கும்பொழுது அதனை அடிக்கடி மறந்துவிடுகிறோம். கம்பனைப் படிக்கும்பொழுதோ ஒவ்வொரு பாட்டிலும் அதை நினைத்துக் கொண்டே இருக்கச் செய்கின்றான் கம்பன். விதியோடு போராடுவதே வாழ்க்கை என்பது போக, எல்லாமாய் விளங்கும் கடவுள் துணை செய்ய, எதிர்ப்பினை வென்று கடவுள் வாழ்வு வாழ்வதே மனித வாழ்வின் குறிக்கோள் என்பது கம்பனில் நன்கு விளங்குகிறது விதியில் நம்பிக்கை ஹோமர் காலத்து இருந்தது போலப் பிற்காலத்தில் இருந்ததில்லை, ஆதலின், மனித வாழ்க்கையின் உயர்வையும், அங்கு எழுந்து பொங்கும் விடுதலை உணர்ச்சியையும், கடவுள் அருளோடு ஒன்றுபடுத்திக் காட்டுவது கம்பன் கவித்திறனேயாம். மில்ட்டனும் இவ்வாறு செய்ய முயல்கின்றான். விதியும் மனிதனுமாகப் போராடும் இரண்டாட்டம் மாறிக் கடவுளும் நாமுமாகத் தீமையை, நம் உள்ளத்தெல்லாம் ஓங்குகிற கொடுமையை அடக்கியாண்டு, உலகினை உய்வித்து நாமும் உய்வதே வாழ்க்கையின் முடிந்த முடிவு என்பது கம்பனது காப்பியத்தில் நன்கு விளங்குகிறது. கல்விக் காப்பியங்களில் சொல்லெல்லாம், சொற்கோவையெல்லாம், பாட்டின் ஓசையெல்லாம், கதையின் போக்கெல்லாம் இந்த உண்மையை நிலைநாட்ட உதவுகின்ற ஒரு பெருந்திறனைக் கம்பனில் காண்கிறோம். எதிர்த்து நின்ற விதி நம்மோடு ஒத்துழைக்கும் உயிர்த் தலைவனாய் விளங்குவது ஒவ்வொரு பாட்டிலும் உறுதி தருகின்றது. கம்பன் செய்த புரட்சி இவ்வகையில் பெரிது. கடவுளும் மனிதனும் ஒன்றாகி ஒத்துழைத்து உயர்கின்றனர் எனலாம்.

காதல் என்பது ஹோமரில் சிறப்பதில்லை. அங்கு வரும் ஹெலன் ஓர் அழகி. ஆனால் கற்புக்கரசியல்லள். வர்ஜிலில் டைடோவின் (Dido) காதல் தூயது; ஆனால் அது புறக்கணிக்கப்பெற்று வாடி வதங்குகிறது. இந்தியக் காவியங்களில் கற்புக்கரசியே காவியத்தின் உயிர்நிலையாக அமைகின்றாள். கண்ணகியின் வழியே சீதையைப் படைத்துத் தந்தது தமிழ்க் காப்பியம்.

மேனாட்டுக் காப்பியங்களுக்கும் கீழ்நாட்டுக் காப்பியங்களுக்கும் கற்புக்கரசியை உயிர்நிலையாக அமைப்பதில் மட்டுமேயன்றி மற்றொரு வகையிலும் வேற்றுமை உண்டு. உலகுபோல் பரந்து விரிவதே கீழ்நாட்டுக் காப்பியம் காப்பியத் தலைவன் பிறந்தது முதல்-ஏன் பிறப்பதற்குமுன் முதல்-ஏன் பிறந்தான் என்பதையும் குறிப்பிட்டு விளக்கிச் செல்வது கீழ்நாட்டுக் காப்பியம் மேனாட்டுக் காப்பியமோ அவ்வாறன்று. மக்களுடைய உள்ளத்தைக் கவர்வதையே நோக்கமாகக்கொண்டு கதையில் எந்தப் பகுதி இனியதோ, உணர்ச்சி உடையதோ அதைக் கூறத்தொடங்கிக் கதையின் நடுவே குதித்துப் பிறவற்றை வேண்டிய இடத்தே விளக்கி முடிக்கும். பிற்காலத்தே பொருள் ஆழமுள்ள காப்பியம் எழுதுவது அருமையாயிற்று. காப்பியத்தை நாடகமாக அமைக்கின்ற முயற்சியை ஹார்டி என்பாரின் டைனாஸ்ட்ஸ் (Dynasts) என்ற இலக்கியத்தில் காண்கிறோம். கம்பராமாயணத்தைக் கம்பநாடகம் என்றும், சிலப்பதிகாரத்தை நாடகக் காப்பியம் என்றும் கூறுவதனை இங்கு நினைவில் வைத்துக் கொள்ளவேண்டும்

# சூளாமணி

தமிழில் ஐஞ்சிறு காப்பியங்கள் என வழங்குவனவற்றுள் தலையாயது; இது ஒரு சமணக் காப்பியம். இதன் ஆசிரியர் தோலாமொழித்தேவர். இந்தக்காப்பியத்தின் கதை ஸ்ரீபுராணத்தில் வந்துள்ளது. குணபத்திரர் கி.பி.898-ல் ஸ்ரீபுராணத்தை வடமொழியிற் பாடினார். தமிழ் நூலில் வரும் பெயர்கள் தமிழ் நூலுக்கு ஏற்பவோ, பிராகிருத முறைப்படியோ மாறியுள்ளன. திருபிருஷ்டன் எனும் பெயர் திவிட்டன் என்றாகிறது அச்வக்கிரீவன் எனும் பெயர் அச்சுவகண்டன் என வருகிறது. ஸ்வயம்பிரபா சயம்பவையாகிறாள். இது வித்தியாதரர் கதையும் மக்கள் கதையும் ஆகும்.

கண்ணனும் பலராமனும் போன்றவர் திவிட்டனும் விசயனும் அச்சுவகண்டன் பௌண்டர வாசுதேவன் போன்றவன். பயாபதியின் மகனாகிய திவிட்டன் தனக்கு வணங்காமை காரணமாக அச்சுவகண்டன் என்பவன் கோபம் கொண்டு அனுப்பிய மாயச்சிங்கம் திவிட்டனுக்கு அஞ்சி ஓடிவிட, குகையில் இருந்து வந்த உண்மைச் சிங்கத்தைத் திவிட்டன் கொன்று, விஞ்சையர் மகளாம் சயம்பவையை மணக்கின்றான். திவிட்டனுடைய படையும் அச்சுவகண்டன் படையும் போரிட, அச்சுவகண்டன் இறக்கின்றான். திவிட்டன் கோடிக் குன்றெடுத்து வாசுதேவன் எனக் காட்டுகிறான். திவிட்டனுக்கு சோதிமாலை என்ற பெண் பிறக்க, அந்தச் சோதிமாலை என்ற பெண்ணின் சுயம்வரத்தில் தன் மாமன் மகன் அமுதகேசனை அவள் மாலையிடுகிறாள். அந்த மணமகனது தங்கையும் திவிட்டன் மகன் விசயனையே சுயம்வரத்தில் மாலையிடுகிறாள். பயாபதி அரசன் துறவு மேற்கொள்ளுகிறான். உலகுக்கொரு சூளாமணியாகின்றான்.

*பாடும் முறை:* இந்த வரலாற்றினை மிகமிக இனிக்கும் தமிழிற் பாடுகின்றார் தோலாமொழித்தேவர். அரசியல் நீதிகள், தூது செல்லும் முறை, குடிகளின் திருவிழா, வேனில் விழா, மந்திரிகள் சபை, சுயம்வரம், தெய்வப்போர், மாயப்போர் முதலிய எல்லாம் வர ஆசிரியர் காப்பியத்தை இயற்றுகின்றார். தமிழ் முறைப்படி ஐந்திணை வளங்கூறி, நாடு நகரம் கூறினாலும் வடமொழி வருணனைகளின் நிழலையும் இங்கே காணலாம் இவர் பாடும் ஐந்திணை வருணனைகளைச் சேக்கிழார் பின்பற்றுகிறார். சுயம்வரச் சருக்கத்தில் அந்தணக் கோமாளி (விதூஷகன்) வடமொழி நூல்களில் வருவது போல வந்து மோதகத்திற்கு

அழுது புலம்பி நம்மைச் சிரிக்க வைக்கின்றான். முடிவிலே துறவுச் சருக்கத்தோடும், முத்திச் சருக்கத்தோடும் இந்த நூல் முடிவினை அடைகின்றது. தாம் உலகிலும், வடமொழியிலும், தென்மொழியிலும், பல இடங்களிலும் கண்ட அழகுகளின் உண்மைகளை எல்லாம் அமைத்துத் தோலாமொழித்தேவர் இனிக்க இனிக்கப் பாடுகின்றார். வாசுதேவனும், பிரதி வாசுதேவனுமான போராட்டத்தைக் கூறும் இந்நூல் அதற்கேற்ப இயற்கைக்கு அப்பாற்பட்ட நிலையில் செல்கிறது. இருந்தாலும் இயற்கையின் அழகும், மக்கள் உள்ளத்தெழுச்சிகளும் இயற்கைக்கு மாறாமல் உள்ளத்தைக் கவர்ந்து செல்லும் முறையில் அமைந்துள்ளன இவ்வளவு இனிமையாகச் செல்லும் செய்யுட்கள் தமிழில் சிலவே எனலாம் இவ்வாறு நோக்கும்போது இந்நூல் சிந்தாமணிக்குப் பிந்தியதே எனல்வேண்டும்

*கண்ணன்.* திருமாலின் அவதாரமாகக் கருதப்படும் கண்ணன் தமிழர் உள்ளததைக் கவர்ந்தான். பக்தி இயக்கம் கரைபுரண்டோடிய பல்லவ காலததில் கண்ணனைப் பற்றிய பாடல்கள் சிறந்த இலக்கியமாயின. கண்ணன் கதை சமணரிடையே வழங்குவதனைத் தோலாமொழித் தேவர் காப்பியமாக்கிக் காட்டுகின்றார் அரசன் திருமாலே என நம்பிய உலகத்தில் அரசனது தெய்வத் தன்மையும், ஆற்றலும், கலையும், அழகும், இன்பமும் எல்லாம் விளங்கத் தோலாமொழித்தேவர் பாடி முடிக்கின்றார் வாழ்க்கையின் முடிவில் துறவு மேற்கொள்ளும் கொள்கை அரசனது சிறப்பெனக் காளிதாசன் இரகுவமிசத்தில் பாடுகிறார் துறவுநிலை ஒவ்வொருவருக்கும் எழவேண்டுவதொரு நிலையே என்று காட்டுவார் போலத் தோலாமொழியார் துறவினையும் முத்தியினையும் கூறிக் காப்பியத்தை முடிக்கின்றார்.

*குறிக்கோள்* சிந்தாமணியிற்போலக் குறிக்கோளின் ஆழம் சூளாமணியில் இல்லை எனலாம பயாபதி உலகின் சூளாமணியாதலைக் கூறுவதே இந்தக் காப்பியம் என்று கொள்வர் எனினும் இவன் வரலாற்றை இவன் மகனான திவிட்டன் வரலாறு மழுங்கச் செய்துவிடுகிறது திவிட்டன் வரலாறு மனத்தில் வேரூன்றுவது போலப் பயாபதியின் வரலாறு வேரூன்றி விடுகிறது என்று கூறுவதற்கில்லை வாசுதேவர் இனி எதிர்காலத்தில், தான் நரகத்திலிருந்து முத்திபெற வேண்டுதலின் சிந்தாமணி ஆசிரியர் சீவகனைக் கூறியதுபோலத் திவிட்டன முத்தி அடைந்ததாகச் சூளாமணி ஆசிரியர் கூறுவதற்கில்லை. இநத இடர்ப்பாடு கதையிலேயே அமைந்து கிடக்கிறது திவிட்டன் என்ற மகனைப பெறற பெருமையும் பயாபதியினுடையதேயாம் அந்த

வகையில் செல்வமெலாம் பெற்ற பயாபதியின் செல்வத்தின் சிறப்பினைக் கூறுவதற்கே திவிட்டன் வருகிறான் என்று கொள்ளுதல் வேண்டும். ஆனால் அவனே தன்னுடைய வியத்தகு செயல்களால் நம் மனத்தைக் கவரும்போது பயாபதி என்ன ஆவான்? கண்ணனைப் பாடுவதுபோல் திவிட்டனைப் பாடவந்த புலவர் பெருமான், கண்ணன் நம் உள்ளத்தை உருக்குவதுபோல் திவிட்டன் உருக்குவதாகப் பாடுவதற்கு இடமில்லாமற் போகின்றது.

*காப்பிய உறுப்புக்களின் சிறப்பு:* இவ்வாறு காப்பியம் முழுவதும் செல்லும் பாவிகப்பண்பு பொதுவான புராணக் கதையளவிலும் கூடக் குறிக்கோள் ஆழம் இல்லாமற் போனாலும் ஒவ்வொரு செய்யுளும் ஒவ்வொரு படலமும் முறையே முழுமுழு மணியாகவும் சிறந்த மணிமாலையாகவும் நம் காதையும் கருத்தையும் கவர்ந்து நம்மை இன்பத்தில் ஆழ்த்துகின்றன. வடநூல்களின் எதிரொலி இங்கே கேட்டாலும் அவையெல்லாம் இவர் பாடும் இனிய தமிழோசையில் தமிழொடு தமிழாகக் கலந்துவிடுகின்றன

*இயற்கை:* இவர் இயற்கை அழகினைப் பாடும் வழியே புதியதாகும். இவர் பாட்டில் காடும் சிறந்த தொரு திருமண மண்டபமாகத் தெரியும்படி நகரவாழ்வின் நன்மையெல்லாம் ஒருங்கே திரண்ட நாகரிக நிலையிலமைத்துப் பாடுகிறார். பூக்களின் திணை மயக்கம் கொண்டே துறக்கவாழ்வைச் சுட்டிக்காட்டுகின்றார். இவ்வாறு செயற்கை அழகெலாம் தோன்ற இயற்கை வீற்றிருப்பது இவர் காண்பதொரு புதுக்காட்சியாம்.

*காலம்:* இந்த ஆசிரியரின் பெயர் தோலாமொழித்தேவர். கன்னட நாட்டுச் சிரவணபெள்குளக் கல்வெட்டொன்று வடமொழியில் 898-ல் உத்தரபுராணம் பாடிய குணபத்திரரும், அவருக்குப்பின் சிந்தாமணி ஆசிரியரும், அவருக்குப் பின் சூளாமணி ஆசிரியரான ஸ்ரீ வர்த்தமான தேவரும் வந்தனர் என்று கூறும். அங்கே வர்த்தமான தேவர் என்ற பெயர் சூளாமணி ஆசிரியர்க்கு வழங்குகிறது ஆனால் தமிழில் இவருக்குத் தோலாமொழித்தேவர் என்ற பெயரே வழங்குகிறது இந்தக் காப்பியத்தில், *தோலா நாவில் சுச்சுதன்* (308), *ஆர்க்கும் தோலாதாய்* (1473) என வழங்கிய அருமை நோக்கி இவரே தோலாமொழியார் எனப் பேர் பெற்றார் என்பாரும் உண்டு சிரவணபெள்குளக் கல்வெட்டு, தமிழ் நூலைத்தான் குறிக்கின்றது என்பது தெளிவாகக்

கூறுமுடியாமையால் அது கொண்டு இந்த நூலின் காலத்தை வரையறுத்தலாகாது என்பர் ஒரு சிலர்

சூளாமணியின் பாயிரம் இந்த நூல் *சேந்தனென்னும் தூமாண் தமிழின் கிழவன்* அவையுள் அரங்கேற்றப் பெற்றதாகக் கூறும் தமிழின் கிழவன் என்பதால் இவனைப் பாண்டியனென்று சிலர் கொள்வர். சேந்தன் என்ற பாண்டியன் ஒருவனே உளன். ஜெயந்தவர்மன் அவனி சூளாமணி மாறவர்மன் என்ற பாண்டியன் கூன் பாண்டியனின் தந்தை. ஏழாம் நூற்றாண்டின் முற்பகுதியில் அரசாண்டவன் அதனால் 7ஆம் நூற்றாண்டையது இந்த நூல் என்பர் அவனி சூளாமணி என்ற அரசன் பெயராலேயே இந்த நூலும் சூளாமணி என வழங்கியது என்றும் கூறுவர் ஆனால் இந்த நூல் தன்மையால் சூளாமணி எனப் பெயர் பெற்றதென்று மயிலைநாதர் முதலானோர் பின்னாளில் கூறலாயினர் இந்த நூலில் தலைவனாகிய திவிட்டனது தந்தையாம் பயாபதியும் சூளாமணி என்றே இந்நூ.லில் புகழப் பெறுகின்றான் உலகின் முடிக்கொரு சூளாமணியாகினான் எனறு ஆசிரியர் முடிக்கிறார் ஆசிரியர் இரத்தின பல்லவ நகரத்தினையும் சூளாமணி என்கிறார் வேறோர் அரசனையும் சூளாமணி என்கிறார் திவிட்டன் குன்றெடுத்து நின்றபோது முடிமேல் சூளாமணி ஒளி வீசி முளைத்ததென்று கூறுகிறார் இவ்வாறு பல இடங்களிலும் சூளாமணி என வரும் அழகிய சொற்றொடரால் இந்நூல் இப்பெயர் பெற்றதென்றும் கூறுவர்

அன்றியும், தனிப்பாடல் ஒன்று *விசயன் கார்வெட்டி அரையன்* என்பவன் கேட்டதற்கேற்பத் தோலாமொழியார் சூளாமணியை இயற்றினார் என்று கூறும் கார்வெட்டி, காடுவெட்டி என்பதன் மரூஉ வாகும் காடுவெட்டி என்பது பல்லவருடைய பெயர் விசயன் என்பது இயற்பெயராகாமல் வெற்றியுடையோன் என்பதைமட்டும் குறிப்பதாகலாம். இவ்வாறு கொண்டால் பாயிரத்தில் குறிப்பிட்ட சேந்தனே இவனாகலாம் எந்நாளிலும் தமிழின் கிழவன் பாண்டியனே என்று கொள்வதற்கில்லை. சேந்தன் திவாகரம் முதலியவற்றை இயற்றுவதற்கு உதவிய புரவலனைப்போல் சேந்தன் எனப் பல்லவர் குலத்தில் தோன்றிய வேறொரு சிற்றரசன் சூளாமணியைப் பாடுவதற்கு உதவி இருக்கலாம் அப்படியானால் சிரவணபெள்குளக் கல்வெட்டு தமிழ் நூலையே குறிப்பதாகலாம் இந்தத் தனிப் பாடலே தோலாமொழித் தேவரைத் *தருமதீர்த்தன் திருவடித் தொடர்புடையார்* என்றும கூறுகிறது எனவே இந்த நூல் ஏழாம் நூற்றாண்டுக்கு முற்படாதது என்லாம் பத்தாம் நூற்றாண்டில் இது யாப்பருங்கல

விருத்தியுரையில் எடுத்தாளப் பெறுகிறது ஆதலால், முந்திய காலத்தைக் கூறினும் பொருந்தும்.

*பெருங்காப்பியம்:* ஐம்பெருங்காப்பியத்தில் இது வைத்துக் கூறப்பெறாமல் ஐஞ்சிறு காப்பியத்தில் இது ஒன்றாக வைத்துக் கூறப்படுவது பெரிய புதிரேயாம். குண்டலகேசி போன்று சமய வாதத்தைக் கூறும் காப்பியத்திலும் இது சிறந்தது என்பதிலோ வேறு சிறு காப்பியங்களாகக் கூறப்பெறுவனவற்றோடு ஒருங்கு வைத்து எண்ணும் சிறப்பின்மை இந்த நூலில் இல்லை என்பதிலோ எவருக்கும் ஐயமிருப்பதற்கு இல்லை அறம், பொருள், இன்பம், வீடு என்ற நாற்பொருளுந் தரப்பாடுவதே பெருங்காப்பியம் என்றும் அவற்றுள் ஒன்று குறைய பாடுவது சிறு காப்பியம் என்றும் கூறும் முறையில் பார்த்தாலும் இது பெருங்காப்பியமே ஆவதன்றிச் சிறுகாப்பியமாகாது சிந்தாமணிக்குப் பின்வைத்து வழங்கத்தக்க சிறப்பு இதற்கே உண்டு

# தமிழ்ப் புராணங்கள்

புராணம் என்பதற்குப் பழமை என்பது பொருள் புராணங்கள் வடமொழியில் வேதம, இதிகாசம் என்று இவற்றிற்கு அடுத்து வைத்துப் பாராட்டப்படுகின்றன வடமொழிப் புராணங்களில் பல, தமிழில் மொழி பெயர்க்கப் பட்டுள்ளன இவ்வாறு சிறப்பாக மொழிபெயர்ப்பு எழுந்தது 15-16ஆம் நூற்றாண்டுகளிலிருந்துதான் 1564-ல் முடிசூடின அதிவீரராம பாண்டியர் கூர்ம புராணம், இலிங்கபுராணம், கந்த புராணத்தில் ஒரு பகுதியாகிய காசிகண்டம் முதலியவற்றை மொழி பெயர்த்தார் அவருடைய உறவினரான வரதுங்கராம பாண்டியர் பிரமோத்தர காண்டத்தைத் தமிழ்ப்படுத்தினார் விஜய நகர இந்து சாம்ராச்சியம பரவியதால் எழுந்த நன்மைகளில் இதுவும் ஒன்று எனலாம பாண்டியர்களான இந்தப் பாவாணர்களின் பாக்கள், மொழிபெயர்ப்பு என்று தோன்றாதபடி செம்பாகமாக அமைந்துள்ளன 17ஆம நூற்றாண்டிலே வீரராகவ முதலியாரின் மாணவர் ஒருவர் கந்த புராண கசசியப்பர் என்ற பெயரோடு தமிழ் நாவலர் சரிதையில் வரக் காண்கிறோம். தமிழில வழஙகும கந்த புராணத்தை எழுதியவர் இவரேயானால் அதுவும 16ஆம நூற்றாண்டுக்குப பின்னையதே எனலாம் ஆனால் சிலர் அது வீரசோழியத்திற்கு முன்னதாகவே 8ஆம் நூற்றாண்டில் தோன்றியது என்று கூறுகின்றனர் இந்த நூல் கமப ராமாயணத்தைப் போல தமிழ் நாட்டிலும அதறகும மேலாக இலங்கையிலும் மிக விருமபிப் படிக்கப்பட்டு வரக் காண்கிறோம் இதன் கதைப் போக்கும் பாடடின இன்பமும் எல்லோர் மனத்தையும கவரும கந்த புராணத்தின் பிற்பகுதியான உபதேச காண்டத்தைக் கச்சியப்பரின் சீடராக விளங்கிய கோனேரியப்பர் தமிழில் மொழிபெயர்த்தார் இவருக்குப் பின், ஞானவரோதய பண்டாரம் என்பவர் (14ஆம் நூ) உபதேச காண்டத்தைத் தமிழில் மொழிபெயர்த்தார் அதே 16ஆம் நூற்றாண்டிலேயே வடமலையப்பர் என்ற அதிகாரியொருவர் மச்ச புராணத்தைத் தமிழில் பாடினார் சிவரகசிய காண்டத்தைச் சிவரகசியம என்ற பெயரோடு ஒப்பிலாமணிப் புலவர் பாடினார் 18ஆம நூறறாண்டில் பார்க்கவ புராணம் என்ற உப புராணத்தை விநாயக புராணம் எனத் திருவாவடுதுறை ஆதீனத்தில் சிவஞான முனிவரின் மாணவராக விளங்கிய கச்சியப்பர் பாடிச் சென்னையில் மணலி சின்னையா முதலியாா ஆதாவில அரங்கேறறினார் 19ஆம நூறறாண்டின் தலைசிறநத பாவாணராகிய மகாவித்துவான்

மீனாட்சிசுந்தரம் பிள்ளை சூதசங்கிதையைத் தமிழ்ப் பாட்டாக மொழிபெயர்த்தார். இதனையே தத்துவராயர் 15ஆம நூற்றாண்டில் பிரமகீதை என மொழி பெயர்த்துள்ளார். வடமொழிக்கு நேரான மொழி பெயர்ப்புக்களாக இவை அமைந்துள்ளது பாராட்டத்தக்கது பாகவதம், பதினெண் புராணங்களில் ஒன்று. வேம்பத்தூர் அந்தணப் புலவரின் கூட்டத்தைச் சேர்ந்த செவ்வைச் சூடுவார், இலக்கியச் செறிவெலாம் தோன்ற 16ஆம் நூற்றாண்டிலே இதனைத் தமிழில் மொழிபெயர்த்தார் பின்னர், இதனையே நெல்லையில் பிறந்த வரதராஜ அய்யங்கார் வாசுதேவ கதை என்ற பெயரோடு விரிந்த அளவில் செம்பாகமாக எளிய தமிழ்ப பாக்களில் பாடியுள்ளார் பாம்பன் சுவாமிகள் குமாரசுவாமியம் என்ற கந்தபுராண மொழிபெயர்ப்பு ஒன்று தந்துள்ளார்

ஆனால், தமிழ் நாடடில் புராணஙகள என்றால் தல புராணங்களே நினைவுக்கு வருகின்றன அவை தமிழ் இலக்கியத்தில் சிறந்ததோர் இடம் பெறுகின்றன. *கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம* என்று ஔவையார் கூறியிருப்பதற்கு ஏற்பப் பெரும்பாலும் ஒவ்வோர் ஊரிலும் ஒவ்வொரு கோயில் இருக்கத் தமிழ் நாட்டில் காண்கிறோம் அக்கோயிலைப் பற்றி ஆங்காங்கே வழங்கும் கதைகளை யெல்லாம் வைத்துத் தமிழ் பாவாணர்கள் புராணங்கள் பாடும்படி மக்கள் செய்துகொண்டனர் அவற்றிற்கு விரிவுரை கூறும் சொற்பொழிவாளர்கள் புராணப் பிரசங்கிகள் என்று இன்றும் பாராட்டப் படுகின்றனர். கோயிற் குருக்கண்மார் இந்த வரலாறுகளை வடமொழியில் எழுதிவைத்திருந்ததுண்டு புராணம் பாடிய தமிழ்ப் பாவலர்கள் இவற்றையும் பயன்படுத்திக் கொண்டனர். ஆனால், இந்த வடமொழி மான்மியங்கள் ஊரின் பெயர் முதலியவற்றிற்குப் பொருள் தெரியாதபோதெல்லாம் தமக்குத் தெரிந்தவாறு பொருள் கூறுகின்றன ஓய்மான் புலியூர் என்பது ஓய்மான் என்ற வள்ளல் பெயரால் வழங்கிய ஓய்மான் நாட்டில் உள்ள ஒரு புலியூர். அஃது ஓமாம் புலியூர் என மருவியதும் அவர்கள் ஓமம் வளர்த்த கதையினைக் கட்டிவிடுகின்றனர் எறும்பி என்றால் மலை, மலையுள்ள ஊர் எறும்பியூர் இது அரிய தமிழ் வழக்கு இது விளங்காதபோது, *எறும்பு ஊர்* பிபீலிகாபுரி என்று மொழி பெயர்த்து அவர்கள் மயங்குவதனையும் காண்கிறோம்.

நாடு போரில் புழுங்கிப் பட்டினியால் வாடி, உரிமை இழந்து, அறியாமை இருளில் மூழ்கிக் கிடந்தபோழ்து இபபுராணங்கள் மக்கள் கருத்தழிந்து சாகாதபடி ஊக்கம் கொடுத்துத் தட்டி எழுப்பிப் புத்துயிரோடு மகிழ்ந்து உலவிவரச் செய்தன சாவியாய்க் கிடந்த

பட்டிகள் என்று தோன்றாதபடி ஒவ்வோர் ஊரினையும் இப்புலவர் கடவுளின் தனி அருள்பெற்ற நிலையங்கள் என்றும், இந்திரனும், சூரியனும், வருணனும், வாயுவும், சந்திரனும், கிரகங்களும் வந்து வழிபாடு செய்த புண்ணியக் கருவூலங்கள் என்றும் புகழ்ந்து, அப்பாழ் நிலங்களைப் பொன்விளைந்த களங்களாகப் பாவன்மை கொண்டு பாடித் தங்கள் கற்பனை நயத்தால் வானுலகிலும் சிறந்த பூலோக கைலாயங்களாகவும் வைகுந்தங்களாகவும் புனைந்து வைத்து, மக்களுக்கு மகிழ்ச்சியூட்டி, அவர்களைச் சிறிது நம்பவும் செய்தனர் இந்த வகையில் மக்கள் தந்நம்பிக்கை இன்றித் தளர்ந்து சாகாதபடி காத்த பெருமை இந்தத் தலபுராணங்களுக்கு உண்டு.

இந்தத் தல புராணங்கள் கோயிலைப் பற்றி எழுந்தவை யாதலின், கோயிலிலுள்ள பல தெய்வ வடிவங்களையும் கதை வடிவாக விளக்கி வைக்கின்றன திருப்பத்தூர்ப் புராணம் ஆண்டவனுடைய எழுவகைத் தாண்டவங்களையும் தெளிவுபடுத்துகின்றது. புராணம எழுதியவர்களுக்குக் கோயிலிலுள்ள விக்கிரகங்கள் உள்ளீடாக என்றும் அழியாது ஒளிரும் அழகு வடிவாகச் சிற்பி கண்ட கடவுள் காட்சியேயாகும் அறக்கொடியோர் எல்லாம் தாம செய்த கொடுமைககு அஞ்சி, ஆண்டவன் எதிரே மனம் மாறி நிற்கும்போது, அவர்களை ஆண்டவன் தன் அருளால் மேலுலகம் அனுப்புகின்ற கதைகள் பல இந்தப் புராணங்களில் வருகின்றன மிகப் பழைய காலத்திருந்தே புராணக் கதைகளுக்குத் தத்துவார்த்தம் கூறும் வழக்கம் இருக்கின்றது

புராணங்களில நாட்டு வரலாறும் ஊர்களின் வரலாறும் சிலபோது காண்கின்றன திருவிளையாடற் புராணத்தினால் பாண்டியர் வரலாறு ஒரு சிறிது தெரிகிறது கோயிற் புராணம இரணியவர்மன், சிம்மவர்மன் என்ற அரசர்கள் பெயர்களைச் சுட்டுகின்றது. இவர்கள் பல்லவ அரசர் குடியைச் சேர்ந்தவர்களோ என்று வரலாற்று ஆராய்ச்சியாளர் கருதத் தொடங்கியுள்ளனர் அறிஞர் சுந்தரம்பிள்ளை ஞானசம்பந்தரின காலத்தினைப் பெரிய புராணத்தின் துணைகொண்டு அறுதியிட்டுள்ளார்

தல புராணஙகளைப் பாடிய புலவர்களில் பெரும்பாலோர் சிறந்த நாடு எவ்வாறு இருக்கவேண்டுமெனக் கனவு கண்டு இலககிய நயமெலாம் தோன்றப் பாடியுள்ளனர் பெரும்பகுதி உழவு முதலியவற்றைப் புனைந்துரைத்தாலும், அரசியல அமைபபினைப பற்றியும் சிறிது காண்கிறோம் கள்வர் இல்லாமை, அனைவரும் செல்வராதல் முதலிய சமுதாய உயாநிலைகள் காணபபெறுகின்றன

தல புராணம் பாடிய பெரியார்கள் எல்லாம் நாட்டுப் படலமும் நகரப் படலமும் பாடுவதனை மரபாகக் கொண்டுள்ளனர். தல புராணங்கள் பலவற்றையும் வரலாற்று வழியாக ஆராய்ந்து, அரசியல் கொள்கை வளர்ந்த வரலாற்றினை ஒருவாறு உணர்ந்து கொள்ளலாம் ஆனால் செல்வத்தைப் பற்றி எளியவன் கனவு காண்கின்ற கதைபோல இவை பெரும்பான்மையும் அமைந்திருக்கக் காண்கிறோம். இந்தத் தலபுராணங்கள் சீரும் சிறப்புமாக எழுந்தது 14ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த உமாபதி சிவனார் கோயிற்புராணம் பாடிய போதே எனலாம் அளவில் சிறியதாக இருந்தாலும், தல புராணங்களுக்கே வித்திட்ட இந்த நூல் பாட்டின் நயத்திலும், கொள்கைகளின் உயர்விலும், விரைந்து செலலும கதையின் போக்கிலும் மிகச் சிறந்து விளங்குகின்றது

தென்னாட்டில் மடங்கள் பல தோன்றியபின் மடங்களைச சேர்ந்தவர்களும புராணஙகள் பாடலாயினர் தருமபுர மடத்தை நிலைநாட்டிய ஞானசமபந்தருடைய ஆசிரியரான கமலை ஞானப் பிரகாசர் திருமழபாடி புராணம் பாடியுள்ளார் இவருடைய மாணவரான திருவொற்றியூர் ஞானபபிரகாசர் திருவொற்றியூர்ப் புராணம இயற்றினார் கமலை ஞானப் பிரகாசரின் மற்றொரு சீடர், நிரம்ப அழகிய தேசிகர் திருப்பரங்கிரி புராணமும் சேது புராணமும பாடியுள்ளார் கிருஷ்ணதேவராயர் காலத்தில் வாழ்ந்த கச்சி ஞானபபிரகாசரின் மாணவரான புராண திருமலைநாதர் சிதம்பர புராணம பாடினார் சேது மான்மியம் என வடமொழியில் அந்தணர் திரட்டியதனை நிரம்ப அழகிய தேசிகர் மிகச் சிறந்த இலக்கிய நயம் தோன்ற யாத்துள்ளனர் இதற்கான ஓர் உயர்ந்த செய்யுள் நடையுண்டு அருஞ்சொல அறிவு சிறக்க வேண்டுமென்று கருதுகின்றவர்கள் எல்லாம் வருந்தியும் இந்நூலைக் கறறுக் களிக்கின்றனர். இவருடைய சீடரான சம்பந்த முனிவர் திருவாரூர்ப புராணம் பாடியுள்ளார். இதே 16ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த எல்லப்ப நயினார் அருணாசல புராணம், விரிஞ்சைப் புராணம் முதலிய புராணங்களைப் பாடினார்.

17ஆம் நூற்றாண்டிலே சைவ எல்லப்ப நாவலர் திருவெண்காட்டுப் புராணம், திருச்செங்கோட்டுப் புராணம் முதலியன பாடினார் தருமபுர மடத்தைச் சேர்ந்த சரணாலயர் கந்தபுராணச் சுருக்கத்தினை மிக அழகாகப் பாடினார் இந்த மடத்தைச் சேர்ந்த அகோர முனிவர் வேதாரணிய புராணமும், கும்பகோணப் புராணமும் இயற்றினார் சிவப்பிரகாச சுவாமிகள் திருக்கூவப் புராணம பாடினார் இவரும இவருடைய உடன் பிறந்தார்கள இருவரும சேர்ந்து பாடிய சீகாளததிப்

புராணம் பாராட்டத் தக்கது இது ஆனந்தக் கூத்தர் பாடிய பழைய திருக்காளத்திப் புராணத்தினை மங்கச் செய்தது. இதில் நக்கீரர் வரலாற்றைக் கூறும் பகுதி, கண்ணப்பர் வரலாற்றைக் கூறும் பகுதிகள் மிகச் சிறந்தவை. வீரராகவ முதலியார் என்பவர் திருக்கழுக்குன்றப் புராணம் இயற்றினார்.

பெரும்பற்றப் புலியூர்நம்பி மிகப் பழைய காலத்தில் திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணத்தை மிக்க எளிய நடையில் பாடியுள்ளார். ஆனால், பரஞ்சோதியார் பாடிய திருவிளையாடல் தன்னுடைய பாவின் இனிமையாலும் அன்பின் பெருக்காலும் முன் நூலை மறைத்துவிட்டது இவர் திருமலைநாயக்கர் வாழ்ந்த 17ஆம் நூற்றாண்டினர் என்பர் பலபட்டடைச் சொக்கநாதப் புலவர் இதற்குப் பாயிரம் கூறியிருப்பதால், இவர் 18ஆம் நூற்றாண்டின் முதற்பகுதியிலும் வாழ்ந்திருந்தவர் எனலாம் ஆண்டவன் பெருமை, அவன் அருள், அருட்பெருக்கம், பண்டைய வரலாறு, தமிழின் பெருமை, சங்கப் புலவர் சிறப்பு முதலியன இந்த நூலில் காண்கின்றன

மற்றுமோர் இனிய தலபுராணம் திருக்குற்றாலத் தலபுராணமாகும். இதுவும் 18ஆம் நூற்றாண்டையது இதனைப் பாடியவர் குற்றாலக் குறவஞ்சி பாடித் தமிழர் உள்ளத்தை எல்லாம் கவர்ந்த திரிகூடராசப்பக் கவிராயர் குறவஞ்சியில் நாம் காணும் இன்பமெல்லாம் சிறிது உயர்ந்த இலக்கிய நடையில் இந்தப் புராணத்தில் விளங்கக் காண்கிறோம் 18ஆம் நூற்றாண்டில் புராணப் புலவராக வீற்றிருந்தவர் சிவஞான முனிவர். இவர் பாடிய காஞ்சிப் புராணத்தில் முதற்பகுதி புராண இலக்கிய வரலாற்றில் தலைசிறந்தது. பின்வந்த மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளைக்கு வழிகாட்டியவர் இவரேயாவர். இவருடைய மாணவர்கள் எல்லோரும சிறந்த பாவாணர்கள் சிதம்பரநாத முனிவர் திருப்பாதிரிப்புலியூர்ப் புராணம் பாடியுள்ளார் சிவஞான முனிவரின் தலைசிறந்த மாணவர் கச்சியப்பர் இவர் பாடிய விநாயக புராணத்தை முன்னரே குறிப்பிட்டோம் காஞ்சிப் புராணத்தின் பிற்பகுதியும், திருவானைக்காப் புராணமும, பேரூர்ப் புராணமும், பூவாளூர்ப புராணமும், தணிகைப் புராணமும் இவர் பாடியவை பூவாளூர்ப் புராணத்தில் வரும் சில கதைகள் நாடோடிக் கதைகளை நினைவூட்டுகின்றன இந்த வகையில் இவை இன்றும் படித்து இன்புறத்தக்கவை சைவசித்தாந்தக் கருத்துக்களை மற்றைய மூன்று புராணங்களிலும் தனித்தனியே உபதேசமாக ஒவ்வொரு படலத்திலும் இவர் பாடி வைத்துள்ளார் இவற்றில் தலைசிறந்து விளங்குவது

தணிகைப் புராணமேயாம் பாட்டில் நயம் இருந்தாலும், மிகக் கடுமையான நடையில் இந்த நூல் அமைந்துள்ளது சிவதருமோத்தரம் என்ற ஆகமப்பகுதியை அகத்தியப்படலத்தில் மொழிபெயர்த்துப் பாடுகின்றார் தொல்காப்பியரது களவியலை ஒட்டிச் சங்க நூல்களில் கிடைக்கும் கிளவிகள் பலவற்றைக் கையாண்டு, வள்ளியம்மை வரலாற்றில் வரும் களவொழுக்கத்தினைப் பிற்காலக் கோவைகளை எல்லாம் மிஞ்சுகின்ற வகையில் மிக நீண்டதொரு கோவையாகக் களவுப்படலமெனப் பாடியுள்ளார் ஸ்ரீ பரிபூரணப் படலத்தில் முருகப் பெருமான் சூரபதுமனோடு போரிடுவதனைப் பாடுகின்றார் தொல்காப்பியப் புறத்திணையியல் கூறுகின்ற முறையை ஒட்டி இந்தப் போரினை இவர் பாடியுள்ளார் இவ்வாறு இது பல்கலைக் களஞ்சியமாக விளங்குவது

19ஆம் நூற்றாண்டில் புராணப் புலவராக வீற்றிருந்த திருவாவடுதுறை ஆதின மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம பிள்ளை பாடிய புராணங்கள் உறையூர்ப் புராணம், திருப்பெருந்துறைப புராணம், தனியூர்ப் புராணம், திருநாகைக் காரோணப் புராணம், சூரைப் புராணம், கோயிலூர்ப் புராணம், கண்டமாதேவிப் புராணம், முதலியன சபாபதி நாவலர் என்பவரும் சிதம்பர சபாநாதப் புராணம் என்ற ஒன்று பாடினார் பின்னும் புராணங்கள் பல எழுந்தன. 19ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியிலும், 20ஆம் நூற்றாண்டிலும் தமிழ்நாட்டில் மக்களின் கருத்திலே மாற்றம் ஏற்பட்டதால் புராணங்களை வெறுக்கத் தொடங்கினர்

புராணம் என்று ஜைனர்கள் வழங்குவது பிராகிருத மொழியில் உள்ள ஆதி புராணமாகும் அதிலே தீர்த்தங்கர்களது வரலாறும், அந்த வரலாற்றிடையே அவ்வவர் காலத்தே வாழ்ந்த அரசர்கள் கதையும், வாசதேவர், பிரதி வாசுதேவர்கள் வரலாறும வரக்காண்கிறோம சிந்தாமணி கூறும் சீவகன் கதையும, சூளாமணி கூறும் திவிட்டன் கதையும் அந்தப் புராணத்தில் கூறப்பெற்றனவேயாம் சான்றோர் வரலாற்றைப் புராணமெனறு வழங்கும் வழக்கு இந்த ஜைன வழக்கை ஒட்டித் தமிழ் நாட்டில் வளர்ந்துள்ளது இந்த ஆதி புராணம தமிழில் ஸ்ரீபுராணம என்ற பெயரோடு மணிப்பிரவாள நடையில் உள்ளது. இதனை எழுதியவர் சூடாமணி நிகண்டு என்ற நூலை எழுதிய மண்டல புருடர் இவர் கிருஷ்ணதேவராயரைப் பறறிக் குறிப்பிடுவதால் 16ஆம் நூற்றாண்டினர் எனலாம மேருமந்திரம எனற ஜைன காப்பியத்தை இயற்றிய வாமன முனிவர் கச்சியைச் சோந்த திருப்பருத்திக் குன்றததில

வாழ்ந்தவர். நீலகேசித் திரட்டுக்கு உரைகண்ட ஆசிரியர் வாமனமுனிவரே இவர் என்றால் இவருடைய அறிவும், இவர் பாடிய பாட்டின் அருமையும் பெரியனவே. சான்றோர் வரலாற்றைப் புராணம் என்று கூறுகின்ற இந்த மரபினை ஒட்டி 16ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த நல்லூர் ஆசுகவி வீரன் என்பவர் அரிச்சந்திர புராணம் பாடினார் அதனுடைய சந்தப்பாக்ககளின் இனிமையிலும் எளிமையிலும் உருக்கத்திலும் எல்லோரும் தம் மனத்தை இழந்து நிற்கின்றனர். இது 1524ல் அரங்கேறியது என அறிகிறோம்.

இந்த மரபினை ஒட்டிய புராணங்களில் எல்லாம் தலைசிறந்தது சேக்கிழார் செய்த பெரியபுராணம் எனப் பாராட்டும் திருத்தொண்டர் புராணமாகும். இது 63 நாயன்மார்களுடைய வரலாறுகளைக் கூறுவதால் 63 புராணங்களைத் தன்னுள் அடக்கிக்கொண்டு விளங்குவது இவையெல்லாம் சுந்தரர் பாடிய திருத்தொண்டத் தொகை என்ற பதிகத்தின் விரிவாகவே அமைந்துள்ளன. ஒரு சிலர், சேக்கிழார் 12ஆம் நூற்றாண்டிலும், வேறு சிலர் 13ஆம் நூற்றாண்டிலும் வாழ்ந்தவர் எனக் கூறுவர் பாட்டின் நடை தேவார சந்தங்களை அடியொட்டிப் போயினும் மிக எளிதாகச் செல்லுகின்றது. பக்திச் சுவை மிகுந்தது தமிழர்கள் இன்று மிக விரும்பிப் படிக்கின்ற புராணங்கள் மிகச் சில. தணிகைப் புராணம், சேது புராணம், காஞ்சிப் புராணம் என்பவற்றை இலக்கிய அறிவு பெறப் புலவர் ஓதுகின்றனர். ஆனால், அனைவரும் ஒருமுகமாக இன்புற்று ஓதுகின்ற புராணங்கள் திருவிளையாடல், கந்த புராணம், பெரியபுராணம் என்பவையே யாம் இவற்றுள்ளும் பெரியபுராணமே தலையாயது எனலாம்.

பெரியோர் வரலாற்றைப் புராணமாகப் பாடும் மரபினை ஒட்டிக் கடவுண்மாமுனிவர் என்பவர் வாதவூரடிகள் புராணம் பாடியுள்ளார். 18 ஆம் நூற்றாண்டில் தோன்றியது என்று கருதக்கூடிய இந்த நூலை யாழ்ப்பாணத்தார் அனைவரும் அன்போடு ஓதி மகிழ்கின்றனர் பட்டினத்துப் பிள்ளையார் புராணம் என்பது ஒன்றும் 19ஆம் நூற்றாண்டில எழுந்தது. ஆனால் அது மக்களிடையே பரவி வளர்ந்ததாகக் காணோம் 20ஆம் நூற்றாண்டில் முருகதாசர் புலவர் புராணம் பாடியுள்ளார் அசலாம்பிகை அம்மையார் காந்தியடிகளது வரலாற்றைக் காந்தி புராணம் எனப் பாடினார்.

புராணஙகள் எனச் சைவர், வைணவர், சமணர் அன்றிப் பிற மத்தினரும தமிழில பாடியுள்ளனர் இஸ்லாம் மதத்தை நிறுவிய நபிகள்

நாயகத்தின் வரலாற்றை உமறுப் புலவர் சீறாப்புராணம் என்ற அழகிய நூலாக 17ஆம் நூற்றாண்டில் பாடியுள்ளார். இவர் கடிகை முத்துப் புலவரின் மாணவர் சீதக்காதியின் அவைப் புலவர். இந்தப் பாவாணர் அரபுப் பெயர்களை யெல்லாம தமிழ்மொழிபோலவே தோன்றும் படியாகச் சந்தக் குழிபபில் வைத்துள்ள நயம பெரிது புராணக் கதையின் நடையையே இவரும பின்பற்றுகின்றார் 19ஆம் நூற்றாண்டில் மொகைதீன் புராணம முதலிய பல புராணங்கள் இஸலாமியத் தமிழ்ப் பாவாணர்களால் இயற்றபபெறறன.

கிறிஸ்தவப் புலவர்களில இததாலியிலிருந்து தமிழ் நாட்டுககு வந்திருந்த பெஸ்கி என்பவர் வீரமா முனிவர் என்ற பெயரோடு 18ஆம நூறறாண்டின் முற்பகுதியில தேமபாவணியைப் புராண நடையிலே பாடியுள்ளார் கம்பன் நடையையும சிந்தாமணி நடையையும ஓட்டிப பாட முயலுகின்றார் பாடடையும வாககியத்தையும முடிக்கின்ற அருமைப்பாடடைக் காணலாம் தாளைபோல நடக்கினற இவரது நடை புலவர்களைக் கவர்கிறது

புராணம எனபது பழைய மரபு என்ற பொருளில் வழங்குவதால் பழைய இலககிய இலக்கண மரபுகளையும புராணமெனத் தமிழர் வழஙகியதும உண்டு நச்சினார்க்கினியர் போன்ற இலக்கண உரையாசிரியாகள மாபுராணம என்ற இலக்கண நூலிலிருந்து வெண்பா வடிவான சில சூததிரங்களை மேற்கோள காட்டுகின்றார்கள் ஆதலின அது பழைய இலககண மரபுகளைக் கூறும ஒரு நூலாதல் வேண்டும

# இருபதாம் நூற்றாண்டுத் தமிழிலக்கிய வரலாறு

இருபதாவது நூற்றாண்டு உண்மையில் ஒரு புதுயுகம் என்றே சொல்லவேண்டும் பத்தொன்பதாவது நூற்றாண்டு முடிவதற்குள்ளாகவே விஞ்ஞானம் பழைய உலகை மாற்றிவிட்டது இருபதாவது நூற்றாண்டு, அதன் பயனாக எல்லாத் துறைகளிலும் கடைகாலிலிருந்து அனைத்தையும் புதிதாக அமைக்க வருவாரது முயற்சியைக் காண்கிறது; சிலபோது நடுங்குகிறது சிலபோது அடிப்படை மாறவில்லை என்று உணர்கிறது. புதுமையை வரவேற்றுப் புரட்சி, புரட்சி என்று ஓலமிடுகிறது புரட்சியை அமைதியாகக் காண்கிற கண்ணோட்டமும் இங்கு உண்டு. வாழ்வின் வெளிப்பாடே மொழி, ஆதலின், தமிழ் மொழியின் வரலாற்றிலும இருபதாம் நூற்றாண்டில் இத்தனையும் காணலாம்.

இலக்கியம் எழுத்தில் அமைந்தது மட்டும் அன்று எழுத்தே இல்லாத பலமொழிகளில் செவி வழியாக இலக்கியம் நிலை பெற்றிருக்கக் காண்கிறோம். வேதமே இப்படி வந்ததுதான். *கேள்விச் செல்வம்* எனத் தமிழ் பாராட்டுவதனை மறந்துவிடக்கூடாது. எழுதப்படிக்கத் தெரிந்தவர்கள் ஒரு சிலராகவே இருந்த சென்ற சில நூற்றாண்டுகளில் இலக்கியத்தை மக்கள் செவிவழியாகக் கேட்டே இன்புற்றிருக்க முடியும். நாடோடிப் பாடல்கள், அம்மானைப் பாடல்கள், பழைய நாடகங்கள் இவையெல்லாம் பெரும்பான்மையும் இன்னும் எழுத்தில் எழுதப்பெறாமலே இருக்கின்றன; அதனால் பல அழிந்தன பூசாரிகள் பாட்டு, வில்லுப்பாட்டு, அம்மானை முதலியவை அப்போதைக்கப்போது அவற்றைப் பாடுகின்றவர்களே பாடும்போதே அமைப்பனவாம். வெளிநாடுகளினும் இத்தகைய காப்பியங்கள் வாய்வழியே வளர்ந்தமையை பௌரா (Bowra) என்பவர் ஆராய்ந்துள்ளார். தமிழ் நாட்டில் இன்றும் வளரும் இத்தகைய இலக்கியங்களை ஆராய்தலில் ஒரு புது ஊக்கம் பிறந்துள்ளது இவை பேச்சு நடையில் அதற்கு ஒத்த சந்தத்தோடு தாளமும் இசையும் பொருந்தி அமைந்து வரக் காணலாம் இந்தப் போக்கு எழுத்தில் எழும் இலக்கியங்களிலும் வேரூன்றக் காண்கிறோம்

பாட்டாக அன்றி உரைநடையாக வரும் இலக்கியங்களும் வாய்வழியே அப்போதைக்கப்போது தோன்றி மறைகின்றன எனலாம் புராணப் பிரசங்கங்கள், காலட்சேபங்கள், சொற்பொழிவுகள் என்ற இவற்றிற்கெல்லாம் தமிழ நாட்டில் இருபதாம் நூற்றாண்டில் பெரிய வரவேற்பு இருந்தது பிரசங்கம் மறைகிறது, சொற்பொழிவாக மாறுகிறது, காலட்சேபமும் மறைகிறது என்றே சொல்லவேண்டும் நாடகத்தில் தோன்றும கோமாளி நகைச்சுவை தோன்றத தினசரித்தாள் போல அன்றாடச் செய்திகளையெல்லாம பேசி நையாண்டி செய்வதும் அப்போதப்போது தோன்றி மறையும் இலககியமேயாம் நாடகங்களென மேடை மேல் நடிக்கப்படுவன சிலவற்றில இந்த முறையை ஒட்டித் திடீரெனச் சில பாத்திரங்கள் ஆசுகவியோலப பேசத் தொடஙகுவதை இன்றும் காண்கிறோம இஙகெல்லாம பொதுமக்கள எளிதாக அறிந்துகொள்ளக் கூடிய நடையே வழஙகுதல் கூடும நகைச்சுவைக்கும இங்கே இடமுண்டு இசையொடு பொருந்திச செல்லும இந்த நடையில் சிலபோது • எதுகை மோனைகளும மிகப் பயினறு வருவது இயல்பாயிற்று கோமாளிப் பேசசோ உரைநடையே ஆம

இந்த நூறறாண்டு தொடங்கியபோது தமிழை வளாக்க வேண்டுமென்று பல சங்கங்கள் தோன்றின இருபதாவது நூற்றாணடை வேறொரு பொருளில் சங்ககாலம் என்று சொல்லலாம மதுரைத தமிழ்ச சங்கம் முதல் ஊர்தோறும் பல சங்கஙகள் தோனறின அரசியல, சமயம தொழில் என்ற எல்லாத் துறைகளிலும சங்கஙகள் தோன்றின இவற்றில் நடைபெறும் ஆண்டுவிழாககள் ஒருவகையில் பலப்பல இலககிய வகைகளை வளர்க்கும மேடைகளாக விளஙகின முதலில சமயச சொற்பொழிவுகளாக விளங்கியவை சமய இலக்கியச சொற்பொழிவுகளாகவும், பின் அரசியற சொற்பொழிவுகளாகவும மாறிவரக் காண்கிறோம

இச்சஙகஙகளில் திஙகள் வெளியீடுகளும பிறவும் வெளியாயின இவை ஆராய்ச்சிகளாகவும விளக்கஙகளாகவும் வந்து தமிழை வளர்த்தன பழைய நூல்களில் எழுநததோா ஈடுபாட்டினாலே பழமையைப் பாராட்டும் மனப்பான்மை வளர்ந்தது நடையோ பேசசு நடைபோல அமையவில்லை பழைய உரையாசிரியாகள நடையைப பின்பற்றி இன்று வழக்கற்றுப் போன பல சொற்களையும புகுத்திய பலர் எழுதலாயினர் ஆனால் பொதுவாக ஒரு புதிய நடை வளாநது வந்ததென்றே சொல்லவேண்டும் எலலாவற்றையும துணிநது ஆராய்கின்ற மனபபோககும இஙகே காணகிறோம பூாணலிஙகம

பிள்ளை, சாமிநாதய்யர், அரசஞ்சண்முகனார், மயிலை சண்முகம்பிள்ளை, இராகவையங்கார், மறைமலையடிகள், பின்னத்தூர் நாராயணசாமி ஐயர், சுப்பிரமணிய கவிராயர் முதலியோர் எழுத்துக்களை இங்கே காணலாம்

இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் எழுந்த நூல்கள் பல சமய சம்பந்தமான வாதங்கள் இப்போது அரசியல் வாதங்கள் சுவை தருவதுபோல அப்போது அவை இருந்திருத்தல் வேண்டும். வாதங்களிற் பல மேடைப் பேச்சாகவும் நிகழ்ந்தவையேயாம் நடுக் காவேரி ஸ்ரீநிவாச சாஸ்திரியார், ஏகாங்கியார், பாம்பன் சுவாமிகள், கோ வடிவேலு செட்டியார், சோமசுந்தர நாயகர், சிங்காரவேலு செட்டியார், ந கதிர்வேற்பிள்ளை முதலியவர்கள் இந்த வாதங்களிலும் மேடைப் பேச்சுக்களிலும் ஈடுபட்டவர்கள். இராமலிங்க அடிகளாரைப் பற்றிய வாதமும் அன்று தமிழ் நாட்டைப் பிளந்து நின்றது இதன் பின்னே காலத்தின் போக்கிறகும் நாடடின் நிலைமைக்கும் ஏற்பப் பிறர் மனம புண்படாவகையில் சமயத்தை வளர்க்கும் மனப்பான்மை வளர்ந்தது. இந்த வகையில் எங்கும சென்று உழைத்தவர்கள திரு.வி க , வடிவேலு செடடியார் முதலியோரெனலாம சமயச் சொற்பொழிவுகளில் முதலிற் சோமசுந்தர நாயக்கரும், பின்னே ஞானியார் சுவாமிகளும் சிறந்து விளங்கினர். இலக்கியச் சொற்பொழிவுகளில் மறைமலை அடிகளும் இராகவையங்காரும், பண்டிதமணியும் திரு வி கவும் குறிப்பிடத்தக்கவர்கள் அரசியற் சொற்பொழிவுகளில் திரு வி க வும், சத்தியமூர்ததியும ஒரு புதிய நிலையை உண்டு பண்ணிவிட்டனர் தொழிலாளரிடையேயும பேசப் புகுந்த திரு.வி,க, பேச்சு மொழியும் இலக்கிய மொழியாகச் சிறக்கும் என்ற நம்பிக்கையை எல்லார் மனததிலும விளைவித்துவிட்டதன் பயனாகப் பேச்சு நடையை எலலோரும இழிவாகக் கருதாமல் உயர்வாகக் கருதலாயினர். பிற இடங்களில் போலல்லாது தமிழ் நாட்டில் பேச்சு நடை கீழிறங்காமல் மேல உயர்ந்தது மேடைப் பேச்சு நடைக்கும எழுத்து நடைக்கும் இன்று தமிழநாடடில இதனாலேயே வேற்றுமை காண்பது அரிதாயிற்று திரு வி க அரசியல இயககத்தில் கலந்ததன் பயன் இது

பேச்சு வகை இலக்கியத்திற்கு அடுத்ததாகத் தமிழ் நாட்டில் சிறந்து விளங்குவது பததிரிகை இலக்கியமாகும் சங்கங்கள் வெளியிட்ட திங்கள் வெளியீடு முதலியவற்றை முனனரே குறிப்பிட்டோம் இவை பெருகியதோடு கிழமை வெளியீடுகளும் பிற வெளியீடுகளும் நீண்டு வாழாமற போனாலும அபபோதபபோது தோன்றி மறைந்து கொண்டே இருந்தன ஞானபானு தமிழபபொழில, செந்தமிழ், செந்தமிழ்ச செலவி,

ஞானசாகரம், சித்தாந்தம் என்று எத்தனையோ வெளியீடுகளைத் தமிழ்நாடு கண்டுள்ளது. சுதேசமித்திரன் தொடர்ந்து இந்த நூற்றாண்டின் முதலிலிருந்து தொண்டாற்றி வருவதன் பயனாகத் தமிழ் நாட்டுப் பத்திரிகை உலகம் குழவிப் பருவமெலாம் கடந்து காளைப் பருவத்தை அடைந்துவிட்டது எனலாம். ஆனால், அங்கே அந்நாளில் உயிர்த்துடிப்பினைக் காண்பது அரிது. அரசியல் போராட்டம் பொதுமக்கள் போராட்டமாக வளர்ந்தபொழுது அந்த உயிர்த்துடிப்போடு பல பத்திரிகைகள் தோன்றின. பாரதியாரின் இந்தியா, பாவலரின் இன்றைய சமாச்சாரம், திரு.வி.க. தேசபக்தன் ஆகிய இவை ஒரு புதிய இலக்கிய நடையைப் பத்திரிகை உலகில் பரவவிட்டன திரு.வி.க. இந்த வகையில் நிகழ்த்திய புரட்சி நிலை பேறடைந்துவிட்டது எல்லாருமே இந்த நடையைப் பின்பற்றத் தொடங்கினர் அந்நாளில் பார்ப்பனர் அல்லாதார் இயக்கத்தின் வெளியீடாக வந்த திராவிட னும் இந்த முறையையே பின்பற்றியது பல வாரப் பத்திரிகைகளும் தமிழறிவிற் சிறந்த எழுத்தாளர்கள் கையில் வளர்ந்து ஓங்கின. திரு வி க வின் நவசக்தி, தேசபக்தன் பாவலரின் பாரதி வடிவேலு செட்டியாரின் லோகோபகாரி முதலியவற்றை இங்கே குறிப்பிடலாம் திரு.வி,க. வினிடத்தில் பயிற்சி பெற்ற ரா கிருஷ்ணமூர்த்தி ஆனந்தவிகடனிலும், பின் கல்கியிலும் தொண்டாற்றிப் புகழ் நாட்டினார். இன்று குழந்தைகளுக்கெனத் தோன்றியிருக்கும் பல பத்திரிகைளில் ஒருசில சிறந்தனவாக உள்ளதையும் குறிப்பிட வேண்டும். புற்றீசல்கள் போலப் பத்திரிகைகள் தோன்றி மறைந்தாலும், அவற்றில் ஒரு சில வெறுக்கத் தக்கனவாயிருந்தாலும், பொதுவாகத் திரு.வி.க. காட்டிய வழியில் இந்த உலகம் சென்றுகொண்டிருக்கிறது எனலாம். பிறமொழியை அளவுக்கு மேலும் கலந்து உயிர்த்துடிப்பே இல்லாமல் எழுதிய காலம் அடியோடு மாறிவிட்டது. இப்போது எழக்கூடிய இடர்ப்பாடு, வாயில் வந்தபடி எழுதிக் கொடிய உணர்ச்சிகளைத் தூண்டி, இழி மொழிகளையும் பிற மொழிகளையும் வேண்டாத இடத்தெல்லாம் பயன்படுத்திக் கண்ணையும் கருத்தையும் கெடுப்பதொன்றேயாம் பத்திரிகைகள் வழியாகத்தான், எழுத்து நடையில் காணப்பெறாத நகைச்சுவை மேடைப் பேச்சிலிருந்து இருபதாவது நூற்றாண்டில் இலக்கியத்தில் நுழைந்தது எனலாம். விகடத்திற்கென்றே பல கிழமைத்தாள்கள் தோன்றின விகட ரத்தினம், விஜய விகடன், ஆனந்தவிகடன் முதலிய பெயர்களே இதற்குச் சான்று பகரும் பின்னாளில் எழுந்தவை கணக்கற்றன ஆதலின், அவற்றின் பெயரையெலாம் இங்குக் குறிக்கவில்லை

பேச்சு நடையும், பேச்சு நடையை ஒட்டி எழுந்த இத்தகைய எழுத்து நடைகளும் ஒரு சில வகைகளாகப் பிரியும் உயர்ந்த மிடுக்கோடு உணர்ச்சியை ஊட்டி மக்களைத் தட்டி எழுப்பும் நடை திரு.வி.க.வின் நடை. ஆழ்ந்த கருத்துக்களை எல்லாம் எளிதில் விளக்கும் தெளிவும் அங்கு உண்டு. வேண்டிய சில இடத்துச் செய்யுள் நடைபோலவும் அது செல்லும் மற்றொரு நடை மிக இனிமையாகத் தெளிவாக, விளக்கமாகச் செந்தமிழின் திறமெலாம் விளங்கவரும் மறைமலை அடிகளின் நடை, மிக மிக இனியதானாலும இதில் உணர்ச்சி மிகுதியாக இல்லாமையாலும் சிலசில இடங்களில் வரும் உயர்வு நவிற்சியாலும் இந்த இனிமை அளவுக்கு விஞ்சித் தெவிட்டிவிடுவதுண்டு முதலில் வடமொழி நிறைய வர எழுதிய பெருமக்களும் இந்த நடையின இனிமையில் ஈடுபட்டுக் கூடியவரையில் தூய தமிழிலேயே எழுத முறபட்டனர் அளவுக்கு மேல் வடமொழிச சொற்கள தமிழ் எழுத்தில் புகுந்ததால் இயற்கையே அதற்கு எதிராக எழுவது இயல்பேயாம . அப்போதுதானே நடையின் நடுநிலைமை விளங்கக்கூடும்? தமிழ்நாட்டில் சமுதாயப் பூசல் இலக்கியப் போக்கிலும் புகுந்ததென்றாலும,இந்த மாற்றத்தில் இலக்கிய அடிப்படையின் உண்மை விளங்காமல் இல்லை மறைமலை அடிகள் பிறமொழிக் கலப்பின்றித் தூய தமிழே எழுதவேண்டும் என்று ஓர் இயக்கத்தைத் தொடங்கினார் இதற்கேறபத் தம் பழைய நூலகளையெல்லாம திருத்தினார், இன்றியமையாச் சொற்கள் சில வடமொழியே போன்று தோன்றினாலும் பச்சைத் தமிழே என்று மனறாடினார் இவ்வியக்கம முழுவதும் வெற்றி காணாமற் போனாலும் வேண்டாத பிறமொழிச் சொற்களைத் தமிழில் உட்புகுத்தலாகாது என்ற எண்ணத்தை எல்லா எழுத்தாளர்களிடையேயும் வேரூன்றச் செய்துவிடடது எனலாம்

மூன்றாவது வகையான நடை எதுகை, மோனை வரும் நடை இதிலும இரண்டு வகை உண்டு ஒன்று இலக்கியச் செறிவோடு உயர்ந்துசென்று பொது மக்களுக்கு விளங்காமல் நிற்பது மற்றொன்று எளிய நடையிலும் இவ்வாறு எதுகை மோனை வருவது தமிழில் ஒருபொருட பல சொற்கள் இடைக்காலத்தே எதுகைப் புலவர்கள் கையில வளாந்து விட்டமையால் இவ்வாறு விரைந்து பேசுவதும் எளிதாகிவிடடது ஆனால், சொற்களிடையே உள்ள நுண்ணிய வேறுபாடெலலாம இதனால் மறைந்து போகும போல் தோன்றுகிறது உரைநடைய பேச்சையும பிரசஙகிகள பாட்டுபபோல பாடக் கேடட தமிழ்நாடு இநத நடையை உரை நடை எனக கேட்டு இன்புற்றாலும்

நாளடைவில் இது உரைநடைப் போக்கிற்கே கொலையாக முடியும் என ஆங்கிலம் கற்றார் கருதுவதுண்டு. வேறொரு நடையோ இந்த ஆரவாரத்தில் இறங்காமல் ஏசுநாதரின் பேச்சினைப்போல் எளிய உவமைகளோடும் கதைகளோடும் அமைந்து செல்கிறது. மற்றொரு நடை, தான் நிலைநாட்டப் புகுந்த கருத்திற்கு ஏற்றவையாகச் செய்திகளைத் திரித்தோ, விரித்தோ வேண்டியவாறு அடுக்கி, அவற்றின் வலிவாலேயே மக்கள் உள்ளத்தில் ஆவேச உணர்ச்சியைத் தூண்டிவிடுகிறது. சமுதாயச் சீர்திருத்தத்திலும் அரசியலிலும் நுழைவோர் பின்பற்றும் முறை இது. வசை புராணத்தையும் இழிவழக்கையும் உடபுகுத்திக் கருத்தைக் கவர முயலும் நடையும் சில சில போது தலை தூக்கினாலும் இதனைச் சிறந்தநடை என்று சொல்வதற்கில்லை. இந்த நடையின் வகையிற் சேர்ந்ததே கொச்சை மொழியினை வழங்கிப் பேசுவதும் நாடகத்தில் வரும் பாத்திரங்கள் இவ்வாறு பேசுவது இயல்பானாலும் பிற இடங்களில் இவற்றைப் புகுத்துவது பெருங்கேடாமென்றே பலரும் கருதுகின்றனர். எழுவாயும் பயனிலையுமாக வருவதே தமிழ் மொழியின் இயல்பு. ஆனால், வருகிறது நடக்கிறது என முடிப்பை இப்படிப் பேசி வரும்பொழுது *கிறது கிறது* என்பது போலெல்லாம் தொடர்ந்து சொற்றொடர்கள் முடிவது ஓரிடர்ப்பாட்டை விளைவிக்கின்றது. வேற்றுமை நயம் இல்லாமலே போகிறது. இதன் காரணமாகப் பயனிலையை முடிவிடத்தில் வையாமல் மாற்றி வழங்கும் வழக்கம் ஏற்பட்டுள்ளது. *இந்தக் காரணத்தால்* என்பது போன்ற சொற்றொடர்கள் பயனிலைக்குப் பின் வருவதால் வேற்றுமை நயமும், இவ்வாறு பின்வரும் சொற்றொடர்களுக்கு ஒரு சிறப்பும் தோன்றக் காண்கிறோம் இப்படி வழங்கி வரும்போது பயனிலை பழமைபோலச் சொற்றொடரின் முடிவில் சில சொற்றொடரில் வரும்போது ஒரு புது மெருகு பெறுகிறது; அது முழுதும் இடைநிலை. விகுதி உட்பட ஒவ்வோர் எழுத்தாகத் தெள்ளத்தெளிய ஒலிக்கப்பெறுகிறது. பேச்சும் உணர்ச்சியின் போக்கிற்கும் கருத்தின் பாங்கிற்கும் ஏற்றபடி எடுத்தும் படுத்தும் பேசப்படும்போது பேச்சு நடையிலும் சிறப்பானதொரு சந்த நடை இருப்பதனை உணர்கிறறோம்.

பத்திரிகையானது எல்லோருக்கும் விளங்க எழுதிவர வேண்டும். அப்போதப்போது உலகில் நிகழும் செய்திகளையும், புதிய புதிய மாறுதல்களையும் கருத்துக்களையும் எழுதி வரவேண்டும் இங்கே தமிழ் எளிமையாவதோடும் இந்த நூற்றாண்டில் எத்தனையோ வகையாக எழும கருத்துக்களையும் செய்திகளையும் விளக்கக் கூடிய புதிய

ஆற்றலும் பெற்று, அவையெலாம் தன்னிடத்திலே உருக்கொள்ளுமாறு நெகிழ்ந்து நிற்கவும் வேண்டும். புதிய வரையறையும் பெற்றுத் திட்ப நுட்பம் செறிந்து விளங்கவேண்டும். இத்தகைய தொண்டினைத் தமிழுக்குச் செய்துவரும் பத்திரிகைகளை இலக்கிய வரலாற்றில் புறக்கணிக்க முடியாது. இவற்றை இலக்கியத் தொழிலகம் அல்லது அடுக்களை என்று கூறலாம். ஆனால், வெளியாகவேண்டிய மணிக்குச் சில நிமிஷங்களுக்கு முன்வரும் செய்திகளையும் அச்சடிக்க வேண்டிய நெருக்கடியில் மிக விரைந்து மனோவேகமாக மொழிபெயர்க்கும் கட்டாயம் ஏற்படுவதால் ஆர அமர இருந்தெண்ணி இலக்கிய இன்பத்தை வளர்க்கும் வாய்ப்பு இங்கு இல்லை. எனினும், இவை வெளியிடும் கிழமை மலர், ஆண்டு மலர் முதலியவற்றில் அத்தகைய வாய்ப்பு உண்டு.

பேச்சாலும் பத்திரிகையாலும் வளரும் எளிமை பள்ளிக்கூடங்களில் சிறுவர்கள் தொடக்கத்திலிருந்து நூல்களைக் கற்றுவரும்போது தமிழின் இயல்பாக அவர்கள் மனத்தில் பதிந்து விடுகிறது. சென்ற நூற்றாண்டிலிருந்த பாதிரிமார்களின் சமயத் தொண்டினை இங்கு மறக்க முடியாது. சில நூற்றாண்டுகளாக எழுத்து மணம் பெறாத கூட்டத்தினரெல்லாம் கட்டாயக் கல்வியால் படிக்க வரும்போது இந்த எளிமையே நிலைபெற வேண்டியதாகிறது. சிறுவர் இலக்கியம் என ஒன்று சிறக்கவேண்டியதாகிறது. பாடப் புத்தகங்களாக வருபவை ஒருபுறம்; பாதிரிமார்கள் எழுதும் கதை ஒருபுறம்; மாணவர்கள் நடிக்க எழுதப்பெறும் நாடகங்கள் ஒருபுறம்; சிறுவர்க்கென எழும் பத்திரிகைகள் ஒருபுறம்; தாய்மார் பாடிவரும் பழைய வாய்வழிக் குழவிப்பாடல்கள் ஒருபுறம், பிள்ளைத்தமிழ் ஒரு புறம்; புதிய குழவிப்பாடல்கள் ஒருபுறம், இப்படி வளர்கிறது சிறுவர் இலக்கியம். ஆனால், இங்கே எல்லாம் தமிழ் கண்டது வெற்றியே எனச் சொல்வதற்கில்லை. இப்போதுதான் தமிழ் இத்துறையில் முளைத்து நிற்கின்றது இருபதாவது நூற்றாண்டைக் குழந்தைகள் யுகம் என மேனாட்டம்மையார் கே (Kay) என்பவர் பாடிய கருத்தின் ஆழம் இப்போது விளங்குகிறது எல்லோரும் வாக்குரிமை பெற்றபோது எல்லாச் சிறுவர்களும் கற்றுத் தீர வேண்டுமே என்ற பரபரப்பு எழுந்துள்ளது மாண்டிசோரி அம்மையார் இங்கு வந்திருந்ததும், காந்தியடிகள் கல்வியைப் பற்றி ஆராய்ந்து கண்ட முடிவுகளும் எங்கும் என்றுமில்லாத ஓர் ஈடுபாட்டினைச் சிறுவர் கல்வியில் எழுப்பிவிட்டன ஆசியலாரும் சிறுவர் இலக்கியத்திற்கெனப் பரிசில வழங்கி [illegible] சிறுவர்களுக்குக கலவி புகட்டும் ஆசிரியர்களைப்

பயிற்றுவிக்கும் நிலையத்தில் தாம் தொண்டாற்றியதன் பயனாகச் சிறுவர் விரும்பும் பாடல்கள் தமிழில் இல்லாமையைக் கண்டு புழுங்கிய தேசிக விநாயகம்பிள்ளை பல பாடல்களைச் சிறுவர்க்கெனவே பாடி உதவினார். சிறுவர்க்கான இலக்கியமெனத் தமிழில் பேசவும் வகை செய்தார். பாரதியாரின் பாப்பா பாட்டு, புதிய ஆத்திசூடி முதலியவையும் சிறுவர்க்கென எழுந்த செந்தமிழேயாம். சிறுவர்க்கான செந்தமிழ்க் கதைகளென மறைமலையடிகளும் நூலொன்று எழுதினார். இன்று நிகழும் முயற்சிகளை இப்போது அளவிட்டுக் கூறுவது அருமை

பழைய முறையில், ஆனால், புதிய கண்ணோட்டத்தில் பாடல்கள் வெளியாயின பாரதியாரும் நான்மணிமாலை முதலியன பாடியுள்ளார். பாம்பன் குமரகுருதாச சுவாமிகள் தத்துவக் கருத்துக்களை வைத்து அன்பு ததும்பும் வழியில் தீய எண்ணங்கள் எழாதபடி முருகன் மீது 6666 பாடல்கள் பாடினார். தண்டபாணிச் சுவாமிகள் பல ஆயிரம் பாடினார். வெள்ளக்கால் சுப்பிரமணிய முதலியார் ஆங்கில நூல்களை மொழி பெயர்த்ததோடு, அகலிகை வெண்பாவும் பாடியுள்ளார். இராகவையங்காரின் பாரி வெண்பாவும் சிறந்த நூலேயாம்.

இன்று செய்யுளிலும் இசைப் பாட்டிலும் எளிமை புகுந்துள்ளது. பொதுமக்கள் இலக்கியம் என்பது தமிழில் தொடர்ந்து விளங்கிக்கொண்டே வந்துள்ளது. ஆனால், கற்றோரது இலக்கியமென ஒரு சில எழுந்து பொதுமக்கட்கும் கற்றோர்க்கும் இடையே ஒரு பெரிய பிளவினை ஏற்படுத்தியது. நாயன்மார்கள், ஆழ்வார்கள் எழுதிய பாடல்கள் பொதுமக்கள் உள்ளத்தைக் கவர்ந்தாலும்,பழைய இலக்கண உரையாசிரியர்கள் பெரும்பாலோர் இவற்றைப் பற்றியதோர் இருட்டடைப்பினை விளைவித்திருக்கக் காண்கிறோம். கம்பனும் இந்த இருட்டடைப்புக்கு உட்பட்டே உள்ளான். திருப்புகழையோ தாயுமானவரையோ பின்வந்த உரையாசிரியர்கள் எடுத்துக் காட்டக் காணோம். சிலப்பதிகாரத்தைக் கோவலன் கதையெனவும் இராமாயணத்தை இராமன் கதையெனவும் எள்ளி நகையாடும் மனப்பான்மையும் அங்குக் காண்கிறோம். இராமலிங்க அடிகளாரின் பாடலும் தான் தோன்றிய நாளிலிருந்து இத்தகைய எதிர்ப்புக்கு இடமாயிற்று. இருந்தாலும் பொதுமக்கள் இலக்கியம் இந்த எதிர்ப்பையும் தாண்டி நிலை பெற்றிருப்பதை மேலே எடுத்துக்காட்டிய பெயர்களே விளக்கும். இருபதாவது நூற்றாண்டு, பொதுமக்கள் நூற்றாண்டு. எனவே, அவர்களின் இலக்கியம் வளர்வதிலும் அத்தகைய பழைய இலக்கியங்களில் புதிய ஈடுபாடு எழுவதனையும் கூறவேண்டா பழைய

நாடகங்கள், கீர்த்தனைகள், பள்ளுகள், குறவஞ்சிகள், நாடோடிப் பாடல்கள் என்ற இவற்றில் அழிந்து போனவை போக, எஞ்சியவற்றை அச்சிட்டுக் காப்பாற்றும் முயற்சி இந்த நூற்றாண்டின் சிறப்பெனலாம் வள்ளல்களும் புரவலர்களும் தமிழைக் காத்த காலம் பழங்காலம். குடியரசில் தமிழைப் புரப்பார் குடிமக்களே ஆம் ஆதலின், அவர்கள் விரும்புவதான இலக்கியம் அமைவதே சிறப்பாம் இலக்கியப் படைப்பு முன்போலப் பொழுதுபோக்காகாமல் ஒரு சிலரது பிழைக்கும் வழியாகவும் இன்று ஆய்விட்ட நிலையில் பொது மக்கள் வாங்கக்கூடிய சரக்கையன்றோ படைத்துத் தரவேண்டும்? இதனால் கீழான இலக்கியங்கள் வளரக்கூடுமானாலும், கால வெள்ளத்தையும் தாண்டி நிற்கக் கூடியவை சிலவேயாம் பலர் பலவகையரானாலும் அப்பலவகையினரையும், ஒரு சேர மகிழ்விக்கும் சிறப்புடைய இலக்கியங்களே தலை எடுத்து விளங்கும்

இந்தியா விடுதலை பெற்ற போராட்டத்தின் முடிவான துறை இருபதாவது நூற்றாண்டில்தான் தோன்றுகிறது. விடுதலை என்பது பிறர் கொடுக்கப்பெறுவதொன்றன்று, இது மக்களின் பிறப்புரிமை உயிரை இழந்தாலும் அதனைப் பெற்றே தீரவேண்டும் என்ற புதிய கருத்து, திலகரோடு முன்னிலும் விளக்கம்பெற்று எழுந்தது சூரத்துக் காங்கிரசிலிருந்து இது தெள்ளத் தெளிய விளங்கியது திலகர் சிறந்த அறிஞர் ஆன்மிய வாழ்வில் நம்பிக்கை கொண்டவர். அந்த அறிவும் அந்த வாழ்வும் அவர் வழியே விடுதலைப் போராட்டமாக மலர்ந்தன. சிவாஜியையும், கணபதி திருநாளையும், பழைய பண்பாட்டின் குறிக்கோளாகவும் சமுதாய வாழ்வின் அடையாளமாகவும் கொண்டு விடுதலை இயக்கத்தை அவர் வளர்த்தார் எனவே, விடுதலை இயக்கம் இவ்வாறு சிறந்து, எல்லோரும் ஒன்றாகும் பண்பாட்டியக்கமாக ஓங்கியது. மகாத்மா காந்தி சத்தியாக்கிரகப் போரினைத் தொடங்கி உண்மை, அஹிம்சை, அன்பு, தியாகம் என்றவற்றின் அஞ்சாத போக்கே அடிமைத்தொழிலை அறுத்தெறியும என்று காட்டி, விடுதலைப் போரினைத் தவவழியாக்கி விட்டார். விடுதலைப் போர் இரத்தப் புரடசியாக முடியாமல் இவ்வாறு உயர்ந்தது இந்தியாவில்தான்.

இந்த நூற்றாண்டு தொடங்குமபொழுதே தமிழர் சூரத்துக் காங்கிரசுககுச் சென்று, இந்தப் புதுவகைத் தொண்டில் ஈடுபட்டனர் பொதுமக்கள வாழ்வு இந்தியர் கப்பலோட்டியும் சிறக்கவேண்டும் என இவர்கள எண்ணத்தில அருமபிச செயலில மலர்ந்தது சிதம்பரம் பிள்ளை கபபலோடடியதும பழைய தமிழ்பபண்பாட்டின் நிலையஙகளான தொலகாப்பிய உரையினையும திருவள்ளுவர்

உரையினையும் வெளியிட்டதும் பண்பாட்டின் உயர்வாகக் கருதிய விடுதலைப் போரில் ஒரு துறையேயாம். பாரதியும் சிதம்பரம் பிள்ளையோடு சூரத்துக் காங்கிரசுக்குச் சென்றிருந்தார். இவர் திலகர் யுகத்தின் இனிய உயிருள்ள குரலாக நின்று தமிழ்நாட்டில் பாடத் தொடங்கினார். பொதுமக்களுக்கு விளங்கும் நடையில் பொதுமக்கள் விரும்பிப் பாடிவந்த நாடோடிப் பாடல் நடையில் பாடினார். புதிய உணர்ச்சி. ஆனால், உள்ளூற உள்ளத்தில் துடிக்கும் உணர்ச்சி-இன்றைய இழிவு, சென்ற காலத்தின் சிறப்பு, எதிர்காலத்தில் நம்பிக்கை, உலக முழுதிற்குமாகத் துடிக்கின்ற துடிப்பு, உரிமை வேட்கை, எங்கும் கடவுளென்ற பழங்கொள்கையின் புதுவிளக்கம், இதன் பயனாகப் புலையனுக்கும் விடுதலை என்று பாடுவதோடு நில்லாமல், காக்கை குருவி எங்கள் சாதி என்று காணும் விடுதலைச் சகோதரச் சமத்துவம், ஆன்மய நேய ஒருமைப்பாடு, மதம் பிடித்த யானையை உடன்பிறப்பின் அன்போடு நெருங்கி உயிர் கொடுக்கும் கொள்கையின் உறுதி, உலகத் துன்பத்தை எவ்வகையேனும் மறந்து, இந்த உயரிய உணர்ச்சிகளைப் பாட்டாகப் பாடி, மக்களை எழுப்பத் துடிதுடிக்கும் உள்ளத்துடிப்பு, ஆனால், இவையத்தனையும் 'கடவுள் வழிபாடென்ற நோக்கம். ஆற்றல் மிக்க சக்தி வழிபாடு, அந்தத் தாயாம் பெருஞ் சக்தியாகத் தமிழ்நாட்டையும் இந்திய நாட்டையும் தமிழையும் கண்டு உருகி வழியும் ஈர நெஞ்சு, தமிழரையும் இந்தியரையும் அத்தாயின் கைகளாகக் கொண்டு விளக்க முந்தும் நெஞ்சுரம். பழைய பண்பாட்டின் நிலையங்களாக இந்த மக்களைக் காண்கிற காட்சி, தன் கடவுளைக் கண்ணனாக்கி எல்லா உறவுகளிலும் தொடர்புகளிலும் அவனைக்கண்டு என்பு நெக்குருகும் பக்தி, அடிமைத்தளையைத் தகர்த்தெறிய முயலும் முயற்சியைப் பரிபூரணன் வடிவமாய்க் கிடக்கும் இந்திய நாட்டு மக்களின் வழிபாடாக உணரும் ஆழம், கடவுள் வழிபாடு, இவ்வாறு மக்கள் வழியாகத் தோன்றும் உண்மை, இந்தக் காட்சியால் விடுதலைப் போராட்டத்திற்கென எழும் புதிய ஊக்கம், அரசியல் விடுதலை மட்டுமின்றிச் சமுதாய விடுதலைக்கென ஆனந்தப் பள்ளுப்பாடும் களிப்பு, பொருளாதார விடுதலையினை நாடியதால், *தனியொருவனுக் குணவிலையெனில் சகத்தினை அழித்திடுவோம்* என்ற வீர முழக்கம், பெண்களைச் சக்திகளாகக் கொண்டு கும்மியடிக்கும் இன்பக்கூத்து, விடுதலையை எதிர்த்து நிற்பாரைப் பழைய பாடல்களைப் பாடி இகழும் நையாண்டித்தனம், எதிர்ப்பை எதிர்க்கும் எரிவு, நாட்டின் இழிவினையும் நாட்டு மக்கள் அங்கங்கே படும் துன்பத்தையும் எண்ணி, *ஆ! கரும்புத் தோட்டத்திலே* என்று கதறும் கதறல், சிறுவரையும் தட்டியெழுப்பி, *அச்சமில்லை, அச்சமில்லை ஜயபேரிகை கொட்டடா* என்ற ஆரவாரம்,

பெருமக்களை எலலாம் பண்பாட்டில் அடையாளமாக்கி வாழ்த்தி எடுத்துக் காட்டும் நன்றிமறவா உள்ளம். பாரதப் பழங்கதையினையும தீமையின் வீழ்ச்சியை விளைவிக்கும் பெண்ணின் பெருமையாகப் பாடும் வீரக்காப்பிய வீறாப்பு-இந்தப் பலவகை விடுதலை வாழ்வை எல்லாம் சித்தர்கள் பாட்டைப் போல ஆன்மீயக் காதல் வாழ்வாகக் கண்டதனை வெளியிடும் குயில் பாட்டு. இவையெலாம் ஒருங்கு திரண்டதே பாரதியாரின் பாடல்.

பேச்சு நடைக்கோர் இலக்கிய மாண்பினைத் தேடித் தந்ததோடு உண்மை இலக்கியத்தின் உயிர்த்துடிப்பு இன்னதென நேரில் உணருமாறும் செய்துவிட்டது இவர் பாடல் பேச்சு நடையிலே ஒரு பாடற சந்தததினைப் புதியதாகக் கண்டு. அதனை நிலைநாட்டியவையே இப்பாடல்கள் அரசியலைப் பாட்டின் பொருளாகப் புஷ்கின், ஷெல்லி, பைரன் முதலியோர் பாடிய துண்டு ஆனால், பாரதியார் எல்லாமாகிய ஒப்பறற நிலையின் ,ஆழத்திற் புகுந்து அதுவே விடுதலை என்ற சொலலின் பொருளாழம் எனக்காட்டுகின்ற அடிப்படையை வேறெங்கும் காண முடியாது பிறரெல்லாம் இந்தியாவிலும் அரசியற் பாடல்கள் பாடியிருந்தாலும அவற்றிற் பல மறைந்துபோக இவர் பாடல்கள் மட்டும் நிலைத்து நிற்பதற்கு இதுவே காரணம்

இவரொரு கவிதா மண்டலத்தைக் கண்டார் அதில் ஒருவர் இருவர் இன்றும சிறந்து அவர் பெயரினை நிலை நாட்டிப் பாடடுலகின் முடிமணியாக விளங்குகிறார்கள் ஆனால், இங்கோர் இடர்ப்பாடுண்டு சமுதாய விடுதலையை ஒரு சிலர் வற்புறுத்தத் தொடங்கினர். அப்போது மன எரிவையே அனைத்துக்கும் அடிப்படையான நிலையிற் கொண்டுபோய்ப் பாட்டாகப் பாரதி போல் பாடுவோர் ஒரு சிலரே மறறைய பாவாணர்களோ மேடைப் பேச்சில் உணர்ச்சி ததும்பப் பேசுவது போல மன எரிவையே பாட்டாகப் பாடிக் கொட்டுவர் யாப்பமைதி எங்கும் இல்லாத நிலையில் இத்தகைய பாடல்களில அமைந்தாலும் இவை பாட்டாவதில்லை உணர்ச்சி மேலிடுமபொழுது இந்த வேறறுமையை உணர முடியாமல் தலைசிறநத பாவாணரும் தவறிப் போகின்றனர் குறிப்பிடடதோர் இயக்கத்தின வெளியீடுகளாகவே இப்பாடலகள் அமைந்துவிடுவதால பாரதியின பாட்டுப்போல் சிறக்கக் காணோம் இருந்தாலும் இத்தகையோரிடம் இயற்கையைக் காணும் காட்சியின் ஆழம். உள்ளத்துணர்ச்சியை நாடகமுறையில் வெளிப்படுத்தும் நயம் யாப்பில தங்குதடையின்றி எதுகை மோனைகள் தேடி வந்து விழப் பாடும யாபபமைதி. தமிழன்பு தமிழ வீரம இவையெலாம பொஙகி வரவே காணகிறோம

இங்கே புதிய நோக்கம் கொண்ட கதைகளைப் பாட்டாகப் பாடுகின்ற போக்கும் காண்கிறோம். ஆனால், அவற்றின் உண்மை நிலையை அறுதியிட்டுக் கூறுவது இன்று அருமை. ஒரு சிலர் காந்தியுகத்தைப் பாடுகின்றனர். இந்திய ஆன்மீய வாழ்வின் வரலாற்றையே ஒரு பேராறாகக் கொண்டு காப்பியம் சிலர் பாடுகின்றனர். இவற்றில் சில பாடல்கள் அழியாது நிற்குமென்றாலும், அனைத்தும் நிலைத்து வாழுமென்று கூறலதற்கில்லை. ஏதோ இந்தக் காலம் தனிப் பாடலுக்கு ஏற்றதாக அமைந்ததேயன்றிப் பெரும் காப்பியங்களுககு ஏற்றதன்று போலும். இவைகளிற் சிலர் தாங்கள் தமிழ் நூற்பரப்பில் கண்ட இன்பத்தினையெல்லாம் பேசுகின்றார்கள். பண்பாட்டு வடிவமாகத் தமிழினையும் தமிழ் நாட்டினையும், காணும் காட்சி இது. ஆனால், இப்பாடல்களையெல்லாம் செந்தமிழ் நாடெனும் போதினிலே என்ற பாரதிப் பாட்டைப் பொதுமக்கள் கவிமணி கூறவதற்கிணங்கத் துள்ளிக் குதித்துப் பாடுவது போல் பாடமுடியுமா என்பது ஐயமே இவர்கள் விரும்புகிற அத்தகைய ஆழ்ந்த நூலறிவு பொதுமக்களிடத்தில் கிடைப்பதருமை

பிற கவிஞர்களிடத்தில் பாவாணர் தாம் கொண்ட ஈடுபாட்டையும் பாட்டாகப் பாடி வருகின்ற ஒரு புதுமை இங்கே தோன்றுகிறது அவர்களின் வழி வந்தவர்களே இவர்கள் என்ற உணர்ச்சி தோன்ற இவர்கள் பாடுகின்றார்கள். பொதுவாகப் பாட்டினைப் பற்றியும் கலைமகளின் கலைவடிவைப்பற்றியும் பாடத்தொடங்கிக் கல்வியைப் பற்றித் தாங்கள் கொண்ட கருத்தினையும், தங்கள் உள்ளத்தே அது இயல்பாகப் பொங்கி வரும் நிலையினையும் சுட்டுகின்றார்கள். இந்த நிலைகளைக் கவிமணி தேசிக விநாயகம்பிள்ளை பாடலில் காணலாம் இவரைக் குழந்தைப் பாவாணர் என முன்னர்ச் சுட்டினோம். மொழி பெயர்ப்புக்கள் பலவற்றைத் தமிழொடு தமிழாக்கிப் புதுமையாகவே தோன்ற கேட்பார் மனம் மகிழ்ந்து, துள்ளிக் குதித்து, என்றென்றும் பாடிவரும் நிலையில் படைத்துத் தந்துள்ளார். உமர்கையாம் எழுதிய பாடல்களை ஆங்கிலத்தில் கம்பீர நடையில் பிட்ஸ்ஜெரால்டு (Fitzgerald) புதுமை தோன்ற மொழிபெயர்த்ததனை ஆற்றொழுக்காக வரும் தெள்ளிய நீரோடையில் கீழிருப்பன எல்லாம் விளங்கும் எளிமையில் மகிழ்ந்து, படிப்போர் ஓடுகிற ஓட்டத்திலும் பாடிக் கொண்டு போமாறு, தமிழே முழுதும் விளங்கக் கவிமணி பாடியுள்ளார். தமிழிலேயே வந்த பிற மொழிபெயர்ப்புக்களோடு இதனை ஒப்பு நோக்கும்போது இந்த உண்மை விளங்கும் பிற மொழிகள் தமிழாக

மாறிப் பிறந்து உயரும் உண்மை இவரிடம் காணலாம் இவரும் சித்தர் மரபினர். இவரும் ஏசுவையும் புத்தரையும் சமதர்ம நிலையில் நின்று பாடுகின்ற பாடல்கள் மிகச் சிறந்தனவாம் தாயுமானவர்தாம் பாடுகின்றாரோ என்று எண்ணுமாறு சிற்சில இடங்களிலும், பாரதியே பாடுகின்றாரோ என்று சிற்சில இடங்களிலும் எண்ணச் செய்து விடுகின்றனர்.

வரலாற்று ஆராய்ச்சியில் பற்பல புதுமை கண்ட இவருடைய உள்ளம் அவற்றில் ஒரு சில துறையில் நம் உள்ளமெலாம் ஈடுபடப் பாடுகின்றார் தமிழ்ச் சமுதாயம் மலையாளத்துக்கு ஒடுங்கிக் கிடக்கின்ற நிலையில் பற்பல குற்றங் குறைகளைக்கண்டு மருமக்கள் வழி மான்மியம் என ஒன்றினை நகைச்சுவைபட எழுதுகின்றார் மன எரிவைப் பாட்டாக அடக்கி ஆள்வதன் முதல் அடையாளம ஈதெனலாம். தாம் சிரங்கோடு பட்ட பாட்டைச் சிரங்கரையன் தந்த வளம் எனப பாடிச் சிரிக்கும் சிரிப்பு இவருடைய ஆன்மீய வாழ்வின் அடையாளம். சிரிப்பையுந் தாண்டி உணர்ச்சி ததும்பம் பெண்களின் பெருமையையும், கீழ்நிலை மக்களின் உள்ளத்துடிப்பினையும், இயற்கையின் அழகினையும் அவற்றோடெல்லாம் ஒன்றாகிப் பாடுகின்றார் *பாட்டும் அறமும் ஒன்றாகுமா?* என்ற கேள்வி உலகில் பலமுறை எழுகிறது காந்தியடிகளின் வாழ்வு ஒரு பெரிய ஒழுக்கப்பாட்டாகவே செனறோங்கியது இந்த யுகத்தில் வாழ்ந்த கவிமணி இயற்கையின் அழகிலெலலாம் அறப்பேருண்மைகளையே கண்டு, உணர்ச்சி ததும்பப் பாடும்பொழுது பாட்டின் வடிவம் அறம், பொருள், இன்பம், வீடாக அமையும் அனைத்தின்பமேயாம என்பது விளங்குகிறது

பழைய கதைகளைப் புதிய கோணத்தில் நின்று பாடுவது-நாடோடிப் பாடல்களின் நடையிலும் யாப்பினும் பாடுவது-உலகில் தோன்றும் பலவகைக் காட்சிகளைக் கண்டு மனம் தன்னை மறந்து நிற்கும் நிலையில உணர்ச்சி பொங்கப் பாடுவது-சக்தி என்றும், பேராற்றல் என்றும, இயற்கை என்றும், எல்லாமாய ஒரு பரம்பொருளைப் பாடுவது பிறமொழிப் பாடல்களைத் தமிழ் மொழியில் தருவது-இப்படிப் பற்பல பாடல்கள் இன்று தோன்றி வருகின்றன உணர்ச்சிப் பெருக்கு வெள்ளமிடுகிறது ஆனால், பலபோது உணர்ச்சியானது வெறியாக முடியவும காண்கிறோம குழந்தைக்கெனப் பாடல்களும வெளிவருகின்றன அவறறில் சில குழந்தைகளின உள்ளத்தைத் தொடுகின்றன ஆனால பல உணர்சசியற்று ஓடுகின்றன

திரு.வி.க. சில பாடல்கள் பாடியுள்ளார். பெண்ணின் பெருமை, இயற்கையினழகு, இயற்கையோடியைந்த இன்பம், விடுதலை வேட்கை, தீண்டாமை ஒழிப்பு, சன்மார்க்கம், பொதுமை அறம் என்பவை அவர்கண்ட உண்மைகள். இவர்தம் எழுத்தில் மேனாட்டிற்கும் கீழ்நாட்டிற்கும் பாலம் அமைத்தார். புதுமையையும் பழமையையும் இன்பப் பிணையலாகப் பின்னிவிட்டார் கட்சிப் பூசலிலும் மொழிப் போராட்டத்திலும் நடுநிலைமை பிறழாத நாட்டுப் பற்றினையும் மொழிப்பற்றினையும் அவரிடம் காணலாம். அருள் வேட்டலாக அவர் பாடிய பாடல்கள், இராமகிருஷ்ணர் பல சமயங்களின் அனுபவங்களையும் ஒன்றாகக் கண்டதனை நினைவூட்டுகின்றன. பொதுமை வேட்டலில் பொதுமையும் ஆன்மீயக் கண்ணோட்டத்தில் வெளிவருவதனைக் காண்கிறோம் முதுமையின் உளறல் என்ற பாடல் அவர் உள்ளத்தின் வெளியீடு. ஆரவாரமின்றிப் பாடுகிற பாட்டில் உணர்ச்சி தன் வடிவம் தோன்றாதபடியே நம்மைத் தன்வயப்படுத்துகிறது.

இசையின் அடிப்படையில் இப்போது பாடல்கள் செல்லுகின்றன என்றோம். தமிழிசை இயக்கம் என ஒன்று எழுந்தது. பிறமொழி இசையை வெறுத்தல் என்று பொருள் கொள்ளாமல் உடன்பாட்டுண்மையாக இதனை நோக்குதல் வேண்டும். இதன் பயனாக இசை ஆராய்ச்சியும் எழுந்தது. பலப்பலர் பாடுகின்றனர் விபுலாநந்தர் செய்த யாழ்நூல் ஆராய்ச்சிக்கொரு சிறந்த அடையாளம் ஆனால், விழாக்களைக் கொண்டாடுவதோடு விட்டு விடாமல் தொடர்ந்து இதனைப் பற்றிய ஆராய்ச்சிகளைச் செய்து, இசை வாணர்களைத் தமிழ் மரபினை ஒட்டி அம்மரபுக்கு ஒத்து வரும் பிற மொழி இசைகளையும் இயையவைத்துப் பாடும் முயற்சியில் ஈடுபடவேண்டும். பல தமிழ் இசைப்பாடல்கள் வெளிவந்துள்ளன. எங்கும் தமிழ் இசைப்பாடல்களே கேட்கிறோம். வெள்ளித்திரையில் எல்லாம் தமிழ்ப்பாடல்களன்றி வேறேது? ஆனால் அங்கே மொழி மட்டுமே தமிழ் இசை மரபு தமிழ் மரபு அன்று. இவ்வெள்ளித் திரைப் பாடல்களில் பல பாடல்கள் குழந்தைகளே விரும்பத்தக்க பாடல்களாக அமைந்துவிடக் காண்கிறோம்

நாடகம் இன்று வெள்ளித்திரையோடு போராட வேண்டி நிற்கிறது. இருந்தாலும் ஒருசில நாடகங்கள் வெற்றியே பெற்று வழங்குவதால், நாடகத்திற்கு இனி இடமே இல்லை என்று கூறிவிட முடியாது பழைய தெருக்கூத்துககள இன்றும் நாட்டுப்புறஙகளில வழஙகியே வருகின்றன

முத்ததமிழின் வடிவமாக விளங்கும் இவை தமிழ்நாட்டினர் கண்ணோட்டத்தைப் பெறவில்லை பிறநாட்டினர் இத்தகைய பழைய ஆடல் பாடல்களைக் காத்து, உலகிற்கெல்லாம் காட்டி மகிழும் போது தமிழ் நாடு இவற்றை இவ்வாறு புறக்கணிப்பது புதுமையேயாம் ஆனால், குறவஞ்சிநாடகம், மிலாட்டூர் பாகவதரது நாடகம் முதலியன பரதநாட்டியத்தோடு சிறந்து வருகின்றன தெருக்கூத்தில் வழங்கும் பல நாடகங்கள் பத்தொன்பதாவது நூற்றாண்டில் எழுதப்பெற்றவையாம் இனி இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் பார்சி நாடகம் என்ற பேரில் தத்ரூபமாய்க் காட்சிகளைக் காட்டுவதென்று முன்வந்த முயற்சி மேலும் வளர்ந்து விஞ்ஞானத்தின் உதவியால் திரைகளை அமைக்கும் கலையாகச் சிறந்தோங்கி, எவ்வளவோ இன்று முன்னேறி உள்ளது இதன்கொடுமுடியை வெள்ளித்திரையில் காணலாம் இதன் பயனாக நாடகம் காண்போரின் கற்பனைத்திறம் செயற்படுதற்கு இடம் தாராமல் நடைபெறுகிறது இங்கே இயற்கை வருணனைகளுக்கும் இடமில்லை

தெருக்கூத்து நடையிலும் வேறாக மேனாட்டுமுறையை ஒட்டி நாடக மேடை அமையவேண்டும் என, சம்பந்த முதலியார் சங்கம் அமைத்தும், தாமே நாடகம் ஆடியும் எத்தனையோ பல நாடகங்கள் எழுதியும் உதவினார் இடையே பாடுவது இயறகையன்று என்பது அவருடைய கொளகை வடமொழி நாடகங்களை ஒட்டியும், ஷேக்ஸ்பியர் நாடகங்களை மொழிபெயர்த்தும், புதிய நாடகங்களைப் படைத்தும், நகைச்சுவை ததும்பும் சமுதாய நாடகங்களை அமைத்தும் பற்பல நாடகங்கள் எழுதியுள்ளார் மண்ணியல் சிறுதேர் முதலான வடமொழி நாடகங்களை மொழி பெயர்பபதனையும் இந்த நாளில் காண்கிறோம் இத்தகைய மொழிபெயர்ப்புக்களில் சிறந்து விளங்குவது மறைமலையடிகளின் சாகுந்தலமே ஆம் அடிகள் காளிதாசனிடம் கொண்ட ஈடுபாட்டில கமபா கவியழகினையும் மறந்துவிடுகிறார். சூரியநாராயண சாஸ்திரியார் இந்த நூற்றாண்டின் முதலில வடநூலையும் தமிழ் நூலையும் தழுவி, நாடக இயல் என இலக்கணநூல் ஒன்று அமைத்துத் தந்தாா அவர் அரிய இலக்கிய நடையில் அமைத்துத் தந்த நாடகங்கள் பாடப் புத்தகங்களாகவே வந்துகொண்டிருக்கின்றன நாடக இயலைபை விளக்க ஷேக்ஸ்பியரை அடிப்படையாகக் கொண்டு வடமொழி, தென்மொழிக் கொள்கைகளையும் விளக்கி, அழகிய நூலாக மதங்க சூளாமணியை விபுலானந்தர் வழங்கியுள்ளார் மனோன்மணியத்தை ஒட்டிச செய்யுள நடையில சில நாடகங்களும தொனறின இவையும மனோன்மணியம் போல ஓதி இன்புறததககவையே அன்றி மேடைமேல் நடிதது மகிழ்டடததக்கவை

அல்ல. நாடக மேடைகளுக்கெனப் பல நாடகங்கள் எழுந்தன இவற்றில் பயின்று வரும் பல பாடல்களைச் சங்கரதாஸ் போன்றவர்கள் இயற்றித் தந்தார்கள். சிறவர்கள் சேர்ந்து நடிக்கும் நாடகக் குழுக்களும் பல தோன்றின. பழைய கதைகளேயன்றித் தேசிய இயக்கத்தின் அடிப்படைக் கொள்கைகளாகச் சத்தியாக்கிரகப்போர் தொடங்கியபோது வற்புறத்தப்பெற்ற கள்ளுண்ணாமை, கதர், தீண்டாமை ஒழிப்பு, குதிரைப்பந்தய ஒழிப்பு முதலியவற்றை விளக்கும் சமுதாய நாடகங்கள் பலவற்றையும் பாவலர் அவர்கள் எழுதி நடிக்கவைத்து, மக்கள் உள்ளத்தைக் கவர்ந்தார். வெம்பிளிக் கண்காட்சியிலும் இவருடைய இளநடிகர் நடித்தனர். சிறந்த நடிகர்கள் இசையில் வல்லவராகவும் இருந்த நிலையில் நாடகம் செழித்து வளர்ந்தது. தமிழ்ப் பெருமையினையும், தமிழின் வீரத்தினையும் கூறும் நாடகங்கள் இன்று மக்கள் உள்ளத்தைக் கவர்கின்றன. சமுதாயச் சீர்திருத்தத்தினை விரும்புவோர், பழைய கொள்கைகளை எள்ளி நகையாடி இயற்றும் நாடகங்களும் வழங்குகின்றன. கல்லூரிகளிலும் உயர்நிலைப் பள்ளிகளிலும் மாணவர் நடிப்பதற்கெனப் பல நாடகங்கள் வெளி வருகின்றன. சுகாதார வாரம் முதலிய கொண்டாட்டங்களுக்காகச் சில நாடகங்கள் கொள்கையைப் பரப்புதற்கென வெளிவரவும் காண்கிறோம்.

நாடகம் இன்று வானொலியிலும் வெள்ளித் திரையிலும் புதிய வடிவம் கொண்டு விளங்குகிறது நாடகத்தைத் திரிசிய காவியம் என்பார்கள் படிப்பதற்கு மட்டும் எழுந்த மனோன்மணியம் போன்ற பிற காப்பியங்களும் காட்சியை மறந்ததில்லை. முழுதும் காட்சியாக அசையும் படம் சிலகாலம் நின்று நிலவியது. இது மௌனக்காட்சி நாடகம். பின் விஞ்ஞானத்தின் வளர்ச்சியால் பேசும் படமும் வளர்ந்தது சிறியதைப் பெரியதாக்கியும், பெரியதைச் சிறியதாக்கியும் விரைந்து செல்வதனைப் பைய நகரவைத்தும், பையச செல்வதனை விரைந்து ஓடவைத்தும் பற்பல வகையில் பற்பல சித்துக்களைப் பேசும் படம செய்து வருகிறது; நம்ப முடியாதவற்றை நாடகங்களில் காட்ட முடியாது அவற்றையெல்லாம் நாடகப் பாத்திரங்களின் பேச்சிலேயே முன்னர்ச சுட்டிவந்தனர். ஆனால், நம்பத்தகாததையெல்லாம பேசும் படத்தில இன்று காட்ட முடியும ஆதலால் பல அறபுதக காட்சிகள் நிகழும கதைகள் இப்போது வெள்ளித்திரையில வெளிவருகின்றன வெள்ளித்திரை வரலாற்றின் தொடக்கத்தில நகைச்சுவைப பகுதிகள மிக்கு வர நடந்தன அவை தனிப்பகுதியாக முழு நாடகத்ததோடு ஒட்டப்பெற்ற நிலை சிலகாலம இருந்தது பின் இந்த நிலை மாறியது இசைபபாட்டிறகும் பரதநாட்டியத்திறகும இன்று பெரும பகுதிக்

வெள்ளித்திரை தருகிறது எனலாம்.பல சமுதாய நாடகங்களும் வெளிவருகின்றன ஆழ்ந்த பொருளோடு இவை நிலைநிற்குமா என்பதே கேள்வி உரைநடைகள் அவ்வப்போது தோன்றும் செய்திகளைக் குறிப்பாற் சுட்டி, உணர்ச்சி ஊட்டுவனவாகவும். எதுகையும் மோனையும் ததும்பி வரும் போக்காகவும் அமைந்திருக்கக் காண்கிறோம் காட்சியாலும வெளி ஆரவாரத்தாலும், நடிகர்களின் அழகாலும், திறமையாலும் சிறப்பதன்றி இலக்கியச் சுவையால் சிறந்தன பல என்று கூறுவது அருமை

வானொலியிற் காட்சியைக் காட்ட முடியாது. கற்பனையால்தான் அதனைக் கேட்போரின் மனத்தில் எழுப்ப முடியும் பேசுவோன் குரலன்றி வேறொன்றும் அங்குக் கேட்பதில்லை பேச்சினைக் கேட்போர் அபபேச்சுக்கேறப உணர்ச்சி ததும்ப நிற்கும காட்சியினையும் பேசுவோன் கண்டு, அதற்கேறபத் தன் பேச்சினை மாற்றுதற்கும் மேடைப் பேசசிற்போல வானொலியில் இடமில்லை. பேச்சுக் கேட்கவேண்டுமென்று வருபவரும் அங்கு இல்லை கூட்டத்தால் எழுகின்ற ஒருமனப்பாங்கும அங்கு இல்லை வீட்டில் அமைதியாகக் குடும்பத்தினரோடு ஒருங்கு மகிழுங்காலத்தே எத்தனையோ பல மனநிலைகளில் இருக்குமபோது வானொலிப் பெட்டியைத் திறந்து பலர் கேடபர் இந்தச் சூழலுக்கு ஏற்றதாக ஏதோ அருகிருந்து பேசுவது போல் மனத்தைப் புண்படாத நிலையில், ஆனால், உள்ளத்தைக் கவர்கின்ற வகையில் பேச்சு அமைதல வேண்டும் மிகச்சுருக்கமாக-ஆனால், தெளிவாகக் குறுகிய நேரததில் கேட்பவர்க்குச் சோர்வு தோன்றாது உணர்ச்சி ததுமபும்படி எவரையும் தாக்காது பேசி விளக்க வேண்டும் விடிய விடியப பேசிப பழகியவர்களுக்கு இது ஒரு புது வழக்கமேயாம். ஒவ்வொரு சொல்லின் பொருள் ஆழமெல்லாம் இங்கு விளங்கிவரும் ஓசையின் நயமெல்லாம் அதில் தோன்றும். உணர்ச்சி வேறுபாடுகளெல்லாம் மிக நுட்பமாக, ஆனால், திட்பமாக அமைகின்றன எதுகை மோனைகளோடு இங்கும் பலர் பேசுகின்றார்கள் ஆனால், அந்த நிலை குறைந்துகொண்டு வருகிறது. எல்லாவற்றையும் கொட்டிவிட வேண்டுமென்கிற எண்ணம் குறையக் குறையத் தெளிவும் விளக்கமும மிகுந்துவருகின்றன சொற்செட்டும், சுருங்கச்சொல்லி விளங்கவைத்தலும், நவின்றோர்க்கினிமையும், நன்மொழி புணர்த்தலும், உலகம மலையாமையும, விளங்கு உதாரணத்தது ஆதலும் இங்கே உணமையழகாக விளங்குகின்றன மேடைபபேச்சு இப்படியெல்லாம் வளைநது கொடுக்கவேண்டியிருக்கிறது

வானொலி நாடகம் முழுக்க முழுக்க நூற்றுக்கு நூறு செவிவழி நாடகமாகக் கண்ணை மூடிக்கொண்டு கேட்பதாகவும் அமைந்துவிட்டது. பாத்திரங்களின் வேறுபாடோ, ஒரு காட்சி தோன்றி மற்றொரு காட்சி தோன்றும் வேறுபாடோ இங்கே தோன்றுவது அருமை. பாத்திரங்களின் பெயரைப் பழகும்வரை அடிக்கடி விளிப்பதும், இசையின் துணையால் காட்சிகள் மாறுவதைக் காட்டுவதும் காண்கிறோம். நாடகப் பாத்திரங்களின் முகம் நமக்குத்தோன்றுவதில்லை. நடிப்புக்களும் செயல்களும் தோன்றுவதில்லை. இடம் பெயர்தலும் தோன்றுவதில்லை. இவை அத்தனையையும் பேச்சும் குரலொலி மாற்றமுமே காட்டுதல் வேண்டும். பின்னணிக் காட்சிகளும் இங்கு இல்லை. இயற்கை வருணனைகளைப் போதிய அளவு கூறவும் பொழுதில்லை. இத்தனை நெருக்கடிகளுக்குள்ளே தனிக்கலையாக வானொலி நாடகம் வளர்ந்துவருகிறது. ஒருசிலபோது வெற்றியும் காண்கிறது. ஒரு சிலரே நாடக மேடைக் கலையிலும் வானொலி நாடகக் கலையிலும் ஒருங்கே சிறந்து நடிப்பவர்கள்.

வானொலியில் சிறுகதைகளும் கூறிவருகிறார்கள். சிறுகதையைப் படிப்பது வேறு; கேட்பது வேறு. பழங்காலத்தில் பாட்டிமார் கதை கூறிவந்தார்கள். ஆனால், அதுவோ பல நாளுக்குத் தொடர்ந்துபோகும். நேருக்கு நேர் பேசும் அந்தப் பழங்குறிப்புக்கள் வானொலியில் விளங்கினாலும், உணர்ச்சிகள் குரல் வழியே ததும்பினாலும் மிகச் சுருங்கிய பொழுதே வானொலியிற் கிடைக்குமாதலின் இதன் இயல்புகளைத் தனிக் கலையாகக்கொண்டே ஆராய்ந்து விளக்க வேண்டும். அவ்வாறு செய்தும் வருகின்றனர்.

சிறுகதை என்பது பத்தொன்பதாவது நூற்றாண்டில் அமெரிக்காவில் தொடங்கி உலகம் முழுவதும் பரவி விட்டதொரு கலை. கதை சிறிய அளவில் வருவது மட்டுமன்று இங்குள்ள சிறப்பு. அது மேல்வாரியான நோக்கம். கதையும் இல்லாமற் போகலாம். குறிப்பிட்டதொரு செய்தியை அல்லது நிகழ்ச்சியை அல்லது மனநிலையை அல்லது மனமாற்றத்தை விளக்கக் கூடியதொன்றாக அது அமைகிறது. தொடக்கமும், வளர்ச்சியும், முடிவும் மனச்சோர்வைத் தாராமல் கவர்ச்சியாக அமைவதோடு, சூழ்நிலை விளக்கமும் முன் நிகழ்ந்த செய்திகளின் விளக்கமும் செறிந்து நாடக நிகழ்ச்சிபோல் வேண்டுமளவில் வேண்டுமிடத்தே வர அமைவதனையும் காண்கிறோம். இவை நாவல்களோ, நாடகமோ, கட்டுரையோ, உபதேசமோ, கதைச்சுருக்கமோ ஆகாது விளங்குதல் வேண்டும். வ.வெ.சு.ஐயரின் மங்கையர்க்கரசியின்

காதல் இத்தகைய சிறப்போடு எழுந்த முதல் தமிழ்ச் சிறுகதை எனலாம். பல மேனாட்டுச் சிறுகதைகளும் இந்தியப் பிறமொழிச் சிறுகதைகளும் தமிழில் வந்தன. அவற்றில் தமிழொடு தமிழாக அமைந்தவை சில. மொழி பெயர்ப்பென்றே விளங்குபவை சில. புராணக் கதைகளைப் புதிய கோணங்களிற் கண்டு ஒரு சில நிகழ்ச்சிகளைப் புதுவனவாக விளக்குவன சில. அகலிகையின் கதை இவ்வாறு பல நோக்கங்களில் வெளிவருவதைக் காணலாம் சிறுகதையாளர் பற்பல குழுக்களாகப் பிரிந்து நிற்கின்றனர். கிழமைத் தாள்களிலெல்லாம் சிறுகதைகள் பல வந்துகொண்டே இருக்கின்றன. விரைந்தோடும் உலகத்திற்கேற்ற இலக்கியமாகச் சிறுகதை அமைகிறது. பல தமிழ்க் கதைகள் ஆங்கிலத்திலும் இந்தியநாட்டுப் பிற மொழிகளிலும் மொழிபெயர்ப்பாகி, மக்கள் உள்ளத்தைக் கவரக் காண்கிறோம். கு.ப.ரா, புதுமைப்பித்தன் முதலியோர் கதைகளிலும், பின்வந்தோர் கதைகளிலும் ஒருசில என்றும் நின்று விளங்குவன ஆகும். துப்பறியும் கதைகள், மனோதத்துவத்தை விளக்கும் கதைகள், குறிப்பிட்ட சிற்றூரின் நிலையினையும், சூழ்நிலையையும், சமுதாயத்தினையும் விளக்கும் கதைகள், வரலாற்றுக் கதைகள் என்று பலவகையாகக் கதைகள் வெளிவரக் காண்கிறோம்.

சிறுகதையினும் நாவலே பழையதாகும். மேலே கூறிய கதை வகைகளெல்லாம் தமிழ் நாவலிலும் உண்டு. இவற்றிற் பல தொடர்கதையாகப் பத்திரிகைகளில் வெளிவருகின்றன. சிறுகதை வருவதற்கு முன், நாவலே மக்கள் மனத்தைக் கவர்ந்தது. முதலில் பத்தொன்பதாம் நூற்றாண்டில் தோன்றிய பிரதாப முதலியார் சரித்திரமும் கமலாம்பாள் சரித்திரமும் நாவலுக்குத் தமிழில் தலைசிறந்த இடத்தைத் தேடிக்கொடுத்தன. பின்னர் வங்காளம் முதலிய மொழிகளிலுள்ள ஆனந்தமடம் போன்றவை மொழிபெயர்ப்பாக வந்தன. மொழிபெயர்ப்பல்லாதவற்றில் மாதவையாவின் பத்மாவதி சரித்திரம் குறிப்பிடத்தக்கது. ரெனல்ட்ஸ் (G.W.M.Reynolds) என்பவர் நாவல்களும் பிறவும் தமிழ்நாட்டில் பழகி இருந்த காலத்தில் அவற்றை மொழிபெயர்த்து ஆரணி குப்புசாமி முதலியார் போன்றவர்கள் எழுதியவை மக்களிடையே புழக்கத்தில் இருந்தன. இவை சிறந்ததொரு மனநிலையை உண்டுபண்ணாமையால் இறந்தன. ஆனால், மறைமலையடிகள் இத்தகைய கதைகளில் ஒன்றைக் குமுதவல்லி அல்லது நாகநாட்டரசி என்ற தலைப்போடு தமிழ்ச்சுவையோடு தமிழாக மாற்றி எழுதியுள்ளார். துப்பறியும் நாவல்கள் ரங்கராஜு முதலியோரால் எழுதப்பெற்று வழக்கத்தில் இருந்தன. தமிழின் அழகினைவிடத் துப்பறியும் கதையின் போக்காலேயே அவை வாழ்ந்தன. உண்மையில்

மறைந்த தேவன் என்பவர் தம்முடைய கதைகளில் துப்பறியும் சாம்புவைத் தமிழ்நாட்டுக்கு அறிமுகம் செய்துவைத்தார். காதலே நிரம்பிவரும் கதைகள் ஒருபுறமாகக் காதலின் போராட்டத்தையும், கற்பின் போராட்டத்தையும் ஒரு சிறிது நெறி பிறழ்ந்தவழி உள்ளத்தெழும் மனப் போராட்டங்களையும் சித்திரித்துக்காட்டும் நாவல்களும் வெளிவருகின்றன. சமுதாயச் சூழ்நிலையை விளக்குவனவும், மூடநம்பிக்கையை விளக்கிச் சிரிப்பனவுமாகச் சில சீர்திருத்தக் கதைகள் சிலபோது கற்போர் மனம் சிறிது புண்படுத்துவன ஆகவும் வெளிவருகின்றன. சிறந்த இலக்கிய நடையில் எழுதுகின்ற தமிழறிஞர்களும் இதில் ஈடுபடுகின்றார்கள். சிலர் வெற்றியும் பெற்றுள்ளார்கள். இங்கோர் இடர்ப்பாடு எழக் காண்கிறோம். தங்கருத்துக்களைக் கதையோடு கதையாக மாற்றிவிடாமல் தனியே எடுத்து நிகழ்த்தும் சொற்பொழிவுகள் போலவும் கொள்கை விளக்கங்கள் போலவும் அவற்றை நுழைய விடும்போது கதையின் கவர்ச்சி குறைந்தே வருவது இயல்பு. மேனாட்டு நாவல்களை மொழிபெயர்ப்பதும், தழுவி எழுதுவதும் வழக்கமாகிவிட்டன. கொச்சை மொழியில் பாத்திரங்கள் பேசுவது மட்டுமன்றி, நாவலையுமே அம்மொழியில் எழுதுகின்ற வழக்கம் மெல்லக் குறைந்து கொண்டு வருகின்றது. ஒருசிலரே அன்றி எல்லோரும் படிக்க வரும்பொழுது எல்லோர்க்கும் விளங்கும் பொது நடையில் அமையும் செந்தமிழில் எழுதவேண்டுவது இன்றியமையாததாகிறது. கலைச்சுவையே ததும்ப எழுதும் நடையும், நகைச்சுவை ததும்பும் நடையும் ஒரு சிலவற்றின் போக்காய் முடிய வேறு சிலவோ அனைவர்க்கும் ஒத்த பொது நடையில் உயர்ந்து நின்று, அந்த அந்த இடத்திற்கும் பாத்திரத்திற்கும் ஏற்ப மாறி மாறி வரவும் காண்கிறோம்.

வரலாற்றினை விளக்கும் சூழ்நிலையில் புதுக்கதைகளை உருப்படுத்துகின்றவர்களையும் காண்கிறோம். பல்லவர் காலத்தையும் சோழர் காலத்தையும் விளக்கிக் கல்கி எழுதிய வரலாற்று நாவல்கள் மக்கள் மனத்தைக் கவர்ந்துவருகின்றன. தேசியப் போராட்டத்தைப் பற்றியும் பல கதைகள் எழுந்தன. பாவலரின் நாடகங்களைக் குறிப்பிட்டோம். இன்றுள்ளார் எழுதியவையும் உள்ளன. விடுதலைப் பேராட்டம் முழுவதினையும் இந்தியச் சூழ்நிலையோடு ஒன்றுபடுத்தி விளக்குகின்ற அலையோசை என்ற நாவலையும் கல்கி எழுதியுள்ளார். இது காந்தியுகத்தின் புராணமாகக் கொள்ளுதல் தகும். இங்குக் கூறியவை தொடர்கதையாக வெளிவந்தமையால் மிகமிகப் பெரிய வடிவில் தோன்றி நிற்கின்றன. விரைந்தோடும் உலகத்தினை இவை

திகைக்கவே வைக்கின்றன. இன்றுள்ளார் இந்தியாவின் பல பகுதிகளின் பழைய வரலாற்றை விளக்கும் கதைகளையும் எழுதுகின்றார்கள்.

கட்டுரைகளே முதலில் பத்தரிகை உலகத்தில் வெளிவந்தன. பொருட்செல்வமாக நின்ற இவை சிறுகச் சிறுக மொழியழகும் சொல்நயமும் உள்ளங்கவரும் உணர்ச்சியும் பெற்று வளரலாயின. பல வரிகளாக நீண்ட வாக்கியங்கள் திரு.வி.க வழியே ஆற்றல் மிக்க சிறு சொற்றொடர்களாயின சமயமும் இலக்கியமும் பற்றியனவாகக் கட்டுரைகள் இருந்த நிலை மாறி எல்லாத்துறையிலும் அவை பரவலாயின. மேனாட்டுக் கருத்துக்களையும் புது முற்போக்குக்களையும் விளக்குமாற்றலும் இன்றைய தமிழ் பெற்று விளங்குவதற்கு இநதக் கலைக்களஞ்சியமே சான்றாம் பொருளாதாரம், உளவியல், வரலாறு, விஞ்ஞானம், விஞ்ஞானச் செயன்முறை, தொழில்நுட்பவியல், இலக்கிய ஆராய்ச்சி, கணிதம் முதலிய பல துறைகளிலும் நூல்கள் வெளிவந்தாலும் விஞ்ஞானச் செயன்முறை, தொழில்நுட்பவியல், கணிதம், பொறியியல் முதலியவை தமிழில் இன்னும் வேர் கொள்ளவில்லை என்றே சொல்ல வேண்டும்.

விஞ்ஞானத்தினைத் தமிழில் விளக்க முடியுமா என்று அஞ்சிய காலம் உண்டு. *விளக்க முடியுமா?* என்ற கேள்வியே தலைப்பாக எழுத முடியும் என்று காட்டியவரும் உண்டு. *திண்ணை ரசாயனம்* முதலிய நூல்களில் திண்ணைப் பேச்சாகவும் இதனைப் பேச முடியும் என்று அவர் காட்டினார். இதனைப்பற்றி உலகம் புகழும் விஞ்ஞானிகளில் ஒருவரிருவர் தமிழில் எழுத முன்வந்தனர். சிறுவர் மலரில் இருந்து ஆண்டுமலர் வரையில் விஞ்ஞானக் கட்டுரை விளக்கம் பற்பலப் படங்களுடன் வெளிவரத்தொடங்கின. இவற்றிற்கெனச் சில திங்கள் வெளியீடும் எழுந்து வளரும் காட்சியையும் காண்கிறோம். பலர் எழுதும் இத்துறையில் பலரும் மனங்கொள்ளத் தமிழொடு தமிழாய் விஞ்ஞானத்தை எழுதி மறைந்த இராசேச்சுவரி அம்மையாரைக் குறிப்பிட வேண்டும்

வாழ்க்கை வரலாற்றை எழுதிய நூல்களில் சாமிநாத ஐயரின் மீனாட்சிசுந்தரம் பிள்ளை சரிதம் குறிப்பிடத்தக்கதாகும். சுயசரிதம் எழுதும் போக்கும் வளர்ந்துள்ளது. இந்தவகையில் தலைசிறந்து விளங்குவது திரு வி,க வின் வாழ்க்கைக் குறிப்பாகும். சாமிநாத ஐயரின் என் சரிதம் என்பதும் சிறந்ததே ஆம்

அரசியல்துறை, பொருளாதாரத்துறை, இலக்கியத்துறை என்றவற்றில் காலஞ்சென்ற சண்முகஞ்செட்டியார் போன்றவர்கள் தமிழில் எழுதி வளர்த்தமையால் தமிழ் வளர்ந்தது எனலாம். இலக்கிய ஆராய்ச்சியில் மக்காலே போன்ற ஆங்கில ஆசிரியர்களைப் பின்பற்றிய மறைமலையடிகளின் போக்கு ஒன்று; இப்போது பின் வந்த இலக்கிய ஆராய்ச்சியாளர் கொள்கைகளை அடிப்படையாகக் கொண்டு ஆராயும் ஆராய்ச்சி மற்றொன்று. இவற்றின் கண்ணோட்டத்தில் தமிழ் நூல்களிலேயே தமிழ் நூல்களை ஆராயும் அடிப்படைகளை நாடி அறியவேண்டும் என்ற முயற்சியும் உண்டு. தமிழ் நூல்களில் தாம் துய்த்ததனைத் துய்த்தபடி எழுதிக்காட்டி ஆராய்ச்சி நுட்பங்களை வெளிப்படுத்திய டி.கே.சி. முதலியவரையும் மறத்தலாகாது. இலக்கியங்களில் அரசியல் உண்மைகளைக் காண்போர் இந்நாளில் பலர். கதையையே உண்மை எனக் கொண்டு காண்போரும் சிலர்.

தமிழ் நூல்களை ஆராய்ச்சிக் கண்கொண்டு காண்கின்ற முயற்சி சுந்தரம் பிள்ளையிடமிருந்து வளர்ந்து, கனகசபைப்பிள்ளை, கோபிநாத ராவ், இராகவையங்கார், சுப்பிரமணியப் பிள்ளை, சீனிவாசப் பிள்ளை, வையாப்புரி பிள்ளை முதலியவர்களிடம் மேலோங்கிவரக் காண்கிறோம். தமிழ் நூல்களைப் பதிப்பிக்கும் முறையையும், முன்னுரை எழுதும் போக்கினையும் சாமிநாத ஐயரிடம் கண்டோம். வரலாற்று ஆராய்ச்சியும் இதனோடு தொடர்புடையது. இத்தகைய கட்டுரைகளாக அன்றி முழு நூலாகவும் பல வெளிவரக் காணக்கிறோம். திரு.வி.க.வின் முருகன் அல்லது அழகு, உள்ளொளி, காதலா சீர்திருத்தமா, இந்திய விடுதலை என்ற நூல்களைக் குறிப்பிடவேண்டும்.

இலக்கணக் கட்டுரைகளும் வெளிவந்தன. அரசஞ் சண்முகனார், திருமயிலை சண்முகம் பிள்ளை, சோமசுந்தரம் பிள்ளை, மறைமலையடிகள், சுன்னாகம் குமாரசாமிப்பிள்ளை முதலியர்களைக் குறிப்பிடலாம். பழைய முறையின்படி பழைய நூல்களுக்கு உரைகளும் வெளியாயின. பழைய நூல்களின் தெளி பொருள் விளக்கமாக இந்த நாளைய மக்கள் விரும்பும் வகையில் பல நூல்கள் வெளிவந்தன. சென்ற நூற்றாண்டைய இராமசாமி நாயுடு இந்த நூற்றாண்டின் முற்பகுதியிலும் உரை எழுதினார். கோ.வடிவேலு செட்டியாரின் திருக்குறள் தெளிபொருள் விளக்கம் சிறந்ததொரு தமிழ்த் தொண்டாம். அவர் சமய நூல்களுக்கும் உரை கண்டுள்ளார். மறைமலையடிகளின் திருவாசக விரிவுரையும், பண்டிதமணியின் திருவாசகக் கதிர்மணி விளக்கமும், சாமிநாத ஐயரின் மணிமேகலை உரைக்குறிப்பும்,

குறுந்தொகை உரையும், பின்னத்தூர் நாராயணசாமி ஐயரின் நற்றிணை உரையும், கோபால கிருஷ்ணமாசாரியாரின் சிறந்த படைப்பாம் கம்பராமாயண உரையும், சர் ஆர்.கே.சண்முகஞ் செட்டியாரின் சிலப்பதிகாரப் புகார்க் காண்ட உரையும் எந்த நாட்டிலும் பாராட்டினைப் பெறலாம்.

தமிழ், இன்றைய மேனாட்டார் கூறும் இலக்கியத் துறைகளில் எல்லாம் சிறந்து விளங்குவதோடு பிற இடத்தில் இல்லாத வகையில் புதியதொரு தேசியப்பாடல்களை அணியாகக் கொண்டு, முன்னில்லாததோர் எளிமையையும், விளக்கத்தினையும், பேச்சு நடையோடு ஒத்த இனிய அழகினையும் இசை அமைதியாம் சந்தத்தினையும் பெற்று, முன் அருகி வழங்கிய நகைச்சுவையும் வளர்ந்துவர, எவற்றிலும் உணர்ச்சி ததும்பும் உயிர்த்துடிப்பும் பெற்று, எல்லாக் கருத்தினையும் வெளிப்படுத்தும் வழக்கத்தில் புகுந்து, பல துறைகளிலும் அவ்வவற்றிற்கேற்ப நெகிழ்ந்து கொடுத்து இயைந்துவரும் புதியதோர் ஆற்றலையும பெற்றுப் பயனற்றன கீழே ஆழ்ந்துபோக, நிலையானவை மேலோங்கிவரச் சிறுவர் முதல் பலர்க்கும் இன்பம் தர முன்னேறிச் செல்கிறது.

# குணம்

குணம் என்பது பண்பு, பண்பை உடையது பண்பி. பண்பியின் உறுப்புக்களையும் குணம் என்ற சொல் குறிக்கும். இவ்வாறு பண்பியின் பண்பு, பண்பியின் உறுப்பு என்ற இருபொருளின் ஊடாட்டத்திலே கொள்கை மாறுபாடுகளும் உருக்கொண்டன. சைவ சித்தாந்திகள் குணமே உள்ளது; குணி என வேறில்லை என்பர். அத்வைதிகள் குணியே உள்ளது; குணம் மாயை என்பர். வைசேடிகர் குணமும் குணியும் ஆகிய இரண்டும் உள் பொருள்கள் என்பர்.

உலகம் பலவேறு வகையாகத் தோன்றுவது, பிரகிருதி எங்கும் பரந்துள்ள சத்துவம், இராசதம், தாமசம் என்ற மூன்று குணங்கள் வெவ்வேறு அளவில் ஒவ்வொரு பொருளில் கூடியிருப்பதாலேயாம் என்பர் சாங்கியர். *குணம் என்பது சடப்பொருளுக்கே உரியது; புருஷன் அல்லது உயிரினிடம் குணம் தோன்றுவது சடத்தின் குணத்தைப் புருஷன்மேல் ஏறிட்டுக்கொண்டு பிரகிருதியிலும் தான் வேறு என்று உணரும் வரை அவ்வாறே மயங்கி நம்புவதாலே ஆம். புருஷன் குணமற்றவன்* என்ற கொள்கை பரந்தது. சடத்தின் இந்த இயல்பால் உயிரின் குணம் மாறுபட்டுப் பல்வேறு வகையாகத் தோன்றும் என்பது ஏறக்குறைய எல்லா இந்து மதபேதங்களிலும் புகுந்துவிட்டது. மனமும் சடமே ஆதலின் உணவாலும் குணம் மாறுபடும் என்றனர். மக்களின் குண கரும வேற்றுமை காரணமாக வெவ்வேறினமாக-சாதியாகப்-பிரிகின்றனர் என்பது கீதை.

குணம் ஒரு பொருளின் இயல்பானால் உயிர்ப்பொருளுக்கும் குணம் இருத்தல் வேண்டும் எனக்கருதிக் குணத்தைச் சடத்திற்கு மட்டும் உரிமையாக்காமல், உயிர்க் குணம், கடவுட் குணம் என்று பேசுங் கொள்கையும் வளர்ந்து, சாங்கியர் கொள்ளும் பொருள்படி நிர்க்குணமான ஆன்மா, ஆன்ம குணமுடையதாயிற்று. உயிர்க்குணம் தீக்குணம் எனவும், கடவுட் குணம் நற்குணம் அல்லது கலியாண குணம் எனவும் வழங்காலாயின. குணம் என்பதற்குக் கொள்ளும் பொருள் மாறாட்டம் கொள்கைப் போராட்டமாகக் *கடவுள் நிர்க்குணம், கடவுள் கலியாண குணம்* என முரணி எழுந்தது. சிற்றுயிரின் குணம் பேருயிரின் குணம் என்று கீதை கூறும் குண வேற்றுமை உயிர்க்குண வேற்றுமையாம் என்று கூறுவதும் எளிதாயிற்று.

ஒ வ்வொன்றிற்கும் குணம் வேறு பிரித்துக் கூறுவதனைக் கணாத முனிவர் கண்ட வைசேடிகர் கொள்கையில் காணலாம். உலகில் பேசத் த்க்கவற்றை அதாவது பதார்த்தங்களை எல்லாம்-1. பொருள் (திரவியம்), 2. பண்பு (குணம்), 3. செயல் (கர்மம்), 4. பொதுத்தன்மை (சாமானியம்), 5. சிறப்புத்தன்மை (விசேடம்), 6. ஒற்றுமை இயைபு (சமவாயம்), 7. இன்மை (அபாவம்) என்ற ஏழாகப் பகுத்துக் கொள்வதில் இரண்டாவதாகக் கூறப்பெறும் சிறப்புடைய குணம் பொருள் அல்லது பண்பியினைப் பற்று (ஆசிரயம்) ஆகக்கொண்டு விளங்குவதாம். இந்த ஏழில் இன்மை பேசுவதனை நீக்கினால் உளது என்ற வழக்கிற்குரியன ஆறேயாம்; இயைபினையும், இரு தன்மைகளையும் தனியே காணமுடியாதாகையால், மிகுதி நிற்பன மூன்றே உளதாம் தன்மை (சத்தாசாதி) உடையவை. உளதாம் தன்மையுடைய அம்மூன்றில் பொருள், கருமம் என்ற இரண்டிலும் வேறாய்ப் பொருளைப் பற்றி நிற்பதே குணம் என்பது.

இருபத்துநான்கு குணங்களை வைசேடிகர் கூறுவர். உருவம், சுவை, நாற்றம், ஊறு (ஸ்பரிசம்) என்ற நான்கும் முறையே கண், நா, மூக்கு, தோல் என்றவற்றால் உணரப்படும் குணங்களாம். இவை பிரகிருதியில் தீயின் கூட்டுறவால் பிறக்கும். சூளையில் பசுங்குடத்தினைச் சுடும்போது வெந்த குடம் நிறம் முதலியன பெற்றுவருவது எப்படி? தீயின் கூட்டுறவு (பாகம்), பரமாணுவுக்கே (பீலுவுக்கே) ஆம்; பசுங்குடம் அழியும்; அழியும்போது பாகம் ஏற்ற பரமாணுவின் வழியே துவியணுகம் முதலியன தோன்றும். நிறம் முதலியன அங்கே தோன்றும். முடிவில் குணம் பெற்ற வெந்த குடம் விளங்கும் என்பர். இதுவே வெந்த அணுக்கொள்கை (பீலு பாக வாதம்). இந்த வகையில் பசுங்குடம் கெட்டுப் படிப்படியாக வெந்த குடம் தோன்றாமல் குடத்தின் (பிடாரம்) அணு முதலான எல்லா உறுப்பிலும் குடம் என்ற உறுப்பியிலும் ஒருங்கே வேற்றுருவம் முதலிய குணம் தோன்றும் என்பது கௌதம முனிவர் கண்ட நையாயிக மதத்தினர் கொண்ட வெந்தகுடக் கொள்கை (பிடாரபாக வாதம்) ஆகும். இந்நான்கும் பிருதிவியில் அழிவன (அநித்தியம்). முதற் கணத்தில் பொருள் நிர்க்குணமாய் விளங்கும். பிருதிவி நீங்கியவற்றில் அழியாப் (நித்தியப்) பொருளில் இருக்கும் பண்பு (இரண்டு முதலியன நீங்க) அழியாதனவாம். அழியும் பொருளில் இருப்பன அழிவனவாம். ஒன்று, இரண்டு என எண்ணப்படும் எண், அளக்கும் அளவு (பரிமாணம்), வேறு என வழங்குவதற்குக் காரணமான வேற்றுமை, கூடுதல் தன்மை, பிரிவு, காலத்தாலும் இடத்தாலும்

முன்னாய் இருக்குந் தன்மை, பின்னாய் இருக்குந் தன்மை, வீழ்தற்குக் காரணமாம் திண்மை, ஒழுகுந் தன்மை, நீரில்காணும் திரட்டுந் தன்மை, காதால் உணரும் ஒலி என்ற பதினொன்றும் மேலைய நான்கோடும் சேர்ந்து உயிர்க்கே உரியன எனச் சிறப்பதில்லை. நினைவும் அனுபவமுமாம் அறிவு, இன்பம், துன்பம், விருப்பு, வெறுப்பு, முயற்சி, அறம், மறுக்கப்படும் மறம் என்ற எட்டும் ஆன்மாவிற்கே உரியவை. அறிவு, விருப்பு, வெறுப்பு என்ற மூன்றும் இறைவன் குணமானால் அழியாதனவாம். உயிர்களின் குணமானால் அழிவனவாம். பிருதிவி, அப்பு, தேயு, வாயு என்பவற்றில் இருக்கும் வேகம் என்பது விரிந்து சுருங்கும் பாய் போன்றதன் தன்மையாயும் வேறு தன்மையடைந்தவையின் இயல்பாயும் மீட்டும் பழைய நிலையை அடைதலாய்ப் பிருதிவியில் மட்டும் இருக்கும் நிலைபெறுத்துகை என்ற தன்மையாயும் மூன்று வகையாக இருக்கும். நினைவு முதலான வாசனைஎன்பதே கடையான இருபத்து நாலாவது குணமாம். உயிர்க் குணம், உடற்குணம் என நன்னூல் கூறுவது ,காண்க.

இலக்கண நூலார் ஆவின் தன்மையை உணர்த்துவது போன்றது, வெண்மையை உணர்த்துவது போன்றது, நடத்தலை உணர்த்துவது போன்றது, கல்லானை என்பது போலக் குறித்த ஒரு பொருளை உணர்த்துவது போன்றது எனக் குறிக்கப்பெறும் நான்கு வகையான சொற்பொருளில் குணம் என்பது வெண்மை முதலியன என்பர்.

அணிநூலார் நடையின் இயல்பினைக் குண அலங்காரம் என வழங்குவர். தமிழ்த் தண்டியலங்காரத்தில் பொதுவணியியலில் காண்க. சொல் குணம் என்றும், பொருள் குணம் என்றும், இரண்டின் குணம் என்றும் வெவ்வேறு கூறுவர். பத்தென்றும் பல என்றும் பலர் கூறிவந்தனர். பின்னர், தெளிவு, இனிமை, வன்மை என்றமூன்றில் மம்மடர் அடக்குவது காண்க.

அரசியலில் குணம் என்பது பிற நாட்டாரோடு ஓர் அரசு மேற்கொள்ளும் போக்கின் இயல்பாகி (1) கூட்டுறவு அமைதி (சந்தி), (2) பிரிவு (போர்-விக்கிரகம்), (3) படை எடுத்துச் செல்லல், (4) நின்றுவிடுதல், (5) அரணில் புகுதல், (6) நட்புப் போன்றும் பகை போன்றும் ஏமாற்றும் இரண்டகம் என்ற ஆறுவகையாகப் பிரியும்.

இலக்கண நூலார் ஆவின் தன்மை முதலியவற்றை உணர்த்துவதாம் பொதுமைப் பொருண்மை, வெண்மை முதலியவற்றை உணர்த்துவதாம்

குணப்பொருண்மை, நடத்தல் முதலியவற்றை உணர்த்துவது போன்ற தொழிற் பொருண்மை, கலலானை என்பது போலக் குறித்த ஒரு பொருளை உணர்த்தும் பொருட் பொருண்மை என நான்கு வகைகளில் குணம் என ஒன்று கூறுவர் பொருளை (1) முதல் (2) சினை எனறு வேறு பிரித்தும், எல்லாவற்றிற்கும் இடம தரும் (3) காலம (4) இடம என்பவற்றைத் தனித்தனிக் கொண்டும், (5) தொழிலோடும (6) குணத்தோடும் கூட்டி ஆறாக்கினார் பவணந்தி சிலர் தொழிலையும தொழிற் பண்பு என்பர் பண்பு எனபது இயற்கையாம இயலபும, வந்தேறியாம் செயற்கையும் என இரண்டாகவும பிரியும தன்மை என்பதனைப் பவணந்தியார் சினேந்திரர் மதம் பற்றிக் குணத்தில் அடக்கினார் எனபர் பிரயோக விவேக நூலார்

# சித்தர்கள்

*சித்தர்கள்* என்றால் சித்தி பெற்றவர்கள், பேறு பெற்றவர்கள், வீட்டின்பம் அடைந்தவர்கள் என்று பொருளாம். அருகர்களும் சித்த சரணம் பாடுகின்றனர். சித்தன் வாழ்வு என்பது முருகப் பெருமானது கோயில். எல்லாம் வல்ல சித்தனாகச் சிவபெருமான் திருவிளையாடல் புரிகின்றார் என்று புராணங்கள் பாடும். கடவுளைக் காண முயல்கின்றவர்களைப் பக்தர்கள் என்றும், கண்டு தெளிந்தவர்களைச் சித்தர்கள் என்றும் தேவாரம் வேறு பிரித்துக் கூறும். அனுபூதி ஞானம் பெற்றவர்களை மிஸ்டிக்ஸ் (Mystics) என்ற ஆங்கிலச் சொல் குறிக்கும் சித்தர் என்ற சொல்லும் அப்பொருளில் தமிழில் வழங்கக் காண்கிறோம் சித்தர்களின் அனுபூதி அனுபவத்தில் வேற்றுமை இல்லை. அதைக்கூறும் வருணனையிலேயே வேற்றுமை உளது ஆதலின் சித்தர்களை எல்லாச் சமயத்திற்கும் அப்பாற்பட்ட சர்வசமய சமரச சன்மார்க்கத்தினைப் பாடக் காண்கிறோம். திருமூலர், நால்வர், ஆழ்வார்கள், கருவூர்ச் சித்தர், குகைநமச்சிவாயர், குருநமச்சிவாயர், மெய்கண்டார், சிவப்பிரகாசர், தாயுமானவர், இராமலிங்கர் இவர்கள் எல்லாம் இந்த வகையில் சித்தர்களேயாவர்

அணுவைப்போலச் சிறிதாதல் (அணிமா), மேருவைப்போலப் பெரிதாதல் (மகிமா), காற்றுப்போல் இலேசாதல் (இலகுமா), பொன்போலப் பளுவாதல் (கரிமா), எல்லாவற்றையும் ஆளுதல் (பிராப்தி), எல்லாரையும் வசப்படுத்தல் (வசித்துவம்) கூடுவிட்டுக் கூடு பாய்தல் (பிராகாமியம), விரும்பியதனை யெல்லாம் செய்துமுடித்து அனுபவித்தல் (ஈசத்துவம்) என்ற எட்டுவகைப் பெரும்பேறுகளை அஷ்டமாசித்திகள் என்பர். (திருவிளையாடற்புராணம், அஷ்டமாசித்தி அருளிய படலம்) இந்தச் சித்திகள் கைவரப்பெற்றவரே சித்தர்கள் என்ற வழக்கமுண்டு.

வாசி என்ற மூச்சினை அடக்கி ஆண்டு, யோக சக்தியினால் உடலில் உள்ள மூலாதாரம், கொப்பூழ், இதயம், இரைப்பையின் நடு, கழுத்து, தலைமுடி என்ற ஆறு இடங்களிலும் மனத்தை முறையாக நாட்டிக் குண்டலியை எழுப்பிப் பல பல அனுபவமும் வெற்றியும் கண்டு, அப்பால் உள்ள எல்லாம் ஆன பொருளில் நிலைத்துச் சித்தி பெறுபவரே சித்தர் என்ற வழக்கம பரவியுள்ளது

சாத்திரக் குப்பையிலும் கோத்திரக் கோளாற்றிலும் ஈடுபடாமல், அவற்றினை இகழ்ந்து தள்ளி, மக்களிடம் பரிவுகொண்டு அவர்களிடையே வாழ்ந்து, அவர்களையெல்லாம் நல்வழிபபடுத்த முயன்ற நவநாத சித்தர்களைப்பறறி வடநாட்டில் பேசிவருகின்றனர் மச்சேந்திரர், கோரக்கர் முதலானவர்களின் சமாதிகள் அங்கே காட்டப்பெறுகின்றன இவர்கள் பெயரையும் தமிழ்ச் சித்தர் வரிசையில் காண்கிறோம்

இஸ்லாம் மதத்தையும இந்து மதத்தையும் சமரசப் படுத்த வேண்டுமென்று விரும்பி மஸ்தான்கள் என்னும் இஸ்லாமிய ஞானிகள் பலர் வேதாந்த அனுபவக் கருத்துக்கு ஒப்பப் பாடி மக்களிடையே வாழ்ந்து, அவர்கள் மனத்தினைக் கவர்ந்துள்ளனர் குணஙகுடி மஸதான் போன்றவர்கள் தமிழ்நாட்டில் பலர் மற்றொன்றும் உணடு அரேபிய நாட்டிலிருந்து மேனாட்டிற்கு ரசாயனமும இரசவாதமும பரவி இந்நாளைய விஞ்ஞான முன்னேறறத்திற்கு வழிகோலின அராபியர் தமிழரோடு சேர்ந்து கப்பலோட்டிப் போர்ச்சுகேசியரோடு போராடினர் அரேபிய நாட்டுத் தொடர்பு, இங்கு வளர்ந்த சித்த மருததுவ முறையை மேலும் ஓங்கி வளரச்செய்தது காயற்பட்டினத்துத் தமிழ முஸ்லிம்கள் சித்தவைத்திய முறையைக் கூறும் நூல்களைக் கையாண்ட புலவர்களாகியிருந்தனர் ரூமி (Rumi) முதலிய இஸ்லாமிய சூபி (Sufi) சித்தர்கள் போக்கும் தமிழ்ச் சித்தர் பாக்களில் புகுந்தது. பீரு முகம்மது என்ற இஸ்லாமியப் பெரியவர் பாடிய ஞானரத்தினக் குறவஞ்சி, சித்தர் ஞானக்கோவையில் சேர்ந்திருக்கிறது கோரக்கர் முதலானோர்களுக்கு வேற்று நாட்டையும் தாயகம் என்று கூறுவதுண்டு ரோமரிஷி என்ற பெயர் ரோமாபுரியோடு தொடர்புடையதோ என்பது விளங்கவில்லை கோஹர், புண்ணாக்கீசர் கருவூரர், சுத்தானந்தர், மூலர், கொங்கணர், பிரமமுனி, ரோமமுனி, கமால்முனி, கோரக்கர், சட்டைமுனி மச்சமுனி இடைக்காடர், சைவ அடியார், வைணவ அடியார் என்று அருணாசலகுரு கூறுகிறார் கமால்முனி என்பது இஸ்லாமியப பெயராதல் வெளிப்படை கைலாயக் கம்பளிச் சட்டை முனி நாயனார் தாம் பாடிய ஞானத்தில் *தம்மைத் திருமூலர், சண்டீகர் சனகாதி நால்வர்,* வியாக்கிரபாதர், பதஞ்சலி என்பவர்களோடு எண்ணி, நவநாதராக்கிவிடுகின்றார் *கேளப்பா மூலர்க்கு காலாங்கி பிள்ளை கெட்டியான காலாங்கி மைந்தர் போகர்-நீளப்பா போகர் பிள்ளை கொங்கணர்தான்* எனறு ஒரு சித்தர் பரம்பரையைச சட்டைமுனி பாடுகிறார் காகபுண்டர், ராமதேவர் வான்மீகி மார்ககண்டர ஜகதீசா

சுப்பிரமணியர், அகத்தியர், சிவவாக்கியர், திருவள்ளுவர் முதலிய பெயர்களையும் சித்தர்கள் வரிசையில் சேர்க்கின்றோம். வைத்திய நூல்களில் தேரையர், அவருடைய சீடர் யூகிமுனி, அவருடைய குரு தரும சௌமியர் என்ற பெயர்களும் வருகின்றன. தேரர், தேரையர் என்பன தேரவாத பௌத்த மதத்தைச் சேர்ந்தவர் என்பதைக் குறிக்குமோ என்பதனை ஆராய்தல் வேண்டும். தருமசௌமியர் என்ற பெயரும் இத்தகையதே; இந்தப் பெயர்களையெல்லாம் கண்டால் அதில் பல மதத்தினரும் பல நாட்டினரும் இருக்கக் காண்கிறோம். முன்னோர் பெயரால் பின்னோர் எழுதிய நூல்கள் பல. வைத்தியம், இரசவாதம், ஞானம், மந்திரம் முதலியவற்றைப்பற்றி யெல்லாம் இவர்கள் எழுதியிருப்பதாகக் கூறக் காண்கிறோம்.

இவர்கள் பாடல்களில் வல்நடை, மெல்நடை என இரண்டு நடைகள் உண்டு. வன்மையாகப் பாடியவை எளிதில் பொருளாவதில்லை கேளப்பா, நீளப்பா என்று பாடுவன மெல்நடையில் வருவன. தங்களுடைய கொள்கையை மறைவாக வைத்துக்கொள்வதற்கு இவர்கள் ஒரு குழூஉக்குறியைப் படைத்துக் கொண்டனர். திருமத்திரத்தில் சூனிய சம்பாஷணை என்னும் பகுதியில் இதனைக் காணலாம். வைத்திய நூல்களிலும் குழூஉக்குறிகளே உள்ளன. இவ்வாறு பாடுவதால் அவர்கள் குழூஉக்குறியை அறிந்தாலன்றி இந்த நூல்களை அறிவது அருமையாய் இருத்தலின் இந்நூல்கள் இந்நாளில் பயன்தராது கிடக்கின்றன. வேளிருகைச்சில்வெட்டு என்றால் வெல்லம் என்றும், சைவம் என்றால் தாளிசபத்திரம் என்றும் பொருள் கொள்வதனை இங்கு எடுத்துக்காட்டலாம்.

இவர்கள் எல்லாம் காயசித்தி பெற்றுச் சாவை வெல்ல முயன்று, வெற்றி பெறுவதே வீடென்பர். இயம நியமாதி வழியில் ஒரு சிறிதும் தவறாது வாழ்ந்து, சட உணவைக் குறைத்துக்கொண்டு, உடலியக்கத்தைக் குறைத்து, வாசியினை அடக்கி, நாடிகளைத் தூய்மையாக்குவதால் உடலிலுள்ள ஒவ்வோர் உயிரணுவையும் தூய்மையாக்கிப் பின்னர் மனன வழிபட்டால் அணுவியக்கம் முற்றி, ஒளிவடிவம் என்னும் திவ்விய வடிவம் வளர்ந்து வரும்போது, மாறி மாறி வரும் சவிகற்ப நிலையும், பின்னர் நிலையாக ஒளிரும் நிர்விகற்ப சகஜநிலையும் தோன்ற உடலினை இவ்வாறு ஞான ஒளிமயமாக்கி, நாத தத்துவத்தோடு இணைத்துச் சாவினை வெல்வோம் என்பர் ரசேஸ்வரவாதிகளாம் நாத சித்தர்கள். இதுவே கால தகனமாகும். சடவுடலைச் சடம் நீக்கிப் படிப்படியாய்ச் சித்தாக்கு முறையில்

அதனைப் பிரணவ தனுவாக்கியும், ஞான தனுவாக்கியும் பரத்தில் வாழ்வது மகேஸ்வர சித்தாகும்.

கூண்டோடு கைலாயம் போதல், சாவாது வாழ்தல் என்பன தமிழ்நாட்டில் நீண்டநாளாகத் தொடர்ந்து பேசிவரும் பேச்சுக்களாகும் *மாணிக்கவாசகர் இதனையே கூறுகின்றார்* என்பர் நால்வர் முதலானோர் மோட்ச நிலையை அடைந்த கதைகளெல்லாம் உடலினைச் சாகவிடாது ஒளிமயமாக்கிப் பரத்தில் கலந்ததனையே சுட்டுகின்றதென்பார்கள் குமாரதேவரது சுத்தசாதனம் இதனை நன்கு விளக்குகின்றது ரேவணாராத்தியர் சிவஞானதீபம், தத்துவராயருடைய பாடல்கள், இந்த நூற்றாண்டிலிருந்த பாம்பன் சுவாமிகளது கொள்கை, ராமலிங்க சுவாமிகளது முடிவு இவையெல்லாம் இததகையதோா மரபினையே வற்புறுத்தக் காண்கிறோம்

சித்தர்கள பாடலெனப் பொதுமக்கள தெருவழியே பாடிப்போவனவோ பாமபாட்டிச் சித்தர், அகப்பேய்ச் சித்தர், அழுகணிச் சித்தர், இடைக்காட்டுச் சித்தர், குதமபைச் சித்தர், கடுவெளிச் சித்தர் முதலியோர் பாடல்களாம் *ஊத்தைக் குழிதனிலே மண்ணை எடுத்தே உதிரப்புனலிலே உண்டை சேர்த்தே, வாய்த்த குயவனார் பண்ணும பாண்டம் வரை ஓட்டுக்கும் ஆகாதென்று ஆடு பாம்பே* என்று பிறப்பினை இகழ்கின்றார் இவ்வாறு உவமைகள் வழியாகப் பொதுமக்கள் மனத்தைக் கவாகின்றன இப்பாடலகள் *தாம் திமி திமி தந்தக்கோனாரே, தீம் திமி திமி திந்தக்கோனாரே* என்று இடைக்காட்டுச் சித்தர் ஆடி *ஆதிபகவனையே-பசுவே-அன்பாய்-நினைப்பாயே, சோதி பரகதிதான்-பசுவே சொந்தமதாகாதோ* என்று ஒரு பசுவோடு பாடுகிறார் பசுவென்பது உயிர் சித்தர்கள் உடல் வருந்தி வாடி உயர்நெறி சேர்வர் ஒளி ஒன்று தோன்றி மறையும உலகத் துன்பம் பெரியதாய்த் தோன்றும், ஒளியைப் பிரிந்த நிலை மிக மிக வாடும சித்தர்களது நினைவு வலுப்பெறப் பேரின்பப் பேரொளி விட்டு விட்டன்றி முற்ற முடியத் தொடர்ந்து தோன்றும். அப்பேரின்பததின் முடிவாக ஆழ்ந்து ஒன்றிவிடுவர் இந்த நான்கு நிலைகளையும் சித்தர் பாடல்களில் பார்க்கலாம், *பேய்க் குரங்கு போலப் பேருலகினில் இச்சைவைத்து நாய்நரிகள் போலலைந்தால் நன்மை உண்டோ தனமனமே* என்பது படியேறு நிலை *இருட்டறைக்கு நல்விளக்காய் இருக்கும் தம வல்லமையை அருட்டுறையில் நிறுத்தி விளக்காகு நீ புல்வறிவே* என்பது முதலில ஒளி கண்ட நிலையையும பின் அதனைப பிரிந்த நிலையினையும கூடிய புலம்புதலாகும *அஞ்ஞானம் போயிற்று*

என்று தும்பீ பற, பரமானந்தம் கண்டோம் என்று தும்பீ பற என்பது ஆனந்தத் துள்ளல். பலமதம் பொய்ம்மையே என்று ஓது குயிலே என இன்பத்தினைப்பில் குயிலோடு கூவுகின்றார். சாவாதிருந்திடும் பால் கற என்று சித்தர் மதத்தை விளக்கிப் பால் கறக்கிறார். மனமான பேயை அகப்பேய் என்று குறிப்பிட்டுப் பாடுவதால் அகப்பேய்ச் சித்தர் என ஒருவர் பெயர் பெற்றார். ஆசாரங்கண்டாரே மோட்சம் வேண்டார்கள் என்று குழந்தைகளும் பாடிக்களிக்க வாய் இனிக்கப் பாடும் இப்பாடல் அறத்தினை வற்புறுத்துகின்ற நிலையைப் பாடுகின்றது. குதம்பை என்பது ஒரு காதணி. அதனை அணிந்த பெண்ணையும் அச்சொல் குறிக்கும் மனமெனும் பெண்ணை விளித்துக் குதம்பாய், குதம்பாய் என்று பாடுவதால் குதம்பைச் சித்தர் என ஒருவர் போற்றப்பெறுகிறார். மாங்காய்ப் பாலுண்டு மலைமேல் இருப்போர்க்குத் தேங்காய்ப்பால் ஏதுக்கடி-குதம்பாய்-தேங்காய்ப்பால் ஏதுக்கடி என்ற பாடலைப் பாடாத இசையரங்கும் இன்று நடைபெறுகிறதா? மாங்காய் என்பது பிரமம். பால் என்பது அதன் அனுபவம். மலையென்பது மேலான சமாதி நிலை. கடுவெளி என்பது பிரமமாம். அதனைப் பாடுவாரைக் கடுவெளிச் சித்தர் எனத் தமிழர் வாழ்த்துகின்றனர். இவரும் அறத்தினை வற்புறுத்திப் பல்லவி பாடுகின்றார்.

அட்ட சித்திகளைப் பெற்றவர்கள் பதினெண்மர் என்பர், 1 அகத்தியர், 2 போகர், 3.கோரக்கர், 4.கைலாசநாதர், 5.சட்டைமுனி, 6.திருமூலர், 7.நந்தி, 8.கூன்கண்ணர், 9.கொங்கணர், 10.மச்சமுனி, 11.வாசமுனி, 12.கூர்மமுனி, 13.கமலமுனி, 14.இடைக்காடர், 15.புண்ணாக்கீசர், 16.சுந்தரானந்தர், 17.உரோமருஷி, 18.பிரமமுனி. இவர்கள் அன்றித் தன்வந்திரி, புலஸ்தியர், புசுண்டர், கருவூரார், ராமதேவர், தேரையர், கபிலர் முதலியோரையும் கூறுவர். இவர்கள் யோகப் பயிற்சியையும் மருத்துவக் கலையையும் வளர்த்து வந்திருக்கிறார்கள். சம்பந்தர், தாயுமானவர் போன்ற பெரியோர்களும் சித்தர்கணத்தைப்பற்றிப் புகழ்ந்து கூறியிருக்கிறார்கள். அகத்தியரும், நந்தி தேவரும் எழுதிய வைத்திய நூல்களும் அவர்கள் பெருமையைக் கூறுகின்றன திருமூலர் பெரிய சிவயோகி. திருமந்திரம் என்னும் சிறந்த நூல் செய்திருக்கிறார். அவருடைய மாணவராகிய காலங்க நாதருடைய சீடர் போகர் என்பவர் பெரிய மருத்துவர். மருந்துச் செடிகளுக்காக ரோமாபுரிவரை இவர் சென்றதாகக் கூறுவார்கள் போகர் முதுமைப் பருவத்தில் பழனியில் வசித்து வந்தார் என்பர் அங்கே போகர் சமாதி காணப்படுகிறது ஆம். போகர் 7,000 யோகம் 700 என்பன இவர் எழுதிய நூல்களுள் சில. கொங்கணர் திருமழிசை ஆழ்வார் காலத்தவர்

அதாவது கி.பி.ஏழாவது நூற்றாண்டின் பிற்பகுதி அவர் எழுதிய நூ
கடைக் காண்டம். திரிகாண்டம் என்பன. மச்சேந்திரர் சீடரா
கோரக்கரே கஞ்சாவை மருந்துக்கு முதன் முதலில் பயன்படுத்தியவ
அதனால் கஞ்சாவைக் கோரக்கர் மூலி என்று கூறுவதுண்டு. வைப்
என்பது அவர் எழுதிய நூல். ஆனால் இந்த நூல்களி
பெரும்பாலானவற்றின் நடை பிற்காலத்தது. ஆதலின், பழைய
பெரியோர்களின் பெயரை வைத்துக்கொண்டு பின் வந்தோர் எழுதியன
ஆகலாம்.

வடநாட்டில் 84 சித்தர்கள் இருந்ததாகச் சொல்லுகிறார்கள் இவர்கள் பயின்ற யோக மார்க்கத்தை நாத மார்க்கம் என்று கூறுவார்கள் இந்த மார்க்கத்தைச் சாதிமத வேறுபாடின்றி எல்லோரும் பயிலலாம் இவ்வாறு பயின்ற சித்தர்களும் யோகிகளும் தாழ்ந்த வகுப்பைச் சேர்ந்தவர்கள் இவர்களுடைய சமாதிகள் நேப்பாளத்திலும் பஞ்சாபிலும் வடமேற்கு எல்லைப்புறங்களிலும் காணப்படுகின்றன இங்குள்ள மக்கள் இவர்களைக் கடவுளர்களாக மதித்து வணங்கி வருகிறார்கள்

சங்ககாலத்தில் கூடச் சில சித்திகள் கைவந்த சித்தர்கள் இருந்தார்களோ என்று எண்ண இடமுண்டு *நிலந்தொட்டுப் புகார் வானமேறார் விலங்கிரு முந்நீர் காலிற்செல்லார்* எனக் குறுந்தொகை (130) மூன்று சித்திகளைக் கூறுகின்றது ஜைனருள்ளும் இச்சித்திகள் வல்ல சாரணர் என்மர் இருந்தனர் என்ப. பௌத்தர்களும் இத்தகைய சித்திகளைப் பாராட்டுகின்றனர்

# தமிழ் நூல்களில் அத்வைதம்

தமிழ் நூல்களில் மிகப் பழையது தொல்காப்பியம். இது கிறிஸ்து பிறப்பதற்கு முன்னரே எழுந்தது. இதற்கு உரை எழுதிய நச்சினார்க்கினியர் இங்கு அத்வைதக் கொள்கையைக் காண்கிறார். காஞ்சித்திணைச் சூத்திரத்தில் வரும் *பாங்கரும் சிறப்பின்* என்ற சொற்றொடர் துவைதமற்ற கைவல்ய மோட்ச நிலையையும், பாடாண்திணையில் வரும் கந்தழி என்பது மற்றொரு பற்றுக்கோடு வேண்டா‥து தன்னிற்றானே ஒளிரும் பிரமத்தையும் குறிப்பதாகக் கருதுகின்றார். *மெய்யினியக்கம் அகரமொடு சிவனும்* என்று எழுத்ததிகாரம் கூறுவது *எழுத்துக்களில் அகரமாகின்றேன்* என்று கீதை கூறும் கருத்தே ஆகும்.

கிறிஸ்தவ சகாப்தத்தின் தொடக்கத்தினைச் சுற்றிப் பிறந்த சங்க நூல்களிலும் அத்வைதக் கொள்கையை இந்த உரையாசிரியர் காண்கிறார். திருமுருகாற்றுப்படை பிரமோபதேசமாம் *புலம் பிரிந்து உறையும் செலவு, உலகத்து ஒரு நீயாகத் தோன்ற* என்ற தொடர்களை அவர் வற்புறுத்துகின்றார். மதுரைக்காஞ்சியில் *நின்னொடு முன்நிலை எவனே?*(ஆன்மாவாகிய நினக்கு உன்முன் நிற்கும் உலகப் பொருள்களோடு என்ன உறவு?) *கெடுகநின் அவலம்* (நின்மாயை கெடுவதாக) *கொன்ஒன்று* (பெரிதான அத்வைதம் பிரமம்) *தொல்லாணை நல்லாசிரியர் புணர்கூட்டுண்ட* (பிரமவித்துக்கள் பிரமானுபவக் கொள்கையை அனுபவித்த) என்று வருவன எல்லாம் வேதாந்தமே பேசுவனவாக உரை கூறுகிறார். பரிபாடலில் வரும் கடவுள் வாழ்த்துப் பகுதிகள் அத்வைத அனுபவத்தின் எதிரொலிகள் பல கொண்டு விளங்குகின்றன ஆனால் அனைவரும் இந்த உரைகளை ஒப்புவதில்லை.

திருக்குறளின் முதற் குறள் அத்வைதமே பேசுகின்றது என்பது பற்றிய போராட்டம் சென்ற நூற்றாண்டில் எழுந்தது. துறவியலின் ஞானப் பகுதியில் அத்வைதிகள் தங்கள் கருத்தினைக் காண்பது அருமையன்று. சார்பு கெட ஒழுகுதல், எப்பொருள் எத்தன்மைத்தாயினும் அப்பொருள் மெய்ப்பொருள் காண்டல், வாய்மை வேண்டல் (சோகம் பாவனை), இருள் (அவிச்சை) முதலிய குறிப்புகள் அதற்கு வாய்ப்பானவை பொது நூலாகச் சிறந்தது எவருக்கும் இடங்கொடுப்பதில் வியப்பில்லை

அனுபூதிமான்களின் காட்சி அத்வைதக் காட்சியே. அவர்கள் பாடலுக்குப் பொருள் கொள்வோரும் அத்வைதம் என்ற சொல்லுக்குப் பல்பொருள் கொள்வது போலப் பலவகையாகப் பொருள்கொள்வதும் இயல்பே. ஆழ்வார்களும் நாயன்மார்களும் அருளிச் செய்த நாலாயிரமும் பன்னிரு திருமுறைகளும் அனுபூதிப் பாடல்களாகும் உபநிடதம்போல, இவை தென்னாட்டின் திருமறைகள். சைவர்களும் வைணவர்களும் இவற்றைத் தங்கொள்கையின் ஆணிவேராகக் கொள்வதுபோல அத்வைதிகளும் கொள்கின்றனர். தத்துவராயர் தம்முடைய பரணிகளில் இவற்றைப் பொன்னேபோல் போற்றிக் கையாள்வதனைக் காணலாம். அவர் திரட்டிய பெருந்திரட்டில் அனுபூதிப்பணையில் இந்த அனுபூதிப் பாடல்களே நிறைந்திருக்கக் காணலாம்.

நச்சினார்க்கினியரும் திருவாசகப் பாடல்களை அத்வைதப் பாடல்கள் என எடுத்துக் காட்டுவார். *எல்லாம் பிரமம்; எல்லாம் நான்; எல்லாம் மித்தை* என்பவற்றில் எல்லாம் பிரமம் என்பது எங்கும் பேசப்படக் காணலாம் *பூத்தாரும் பொய்கைப் புனலிதுவே எனக்கருதிப் பேய்த்தேர் முகக்குறும்பேதை குண மாகாமே* என்பது எல்லாம் மித்தை என்பதனை வற்புறுத்துகின்றது என்பர் அத்வைதிகள். *சிவமாக்கி எனையாண்ட நீயலால் பிறிதுமற்றின்மை ஒன்று நீ அல்லை அன்றி ஒன்றில்லை* என்ற பகுதிகளையும் எடுத்துக் காட்டுவர். பிற மதத்தினர் இவற்றிற்கு வேறு வகையாகத் தங்களுக்கு ஏற்பப் பொருள் கொள்வர். மாயாவாதச் சண்டமாருதம் என வரும் பகுதி பௌத்தம் முதலிய பிற மதங்களைக் குறிப்பதாகவும் கொள்வர். இவ்வாறு பிற அருளிச்செயல்களிலிருந்தும் எடுத்துக் காட்டலாம்.

சங்கரரே அத்வைதக் கொள்கையை உருப்படுத்தியவர். இவர் பிறந்தது மலையாள நாட்டுக் காலடி என்னுமிடம்; சிதம்பரத்தில் பிறந்தார் என்று சொல்வாரும் உண்டு மலையாள நாடு, தொல்காப்பியர் காலமுதல் சேரமான் பெருமான் நாயனார், வேணாட்டடிகள் முதலியோர் காலம்வரை மிகச் சிறந்த தமிழ்நாட்டுப் பகுதியாகவே விளங்கியது. ஆதலில் சங்கரர் தமிழ் நாட்டவரே அவர் தந்த கொள்கை அந்த வகையில் தமிழ்நாட்டுப் புதையலே ஆம். சௌந்தரிய லகரி அவர் பாடியதனால் அதில் திராவிட சிசுவெனத் திருஞான சம்பந்தப் பிள்ளையாரைப் புகழ்ந்து பாடி, அவர் பாடல்களின் இனிமை பெருமைகளில் மனமுருகி ஈடுபடுகின்ற இவர் தமிழை நன்குணர்ந்தவராதல் வேண்டும் திருஞான சம்பந்தர் *ஈறாய்த் திசை*

தானாய் வேறாய் உடனானான், தனதுரை எனதுரையாக எனப்பாடும் இடங்கள் அத்வைதிகள் பாராட்டும் இடங்கள். சங்கரர் நிலைநாட்டிய காமகோடிபீடம் காஞ்சியிற் பிறந்து இன்றளவும் அத்வைதக் கொள்கையை வளர்த்து வருகிறது. தமிழ்நாட்டுச் சுமார்த்தப் பிராமணர்கள் பிறப்பாலேயே அத்வைதிகள் என்ற நிலைமை ஏற்பட்டுள்ளதன்றோ?

அத்வைதக் கொள்கை இந்திய நாடு முழுவதும் பரந்த பெருமை பெற்றாலும் தமிழ்நாட்டில் வேரூன்றி வளர்ந்ததற்கு இதுவே சிறந்த சான்றாகும். பற்பல நுட்ப வேறுபாட்டுடன் தழைத்துக் கிளைத்து இது இங்கு வளர்ந்தோங்கியது என்பதனை அப்பைய தீட்சிதரது சித்தாந்த லேச சங்கிரகம் தெளிவுறுத்துகிறது. அண்மைக்காலம்வரை அத்வைதத்தை வளர்த்த வட மொழி நூல்களும் தமிழ்நாட்டில் தோன்றி வந்தமைக்குத் திருவாரூரில் பிறந்த தர்மராஜ தீட்சிதரது வேதாந்த பரிபாஷையை எடுத்துக் காட்டலாம். வித்தியாரண்யரது நிழலில் தோன்றிய விஜயநகரப் பேரரசு தமிழ்நாட்டிலும் பரந்தபோது, வித்யாரண்யரது கருத்துக்கள் பெருவழக்குப் பெற்றுத் தமிழர் மனத்தினையும் கவர்ந்திருத்தல் வேண்டும். கோவிந்த தீட்சிதர் முதலானோர் தமிழ் நாட்டரசர்களது அமைச்சர்களாய் அத்வைதக் கொள்கையை வளர்த்த வரலாறும் உண்டு.

அத்வைதம் தமிழ்நாட்டில் வடமொழியில் வளர்ந்த வரலாற்றினும் தமிழ் மொழியில் வளர்ந்த வரலாறே சுவை மிக்கதொன்றாம்; புதுமை நிறைந்ததொன்றாம். மேலே கூறிய சித்தாந்த லேச சங்கிரகம் ஒரு கொள்கையைச் சுட்டுகின்றது.(1,134) அத்வைதத்தினை வடமொழி உபநிடதச் சொற்கள் கொண்டு ஓதியுணர வேண்டுமேயன்றி, நாட்டு மொழி கொண்டு உணரலாகாது என்பதே அக்கொள்கை. தமிழ் மொழியிலும் அத்வைதக் கொள்கையை விளக்கும் நூல்கள் பரவியதால், முதல் நூல் ஆராய்ச்சி குன்றும் என்ற அச்சமே இந்தக் கொள்கை எழுந்ததற்குக் காரணமாகும். அத்வைதம் பேசும் தமிழர் வாயினையும் எழுதும் கையினையும் பூட்டி விலங்கிட எழுந்த இந்த முயற்சி பயனற்றுப் போயிற்று. தத்துவராயர் திரட்டிய சிவப்பிரகாசப் பெருந்திரட்டில் எத்தனையோ அத்வைத நூல்கள் தமிழ் நாட்டில் உலவியதனை அறிகின்றோம். நச்சினார்க்கினியர், பரிமேலழகர், அழகிய மணவாளநாயனார் முதலிய பெரியோர்கள் இக்கொள்கைக்கு மாறாகத் தொல்காப்பியர், திருவள்ளுவர், நம்மாழ்வார் முதலியோரது பாடல்களைத் திருமறை எனப் புகழ்ந்து போற்றி வற்புறுத்தி வந்தனர்.

மொழிபெயர்ப்பு நூலாக வெளிவந்தவை சிறந்த பாவாணர் வழிவந்ததே இங்குள்ள பெருமை. வேம்பத்தூரார் என்ற அந்தணக் கூட்டத்தினர் தமிழ்ப் பாடல்கள் பாடுவதில் தலைசிறந்தவர்கள். அவர்களைச் சேர்ந்த ஆளவந்தான் மாதவபட்டர் ஞானவாசிட்டத்தின் ஒரு பகுதியினைத் தமிழில் மொழிபெயர்த்தார் இதன் வழியே திருஷ்டி சிருஷ்டி வாதம் கூறும் பழுத்த வேதாந்தம் பரவலாயிற்று ஸ்ரீ பட்டர் என்பவர் பகவத்கீதையைப் பரமார்த்த தரிசனம் என்ற பெயரால் அழகாக விருத்தத்தில் மொழிபெயர்த்தார். பின்னர் வெண்பாவில் ஒரு மொழிபெயர்ப்பும் வந்தது

தமிழ்நாட்டில் அத்வைதத்தினை வளர்த்த தனிப்பெருமை தத்துவராயரைச் சேரும் இவர் சூத சங்கிதையிலுள்ள ஈசுவர கீதையை அழகிய தமிழில் மொழி பெயர்த்துள்ளார் இவருடைய குருவான சொரூபானந்தர், சொரூபசாரம் என்ற அத்துவித அனுபூதிநூலைத் தெள்ளத் தெளிய அருளிச் செய்துள்ளார் இந்தச் சொரூபானந்தருடைய குருவான சிவப்பிரகாசரே பெருந்திரட்டினைத் திரட்டினார் என்ற கொள்கையும் வழங்குகிறது கலைக் கட்டளை, அனுபூதிக் கட்டளை என்ற இரண்டு பிரிவில் பலவகைக் கொள்கைகளையும் பலவகைக் கருத்துக்களையும் விளக்கும் பாக்களைப் பல நூல்களிலிருந்தும் திரட்டிய பாடல் தொகுதியே பெருந்திரட்டு. இதனைத் திரட்டியவர் தத்துவராயர் என்றும் கூறுவர் இதிலிருந்து தத்துவராயர் குறுந்திரட்டு என்ற அரிய நூலையும் தொகுத்துத் தந்துள்ளார் இவை தத்துவ நூற்களஞ்சியங்களாகும் புலவர்கள் பாராட்டும் கலம்பகம், பரணி, பிள்ளைத்தமிழ் முதலிய பிரபந்த வகைகளைத் தம் ஆசிரியர் மேல் பாடி, அடங்கன் முறை என இவர் உலகிற்கு உதவியுள்ளார் இவை அத்வைத ஊற்றுக்கள் அஞ்ஞானத்தோடும் மோகத்தோடும் எழுந்த போராட்டத்தில் அறிவு வெல்லும் வெற்றியைப் பாடுவனவே அஞ்ஞவதைப் பரணியும் மோகவதைப் பரணியும் இன்று தமிழ்நாட்டில் வேதாந்தத்தினைக் கற்க விரும்புவார் முதன்முதல் விரும்பிக் கற்கும் சசிவன்ன போதம் என்ற நூல் மோகவதைப் பரணியில் வருவதே ஆம இந்த நூல்கள் கற்றோருக்கு அன்றி மற்றோருக்குப் பயன் தாராமை நோக்கி அனுபூதிப் பாடல்களை நாடோடிப் பாடல்களாகத் தச்சன் பாட்டு, வண்ணான் பாட்டு, பல்லிப் பாட்டு என்று பலவகையில் பாடிப் பாடுதுறை என்ற பெயரோடு வேறோர் உலகிற்கு உதவியுள்ளார் இந்த முறையில் வேதாந்தத்தினைப் பரப்பும் முயற்சி இந்தத் தமிழ நாட்டில் வேர் கொண்டுவிட்டது எனலாம் மெய்ஞ்ஞானத் தங்கம், மெய்ஞ்ஞானக் கொமமி, ஞானக்குறவஞ்சி போன்ற நூல்கள் சென்ற நூற்றாண்டு வரை

எழுந்து மக்கள் மனத்தினைக் கவர்ந்துவரக் காண்கிறோம். தத்துவராயரது காலத்தினை அறுதியிட்டுக் கூறுவதற்கு இல்லை. பெருந்திரட்டில் சேர்ந்த நூல்களையும் சேராத நூல்களையும் மனத்தில் வைத்துப் பார்த்தால் இவர் 500 ஆண்டுகளுக்கு முற்பட்டவர் என்று ஒருவாறு கூறலாம்.

தமிழில் வழங்கும் அத்வைத நூல்களில் தலைசிறந்தது கைவல்லிய நவநீதமேயாம். இதன் தெளிவும் இனிமையும் சுவையும் வேறெங்கும் நாம் காணாதவை. இதனை இயற்றியவர் தாண்டவராயர். இது தமிழ் நாடு, மலையாள நாடு முதலியவற்றில் எங்கும் வழங்குவதொன்று. தெலுங்கு நாட்டிலும் இதன் மொழிபெயர்ப்பு, மக்கள் மனத்தினை உருக்குகின்றது. வடமொழியில் சங்கு கவி என்பார் இதனை மொழிபெயர்த்துள்ளார். ஆனால் அம்மொழிபெயர்ப்பினை வெளியிட்டவர் தமிழ் நூலே மொழிபெயர்ப்பு என்று மன்றாடுகிறார். இந்த நூல் 18ஆம் நூற்றாண்டிற்கு முந்தியது எனலாம். பாமதீ வியாக்கியானம் பரவுவதற்கு முன் எழுந்த நூல் என்று கூறலாம்.

பிரபோத சந்திரோதயம் என்பது மாதை திருவேங்கட நாதர் என்ற அரச வள்ளல் 18ஆம் நூற்றாண்டில் இயற்றிய தமிழ் நூலாகும். இப்பெயர் கொண்ட வடமொழி அத்வைத நாடகம் உண்டு. அதன் மொழி பெயர்ப்பெனப் பெயரைக் கண்டுமட்டும் முடிவு செய்தல் ஆகாது. அதனைத் தழுவித் தமிழ் நூல்களின் கருத்துக்களை ஒட்டி எழுதிய காப்பியமாகும் இந்த நூல்.

ரிபு கீதை என்பது நடராசன் என்பவரால் மிக வெள்ளையான நடையில் எழுதப் பெற்ற நூலாகும். இந்த எளிமை ஒன்றே இதனைத் தமிழ் நாட்டில் பெருவழக்கினதாகச் செய்தது.

பதினெட்டு, பத்தொன்பதாவது நூற்றாண்டுகளில் முதலில் படிக்கின்றவர்களுக்குத் தத்துவக் கருத்துக்களை எளிதில் விளக்கும் நூல்கள் சைவ மடங்களிலிருந்து கட்டளைகள் என்ற பெயருடன் பல எழுந்தன. இந்த வகையில் அத்வைதக் கொள்கையை விளக்கும் நூல் ஒன்று நானா சீவ வாதக் கட்டளை என்ற பெயருடன் வெளிவந்தது. கட்டளை நூல்களில் இது தலை சிறந்து விளங்குகிறது. அத்வைதக் கொள்கைகளைப் பயில்வோர் முதல் முதல் படிக்கும் நூல் இதுவே ஆகும்.

தமிழில் இவ்வாறு பல நூல்கள் எழுந்ததன் பயனாகப் பார்ப்பனர் அல்லாதாரும் இக்கொள்கையைத் தெள்ளத்தெளிய அறிந்து ஒழுகலாயினர். பலர் துறவறம்பூண்டு அனுபூதி கைவரப்பெற்றனர். சில பெண் மக்களும் இதிலீடுபட்டு, அனுபூதிபெற்றுப் பல பெண்களை உய்வித்தனர் சாதி மதச் சழக்கினை அறுத்து, மக்களது ஆன்ம நேய ஒருமைப் பாட்டினை வளர்க்கும் பெருநெறியாக அத்வைதம் இந்த வழியில் வளர்ந்தது சூத்திர வேதாந்தம் என்று ஒரு சிலரால் இகழப்பட்டபோதும் அஞ்சாது நாட்டிற்குப் பெருந்தொண்டு புரிந்தது சென்ற நூற்றாண்டிலும் இந்த நூற்றாண்டின் முற்பகுதியிலும் அருணாசல சுவாமிகள், சச்சிதானந்த சுவாமிகள், பொன்னம்பல சுவாமிகள், நாராயண யோகீந்திரர், இரத்தின செட்டியார், கோ வடிவேலுச் செட்டியார் முதலியோர் தமிழ் நாடடின் ஊர்தோறும்சென்று இக்கொள்கையை பொதுமக்களிடம் பரப்பினர், நூல்கள் பதிப்பித்தனர், உரைகள் எழுதினர் இதனால் பல மடங்கள் சில நூற்றாண்டுகளாக எழுந்தோங்கி வருகின்றன. காமகோடி பீடத்தினை முன்னரே குறித்தோம். செட்டிநாட்டில் காரைக்குடிக்கருகில் உள்ள கோவிலூர் மடம் பார்ப்பனரல்லாதாரது அத்வைத மடமாகச் சிறந்து தொண்டாற்றி வருகிறது இராமகிருஷ்ணரது அடிச்சுவட்டினைப் பின்பற்றிய விவேகானந்தரது இயக்கத்தில் ஈடுபட்ட மடங்கள் பல தோன்றியுள்ளன. தமிழ் நூல்களும் அச்சாகியுள்ளன. திருவண்ணாமலை இரமணநிலையத்திலிருந்தும் நூல்கள் வெளிவருகின்றன.

பாரதியாரது வேதாந்தப் பாடல்கள் இந்தப் பொது நெறியே செல்வனவாம் சித்தாந்தத்தையும் வேதாந்தத்தையும் சமரசப்படுத்தி வேதாந்தத்தினை நிலைநாட்ட எண்ணி முயன்ற பெரியோர்கள் பலர் தாயுமானவர், அவிரோத வுந்தியார் பாடிய சாந்தலிங்கர், குமாரதேவர், கண்ணுடைய வள்ளலார் இந்நால்வர் நூல்களிற் சிலவற்றிற்கு உரை எழுதிய சிதம்பர சுவாமிகள் இராமலிங்க அடிகள் முதலியோரும் இந்தப் பொது நெறியைச் சேர்ந்த அத்வைதக் கொள்கையினர். இவ்வாறு நாம் கூறுவதனை மறுப்பவர்களும் உண்டு.

வடமொழியல்லாத பிறமொழிகளிலிருந்தும் பலநூல்கள் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. இராமகிருஷ்ணர், விவேகானந்தர், இராமதீர்த்தர் முதலியோருடைய நூல்கள் எத்தனையோ முறை தமிழில் வெளிவருகின்றன. மொழிபெயர்ப்பு நூலையும் காப்பியப் புலவரான சிவப்பிரகாச சுவாமிகள் பதினேழாம நூற்றாண்டின் பிற்பகுதியில் உலகிறகு உதவினார், கன்னட மொழியில் நிஜகுண முனிவர் எழுதிய

வேதாந்த சூளாமணியை இப்பாவலர் பெருமானே மொழிபெயர்த்தார். வேதாந்தம் கற்பார் மிக விரும்பும் நூல்களில் இதுவும் ஒன்று. பத்தொன்பதாம் நூற்றாண்டில் இந்தி மொழியில் உள்ள நூல்களில் ஈடுபட்ட தமிழர் இந்த நூற்றாண்டின் முற்பகுதியில் சில சிறந்த மொழிபெயர்ப்புகளைத் தமிழர்க்குத் தந்திருக்கின்றனர். நிச்சலதாசர் பெயரினை இந்தியாவில் எங்குள்ளவரும் அறிவர். அவருடைய விசாரசாகரம் அனுபூதிவெள்ளம்; தென்னாட்டில் கைவல்லிய நவநீதம் போல வடநாட்டில் பெருவழக்காக வழங்குவது. அவரியற்றிய விருத்திப் பிரபாகரம் ஒரு பெருஞ்சிக்கல்; வருந்திப் படிப்பார்க்கு மிகத் தெளிவு. வேதாந்தக் கலைக்களஞ்சியம் என இதனைக் கூறலாம். இந்த இரண்டு நூலையும் குப்புசுவாமி ராஜூ என்ற பெரியார் மொழி பெயர்த்து உதவினார். இவரும் பிறரும் மொழிபெயர்த்த நூல்கள் இன்னும்பல வடமொழியிலிருந்தும் பஞ்சதசி, நைஷ்கர்ம்யசித்தி, சுவராஜ்ய சித்தி, சங்கரர் பேருரை முதலிய நூல்களும் வெளிவந்து கொண்டிருக்கின்றன.

அத்வைதம் ஒரு பேரனுபவம். அந்த வகையில் அனுபவப் பாடலில் எங்கும் அதனைக் காணலாம். சங்கரர் என்ற தமிழ் மகனார் அதனைக் கொள்கையாக நிலைநாட்டி உலகில் பரப்பினார். பிராமணப் பெருமக்களிடையே சாதிஒழுக்கத்தினை ஒட்டி அது வளர்ந்து, சுமார்த்தரது பிறப்புக் கொள்கையாகி விட்டது; பிறரிடம் சாதிமதச் சழக்கினை ஒழித்து, ஓர் ஒற்றுமையைத் தமிழ் நாட்டில் நிலைநாட்டி வருகிறது. சித்தர்களில் பலர் இந்தக் கொள்கையை நிலைநாட்டக் காண்போம். இவர்கள் சமுதாயத் தொண்டில் ஈடுபட்டு வந்ததையும் காண்கிறோம். தமிழ் வளர்த்த பெருமக்கள் பலர் அத்வைதப் பெருநூல்கள் எழுதியிருக்கக் காண்கிறோம். பொதுமக்கட் காப்பியங்களாகப் பல நூல்கள் வெளிவந்திருக்கவும் காண்கிறோம். இன்றும் இந்த உணர்ச்சி தேங்கித் தடைபெறாது புத்துயிரோடு ஓடி உலாவி, மக்களைத் தட்டி எழுப்பி வரவும் காண்கிறோம்.

# தமிழ் நாட்டில் பௌத்தம்

பௌத்த மதம் தமிழ் நாட்டிலும பரவி வளர்ந்தது அசோகரது (ஆ கா கி.மு 270-233) கல்வெட்டு (Rock Edict ii, iii) அப்பேரரசா தம் பௌத்தமதக் கொள்கைகளைச் சோழ, பாண்டியர்களது நாட்டிலும நிலைநாட்டினார் எனக் கூறுகிறது. அசோகர் மகனார் மகேந்திரர் கி மு 250-ல் இலங்கையில் பௌத்த மதத்தினைப் பரப்பச சென்றார் இவருடைய பெயர் இலங்கையில் மகிந்தர் என வழங்கும் இவருடன் அறத்தொண்டு புரிந்தவர் இலங்கை அரசரின் உறவினரான அரிட்டர் எனபவராம மகிந்தர் தமிழ்நாடடு வழியாகவே சென்றிருத்தல் வேண்டும் கி பி ஏழாம் நூற்றாண்டில் பௌத்த சின்னங்களைத் தேடி வந்த ஹியூன்சாங் என்ற சீனர் தமிழ் நாட்டுக்கு வந்தபோது மகிந்தா கட்டியதாக வழங்கிய பௌத்தப்பள்ளி ஒன்று மதுரையில் கண்டதாகத் தம் நூலில குறித்துள்ளார் இந்த மகிந்தருடன் தொண்டாற்றிய அரிட்டர் பெயர் அரிடடபாடி என்ற இடப்பெயரில இன்றும் (1960) நின்று நிலவுகிறது மகிந்தர் காலத்துப் பிராமி எழுத்துககள் வெட்டிய பௌத்தக் குகைகள் இந்த அரிட்டபாடி என்ற பாண்டி நாட்டு ஊரருகே உள்ளன தமிழ் நாட்டில் இன்று கிடைக்கும் இந்தப பழைய எழுத்துக்கள் இவ்வாறு பௌத்தப் பள்ளிகளோடு தொடர்பு பெற்றுத் தமிழ் நாடடுத் தென்கோடியிலும காணப்படுகின்றன எனவே, பௌத்தப் பேரறம் கிறித்தவ ஊழிக்கு முன்பே (கி மு 3ஆம் நூற்றாண்டில்) தமிழ் நாட்டில் சீரும் சிறப்பும் பெற்று ஓங்கியது எனலாம்

போதியார் எனச் சம்பந்தர் பௌத்தர்களைக் குறிக்கின்றார் ஆதலால் இளம்போதியார் என்ற சங்கப் புலவர் பௌத்தப் பாவாணரே ஆவர் சங்கப்பாக்களில் பௌத்தக் கொள்கைகள் பாவடிவம் பெற்று, மக்கள் மனத்தினைக் கவர்ந்திருத்தல் வேண்டும் இளம்போதியார் என்ற பெயரே போதியார் என மற்றொரு மூத்த தமிழ்ப் பாவாணர் இருந்ததனை நிலைநாட்டுகிறது. சங்கப் புலவராம் சீத்தலைச் சாத்தனாரும் , மணிமேகலை என்ற பௌத்த பெருங்காப்பியத்தினை பாடிய மதுரை கூலவாணிகன் சாத்தனாரும் ஒருவரே என்ற கொள்கையும் உண்டு அப்படியானால் அவரும் பௌத்தரேயாம் பௌத்தமதக் கொள்கைகளைப் பரப்பவும், புத்தர் பெருமைகளைப் பேசவும் எழுந்தது அந்தக காப்பியம உயாந்தோர், இழிந்தோர் என்று பிறர் கருதுவதுபோலக் கருதாமல் சமுதாயத் தொண்டினைப பௌத்தப்

பெருமக்கள் செய்து வந்ததனை அந்தத் தமிழ்ப் பெருங்காப்பியம் பரக்கப் பேசுகிறது. மணிமேகலை பொதுமகள் குலத்தில் பிறந்தும், பௌத்தப் பிக்குணியாகிப் பௌத்த மத அறவுரைகளை வழங்கி, அறம் வளர்த்து உயர்நிலை அடைந்த கதை அது. மகாயான பௌத்தம் எழுவதற்கு முன்னர் புத்தருக்குக் கோயில் கட்டி வழிபடாமல் அவருடைய திருவடி நிலைகளை மட்டும் வணங்கிய காலத்தில் எழுந்தது, மணிமேகலை. அதில் காணும் மந்திர தந்திரங்கள் மகாயான பௌத்தம் தோன்றுவதற்கு வழிகோலுகின்றன எனக் கூறலாம்.

வடநாட்டில் அமைதியின்மையால் பல நூல்கள் தென்னாட்டுள் புகுந்து வளர்ந்தோங்கிய நிலையை மணிமேகலையில் காண்கிறோம். பட்டி மண்டபம் என்பது தமிழ் நாட்டின் அரிய நிலையம். அறிவாராய்ச்சி செய்வார் வெறுப்பு விருப்பின்றி உண்மையை அறிய முயலும் மன்றம் அது. பல மதங்களின் கொள்கைகளையும் மணிமேகலை அறிய முயல்கின்றாள். இதனை ஒரு காப்பியப் பெரு வாய்ப்பாகக் கொண்டு சாத்தனார் இந்தியாவிலிருந்த எல்லா மதங்களின் கொள்கைகளையும் கூறுகின்றார். இதிலிருந்து நீலகேசி, குண்டலகேசி போன்ற புதுவகைக் காப்பியங்கள் தமிழில் வளர்ந்தன. இக்காப்பியங்கள் ஒரு பெண் உண்மையை அறிய முயன்று, பல மதக் கொள்கையினரோடும் வாதம் செய்து, தான்கொண்ட உண்மையினை நிலைநாட்டுவதனைக் கூறுகின்றன. குண்டலகேசி என்பது பௌத்தக் கொள்கையைக் குண்டலகேசி என்ற பெண் நிலைநாட்டிப் பிற மதங்களை மறுப்பதைக் கூறுகிறது. சில பாடல்கள் அன்றி இந்தக் காப்பிய முழுதும் இன்றுவரை (1960) கிடைக்கவில்லை. இதனைப் பாடியவர் நாதகுத்தர் என நீலகேசி கூறுகின்றது.

மணிமேகலைக் காப்பியம் பௌத்த தருக்க நூல் வளர்ந்த வரலாற்றையும் அறிய வழி செய்கின்றது. அங்குக் கூறப்பெறும் தருக்கமுறை தருமபாலர் என்பவர் எழுதியதாகச் சீன நூலிலிருந்து மொழிபெயர்க்கப்பெற்ற நூலிலுள்ளதைப் பெரிதும் ஒத்திருக்கின்றது. இந்தத் தருக்க முறை தமிழ் நாட்டுப் பௌத்தர்களிடையே வளர்ந்தது என்பது இதனால் தெளிவாகிறது. தருக்கத்தினைத் தமிழ்க் காப்பியத்தில் புகுத்திப் பாக்களை அறிவுலகப் பாக்களாகச் செய்த பௌத்தர்களின் முயற்சி மணிமேகலைக் காப்பியத்தில் நன்கு விளங்குகிறது.

பல்லவர் காலத்திலும் பௌத்தர்கள் தமிழ் வளர்த்துத் தமிழ் நாட்டில் பரவி இருந்தாலும், பௌத்தர்கள் நிலைமை கீழ்நோக்கிச்

சென்றிருந்ததனையே கண்டதாக ஹியூன்சாங் குறிக்கின்றார். சோழப்பேரரசு வளர்ந்த நாளிலும் பௌத்தம் மறையவில்லை. 11ஆம் நூற்றாண்டில் அரசாண்ட வீரராசன் அவைக்களத்தில் வீரசோழியம் என்ற இலக்கணநூல் அரங்கேறியது இதனை இயற்றியவர் தஞ்சைப் பொன்பற்றி என்ற ஊரில்பிறந்த புத்தமித்திரர் என்ற பௌத்தரே ஆவர். இதற்கு உரை எழுதிய பெருந்தேவனாரும் இவர் காலத்தவர் என்றே தெரிகிறது. இவர் பௌத்தமதப் பாடல்கள் பலவற்றைத் தம் உரையில் காட்டியிருக்கின்றார். வீரசோழியம் வடமொழி இலக்கண வழக்காற்றினைத் தமிழுக்கும் பொருத்திக் காட்டும் புதிய முயற்சியில் புகுகின்றது. பிரயோக விவேகம் என்ற பின்னாளைய இலக்கண நூல் வீரசோழியம் வளர்த்த பிள்ளையே எனலாம். திராவிடச் சொற்கள் வடசொற்களில் பிராகிருத வடிவங்களே என்று கூறுவோர் இந்த இலக்கணப் பரம்பரையைச் சேர்ந்தவர்களே ஆவர்.

பௌத்தத் தமிழ்ப் புலவர்கள் பாடிய பாடல்களும் நூல்களும் பலவாக இருத்தல் வேண்டும். வீரசோழிய உரை கூறுவதுபோலவே பிறநூல் உரைகளும் பௌத்த நூல்களின் இருப்பினை வெளியிடுகின்றன. நீலகேசியுரை, சிவஞான சித்தியாரின் ஞானப்பிரகாசர் உரை, தக்கயாகப் பரணியுரை என்பன இந்த வகையில் வழிகாட்டுகின்றன. *வன்பசிக் கடும்புவிற்கு உடம்பு அளித்து உடம்பின்மேல் வாள் எறிந்த வாயினூடுபால் சுரந்து* என்ற பாடற் பகுதி தக்கயாகப்பரணியுரையால் (377) வெளியாகிறது. இது புத்தரைப் பாடிய பாடலாதலின் இதனைப் பாடியவர் பௌத்தரே எனலாம். இவரைக் கவியரசர் என அந்த உரை அழைக்கின்றது. சித்தாந்தத் தொகை, திருப்பதிகம் என்ற பௌத்த நூல்களை, முன்னைய இரண்டு நூல்களும் பௌத்தக் கொள்கையை விளக்க எடுத்துக் காட்டுகின்றன. விம்பசார கதை என்ற பௌத்த காப்பியம் ஒன்றிருந்ததும் இவற்றின் வழியே நாம் அறிகின்றோம். விம்பசாரன் பௌத்தரைப் பாராட்டிய மகத அரசன், அவனுடைய மகன் அஜாதசத்துரு தன் தந்தையைச் சிறைப்படுத்தினான். புத்தர் உறவினன் ஒருவன் புத்தரைக் கொல்ல அஜாதசத்துரு வழியே சூழ்ச்சி செய்து தோற்றான். விம்பசாரன் சிறையில் இறந்தபின் அஜாதசத்துரு தனக்குப் பிறந்த மகனிடத்தில் தன்னையும் அறியாமல் பொங்கும் இயற்கை அன்பினைக் கண்டு தன் தந்தையும் தன்னிடத்தில் இத்தகைய அன்பன்றோ கொண்டு இருந்திருத்தல் வேண்டும் எனக் கழிவிரக்கம் கொண்டான். இத்தகைய பலபல காப்பியச் சுவை ததும்பும் பகுதிகள் கொண்ட விம்பசாரக் கதை பழந்தமிழர் மனத்தினை உருக்கி இருத்தல் வேண்டும்

இலங்கைப் பௌத்தர்களுக்கும் தமிழ்நாட்டுப் பௌத்தர்களுக்கும் நெருங்கிய தொடர்பிருந்தது. தமிழ் நாட்டில் இருந்து சென்ற தமிழ்ப் பௌத்தர்கள் பல பௌத்த நூல்களை எழுதிய பெருமையை இலங்கையில் கிடைக்கும் கந்தவமிசம் முதலிய நூல்களின் வழியே அறிகின்றோம். இலங்கையில் பௌத்த மதத்தினை வளர்த்தவர்கள் சிங்களவரே என்றும், அதனை அழித்தவர்கள் தமிழர்களே என்றும் இன்று பலர் நம்பிவரும் கொள்கைகளை இந்த நூல்களே மறுத்துரைக்கின்றன. இலங்கையில் அநுராதபுரத்தில் அபயகிரி விகாரையிலிருந்த ஈனயான பௌத்தருக்கும் மகாவிகாரையிலிருந்த மகாயான (வைதுல்ய) பௌத்தக் கொள்கையினர்க்கும் 4ஆம் நூற்றாண்டில் போராட்டம் நடந்தது. சோழ நாட்டில் வைதுல்ய மதத்தின் தலைவராக இருந்த சங்கமித்திரர் இலங்கை சென்று, ஈனயானக் கொள்கையினரை வென்றார் என அறிகிறோம்.

தமிழ்நாட்டில் நான்காம் நூற்றாண்டில் புத்தநந்தியோடும் சாரி புத்தரோடும் வாதிட்டு வென்ற ஞானசம்பந்தர் *அறுவகைத்தேரர்* எனப் பாடுவதால், அவர் காலத்தில் பௌத்த மதத்தில் பலபல பிரிவுகள் இருந்தமை புலனாகிறது. இவர் செய்த வாதத்தினைக் கன்ன பரம்பரையாகக் கேட்டறிந்த சேக்கிழார் தமது பெரிய புராணத்தில் பௌத்தர் கொள்கைகளும் அவற்றின் மறுப்புமாகப் பாடி வைத்துள்ளார்.

பண்டைக்காலத்தில் காஞ்சிமாநகரத்தில் ஒரு சிறந்த தமிழ்ப் பல்கலைக்கழகம் இருந்தது. பௌத்தப் பள்ளிகள் பல இருந்தன. காஞ்சியில் பிறந்து நாளந்தாப் பல்கலைக்கழகத்தின் தலைவரான திங்நாகரும் தமிழரே. அவருக்கு மாணவராகி, அந்தப் பல்கலைக்கழகத்தில் தலைவராக விளங்கிய தருமபாலரும் தமிழரே. இவர் காஞ்சியில் மந்திரியாயிருந்த ஒருவரின் புதல்வர். இவர் கையாண்ட தருக்க முறை தமிழ் நாட்டில் வளர்ந்ததென்று முன்னரே குறிப்பிட்டோம். இதனால் இவரே மணிமேகலையில் வரும் தருமபாலர் என முடிவு செய்வோரும் உளர். மணிமேகலையின் காலம் 2ஆம் நூற்றாண்டானால், 6ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த இவர் அவராவதற்கில்லை. எனினும், காஞ்சிமாநகர் பௌத்தப் பேரறிஞர்களது அறிவுக் களஞ்சியமாகப் பேர்பெற்றிருந்தது என்பதில் ஐயமில்லை நாளந்தாப் பல்கலைக்கழகம் ஒருபுறமிருக்க உலகம் போற்றும் சென்பௌத்தம் அல்லது தியான பௌத்தம் காஞ்சிநகர் கண்டதேயாம் சீனாவிலும் அதனை விட ஜப்பானிலும் பேரும் புகழும் பெற்று

விளங்குவதான இது பௌத்தமதப் பெரும்பிரிவேயாம். அந்த நாடுகளில் இதை நிலைநாட்டியவர். அங்குக் கி.பி.6ஆம் நூற்றாண்டில் சென்ற காஞ்சியரசரின் பிள்ளைகளில் ஒருவரான போதிதருமராவர். இந்த மதத்தினைச் சீனாவில் மேலும் வளர்த்தவர் நரசிங்க வன்மபல்லவன் காலத்தவரான மற்றொரு தமிழர்; இவர் பெயர் வச்சிரபோதி (661-730). இவரும் காஞ்சியில் பௌத்தர்களின் தலைவராக விளங்கினார்.

இவர்களுக்கு முன்பே 5ஆம் நூற்றாண்டிலும் புத்ததத்ததேரர் காஞ்சியில் பௌத்தமதத் தலைவராக வீற்றிருந்துள்ளார். இவர் காவிரிப்பூம்பட்டினத்தைத் தமது காலத்தில் வாழ்ந்த அச்சுதகளப்பிரனோடு சேர்த்துப் புனைந்து அபிதம்மாவதாரம் என்ற நூலில் பாடிப் புகழ்கின்றார் அந்தக் கட்டஹக் காதை அந்தக மொழியில் அந்தக நாட்டில் பரசமுத்திர வாசிகளால் காஞ்சியில் கொண்டாடப்பட்டதாகப் பாலி நூல்களின் வழியே அறிகின்றோம். பதினோராம் நூற்றாண்டில் தீபாங்கரத் தேவரும் பன்னிரெண்டாம் நூற்றாண்டில் அநிருத்தரும், காஞ்சிமாநகரில் பௌத்தர் தலைவர்களாகப் பல நூல்கள் இயற்றியமை பௌத்த நூல்கள் வழியே தெரிய வருகிறது.

காஞ்சி மட்டும் அன்றிப் பொதிகை, உறையூர், வஞ்சி, புத்ததத்ததேரரது பூதமங்கலம், சாக்கியநாயனாரது சங்கமங்கை, போதிமங்கை, மதுரை முதலியனவும் பௌத்தப் பெருநிலையங்களாக விளங்கின. நாகபட்டினத்தில் 1867 வரை அங்கு புத்தவிகாரை இருந்ததாகத் தெரிகிறது. இங்கு நரசிங்கப் போத்தரையர் காலத்தில் சீன அரசன் கட்டிய சீனக்கோயிலை மார்க்கோபோலோ கண்டதாகக் கூறுகிறார். 1477-ல் இதனைப் பர்மிய அரசர் தமது கல்வெட்டில் குறிக்கின்றார்; 1725-ல் வாழ்ந்த வாலன்டைன் என்பவர் குறிக்கின்றார். திருமங்கை மன்னர் இங்கிருந்த புத்தரது பொற்சிலை ஒன்றை எடுத்துப்போனார் என்று *குருபரம்பரை பிரபாவம்* என்னும் வைணவ நூல் கூறுகிறது இராசராச சோழரும், அவர் மகனார் இராசேந்திர சோழரும் தங்கள் காலத்தில் சுமத்திரா தீவில் அரசாண்ட ஸ்ரீ விஜய அரசர்களில் ஒருவர்க்கு நாகபட்டினத்தில் பௌத்தப் பள்ளி கட்ட உரிமை தந்தமையை லேடன் பட்டயத்தின் (Leyden grant) வழியே அறிகின்றோம். விகாரையைப் பாதிரிமார் 1867-ல் இடித்துக் கிறிஸ்தவக் கோயில் கட்டியபோது பல புத்தச் சிலைகள் அங்குக் கிடைத்தன. நாகபட்டினம் தமிழ்ப் புத்தப்பெருவணிக நிலையமாகவும் பிறநாட்டுத் தொடர்பின் விளக்கமாகவும் விளங்குகிறது

பௌத்த மதம் தமிழ் நாட்டில் மறைந்த போதிலும் அக்கொள்கை தமிழொடு தமிழாய்ப் போய்விட்டது. புத்தர் திருமாலின் அவதாரமாகி விடுகின்றார். சாத்தனார், ஐயனார், தருமராசர், போதிராசர் என்று தமிழ்நாடு வழிபடுவது உண்மையில் பழைய புத்தரையே எனலாம். அரச மர வழிபாடும், சிங்கப்பெருமாள் கோயில் போன்ற இடங்களில் காணப்பெறும் திருவடி நிலை வழிபாடும் போதி மரத்தினையும் புத்தரது பாதபங்கயத்தினையும் நினைவூட்டும். திருவரங்கக் கோலத்தினைப் புத்தர் பெருமானது நிரியாணக்கோலம் எனக்கூறுவோரும் உண்டு. தமிழ் நாட்டில் தோன்றிய அத்துவிதக் கொள்கையில் பௌத்த மதத்தின் மாற்றுருவத்தினை (பிரசன்ன பௌத்தம்) இராமானுசர் முதலானோர் காண்கின்றனர் என்பதனையும் மறத்தலாகாது. தமிழ்நாட்டுப் பற்பல வழிபாட்டு முறைகளுக்கும் பௌத்த தந்திரங்கள் கூறும் முறைகளுக்கும் உள்ள ஒற்றுமையையும் மறைக்க முடியாது. பள்ளிகள், மடங்கள், கோயில்கள் இவை பௌத்தர்கள் வளர்த்த சமுதாய நிலையங்கள். அறச்சாலைகள், கல்லூரிகள் இவற்றை ஒட்டியே இந்நாட்டுக் கோயில்கள் நாட்டின் உயிர்நிலையாக வளர்ந்தோங்கியுள்ளன.

* * * * * * * * * * * * *

* * * * * * * * *

* * * * * * *

* * * * *

* * *

*